# பதிப்புரை.

ழாசிரியராகிய திருத்தணிகை - விசாகப்பெருமாளையரவர்கள்
சில பாசுரங்கட்குமாத்திரம் யெழுதிய வுரையெங்கும் பரவி
யிருக்கின்றமையும், பலருஞ் சொல்லக் கேள்விப்படுகின்
றோம். அங்ஙனமானால் மற்றை யாவரால் முடியுமென்பது
விவேகிகள் யோசிக்கத்தக்கவிஷயமே.

இத்திருமுறையிலுள்ள சிற்சிலசரித்திரங்கள் இக்கா
லத்தில் வழங்கும் பற்பலபுராணங்களிலுங்காணப்படவில்லை.
இங்ஙனமாக இக்காலத்தில் இத்திருவாசகத்திலுள்ள பதிகங்க
ளில் சிலவற்றை 1888௵த்தில் இராஜாங்கத்தார் பரீட்
சைக்குப் பாடமாக ஏற்படுத்தியுமிருக்கின்றனர். அவற்றினுக்கு
உரையும் பல வித்துவான்கள் எழுதிவெளிப்படுத்தியிருக்கின்
றனர். சிலவருடங்கட்குமுன் சென்னையிற் பிரசித்திபெற்று
இப்போது இலண்டன்மாநகரிலிருக்கும் ஐரோப்பியரொருவர்
இந்நூலின் அருமையினைத் தேர்ந்து இங்கிலீஷில்மொழி பெ
யர்த்து அச்சிட முயன்றுவருகின்றாரென்பதும்பலபத்திரிகை
களாலும் பிரசித்தம். சில வருடங்களுக்குமுன் தென்னாட்
டுப்புலவ ரொருவரித்திருமுறை முழுமைக்கு மோருரை
யெழுதி யிச்சென்னையிற் பிரசித்தியுற்றிருக்க, காஞ்சிபுரம் -
சபாபதிமுதலியார், புரசை - அஷ்டாவதானம் - சபாபதி
முதலியார், யாழ்ப்பாணத்துநல்லூர் - ஆறுமுகநாவலர் முத
லிய வித்துவசிரோமணிகள் சமுகம் கொண்டுவந்தனரென்ப
தும், இன்னமும் அவ்வுரை, நாவலரவர்கள் வளவிலிருக்
கின்றதென்பதும், பிரசித்தமே. அதுபோலவே மிகவும் சிலப்
பட்டு எடுப்பதற்கும் படிப்பதற்குமே சாத்தியப்படாத நிலை
மையினையுடையதோர் பிரதி எனக்குக் கிடைக்க அதையான்
கண்ணுறுமளவில், அத்திருமுறைக்குப் பிரதிபதமமைந்த
வோருரையேனு மிருக்கில் மிகவும் பயனுடைத்தாமெனக்
கருதி யொருவாறு பதவுரையாகத் திருத்துவித்து அச்சிற்
பதிப்பித்தனன். சிவஞானபோதம், முதலிய அரிய பெரிய
சாத்திரங்களும் ஊணபாடையில் மொழிபெயர்க்கப்பட்ட
மைமுதலிய தற்காலநிலையை யுள்ளபடி கவனிக்கும் வித்துவ
சிரோமணிகளும், இத்திருமுறையினு ளமைந்துகிடக்கும்
பிராகிருதம், தேசிகமுதலிய சொற்களுக்குப் பிரதி பதங்
கூடத் தெரியாமல் மயங்கிய மற்றையரும், இது விஷயமாக
வென்பேரில் உள்ளபடியே குறைவையாது அங்கீகரித் தேற்
றுக்கொள்ளுவார்களென விரும்புகின்றனன். பி. இ.



ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகள்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மாணிக்கவாசகசுவாமிகள்

# சரித்திரச்சுருக்கம்.

அநாதிமுத்தசித்துருவாகிய முதற்கடவுள் சிவபெருமானே என்று ஆன்மாக்கள் துணிந்து வழிபட்டு உய்யும்பொருட்டுப் பல அற்புதங்களினாலே, சைவசமயத்தைத் தாபித்தருளிய சமயாசாரியர்கள் நால்வரில் ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த திருவாசகம், தமிழ்வேதமுடிபாகிய வுபநிடதமென்று உயர்ந்தோர் அனைவராலுங்கொள்ளப்பெற்றுப் பாராயணஞ் செய்வோர்க்குப் பத்திஞானங்களை உண்டாக்குகின்றது. மாணிக்கவாசக சுவாமிகளுக்குச் சிவக்ஷேத்திரங்கள் எல்லாவற்றினும் மார்கழிமாசத்திலே திருவிழாநடத்தப்படுகின்றது. அவற்றுள் அச்சுவாமிகள் உபதேசம்பெற்ற திருப்பெருந்துறையில் மார்கழி ஆனி மாசங்களில் நடத்தப்படுகின்ற மகோற்சவங்களில் அவருக்கு இடபவாகன முதலிய எல்லாவாகனோற்சவங்களும் நடந்தேறிவருகின்றன.

இத்துணைப்பெருமையுடைய மாணிக்கவாசகமூர்த்திகள் செந்தமிழ்ப் பாண்டிவளநாட்டிலே, அரிமர்த்தனபாண்டியராஜன்காலத்திலே, திருவாதவூரிலே, அமாத்தியரென்னும் அந்தணர்குலத்திலே, சம்புபாதாசிரிதருக்கு மனைவியாராகிய சிவஞானவதியாரிடத்தே, அவதரித்தருளி வாதவூரர் என்கிற பிள்ளைத்திருநாமம்பெற்றுப் பதினாறு பிராயத்துள்ளே வேதசிவாகமமுதலிய கலைகள் முற்றுங் கற்றுவல்லராயினர்.

அவர் குணாதிசயங்களனைத்தும் மதுரை அரிமர்த்தன பாண்டியன் கேள்வியுற்று உடனே வாதவூரரை எழுந்தருளச்

செய்து அவரது சற்குணங்களை நன்காராய்ந்து வியந்து மேலான சிறப்புகள் செய்து தென்னவன் பிரமராயனென்னும் பெயருங்கொடுத்துத் தன்னிடத்தே முதன் மந்திரியாராயிருக்கக் கேட்டுக்கொண்டனன். அப்பெரியோ னகற்கியைந்து அரசனுக்கு இனியராயும், சிவபக்தி அடியார்பக்திகளிற் சிறந்தவராயும், பெருஞ்செல்வத்தோடுகூடி வாழ்ந்திருக்கையில் இந்த மண்ணுலகவின்பமும், அந்த விண்ணுலகவின்பமும் அநித்தியமென்கிறநித்தியாநித்திய வஸ்துவிவேகம் தோன்றி, அவை வெறுக்கப்பட்டு நித்தியமாகிய பேரின்ப வீடடைதற்கு ஏதுவாகிய தத்துவஞானத்தை உபதேசிக்கவல்ல பரமாசாரியனைச் சரணடையவேண்டுமென்னும் வேட்கை மேலிட்டிருந்தனர். அங்ஙனமிருக்கையில் அரசன் கீழ்க்கடற்றுறையிலே சென்று குதிரைகள் வாங்கிவரும்படி விடுப்ப, அவர் அளவிறந்த பொற்குவைகளைக் கைக்கொண்டு நால்வகைச் சேனைகளும் சூழ்ந்துவரச் சென்று வழி நடுவிலே திருப்பெருந்துறை யென்னும் பதிக்குச் சமீபித்தார். அப்போது படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்கிற ஐந்தொழி னடத்தும் பரமபதியாகிய சிவபெருமான், அவருடைய மலபரிபாகமும் இருவினையொப்பும் சத்திநிபாதமும் நோக்கி, அவருக்கு அருள் செய்தற்பொருட்டுத் திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியிலே தமது கணங்கள் மாணாக்கராய்ச் சூழ்ந்திருக்க, நடுவே தாம் ஒரு ஞானாசாரியராய்த் திருவுருக்கொண்டு வீற்றிருந்தருளினர். அம்முதன் மந்திரியார் குருமூர்த்தியைக் கண்டபொழுதே வெங்கொடுஞ்சுரத்துவெயிலிடைவருந்தியோன், தண்மலர்த்தருவைத் தன்னெதிர் கண்டெனை, விரைந்துசெல்வேட்கை பொருந்தினராகி, அழலிடைப்பட்ட மெழுகெனவுருகி, அழுதகண்ணுந் தொழுதகையும் உருகிய சிந்தையருமாகிச் சென்று திருவடிகளிலே வீழ்ந்து நமஸ்கரித்து, தேவரீர் அடியேற்கு அருள்செயல் வேண்டுமென்றனர். அவரது அதிதீவிரபக்குவத்தைக்கண்ட பட்டாசிரியரானவர் திருவருள் சுரந்து

ஞானதீக்ஷை செய்து பதி பசு பாசம் என்னு முப்பொருள்களி னியல்புகளையும் ஐந்தெழுத்தடைவான் முறைப்படி உபதேசித்தருளினர். அவ்வுபதேசப் பொருளை ஐயந்திரிபின்றி அங்கையி னெல்லிக்கனிபோற் பெற்ற வாதவூரடிகள் சிவபெருமானிடத்து அன்புமேலிட்டு அற்புதமான ஞானப் பாடல்களைப் பாடத்தொடங்கினர். அப்பாடல்களைக் கேட்டருளிய கடவுளானவர் திருவுளங்களிகூர்ந்து அவரது திருவாய் மலரினின்றும் பிறந்த வாசகங்கள் மாணிக்கங்கள் போல் விலையேறப் பெற்றவைகளாக யிருந்தமையால்அவருக்கு மாணிக்கவாசகர் என்னுந் திருநாமமளித்து அவரை அத்தலத்திலே வசிக்கும்படிகட்டளையிட்டு மறைந்தருளினர். பின்பு மாணிக்கவாசகர் குதிரை வாங்குதற்பொருட்டுக் கொணர்ந்த பொருண் முழுவதையும், அப்பதியிலே சிவாலயத்திருப்பணியிலும், மற்றும்பலவகையறங்களிலும் செலவுசெய்துவிட்டு நிரதிசயானந்த நிட்டானுபூதியிலே சுகித்திருக்கையில், இதுவரையிலே குதிரை வாங்கிக்கொண்டு வராமைக்குக் காரணம் என்னென்று அரசனிடத்திருந்து நிருபம் வந்தமையால் சிவசந்நிதியிலே போய்த் தொழுது நின்று எமது பரமபிதாவாகிய சிவபெருமானே! அடியேன் இதற்குச் செய்யக்கடவது யாதென்று விஞ்ஞவி, அதற்கு அசரீரிவாக்காகக்கிடைத்த கடவுளுத்தரப்படி மதுரைக்கு எழுந்தருளி, அரசனுக்கு மகிழ்ச்சி உண்டாக இத்தனைநாளிலே உமக்குக் குதிரைகள் வருமென்று காலவரையறை கூறினர்.

அரசன் அந்நாளளவும் வரவு பார்த்திருந்து வராமை கண்டு கோபங்கொண்டு அவரை வருத்தி, முன் கொண்டுபோன தன் பொருள்களையெல்லாம் வாங்கும்படி சேவகரை விட்டனன். அன்பர் அவ்வருத்தம்பொறுது கடவுளை நோக்கி முறையிட்டுப் புலம்பினர். அப்பொழுது எமதாண்டவர் காட்டிலே திரிகின்ற சிறிய நரித்திரள்களை நாட்டிலே திரிகின்ற பெரிய பரித்திரள்களாக்கி அரசனிடத்திலே செலுத்தி யவனைக் கரைகாணாத களிப்புக்கடலுள் முழுகுவித்துத் சுக

தொண்டரைச் சிறைக்காவலினின்றும் விடுவித்தனர். அன்றிரவிற்றானே அப்பரித்திரள்களனைத்தும் நரித்திரள்களாய் முன்னுள்ள குதிரைகளுக்கும் ஊறுசெய்து பட்டணமெங்கும் பெரியதோர் கூக்குரலுண்டாக்கித் தம் பழைய இடங்களைச் சேரும்படி சிவபிரான் திருவுளஞ்செய்தனர். விடிந்த பின்பு,அரசன் அச்செய்திகேட்டுப்பெருங்கோபத்தால் விழுங்கப்பட்டவனாகி, மந்திரி தன்னை மாயவித்தையினால் வஞ்சித்தானென்று சேவகரைவிடுத்து முன்னைநாளினும் அதிகமாக ஒறுக்கும்படி செய்தான், அவ்வொறுவேதனை பொறுக்க மாட்டாத அன்பருக்கு இரங்கிக் கடவுளானவர் வையையாற்றைப் பட்டணத்தின்மீது பெருகிவரச்செய்து அவரது மகிமையை அரசனுக்கறிவித்தனர். பின்னர் மாணிக்கவாசகர் தமது தொழின் முறைமையைக் கைவிட்டுத் திருப்பெருந்துறைக்கு எழுந்தருளிச் சில திருப்பாடல்கள் செய்து, மற்றுஞ் சிவஸ்தலங்கடோறுஞ் சென்று வணங்கிக்கொண்டு சிதம்பரமென்னு மகத்தாகிய சிவஸ்தலத்துக்கு வந்து நடேசரைத் தொழுது பலவகைப்பட்ட திருப்பாடல்களைத் திருவாய் மலர்ந்தருளிப், பின்பு வேத சிவாகம மார்க்கத்துக்கு மாறுபட்ட புத்தரை வாதில் வென்று, ஊமைப் பெண்ணைப் பேசும்படி செய்து, சிலநாள் அத்தலத்தில் எழுந்தருளியிருந்தனர். அப்போது சிவபெருமான் ஓரந்தணராகி அவரிடத்திற் சென்று அவர் அத்தலத்திலும் மற்றும் பற்பல சிவஸ்தலங்களிலுஞ் செய்தருளிய திருப்பாடல்களையெல்லாந் திருவாசகமாகக் கூறவும், திருக்கோவையார் பாடவும், கேட்டு அவர் திருவாய் மலர்ந்தவண்ணம் அவற்றைத் தமது அருமைத் திருக்கரத்தால் எழுதி அப்புத்தகங்களில் அழகிய திருச்சிற்றம்பல முடையானெனக் கைச்சாத்தும் வைத்து மறைந்தருளினர். அதன்பின்பு மாணிக்கவாசகசுவாமிகள் சோதி மயமாக விளங்கிய சிதாகாசத்திலே கலந்தருளினர்.

சரித்திரச்சுருக்கம்

முற்றிற்று.

சிவமயம்.

# திருவாசகச்சிறப்பு.

---

## சிவபுராணம்.

தேசுறுமாணிக்கமெனச்சிறந்ததிருவாசகத்திற்
பேசுதிருச்சிவபுராணத்தகவற்பெருமைசொலி
லீசர்தமக்கியல்பானதிருநாமமுதலெல்லையு
மாசறவேவாழ்கவெனவாழ்த்துகின்றவருட்குறிப்பாம். (௧)

## கீர்த்தித்திருவகவல்-திருவண்டப்பகுதி.

புகழ்பெருகுஞ்செய்கையெலாம்புகலகவலொன்றாகுந்
திகழ்திருவண்டப்பகுதிதிருவகவல்செப்பியது
தகுசிருட்டிதிதியொடுக்கஞ்சாற்றுதிரோதம்பொதுவா
யகலமுறத்தேர்ந்திடவேயருளியகற்பொருளாகும். (௨)

## போற்றித்திருவகவல்-திருச்சதகம்-நீத்தல்விண்ணப்பம்.

முத்திபெறுநெறியறியுமொழிபோற்றித்திருவகவல்
சத்தியஞானந்தருதே சிகர்மோகஞ்சதகமதா
மித்தையுலகினையகற்றிவிடாமலெனையாண்டருளென்
றத்தரறிந்திடநீத்தல்விண்ணப்பமறைந்ததுவாம். (௩)

## திருவெம்பாவை - திருவம்மானை.

மலவிருளுற்றுறங்காமன்மன்னுபரிபாகருட்
செலமுழுகவருகவெனச்செப்புதிருவெம்பாவை
நலமுறுமந்தணர்வடிவாய்நாரணன்காண்பரியபத
நிலமதில்வந்தாள்கருணைநினைந்தாடலம்மானை. (௪)

## திருப்பொற்சுண்ணம் - திருக்கோத்தும்பி.

சத்திகளாற்றனுகரணபுவனபோகங்கடமை
யத்தனுக்குச்சுண்ணமவையாயிடிக்கக்கூவுதலே
யொத்ததிருச்சுண்ணமுயர் போதமொருவண்டாகச்
சித்தவிகாரத்தூதுசெப்பிவிடல்கோத்தும்பி. (௫)

## திருத்தெள்ளேணம் - திருச்சாழல்.

பொன்னார்மெய்யண்ணலரும்போதவின்பமேமிகுந்து
தென்னாதென்னாவெனவேதெள்ளேணங்கொட்டியதாம்
மூன்றாற்கலையுமுணராமூகை யா மேடி
தன்னாற்பதிமுதன்மைசாற்றியதாந்திருச்சாழல். (௬)

### திருப்பூவல்லி - திருவுந்தியார்.

தேவரறியாதசிவன்றேடியேயாண்டநல
மாவலொடுஞ்சொல்லியடியாரொடுங்கூடிப்
பூவியர்துகொய்ததிருப்பூவல்லியாமரன்சீர்
பாவமுறுதிமையறப்பாடதிருவுந்தியதே. (௭)

### திருத்தோணோக்கம் - திருப்பொன்னூசல்.

சித்தஞ்சிவமாக்கிச்செய்தனவேபுண்ணியமா
யத்தன்செயுங்கருணைக்காரமையுண்டிருந்து
பொத்தியவைகொட்டிப்புகழ்தருதோணோக்கமருட்
சத்தியிருந்தாடத்தாலாட்டல்பொன்னூசல். (௮)

### திருவன்னைப்பத்து - குயிற்பத்து.

நேயமிகுந்தநிலைகுலையக்கூடுதலை
யாயவருட்டாய்க்கங்கறைதலன்னைப்பத்தாகுந்
தூயவருட்குயிலேசோதியெனைக்கூடுதற்குன்
வாயினாற்கூவெனமுன்வாழ்த்தல்குயிற்பத்தாமே. (௯)

### திருத்தசாங்கம் - திருப்பள்ளியெழுச்சி.

பேர்நாடோறுமலைபேணூர்திபடைமுரசு
தார்கொடியெலாமரற்குச்சாற்றறசாங்கமதா
மேர்மருவுதிருப்பள்ளியெழுச்சிபணிவிடைகேட்
டார்வமுடனுண்டவரற்கன்புசெயுமியல்பே. (௧௦)

### கோயின்மூத்ததிருப்பதிகம் - கோயிற்றிருப்பதிகம்.

### செத்திலாப்பத்து - அடைக்கலப்பத்து.

கோயின்மூத்ததிருப்பதிகஞ்சிதம்பரத்திலருளடையுங்குறிப்பதாகு
மேயுங்கோயிற்பதிகம்பெருந்துறைத்தேசிகர்மோகமியம்பலாகு
மாயபசுபோதம்முற்றுங்கெடவேண்டலேசெத்திலாப்பத்தாகு
மோதுவல்வாதனைகள்வந்தணுகாமலடைக்கலப்பத்துரைத்ததாமே.

### ஆசைப்பத்து - அதிசயப்பத்து.

கருவியுறுமூனுடற்கண்வாராமற்றிருவருளிற்கலப்பதற்கே
யரனடியைப்புகழ்ந்துபெருகார்வமொடுபாடுதலேயாசைப்பத்தாம்
வெருவிமலத்தினைச்சிலத்தொன்றுகுமடியர்குழாத்துடனேகூட்டும்
பரமரருட்பெருமைமிகுதியைப்புகழ்ந்துபாடலதிசயப்பத்தாமே. (௧௨)

### புணர்ச்சிப்பத்து - வாழாப்பத்து.

ஆண்டகுருவைப்பிரியாதணைந்துபணிபுரிந்துமிகுமன்போடின்பம், பூண்டுகிடக்கப்பெறுவதென்றுகொலோவெனும்விருப்பம்புணர்ச்சிப்பத்தாம், நீண்டவுலகத்தினிற்பற்றொன்றிலேனிவ்வுடற்கணின்றுவாழேன், மாண்டகுநின்பதநிழற்கீழ்வருகவருள்புரியெனுஞ்சொல்வாழாப்பத்தே. (௧௩)

### அருட்பத்து - திருக்கழுக்குன்றப்பதிகம்.

சோதியருட்சுடர்விளக்கேதுயர்ப்பிறவிக்கடல்விடுத்துன்றாள்சேர்தற், காதரித்திங்குனையழைத்தாலதெந்துவெனக்கேளெனுஞ்சொலருட்பத்தாகு, நீதிமறைபரவுதிருப்பெருந்துறையிற்குருவடிவாய்நிகழ்ந்தகோலங், காதலொடுங்காட்டினையேயெனுங்களிப்புப்பகர்தறிருக்கழுக்குன்றமே. (௧௪)

### கண்டபத்து - பிரார்த்தனைப்பத்து.

இந்திரியவயமயங்காதேயெடுத்துத் தானாக்குமெழிலானந்தங், கந்தமலிதில்லையினுட் கண்டேனென் றுவந்துரைத்தல்கண்டபத்தா, மந்தமிலாவானந்தத்தகலாமலெனையழுத்தியாள்வாயென்று, சிந்தைகலந்துரைத்ததுவேபிரார்த்தனைப்பத்தாய்ப்புகலுஞ்செய்கையாமே. ()

### குழைத்தபத்து - உயிருண்ணிப்பத்து.

இழைத்தேனிவ்வாக்கைபொறுத்தினிக்கணமும் பொறுக்கலேனேழையேனைக், குழைப்பதேன்பிழைபொறுத்தாளெனவிரங்கிக்கூறுதலேகுழைத்தப்பத்தாந், தழைத்துவளர்பேரின்பந்தானாகியுயிர்தோன்றாத்தன்மையாய்த்துன்,பொழித்துநிறைவைப்பெறுதலுயிருண்ணிப்பத்தாயிங்குரைத்ததாமே. (௧௬)

### அச்சப்பத்து - திருப்பாண்டிப்பதிகம்.

தரையில்வளர்வினைமுழுதும்வரினுமஞ்சேன்சிவசமயத்தவஞ்சாராதா, ரருகின்வாக்காண்கின்மனமஞ்சுமெனவிகழ்ந்துரைத்தலச்சப்பத்தாம், புரவியின்மேற்பாண்டியன்முன் வரும்பதத்தையாம் பெறுமற்புதம்போலியாரும், விரவுமின்களென்றடியார்க்குறுதிசொலற்றிருப்பாண்டிவிருத்தமாமே. (௧௭)

### பிடித்தபத்து - திருவேசறவு.

மிக்கபிறவித்துயரெலாமொழித்துவிபுத்துவமிங்களித்தலாலே, பிக்கறச்சிக்கெனப்பிடித்தேனுன்னையென்று துணிவுசெப்பல் பிடித்தபத்தாந், தக்கபரியாய்நரியையாக்குதல்போலெனைப்பெரிதாய்த்தாக்கித்தாட்கி, ழக்கவைத்தனையேயென்றிரங்கறிருவேசறவென்றியம்பலாமே. (௧௮)

திருப்புலம்பல் - குலாப்பத்து.

கரைக்குருகும்பேரன்புன்கழலிணைக்கேகற்றுவின்மனம்போலெ ன்றுந், இருந்தும்வகையெனக்கருள்கவெனக்கேட்டதிருப்புலம்பலா குமுள்ளம், விரும்புசிவானந்தவெள்ளம்விளைந்து தில்லைநாயகனைமிக க்கொண்டாடி, நிரம்புமனக்களிமிகுத்தவிறமாப்பேகுலாப்பத்தாய் நிகழ்த்தலாமே. (கக)

அற்புதப்பத்து - சென்னிப்பத்து.

மாயவுருக்கொண்டுளத்தைமயக்குமின்னார்கண்வலையுண்மயங்கு வேற்கிங்,காயுமறிவளித்தாளலதிசயமென்றுரைத்தலற்புதப்பத்தாகுந், தூயவருட் குருபதத்தைச்சூட்டுதற்குப்பெற்றவுயிர்சுகத்தைநோக்கிச், சேயமலர்ப்பதத்தருமையடியரொடும்வியந்துரைத்தல்சென்னிப்பத்தே.

திருவார்த்தை - எண்ணப்பதிகம்.

அறம்பெருகும்பெருந்துறையிற்றமையாண்ட செயன்முதலா யரன்சீராட்டின், றிறமறிவாரெம்பிரானுவரெனவுரைத்ததிருவார்த்தை யாகு, நிறம்வளருமலர்ப்பொழில்சூழ்ந்தோங்குதிருத்தில்லைமன்று ணிமலனுமத், திறம்பெருகுமின்பமருளென்றலெண்ணப்பத்தெனவுந் திகழ்த்தலாமே. (உக)

யாத்திரைப்பத்து - திருப்படையெழுச்சி.

பொல்லாதபவத்தைவிட்டுச்சிவன்கழற்கீழ்ப்புகுங்காலம்புணர்ந் ததெற்கிங், கெல்லாரும்வாருமெனக்கருணையினாலழைத்திடல்யாத்தி ரைப்பத்தாகு, மல்லாதநூர்க்குணமாயப்படைகள்விளையாமலருள்வா ளேந்தி, நல்லோர்களியாருமெம்மோடெய்துமெனப் படையெழுச்சி நவிறலாகும். (உஉ)

திருவெண்பா - பண்டாயநான்மறை.

தொந்தமாமலமொறுத்துச்சுகம்பெருக்கிப்பெருந்துறைவாழ்சோ தியென்றன், சிந்தனையேயூராகக்கொண்டிருந்தானென்றுரைத்ததிரு வெண்பாவா, மெந்தைதிருப்பெருந்துறையையேத்துநமரோவாழ்வுற் றிடர்சேர்பாச, பந்தமறுத்திடுவரெனப்பண்டாயநான்மறையும்பகர்ந்த தாமே. (உங)

திருப்படையாட்சி - ஆனந்தமாலை - அச்சோப்பதிகம்.

வாகுதிருப்பெருந்துறையாரொழுந்தருளப்பெறிலெல்லாவளங்க ண்முற்று, மாகுமெமக்கல்லாததாகாதென்றியம்பல் படையாட்சியா கு, மோகமிகுமடியரொடுங்கூடவிரும்பியதானந்தம்மாலைமொழியுமீ சர், போகசுகமெனக்களித்தாரார்பெறுவா ரெனுமருமைபுகறலச்சோ.

திருச்சிற்றம்பலம்.

இந்த திருப்பெருந்துறைப் புராணத்துட் கண்டது.

# திருவாசகத்
# திருவுள்ளக்கிடை.

சிவபுராணம்=சிவனது அநாதி முறைமையானபழமை, எ-து-சிவனது அருவநிலைமை கூறுதல்.

கீர்த்தித்திருவகவல்=சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை.

திருவண்டப்பகுதி=சிவனுடைய தூலசூக்குமத்தை வியந்தது.

போற்றித் திருவகவல்=சகத்தினுற்பத்தி, எ-து-பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தல்.

திருச்சதகம்=பத்தி வைராக்கிய விசித்திரம், எ-து-பத்துவகையாக இரட்சித்தமுறைமை. ௧. மெய்யுணர்தல் - தேகாதி பிரபஞ்சங்களைக்கண்டு நீங்கல். ௨. அறிவுறுத்தல் - பொறியோடேகூட்டுதல்; அருள்தரிசனம், குருதரிசனம். ௩. சுட்டறுத்தல் - தன்செயலறுத்தல். ௪. ஆத்துமசுத்தி - அநுபவத்தழுந்தல். ௫. கைம்மாறுகொடுத்தல் - தன்னைச் சிவனிடத்திலே கொடுத்தல். ௬. அநுபோகசுத்தி - சுகமேலீடு. ௭. காருணியத்திரங்கல் - சிவனுடைய வெற்றிப்பாட்டிரங்கல். ௮. ஆனந்தத்தழுந்தல். ௯. ஆனந்தபரவசம். ௧௦. ஆனந்தாதீதம்.

நீத்தல் விண்ணப்பம்=பிரபஞ்சவைராக்கியம்.

திருவெம்பாவை=சத்தியைவியந்தது; சத்திகளாவார் - அம்பிகை, கணாம்பிகை, கௌரி, கங்கை, உமை, பராசத்தி, ஆதிசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, என ஒன்பதின்மர்.

திருவம்மானை=ஆனந்தக்களிப்பு, எ-து-சுகமேலீடு.

திருப்பொற் சுண்ணம்=ஆனந்த மனோலயம், எ-து-தானன்றி நிற்றல்.

திருக்கோத்தும்பி=சிவனோடைக்கியம், எ-து-சிவனுடன் இடையறாது நிற்றல்.

திருத்தெள்ளேணம்=சிவனோடடைவு, எ-து-சிவனுடனே சென்று கூடுதல்.

திருச்சாழல்=சிவனுடைய காருணியம், எ-து-சிவனுடைய அருட்சத்தி விளையாட்டு.

திருப்பூவல்லி=மாயாவிசய நீக்குதல், எ-து-மாயையினுடையபெலத்தை மறுத்தல்.

திருவுந்தியார்=ஞானவெற்றி அருட்சத்தியினுடையசாமர்த்தியம்.

திருத்தோணோக்கம் = பிரபஞ்சசுத்தி, எ-து-ஆன்மாக்களைச் சுத்திகரித்தல்.

திருப்பொன்னூசல் = அருட்சுத்தி, எ-து-அருளோடு கூடுதல்.

அன்னைப்பத்து=ஆத்தும பூரணம், எ-து-ஆன்மா சிவனுடனே நிறைதல்.

குயிற்பத்து = ஆத்துமவிரக்கம், எ-து-சிவனைக்கண்டிரங்குதல்.

திருத்தசாங்கம் = அடிமைகொண்ட முறைமை, எ-து-பத்தடையாளம்.

திருப்பள்ளியெழுச்சி=திரோதானசுத்தி, எ-து-ஏகமாகிய திரோதாயிமறைப்பான மலம் நீக்குதல்.

கோயின் மூத்த திருப்பதிகம்=அநாதியாகிய சற்காரியம்.

கோயிற்றிருப்பதிகம்=அநுபோகவிலக்கணம், எ-து-சிவானுபூதிக்கடையாளம்.
செத்திலாப்பத்து=சிவானந்தமளவறுக்கொணுமை, எ-து-சிவானந்தமனுபவிச்செயிக்கப்படாமை.
அடைக்கலப்பத்து = பக்குவநிண்ணயம், எ-து-வித்துமங்குரமும்போல என்றல்.
ஆசைப்பத்து-ஆத்துமவிலக்கணம், எ-து-ஆன்மரூபத்தையறிதல்.
அதிசயப்பத்து = முத்தியிலக்கணம், எ-து-மோட்சத்தினடையாளம்.
புணர்ச்சிப்பத்து=அத்துவிதவிலக்கணம், எ-து-ஒன்றுமல்ல இரண்டுமெல்ல என்றல்.
வாழாப்பத்து=முத்தியுபாயம், எ-து-பிரபஞ்சத்தைவிட்டுப்பரபோகத்தைக்கூடுதற்குபாயம்.
அருட்பத்து = மகாமாயா சுத்தி, எ-து-மாயையைச் சுத்திபண்ணுதல்.
திருக்கழுக்குன்றப் பதிகம்=குருதரிசனம், எ-து-பசுத்தவங்கெட்டவிடம்.
கண்டபத்து=நிருத்ததரிசனம்.
பிரார்த்தனைப்பத்து= சதாமுத்தி, எ-து-ஆன்மாக்களுக்கு முத்தி நிச்சயம் பண்ணுதல்.
குழைத்தபத்து=ஆத்தும நிவேதனம், எ-து-நேயத்தோடே ஒன்றினது.
உயிருண்ணிப்பத்து=சிவானந்தமேலிடுதல்எ-து-நேயமேலிடுதல்.
அச்சப்பத்து=ஆனந்த முறுதல், எ-து-நேயத்திலே ஒன்றுபட்டுச்சிக்கென அழுந்தினது.
திருப்பாண்டிப் பதிகம்=சிவானந்தவிளைவு, எ-து-சுகமேலீடு.
பிடித்தபத்து = முத்திக்கலப்புரைத்தல், எ-து-மற்றுள்ள ஆன்மாக்களுக்கு முத்தியின்சுகத்தைச் சொல்லியது.
திருவேசறவு=சுட்டறிவொழித்தல், எ-து-தன்செயலற நிற்றல்.
திருப்புலம்பல்=சிவானந்தமுதிர்வு, எ-து-சிவானந்தம் பெருவிச்சை.
குலாப்பத்து = அனுபவமிடையீடுபடாமை, எ-து-விட்டுப்பற்றுமல் ஒரு தன்மையாயது.
அற்புதப்பத்து=அனுபவம் ஆற்ருமை, எ-து-அனுபவமுற்றுதல் பொருமை விம்முதல்.
சென்னிப்பத்து = சிவவிளைவு, எ-து-சீவனுக்கு நிச்சயப்படுதல்.
திருவார்த்தை=அறிவித்தன்புறுதல், எ-து-உன்னுலறியப்படாதநாக்க அறிவென்றது.
எண்ணப்பதிகம்= ஒழியாவின்பத்துவகை,எ-து-தேகமுதலாகிய ஆசையை யறுத்தல்.
யாத்திரைப்பத்து= அனுபவாதீதமுரைத்தல், எ-து-அனுபவத்தி லதீதப்பட்டுப்போனது.
திருப்படையெழுச்சி = பிரபஞ்சப்போர், எ-து-மலவிளைவற்றது.
திருவெண்பா = அணைந்தோர்தன்மை, எ-து-பரிசவேதிபோல என்றது.
பண்டாய நான்மறை=அனுபவத்துக்கையமின்மையுரைத்தல்.
திருப்படையாட்சி=சிவஉபாதியொழித்தல், எ-து-கிரியாகுணியம்.
ஆனந்தமாலை=சிவானுபவ விருப்பம், எ-து-சிவானந்த மேலீட்டில் கிரியாசத்தி யழிவுரைத்தல்.
அச்சோப்பதிகம்=அனுபவவழியறியாமை, எ-து - அனுபவத்ததிசயம். திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பதிக அட்டவணை.

ஆகத்திருப்பாசுரம் சுருசு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தமிழ்வேதமாகிய

# திருவாசகம்

## மூலமும் உரையும்.

## நூற்சிறப்பு.

நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

தொல்லை யிரும்பிறவிச் சூழுந்தளை நீக்கி
யல்லலறுத் தானந்த மாக்கியதே - யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
றிருவா சகமென்னுந் தேன்.

(இ - ள்.) எல்லை=(பிறவி) யெல்லையை, மருவா=அடையாத, நெறி=(வீட்டு) வழியை, அளிக்கும்=கொடுக்கின்ற, வாதவூர் எங்கோன்=திருவாதவூரின்கண் அவதரித்த எம் தலைவராகிய மாணிக்கவாசகச்சுவாமிகள் அருளிய, திருவாசகம் என்னும் தேன்=திருவாசகமென்கின்ற தேனானது, தொல்லை=பழமையாகிய, இரு=பெரிய, சூழும்=சூழ்ந்த, பிறவித்தளை=பிறவியாகிய பிணிப்பை, நீக்கி=நீங்குவித்து, அல்லல்=துன்பத்தை, அறுத்து=ஒழித்து, ஆனந்தம் ஆக்கியது=(எமக்குப்) பேரின்பத்தை யுண்டாக்கியது, எ - று.

(கு - ரை.) பிறவி யெல்லையை வேரோடொழிக்குந் திருவாதவூரின்கண்ணவதரித்த வெமது தலைவராகிய மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகமென்னுந் தேனானது, தன்னையடைந்தவரின் ஆணவாதிமலக் குறும்புகளையு மதனால்வருந் துன்பங்களையுமறவே யொழித்து பேரானந்தத்தை விளைவிக்குமென்பது.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மாணிக்கவாசகசுவாமிகள்

அருளிச்செய்த

# திருவாசகம்.

## சிவபுராணம்.

சிவனதநாதிமுறைமையானபழமை.

கலிவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாயவாழ்கநாதன்றாள்வாழ்க
இமைப்பொழுதுமென்னெஞ்சினீங்காதான்றாள்வாழ்க
கோகழியாண்டகுருமணிதன்றாள்வாழ்க
ஆகமமாகிநின்றண்ணிப்பான்றாள்வாழ்க
ஏகனநேகனிறைவனடிவாழ்க
வேகங்கெடுத்தாண்டவேந்தனடிவெல்க
பிறப்பறுக்கும்பிஞ்ஞகன்றன்பெய்கழல்கள்வெல்க
புறத்தார்க்குச்சேயோன்றன்பூங்கழல்கள்வெல்க
கரங்குவிவாருண்மகிழுங்கோன்கழல்கள்வெல்க
சிரங்குவிவாரோங்குவிக்குஞ்சீரோன்கழல்வெல்க
ஈசனடிபோற்றியெந்தையடிபோற்றி
தேசனடிபோற்றிசிவன்சேவடிபோற்றி
நேயத்தேநின்றநிமலனடிபோற்றி
மாயப்பிறப்பறுக்குமன்னனடிபோற்றி
சீரார்பெருந்துறைநந்தேவனடிபோற்றி
ஆராதவின்பமருளுமலைபோற்றி
சிவனவனென்சிந்தையுணின்றவதனா
லவனருளாலேயவன்றாள்வணங்கிச்
சிந்தைமகிழச்சிவபுராணந்தன்னை
முந்தைவினைமுழுதுமோயவுரைப்பனியான்
கண்ணுதலான்றன்கருணைக்கண்காட்டவந்தெய்தி
யெண்ணுதற்கெட்டாவெழிலார்கழலிறைஞ்சி

விண்ணிறைந்துமண்ணிறைந்துமிக்காய்விளங்கொளியா
யெண்ணிறந்தெல்லையிலாதானேநின்பெருஞ்சீர்
பொல்லாவினையேன்புகழுமாறொன்றறியேன்
புல்லாகிப்பூடாய்ப்புழுவாய்மரமாகிப்
பல்விருகமாகிப்பறவையாய்ப்பாம்பாகிக்
கல்லாய்மனிதராய்ப்பேயாய்க்கணங்களாய்
வல்லசுரராகிமுனிவராய்த்தேவராய்ச்
செல்லாஅநின்றவித்தாவரசங்கமத்து
ளெல்லாப்பிறப்பும்பிறந்திளைத்தேனெம்பெருமான்
மெய்யேயுன்பொன்னடிகள்கண்டின்றுவீடுற்றே
னுய்யவென்னுள்ளத்துளோங்காரமாய்நின்ற
மெய்யாவிமலாவிடைப்பாகாவேதங்க
ளையாவெனவோங்கியாழ்ந்தகன்றநுண்ணியனே
வெய்யாய்தணியாயியமானனாம்விமலா
பொய்யாயினவெல்லாம்போயகலவந்தருளி
மெய்ஞ்ஞானமாகிமிளிர்கின்றமெய்ச்சுடரே
யெஞ்ஞானமில்லாதேனின்பப்பெருமானே
யஞ்ஞானந்தன்னையகல்விக்குநல்லறிவே
யாக்கமளவிறுதியில்லாயனைத்துலகு
மாக்குவாய்காப்பாயழிப்பாயருடருவாய்
போக்குவாயென்னைப்புகுவிப்பாய்நின்றொழும்பி
னாற்றத்தினேரியாய்சேயாய்நணியானே
மாற்றமனங்கழியநின்றமறையோனே
கறந்தபால்கன்னலொடுநெய்கலந்தாற்போலச்
சிறந்தடியார்சிந்தனையுட்டேனூறிநின்று
பிறந்தபிறப்பறுக்குமெங்கள்பெருமா
னிறங்களோரைந்துடையாய்விண்ணோர்களேத்த
மறைந்திருந்தாயெம்பெருமான்வல்வினையேன்றன்னை
மறைந்திடமூடியமாயவிருளை
யறம்பாவமென்னுமருங்கயிற்றாற்கட்டிப்
புறந்தோல்போர்த்தெங்கும்புழுவழுக்குமூடி
மலஞ்சோருமொன்பதுவாயிற்குடிலை
மலங்கப்புலனைந்தும்வஞ்சனையைச்செய்ய
விலங்குமனத்தால்விமலாவுனக்குக்
கலந்தவன்பாகிக்கசிந்துள்ளுருகு
நலந்தானிலாதசிறியேற்குநல்கி
நிலந்தன்மேல்வந்தருளிநீள்கழல்கள்காட்டி

நாயிற்கடையாய்க்கிடந்தவடியேற்குத்
தாயிற்சிறந்ததயாவானதத்துவனே
மாசற்றசோதிமலர்ந்தமலர்ச்சுடரே
தேசனேதேனாரமுதேசிவபுரனே
பாசமாம்பற்றறுத்துப்பாரிக்குமாரியனே
நேசவருள்புரிந்துநெஞ்சில்வஞ்சங்கெடப்
பேராதுநின்றபெருங்கருணைப்பேராறே
யாராவமுதேயளவிலாப்பெம்மானே
யோராதாருள்ளத்தொளிக்குமொளியானே
நீராயுருக்கியென்னாருயிராய்நின்றானே
யின்பமுந்துன்பமுமில்லானேயுள்ளானே
யன்பருக்கன்பனேயாவையுமாயல்லையுமாஞ்
சோதியனேதுன்னிருளேதோன்றாப்பெருமையனே
யாதியனேயந்தநடுவாகியல்லானே
யீர்த்தென்னையாட்கொண்டவெந்தைபெருமானே
கூர்த்தமெய்ஞ்ஞானத்தாற்கொண்டுணர்வார்தங்கருத்தி
னோக்கரியநோக்கேநுணுக்கரியநுண்ணுணர்வே
போக்கும்வரவும்புணர்வுமிலாப்புண்ணியனே
காக்குமெங்காவலனேகாண்பரியபேரொளியே
யாற்றின்பவெள்ளமேயத்தாமிக்காய்நின்ற
தோற்றச்சுடரொளியாய்ச்சொல்லாதநுண்ணுணர்வாய்
மாற்றமாம்வையகத்தின்வெவ்வேறேவந்தறிவாந்
தேற்றனேதேற்றத்தெளிவேயென்சிந்தனையு
ளூற்றானவுண்ணாரமுதேயுடையானே
வேற்றுவிகாரவிடக்குடம்பினுட்கிடப்ப
வாற்றேனெம்மையாவரனேயோவென்றென்று
போற்றிப்புகழ்ந்திருந்துபொய்கெட்டுமெய்யானார்
மீட்டிங்குவந்துவினைப்பிறவிசாராமே
கள்ளப்புலக்குரம்பைகட்டழிக்கவல்லானே
நள்ளிருளினட்டம்பயின்றாடுநாதனே
தில்லையுட்கூத்தனேதென்பாண்டிநாட்டானே
யல்லற்பிறவியறுப்பானேயோவென்று
சொல்லற்கரியானைச்சொல்லித்திருவடிக்கீழ்ச்
சொல்லியபாட்டின்பொருளுணர்ந்துசொல்லுவார்
செல்வர்சிவபுரத்தினுள்ளார்சிவனடிக்கீழ்ப்
பல்லோருமேத்தப்பணிந்து.

திருச்சிற்றம்பலம்

(இதன் பொருள்.)

நமச்சிவாய வாழ்க=ஸ்ரீ பஞ்சாட்சரம் வாழ்வதாக, நாதன் தாள் வாழ்க, (அப்பஞ்சாட்சரத் திருவுருவனாய் நாததத்துவத்தின் முடிவில் விளங்கும்)=இறைவனது திருவடி வாழ்வதாக, இமைபொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க=இமைப்போதும் என் மனத்தினின்றும் நீங்காதவனது திருவடி வாழ்வதாக, கோகழி ஆண்ட குருமணி தன் தாள் வாழ்க=திருவாவடுதுறையில்எழுந்தருளி எம்மை ஆண்டருளின பரமாசாரியரது திருவடி வாழ்வதாக, ஆகமம் ஆகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க=ஆகமரூபமாகி நின்று (அவ்வாகம முறைமையின் வழிபடுவோர்க்கு) உடனே யநுக்கிரகிப்பவனாகிய இறைவனது திருவடி வாழ்வதாக, ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க=ஒருருவனும் பலவுருவனுமாகிய இறைவனது திருவடி வாழ்வதாக, வேகம் கெடுத்து ஆண்ட வேந்தன் அடி வெல்க=பிறவி வெப்பத்தைத் தணித்து எம்மை ஆண்டருளின முழுமுதற்கடவுளது திருவடி மேம்படுக, பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய் கழல்கள் வெல்க=பிறவித்தளையைச் சேதிக்கிற இறைவனது வீரக் கழலணிந்த திருவடிகள் மேம்படுக, புறத்தார்க்கு சேயோன் தன் பூ கழல்கள் வெல்க=தன்னை வணங்காத அயலார்க்கு தூரஸ்தனாயிருப்பவனது தாமரைமலர்போலுந் திருவடிகள் மேம்படுக, கரம் குவிவார் உள் மகிழும் கோன் கழல்கள் வெல்க=கை கூம்பப் பெற்றவரது மனம் மகிழும்படியான இறைவனது திருவடிகள் மேம்படுக, சிரம் குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க=தலை வணங்கப்பெற்றவரை உயரப்பண்ணுகிற சிறப்புடையவனது திருவடி மேம்படுக, ஈசன் அடிபோற்றி=ஈசனது திருவடிக்குவணக்கம், எந்தை அடிபோற்றி=எம்தந்தையினது திருவடிக்குவணக்கம், தேசன் அடிபோற்றி=ஒளியுருவையுடையானது திருவடிக்குவணக்கம், சிவன் சேவடி போற்றி=சிவபிரானது திருவடிக்கு வணக்கம், நேயத்து ஏ நின்ற நிமலன் அடிபோற்றி=பத்தரது அன்பின்கண் நிலைத்துநின்ற நிர்மலனது திருவடிக்கு வணக்கம், மாயம் பிறப்பு அறுக்கும் மன்னன் அடிபோற்றி=மாயப்பிறவியை யொழிக்கின்ற அரசனது திருவடிக்கு வணக்கம், சீர் ஆர் பெருந்துறை நம் தேவன் அடி போற்றி=சிறப்புப்பொருந்திய திருப்பெருந்துறையின்கண் எழுந்தருளிய நம்முடைய கடவுளது திருவடிக்கு வணக்கம், ஆராத இன்பம் அருளும் மலை போற்றி=வெறுக்காத இன்பத்தைக் கொடுக்கின்ற மலைபோலும் கிருபையை யுடையவனுக்கு வணக்கம், சிவன் அவன் என் சிந்

சிந்தையுள் நின்ற அதனால்=சிவபெருமானாகிய அவன் என் மனத்தில்
நிலைபெற்றிருந்ததனால், அவன் அருளாலே அவன் தாள் வணங்கி=அ
வனுடை கிருபையினால் அவனுடைய திருவடியை வணங்கி, சிந்தை
மகிழ சிவபுராணம் தன்னை=மனம் மகிழும்படிச் சிவனதனாதியான
பழமையை, முந்தை வினைமுழுதும் ஓய யான் உரைப்பன்=முன்
னைய வினைமுழுமையுங்கெட யான் சொல்லுவேன், கண்ணுதலான்
தன் கருணை கண் காட்ட வந்து எய்தி=நுதல்விழியையுடைய சிவ
பெருமான் கிருபைக்கண் செய்ய வந்தடைந்து, எண்ணுதற்கு எட்
டா எழிலார் கழல் இறைஞ்சி=நினைத்தற்குக்கூடாத அழகுவாய்
ந்த திருவடியை வணங்கி, விண்நிறைந்தும்=விண்ணில் நிறைந்
தும், மண் நிறைந்தும்=மண்ணில் நிறைந்தும், மிக்காய்=மேலாய்,
விளங்கு ஒளியாய்=விளங்குகின்ற தனிப் பிழம்பாய், எண் இற
ந்து = அளவு கடந்து, எல்லை இல்லானே = இன்ப வெல்லை
யில்லாதவனே, நின் பெரும் சீர்=உன்னுடைய மிக்கச் சிறப்
பை, பொல்லா வினையேன்=கொடிய வினையையுடையேனாகிய
யான், புகழும் ஆறு ஒன்று அறியேன்=புகழுகின்ற விதம்
சிறிதும் அறிகிலேன், புல் ஆகி=புல்லாகியும், பூடு ஆய்=பூண்டா
கியும், புழு ஆய்=புழுவாகியும், மரம் ஆகி=மரமாகியும், பல் விரு
கம் ஆகி=பல மிருகங்களாகியும், பறவை ஆய்=பறவையாகியும், பா
ம்பு ஆகி=பாம்பாகியும், கல் ஆய்=கல்லாகியும், மனிதர் ஆய்=மனி
தராகியும், பேய் ஆய்=பேயாகியும், கணங்கள் ஆய்=கணங்களாகியும்,
வல் அசுரர் ஆகி=வலிய அசுரராகியும், முனிவர் ஆய்=முனிவராகி
யும், தேவர் ஆய்=தேவராகியும், செல்லாஅநின்ற=நடவாநின்ற, இ=
இந்த, தாவர சங்கமத்துள்=நிலையியற்பொருள் இயங்கியற்பொருள்
என்னும் இருவகைப் பொருள்களுள்ளே, எல்லாப்பிறப்பும்பிறந்து=
எல்லாப்பிறவிகளிலும் பிறந்து, இளைத்தேன்=மெலிவடைந்தேன்,
எம் பெருமான்=எம்பெருமானே, இன்று=இப்பொழுது, மெய்யே=
உண்மையாகவே, உன் பொன் அடிகள் கண்டு=உன் பொன்னடி
களைக்கண்டு, வீடு உற்றேன்=வீடடைந்தேன், உய்ய=நான் உய்
யும்படி, என் உள்ளத்துள்=என் மனத்தில், ஓங்காரம் ஆய் நின்
ற=பிரணவவுருவாய் நின்ற, மெய்யா=மெய்யனே, விமலா=மல
விமுக்தனே, விடை பாகா=இடபவாகனனே, வேதங்கள்=மறை
கள், ஐயா என=ஐயனே என்று துதிக்க, ஓங்கி=உயர்ந்து, ஆழ்
ந்து அகன்ற=ஆழ்ந்து விசாலித்த, நுண்ணியனே=சூக்குமவுரு
வனே, வெய்யாய்=வெம்மையனே, தண்ணியாய்=தண்ணியே

இயமானன் ஆம்விமலா=ஆன்மாவாக நின்ற விமலனே, பொய்
ஆயின எல்லாம்=பொய்யானவை முழுதும், போய் அகல=போய்
ஒழிய, வந்தருளி=எழுந்தருளி, மெய்ஞானம் ஆகி=மெய்யறிவாகி,
மிளிர்கின்ற= விளங்குகின்ற, மெய் சுடரே = உண்மையொளியே,
எ ஞானம் இல்லாதேன்=சிறிதும் அறிவில்லாதேனுக்கு, இன்பப்
பெருமானே = இன்பத்தைத் தருகிற இறைவனே, அஞ்ஞானம்
தன்னை = அஞ்ஞானத்தை, அகல்விக்கும் = நீக்குகின்ற, நல் அறி
வே=நல்ல ஞானமே, ஆக்கம் அளவு இறுதி இல்லாய்=தோற்றம்
எல்லை முடிவு என்பவை யில்லாதவனே, அனைத்து உலகும்=
எல்லாவுலகங்களையும், ஆக்குவாய்=படைப்பாய், காப்பாய்=இரட்
சிப்பாய், அழிப்பாய்=சங்கரிப்பாய், அருள் தருவாய்=அருள்செய்
வாய், போக்குவாய்=நீக்குவாய், என்னை=அடியேனை, நின்தொழும்
பில்=உன்தொண்டில், புகுவிப்பாய்=புகப்பண்ணுவாய், ஆற்றத்தில்
நேரியாய்=உன்னையடையும் வழியில் செவ்வியனே, சேயாய்=தூர
ஸ்தனே, நணியானே=சமீபஸ்தனே, மாற்றம் மனம் கழிய நின்ற=
சொல்லும்மனமும் கடந்துநின்ற, மறையோனே=வேதியனே, கற
ந்தபால் கன்னலொடு நெய் கலந்தால் போல=கறந்தபாலும் சர்க்க
ரையும் நெய்யும் கூடினதுபோல, சிறந்த அடியார் சிந்தனையுள்=
சிறந்த அன்பரதுமனத்துள், தேன் ஊறி நின்று=தேன்போலச்சுரந்து
நின்று, பிறந்த பிறப்பு அறுக்கும்=பிறந்த பிறவிகளையொழிக்கின்ற,
எங்கள் பெருமான்=எம்பெருமானே, நிறங்கள் ஓர் ஐந்து உடை
யாய்=ஒப்பற்ற ஐந்துருவங்களை யுடையவனே, (ஐந்துருவமென்
றது=சிருட்டியாதி பஞ்சகிர்த்தியத்தலைவர்களாய் நின்றமையை.)
விண்ணோர்கள் ஏத்த=தேவர்கள் துதிக்க, மறைந்து இருந்தாய்=
அவர்களுக்கு ஒளித்திருந்தவனே, எம் பெருமான்=எம்பெருமானே,
வல்வினையேன் தன்னை=வலியவினையை யுடையவனாகிய என்னை,
மறைந்திட மூடிய=மறையும்படி மூடிக்கொண்ட, மாய இருளை =
மாயாந்தகாரத்தை, அறம் பாவம் என்னும்=புண்ணியபாவங்கள்
என்கின்ற, அரு கயிற்றால் கட்டி=அருமையாகிய கயிற்றால்கட்டி,
புறம் தோல் போர்த்து = வெளியே தோலால்மூடி, எங்கும் புழு
அழுக்கு மூடி = எவ்விடத்தும்புழுக்கள் நெளிகின்ற மலத்தை
மூடி, மலம் சோரும் = மலம் ஒழுகுகின்ற, ஒன்பது வாயில்
குடிலை=ஒன்பது வாசலையுடைய குடிசையை,மலங்க=குலையும்படி,
புலன் ஐந்தும்=ஐம்புலன்களும், வஞ்சனை செய்ய=வஞ்சனை பண்
ண, விலங்கும் மனத்தால்=நீங்கின மனத்தினால், விமலா=விமல

னே, உனக்கு=உன்பொருட்டு, கலந்த அன்பு ஆகி=பொருந்தின அன்பையுடையேனாய், உள் கசிந்து உருகும்=மனம் கசிந்து உருகுகின்ற, நலம் தான் இலாத=நன்மையில்லாத, சிறியேற்கு=சிறியேனுக்கு, நல்கி=கிருபைசெய்து, நிலம் தன்மேல் வந்தருளி=பூமியின்மேல் எழுந்தருளி, நீள் கழல்கள் காட்டி=நீண்ட திருவடிகளைக்காட்டி, நாயின் கடையாய் கிடந்த அடியேற்கு=நாயினும் கடையனாய்க்கிடந்த அடியேனுக்கு, தாயின் சிறந்த=தாயினும் சிறந்த, தயா ஆன=தயாளுவான, தத்துவனே=உண்மைப்பொருளே, மாசு அற்ற சோதி மலர்ந்த=களங்க மற்ற ஒளிவிரிந்த, மலர் சுடரோ=விரிதலையுடைய ஒளியே, தேசனே=ஒளியையுடையானே, தேனே=தேனே, ஆர் அமுதே=அரிய வமுதே, சிவபுரனே=சிவபுரத்தையுடையானே, பாசம் ஆம் பற்று அறுத்து=பாசமாகிய பற்றைச்சேதித்து, பாலிக்கும்=என்னைத்தாங்குகின்ற, ஆரியனே=வேதியனே, நேச அருள் புரிந்து=அன்போடு அருள் செய்து, நெஞ்சில் வஞ்சம் கெட=என் மனத்தில் உள்ள வஞ்சகம் அழிய, பேராது நின்ற=பெயராமல் நின்ற, பெருங்கருணை=பெருங்கருணையாகிய, பேர் ஆறே=பெரிய நதியே, ஆரா அமுதே=தெவிட்டாத அமிர்தமே, அளவு இல்லா பெம்மானே=எல்லையில்லாத பெருமானே, ஓராதார் உள்ளத்து=ஆராயாதார் மனத்தில், ஒளிக்கும்=மறைகின்ற, ஒளியானே=ஒளியையுடையானே, நீராய் உருக்கி=என் மனத்தை நீர் போல உருகப்பண்ணி, என் ஆர் உயிராய் நின்றவனே=என் அரியவுயிராய் நின்றவனே, இன்பமும் துன்பமும்=சுகமும் துக்கமும், இல்லானே=இல்லாதவனே, உள்ளானே=உள்ளவனே, அன்பருக்கு அன்பனே=அன்பர்களிடத்து அன்புள்ளவனே, யாவையும் ஆய்=எல்லாப்பொருள்களும் ஆகி, அல்லையும் ஆம்=அல்லாதவனும் ஆகின்ற, சோதியனே=ஒளியை யுடையவனே, துன்னிருளே=மிக்க இருளாயிருப்பவனே, தோன்றா பெருமையனே=புலப்படாத பெருமையை யுடையவனே, ஆதியனே=முதல்வனே, அந்தம் நடு ஆகி=முடிவும் நடுவும் ஆகி, அல்லானே=அவையல்லாது இருப்பவனே, என்னை ஈர்த்து ஆட் கொண்ட=என்னை இழுத்து ஆட்கொண்டருளின, எந்தை பெருமானே=எமது தந்தையாகிய சிவபெருமானே, கூர்த்த மெய் ஞானத்தால்=மிகுந்த உண்மை ஞானத்தால், கொண்டு உணர்வார் தம் கருத்தில்=பெற்று அறிபவருடைய மனத்திலும், நோக்கு அரிய=நோக்குதற்கு அரிதாகிய, நோக்கே=காட்சியே, நுணுக்கு அரிய=நுணுக்குதற்கு அரிதாகிய, நுண் உணர்வே=நுண்ணியவறிவே, போக்கும் வரவும் புணர்வும் இல்லா

புண்ணியனே=போதலும் வருதலும் நிற்றலும் இல்லாத புண்ணியனே, காக்கும் எம் காவலனே=எம்மைக் காப்பாற்றுகின்ற எமதுஇரட்சகனே, காண்பு அரிய பேர் ஒளியே=காணுதல் அருமையாகியபெரிய ஒளியே, ஆற்று இன்பவெள்ளமே=மகாநதிபோன்ற இன்பப்பெருக்கே, அத்தா=அத்தனே, மிக்காய்=மேலோனே, நின்ற தோற்றச் சுடர் ஒளியாய்=நிலைபெற்ற தோற்றத்தையுடைய விளங்குகின்ற ஒளியாகியும், சொல்லாத நுண் உணர்வு ஆய்=சொல்லப்படாத நுட்பமாகிய அறிவாகியும், மாற்றம் ஆம் வையகத்தின்=மாறுபடுதலையுடைய வுலகத்தில், வெவ்வேறே வந்து=வெவ்வேறாய் வந்து, அறிவு ஆம்=அறிவுருவாகிய, தேற்றனே=தேறுதலையுடையானே, தேற்றத் தெளிவே=தேறுதலின் தெளிவே, என் சிந்தனையுள் ஊற்று ஆன=என் மனத்தில் ஊற்றுப்போன்ற, உண் ஆர் அமுதே=பருகுதற்குரிய அரிய அமிர்தமே, உடையானே=உடையவனே, வேற்று விகாரம்=வெவ்வேறு விகாரங்களையுடைய, விடக்கு உடம்பின்உள் கிடப்ப ஆற்றேன்=மாமிசசரீரத்தில்கிடக்கச்சகியேன், எம் ஐயா=எம் ஐயனே, அரனே=அரனே, ஓ என்று என்று=ஓ என்று முறையிட்டு, போற்றி=வணங்கி, புகழ்ந்து இருந்து=கீர்த்தித்திருந்து, பொய் கெட்டு=பொய்யொழிந்து, மெய் ஆனார்=அறிவுருவானவர்கள், மீட்டு இங்கு வந்து=மறுபடியும் இவ்வுலகில் வந்து, வினைப்பிறவி சாராமே=வினைப்பிறவியை யடையாமல், கள்ளம்புலம் குரம்பை=வஞ்சகத்தையுடைய ஐம்புலன்களுக்கிடமாகிய உடம்பை, கட்டழிக்க வல்லானே=கட்டழிக்க வல்லவனே, நள் இருளில்=நடு இராத்திரியில், பயின்று=மிகுந்து, நட்டம் ஆடும்=நடனஞ்செய்கின்ற, நாதனே=இறைவனே, தில்லையுள் கூத்தனே=திருத்தில்லையில் நடிப்பவனே, தென் பாண்டி நாட்டானே=தென் பாண்டிநாட்டையுடையவனே, அல்லல் பிறவி அறுப்பானே=துன்பப்பிறப்பை யறுப்பவனே, ஓ என்று=ஓவென்று முறையிட்டு, சொல்லற்கு அரியானை சொல்லி=துதித்தற்கரியவனைத் துதித்து, திருவடிக்கீழ் சொல்லிய பாட்டின்=திருவடியின்மீது பாடின பாட்டின், பொருள் உணர்ந்து சொல்லுவார்=பொருளையறிந்து துதிப்பவர், பல்லோரும் ஏத்த=எல்லாரும் துதிக்க, பணிந்து=வணங்கி, சிவபுரத்தினுள்ளார்=சிவநகரத்திலுள்ளவராய், சிவன் அடிகீழ் செல்வர்=சிவபெருமானது திருவடிக்கீழ் சென்று நிலைபெறுவர், எ - று.

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது

# கீர்த்தித்திருவகவல்.

## சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை.

நிலைமண்டில வாசிரியப்பா.

திருச்சிற்றம்பலம்.

தில்லைமூதூராடியதிருவடி
பல்லுயிரெல்லாம்பயின்றனனாகி
யெண்ணில்பல்குணமெழில்பெறவிளங்கி
மண்ணும்விண்ணும்வானோருலகுந்
துன்னியகல்விதோற்றியுமழித்து
மென்னுடையிருளையேறத்துரந்து
மடியாருள்ளத்தன்புமீதூரக்
குடியாக்கொண்டகொள்கையுஞ்சிறப்பு
மன்னுமாமலைமகேந்திரமதனிற்
சொன்னவாகமந்தோற்றுவித்தருளியுங்
கல்லாடத்துக்கலந்தினிதருளி
நல்லாளோடுநயப்புறவெய்தியும்
பஞ்சப்பள்ளியிற்பான்மொழிதன்னொடு
மெஞ்சாதீண்டுமின்னருள்விளைத்துங்
கிராதவேடமொடுகிஞ்சுகவாயவள்
விராவுகொங்கைநற்றடம்படிந்துங்
கேவேடராகிக்கெளிறதுபடுத்து
மாவேட்டாகியவாகமம்வாங்கியு
மற்றவைதம்மைமகேந்திரத்திருந்
துற்றவைம்முகங்களாற்பணித்தருளியு
நந்தம்பாடியினான்மறையோனா
யந்தமிலாரியனாயமர்ந்தருளியும்
வேறுவேறுருவும்வேறுவேறியற்கையு
நூறுநூறாயிரமியல்பினதாகி
யேறுடையீசனிப்புவனியையுய்யக்
கூறுடைமங்கையுந்தானும்வந்தருளிக்
குதிரையைக்கொண்டுகுடநாடதன்மிசைச்
சதுர்படச்சாத்தாய்த்தானெழுந்தருளியும்
வேலம்புத்தூர்விட்டேறருளிக்

கோலம்பொலிவுகாட்டியகொள்கையுந்
தர்ப்பணமதனிற்சாந்தம்புத்தூர்
விற்பொருவேடற்கீந்தவிளைவு
மொக்கணியருளியமுழுத்தழன்மேனி
சொக்கதாகக்காட்டியதொன்மையு
மரியொடுபிரமற்களவறியொண்ணா
நரியைக்குதிரையாக்கியநன்மையு
மாண்டுகொண்டருளவழகுறுதிருவடி
பாண்டியன்றனக்குப்பரிமாவிற்
றீண்டுகனகமிசையப்பெறாஅ
தாண்டானெங்கோனருள்வழியிருப்பத்
தூண்டுசோதிதோற்றியதொன்மையு
மந்தணனாகியாண்டுகொண்டருளி
யிந்திரஞாலங்காட்டியவியல்பு
மதுரைப்பெருநன்மாநகரிருந்து
குதிரைச்சேவகனாகியகொள்கையு
மாங்கதுதன்னிலடியவட்காகப்
பாங்காய்மண்சுமந்தருளியபரிசு
முத்தரகோசமங்கையுளிருந்து
வித்தகவேடங்காட்டியவியல்பும்
பூவணமதனிற்பொலிந்திருந்தருளித்
தூவணமேனிகாட்டியதொன்மையும்
வாதவூரினில்வந்தினிதருளிப்
பாதச்சிலம்பொலிகாட்டியபண்புந்
திருவார்பெருந்துறைச்செல்வனாகிக்
கருவார்சோதியிற்கரந்தகள்ளமும்
பூவலமதனிற்பொலிந்தினிதருளிப்
பாவநாசமாக்கியபரிசுந்
தண்ணீர்ப்பந்தர்சயம்பெறவைத்து
நன்னீர்ச்சேவகனாகியநன்மையும்
விருந்தினனாகிவெண்காடதனிற்
குருந்தின்கீழன்றிருந்தகொள்கையும்
பட்டமங்கையிற்பாங்காயிருந்தங்
கட்டமாசித்தியருளியவதுவும்
வேடுவனாகிவேண்டுருக்கொண்டு
காடதுதன்னிற்கரந்தகள்ளமு

மெய்க்காட்டிட்டுவேண்டுருக்கொண்டு
தக்காரொருவனாகியதன்மையு
மோரியூரினுகந்தினிதருளிப்
பாரிரும்பாலகனாகியபரிசும்
பாண்டூர்தன்னிலீண்டவிருந்துந்
தேவூர்த்தென்பாற்றிகழ்தருதீவிற்
கோவார்கோலங்கொண்டகொள்கையுந்
தேனமர்சோலைத்திருவாரூரின்
ஞானந்தன்னைநல்கியநன்மையு
மிடைமருததனிலீண்டவிருந்து
படிமப்பாதம்வைத்தவப்பரிசு
மேகம்பத்தினியல்பாயிருந்து
பாகம்பெண்ணோடாயினபரிசுந்
திருவாஞ்சியத்திற்சீர்பெறவிருந்து
மருவார்குழலியொடுமகிழ்ந்தவண்ணமுஞ்
சேவகனாகித்திண்சிலையேந்திப்
பாவகம்பலபலகாட்டியபரிசுங்
கடம்பூர்தன்னிலிடம்பெறவிருந்து
மீங்கோய்மலையிலெழிலதுகாட்டியு
மையாறதனிற்சைவனாகியுந்
துருத்திதன்னிலருத்தியோடிருந்துந்
திருப்பனையூரில்விருப்பனாகியுங்
கழுமலமதனிற்காட்சிகொடுத்துங்
கழுக்குன்றதனில்வழுக்காதிருந்தும்
புறம்பயமதனிலறம்பலவருளியுங்
குற்றாலத்துக்குறியாயிருந்து
மந்தமில்பெருமையழலுருக்கரந்து
சுந்தரவேடத்தொருமுதலுருவுகொண்
டிந்திரஞாலம்போலவந்தருளி
யெவ்வெவர்தன்மையுந்தன்வயிற்படுத்துத்
தானேயாகியதயாபரனெம்மிறை
சந்திரதீபத்துச்சாத்திரனாகி
யந்தரத்திழிந்துவந்தழகமர்பாலையுட்
சுந்தரத்தன்மையொடுதுதைந்திருந்தருளியு
மந்திரமாமலைமகேந்திரவெற்ப
னந்தமில்பெருமையருளுடையண்ணா

னெந்நமையாண்டபரிசதுபகரி
னாற்றலதுவுடையழகமர்திருவுரு
நீற்றுக்கோடிநிமிர்ந்துகாட்டியு
மூனந்தன்னையொருங்குடனறுக்கு
மானந்தம்மேயாறாவருளியு
மாதிற்கூறுடைமாப்பெருங்கருணைய
னாதப்பெரும்பறைநவின்றுகறங்கவு
மழுக்கடையாமலாண்டுகொண்டருள்பவன்
கழுக்கடைதன்னைக்கைக்கொண்டருளியு
மூலமாகியமும்மலமறுக்குந்
தூயமேனிச்சுடர்விடுசோதி
காதலனாகிக்கழுநீர்மாலை
யேலுடைத்தாகவெழில்பெறவணிந்து
மரியொடுபிரமற்களவறியாதவன்
பரிமாவின்மிசைப்பயின்றவண்ணமு
மீண்டுவாராவழியருள்புரிபவன்
பாண்டிநாடேபழம்பதியாகவும்
பத்திசெய்யடியரைப்பரம்பரத்துய்ப்பவ
னுத்தரகோசமங்கையூராகவு
மாதிமூர்த்திகட்கருள்புரிந்தருளிய
தேவதேவன்றிருப்பெயராகவு
மிருள்கடிந்தருளியவின்பவூர்தி
யருளியபெருமையருண்மலையாகவு
மெப்பெருந்தன்மையுமெவ்வெவர்திறமு
மப்பரிசதனாலாண்டுகொண்டருளி
நாயினேனைநலமலிதில்லையுட்
கோலமார்தருபொதுவினில்வருகென
வேலவென்னையீங்கொழித்தருளி
யன்றுடன்சென்றவருள்பெறுமடியவ
ரொன்றவொன்றவுடன்கலந்தருளியு
மெய்தவந்திலாதாரெரியிற்பாயவு
மாலதுவாகிமயக்கமெய்தியும்
பூதலமதனிற்புரண்டுவீழ்ந்தலறியுங்
கால்விசைத்தோடிக்கடல்புகமண்டி
நாதநாதவென்றழுதரற்றிப்
பாதமெய்தினர்பாதமெய்தவும்

பதஞ்சலிக்கருளியபரமநாடகவென்
றிதஞ்சலிப்பெய்தநின்றேங்கினோங்கவு
மெழில்பெறுமிமயத்தியல்புடையம்பொற்
பொலிதருபுலியூர்ப்பொதுவினினடநவில்
கனிதருசெவ்வாயுமையொடுகாளிக்
கருளியதிருமுகத்தழகுறுசிறுநகை
யிறைவனீண்டியவடியவரோடும்
பொலிதருபுலியூர்ப்புக்கினிதருளின
னொலிதருகைலையுயர்கிழவோனே.

திருச்சிற்றம்பலம்.

(இதன் பொருள்.)

தில்லை மூதூர் ஆடிய திருவடி=தில்லையாகிய பழைய நகரில் பஞ்சகிருத்தியத் தாண்டவஞ்செய்தருளிய திருவடியானது, பல் உயிர் எல்லாம் பயின்றனன் ஆகி=பல உயிர்களில் எல்லாம் உறைந்தவனாகி, எண்ணில்=அளவில்லாத, பல்குணம்=பலகுணங்களோடு, எழில்பெற விளங்கி=அழகுவாய்க்க விளங்கி, மண்ணும்=மண்ணுலகும், விண்ணும்=விண்ணுலகும், வானோர் உலகும்=மற்றைய தேவருலகும், துன்னிய=பொருந்திய, கல்வி=கல்விகளை, தோற்றியும் = தோன்றுவித்தும், அழித்தும் = அழித்தும், என்னுடை இருளை=என்னுடைய அஞ்ஞான இருளை, ஏற துறந்தும்=முழுதும் ஒழித்தும், அடியார் உள்ளத்து=அடியாருடைய உள்ளத்தில், அன்பு=அன்பானது, மீதூர=அதிகரிக்க, குடி ஆக கொண்ட=குடியிருப்பாகக்கொண்ட, கொள்கையும் = முறைமையும், சிறப்பும்=சிறப்பும், மன்னும் மாமலை மகேந்திரம் அதனில்=நிலைபெற்றபெரியமகேந்திரமலையதனில், சொன்ன ஆகமம்=சொல்லிய ஆகமத்தை, தோற்றுவித்தருளியும்=வெளிப்படுத்தியும், கல்லாடத்து இனிது=கல்லாடமென்னும் திருப்பதியில் இனிதாக, நல்லாளோடு=உமாதேவியோடு, நயப்புற=யாவரும் விரும்பும்படி, கலந்தருளி=ஒருமிக்க, எய்தியும்=எழுந்தருளியிருந்தும், பஞ்சப்பள்ளியில்=பஞ்சப்பள்ளியென்னும் திருப்பதியில், பால்மொழிதன்னொடும்=பால்போன்றமொழியையுடையவளாகிய உமாதேவியோடும் எஞ்சாது=குறையாமல், ஈண்டும்=மிகுந்த, இன் அருள் விளைத்தும்=இனிய அருள் செய்தும், கிராதவேடமொடு=வேடவேடத்தோடு, கிஞ்சுகவாயவள்=முருக்கம்பூப்போன்ற அதரத்தையுடைய உமாதேவியின், விராவு=நெருங்கின், நல்=அழகான, கொங்கை,

தடம்படிந்தும்=தனதடத்தில் மூழ்கியும், கேவேடர் ஆகி=வலையராகி, கெளிறது படுத்தும்=கெளிற்றுமீன்பிடித்தும், மா வேட்டு ஆகிய ஆகமம் வாங்கியும்=பெருமைவாய்ந்த விருப்பத்தினையுடைய ஆகமங்களை கடலினின்றும் கவர்ந்தும், மற்றும்=பின்னும், அவைதம்மை=அவ்வாகமங்களை, மகேந்திரத்து இருந்து=மகேந்திரமலையிலிருந்து, உற்ற ஐம் முகங்களால்=பொருந்திய பஞ்சமுகங்களாலும், பணித்தருளியும்=உபதேசித் தருளியும், நந்தம்பாடியில் = நந்தம்பாடி யென்னும் திருப்பதியில், நான்மறையோனாய்=வேதியனாய், அந்தம் இல்=முடிவற்ற, ஆரியனாய் அமர்ந்தருளியும்=ஆச்சாரியனாய் எழுந்தருளியும், வேறு வேறு உருவும்=வெவ்வேறுரூபங்களும், வேறு வேறு இயற்கையும்=வெவ்வேறு குணங்களும், நூறு நூறு ஆயிரம் இயல்பினதாகி=நூறு இலட்சம் வகையினையுடையதாகி, ஏறு உடை ஈசன்=இடபவாகனத்தையுடைய சர்வேஸ்வரன், இ புவனி உய்ய=இப்பிரபஞ்சத்தை யுய்விக்கும்பொருட்டு, கூறு உடை மங்கையும்=தனது இடபாகத்தையுடைய உமாதேவியாரும், தானும்=தானுமாக, வந்தருளி=எழுந்தருளி, குடநாடு அதன் மிசை=மேல்நாட்டிலிருந்து, குதிரையைக்கொண்டு=குதிரைகளைக்கொண்டு, சதுர்பட=அழகு பொருந்த, சாத்தாய்=குதிரைவீரனாய், தான் எழுந்தருளியும், தானே எழுந்தருளிவந்தும், வேலம்புத்தூர்=வேலம்புத்தூரென்னும் திருப்பதியில், ஏறு விட்டருளி=எருது விடுத்தருளியும், கோலம்=தன் திருக்கோலத்தை, பொலிவு=பொலிவாக, காட்டிய கொள்கையும்=காண்பித்த கோட்பாடும், சாந்தம் புத்தூர்=சாந்தம்புத்தூரில், வில் பொரு வேடற்கு=வில்லினால் போர்செய்கின்ற ஒரு வேடனுக்கு, தர்ப்பணமதனில்=கண்ணாடியில், ஈந்த=காட்சிகொடுத்த, விளைவும்=பயனும், மொக்கணி அருளிய=தோற்பையை யருள, முழுத்தழல் மேனி=மிக்க நெருப்புருவத்தை, சொக்கதாக காட்டிய தொன்மையும்=அழகாக காட்டிய பழமையும், அரியொடு பிரமற்கு=திருமாலொடு பிரமனுக்கும், அளவு அறிய ஒண்ணான்=அளவு அறியப்படாதவனாகிய சிவபெருமான், நரியை குதிரையாக்கிய நன்மையும்=நரிகளைக் குதிரைகளாகச்செய்த நன்மையும், ஆண்டு கொண்டருள=ஆட்கொண்டருள, அழகு உறு திருவடி=அழகு மிகுந்த திருவடி, பாண்டியன் தனக்கு = பாண்டியனுக்கு, பரிமாவில்=குதிரையின்பொருட்டு, தீண்டு கனகம்=வைக்கப்பட்ட பொன், இசையப்பெறாது=கிடைக்கப்பெறாமல், ஆண்டான் எங்கோன்=ஆண்டவனாகிய எம்மிறைவன கா. அருள்

வழி இருப்ப=அருள் வழியினை நாடி இருக்க, துண்டு சோதி=மிக்க ஒளி, தோற்றிய தொன்மையும்=வெளிப்பட்ட பழமையும், அந்தணன் ஆகி=வேதியனாகி, ஆண்டுகொண்டருளி=ஆட்கொண்டருளி, இந்திரஞாலம் காட்டிய இயல்பும்=இந்திரஜாலத்தை தோற்றுவித்த வியற்கையும், மதுரைப் பெரு நன் மா நகர் இருந்து=மதுரையாகிய பெரிய நல்ல பெருமைவாய்ந்த நகரத்திலிருந்து, குதிரைச் சேவகன் ஆகிய கொள்கையும்=குதிரை வீரனாய்வந்த கோட்பாடும், ஆங்கது தன்னில்=அந்த மதுரைநகரத்தில், அடியவட்கு ஆக=அடியவளாகிய செம்மனச்செல்வியின்பொருட்டு, பாங்காய் மண்சுமந்தருளிய பரிசும்=முறையாக மண்சுமந்தருளிய விதமும், உத்தரகோசமங்கையுள் இருந்து=திருவுத்தரகோசமங்கையிலிருந்து, வித்தக வேடம் காட்டிய இயல்பும்=ஞானவடிவைக் காட்டியஇயற்கையும், பூவணம் அதனில் பொலிந்து இருந்தருளி=திருப்பூவணத்தில் விளங்கியிருந்தருளி, தூவண்ணம் மேனி காட்டிய தொன்மையும்=பரிசுத்தமாகிய அழகிய திருமேனியைக் காட்டிய பழமையும், வாதவூரினில் இனிது வந்தருளி=திருவாதவூரில் இனிதாகஎழுந்தருளி, பாதச்சிலம்பு ஒலிகாட்டிய பண்பும்=பாதச்சிலம்போசையை காட்டிய குணமும், திரு ஆர் பெருந்துறை செல்வன் ஆகி=அழகு நிறைந்த பெருந்துறைக்கிறைவனாகி, கரு ஆர் சோதியில் கரந்த கள்ளமும்=மேன்மை பொருந்திய ஒளியில் மறைந்தவஞ்சகமும், பூவலம் அதனில் இனிது பொலிந்தருளி=திருபூவலத்தில் இனிதாக விளங்கியருளி,பாவம் நாசம் ஆக்கிய பண்பும்=பாவத்தைக் கெடுத்த விதமும், தண்ணீர்ப்பந்தல் சயம்பெறவைத்து=தண்ணீர்ப்பந்தல் வெற்றியுண்டாகவைத்து, நல் நீர் சேவகன் ஆகிய நன்மையும்=நல்லநீர்ச் சேவகனாயிருந்த நன்மையும், விருந்தினன் ஆகி=விருந்தாளியாகி,வெண்காடு அதனில்=திருவெண்காட்டில், குருந்தின்கீழ்=குருந்த மரத்தின் அடியில், அன்று இருந்த கொள்கையும்=அன்று வீற்றிருந்த கோலத்தையும், பட்டமங்கையில்=திருப்பட்ட மங்கையில், பாங்காய் இருந்து=அழகாயிருந்து, அங்கு=அவ்விடத்தில், அட்டமாசித்தி=அட்டமாசித்திகளை, அருளிய அதுவும்=அருளிய அவ்விதமும், வேடுவன் ஆகி=வேடுவனாய்வந்து, வேண்டு உரு கொண்டு=வேண்டும் வடிவைக்கொண்டு, காடது தன்னில்=காட்டில், கரந்த கள்ளமும்=ஒளித்த வஞ்சகமும்,மெய்காட்டிட்டு=புறங்காட்டி,வேண்டு உரு கொண்டு=வேண்டும் வடிவைக்கொண்டு, தக்கான் ஒருவன் ஆகிய தன்மையும்=மேன்மையுடைய ஒருவனாகிய தன்மையும், ஓரி ஊரின்=ஓரியூரில், உகந்-

இனிது அருளி=இனிதாக எழுந்தருளி, பார் இரும் பாலகன் ஆகிய பரிசும்=பூமியில் சிறு குழவியாகிய தன்மையும், பாண்டூர் தன்னில்=பாண்டூரில், ஈண்ட இருந்தும் = மிகவிருந்தும், தேவூர் தென்பால்=தேவூருக்குத் தென்திசையில், திகழ் தரு தீவில்= விளங்குகின்ற தீவில், கோ ஆர் கோலம் கொண்ட கொள்கையும்= அரசகோலங்கொண்ட கோட்பாடும், தேன் அமர் சோலை=தேன் பொருந்திய மலர்ச்சோலை சூழ்ந்த, திருவாரூரில்=திருவாரூரில், ஞானந்தன்னை நல்கிய நன்மையும்=ஞானத்தை யருளிய நன்மையும், இடைமருது அதனில் = திருவிடைமருதூரில், ஈண்ட இருந்து=மிகவிருந்து, படிமம்பாதம் வைத்த அப்பரிசும்=பரிசுத்தமான திருவடியை வைத்த அந்தத்தன்மையும், ஏகம்பத்தில் இயல்பாய் இருந்து=திருவேகம்பத்தில் இயற்கையாயிருந்து, பாகம் பெண்ணொடு ஆயின பரிசும்=பெண்பாகமான தன்மையும், திருவாஞ்சியத்தில் சீர் பெற இருந்து=திருவாஞ்சியத்தில் சிறப்புப்பொருந்த எழுந்தருளி, மரு ஆர் குழலியொடு=மணம் நிறைந்த கூந்தலையுடைய உமாதேவியோடு, மகிழ்ந்த வண்ணமும்=மகிழ்ந்திருந்த விதமும், சேவகன் ஆகி=வீரனாகி, திண் வலை ஏந்தி=வலிய வில்லேத்தாங்கி, பல பல பாவகம் காட்டிய பரிசும்=பல பல திருமேனி காட்டிய தன்மையும், கடம்பூர் தன்னில்=திருக்கடம்பூரில், இடம்பெற இருந்தும்=இடமுண்டாகவிருந்தும், ஈங்கோய்மலையில்=திருவீங்கோய் மலையில், எழில் அது காட்டியும்=அழகுகாட்டியும், ஐயாறு அதனில்=திருவையாற்றில், சைவன் ஆகியும்=சைவனாய்வந்தும், துருத்திதன்னில்= திருத்துருத்தியென்னுந் திருப்பதியில், அருத்தியோடு இருந்தும் = விருப்பத்தோடிருந்தும், திருப்பனையூரில் = திருப்பனையூரில், விருப்பன் ஆகியும்=விருப்பமுடையனாயிருந்தும், கழுமலம் அதனில்=சீர்காழியில், காட்சிகொடுத்தும்=தரிசனந்தந்தும், கழுக்குன்று அதனில் =திருக்கழுக்குன்றில், வழுக்காது இருந்தும்=தவறாதிருந்தும், புறம்பயம் அதனில்=திருப்புறம்பயத்தில், அறம் பல அருளியும்=பல தருமங்களை அருள் செய்தும், குற்றாலத்து = திருக்குற்றாலத்து, குறியாய் இருந்தும்=அடையாளமாயிருந்தும், அந்தம் இல் பெருமை=முடிவில்லாத பெருமையையுடைய, அழல் உரு கரந்து= நெருப்புருவத்தை மறைத்து, சுந்தர வேடத்து=அழகிய வேடத்தையுடைய, ஒரு முதல் உரு கொண்டு=ஒப்பற்ற முதற்பொருளின் உருவங்கொண்டு, இந்திர ஞாலம்போல வந்து அருளி= இந்திரஞாலம்போல எழுந்தருளி, எ எவர் தன்மையும் = எல்லார்

குணமும், தன் வயின் படுத்து=தன்னிடத்து அடக்கி, தானே ஆகிய=தானொருவனே முழுமுதற் கடவுளாகிய, தாயாபரன் = தயாளுவாய், எம் இறை = எம் தலைவனாய், சந்திரதீபத்து = சந்திரதீபமென்னுந் திருப்பதியில், சாத்திரன் ஆகி = சாஸ்திரபோதகனாகி, அந்தரத்தில் இழிந்துவந்து = ஆகாயத்தினின்றும் இறங்கிவந்து, அழகு அமர்பாலையுள் = அழகுவாய்ந்த பாலைநிலத்தில், சுந்தரத் தன்மையொடு = அழகிய திருக்கோலத்தோடு, துதைந்திருந்தருளியும் = பொருந்தியிருந்தருளியும், மந்திரம் ஆம்மலை = இரகசியதானமாகிய பெரியமலையென்கின்ற, மகேந்திரவெற்பன்=மகேந்திரமலையையுடையவன், அந்தம் இல் பெருமை அருள் உடை அண்ணல்=முடிவற்ற பெருமையையும் அருளையுமுடைய பெரியோன், எம்தமை ஆண்ட பரிசது பகரின்=எம்மை யாண்டருளிய தன்மையைச்சொல்லின், ஆற்றல் அது உடை=வல்லமையையுடைய, அழகு அமர் திரு உரு=அழகமைந்த திருமேனியில், நீறுகோடி நிமிர்ந்து காட்டியும் = திருவெண்ணீற்றுக்கொடியை உயர்த்திக் காட்டியும், ஊனம் தன்னை=பிறவித்துன்பத்தை, ஒருங்குடன் அறுக்கும்=ஒருங்கே சேதிக்கிற, ஆனந்தம் ஏ=இன்பமே, ஆறு ஆக அருளியும்=நெறியாகவருளிச்செய்தும், மாதின் கூறு உடை=உமாதேவியின் பாகத்தையுடைய, மா பெரும் கருணையன்=மிகவும் பெருங்கருணையையுடையவன், நாதம்பெரும் பறை=நாதமாகிய பெரியபறை, நவின்று கறங்கவும்=முழங்கியொலிக்கவும், அழுக்கு அடையாமல்=அன்பர் மனங்களழுக்கடையாமல், ஆண்டுகொண்டு அருள்பவன்=ஆட்கொண்டருள்வோன், கழுக்கடைதன்னை=சூலாயுதத்தை, கைக்கொண்டு அருளியும்=கைப்பிடித்தருளியும், மூலம் ஆகிய=காரணமாகிய, மும்மலம் அறுக்கும்=மும்மலங்களைச் சேதிக்கிற, தூய மேனி=பரிசுத்தமாகிய திருமேனியில், சுடர் விடுசோதி=ஒளி வீசுகின்ற சோதி, காதலன் ஆகி=அன்பரிடத்து அன்புடையனாகி, கழுநீர் மாலை=செங்கழுநீர் மலர்மாலையை, ஏல் உடைத்தாக=பொருத்தமுடைத்தாக, எழில் பெற அணிந்தும்=அழகுபெறத் தரித்தும், அரியொடு பிரமற்கு=திருமாலுக்கும் பிரமனுக்கும், அளவு அறியாதவன்=எல்லை யறியப்படாதவன், பரி மாவின் மிசை=குதிரையின்மீது, பயின்ற வண்ணமும்=ஏறிவந்த விதமும், மீண்டு வாரா வழி=மீண்டும் பிறவிக்கு வாராத முத்திநெறியை, அருள் புரிபவன்=அன்பர்க்கு அருள்செய்பவன், பாண்டி நாடே=பாண்டிவளநாடே, பழம் பதியாகவும்=பழைய இடமாகவும், பத்தி செய் அடியரை=அன்புசெய்கின்ற அடியவரை, பரம்பரத்து உய்ப்பவன்=மிகவும் மேலான முத்தியுலகத்தில் வைப்பவன்.

உத்தரகோசமங்கை=திரு உத்தரகோசமங்கையானது, ஊர் ஆகவும்=திருப்பதியாகவும், ஆதி மூர்த்திகட்கு=முதன்மையான மும்மூர்த்திகட்கு, அருள் புரிந்தருளிய=திருவருள் செய்தருளிய, தேவதேவன் மகாதேவனது, திருப்பெயர் ஆகவும்=திருநாமம் ஆகவும், இருள் கடிந்து அருளிய=அஞ்ஞான விருளை நீக்கியருளின, இன்ப ஊர்தி=ஆனந்தவாகனன், அருளிய பெருமை=அருள்செய்தபெருமை, அருள் மலையாகவும்=அருள் மலையாகவும், எம்பெருதன்மையும்=எப்படிப் பட்ட பெருந்தன்மையையும், எ எவர் திறமும்=எவ்வகைப்பட்ட திறத்தினையும், அ பரிசு அதனால் = அவ்வத்தன்மைகளால், ஆண்டு கொண்டு அருளி=ஆட்கொண்டருளி, நாயினேன் ஐ=நாய்போல்வேனை, நலம்மலிதில்லையுள்=நன்மை மிகுந்த தில்லையுள், கோலம் ஆர் தரு=அழகு நிறைந்த, பொதுவினில் வருக என=அம்பலத்தில் வருகவென்று, ஏல=பொருந்த, என்னை = அடியேனை, ஈங்கு ஒழித்து அருளி=இவ்விடத்தினின்றும் ஒழித்தருளி, அன்று உடன் சென்ற =அன்று தன்னொடுகூடப்போன, அருள்பெறும் அடியவர்=அருள் பெற்ற அடியார், ஒன்ற ஒன்ற=பொருந்தப் பொருந்த, உடன் கலந்து அருளியும்=அவரோடுகலந்தருளியும், எய்த வந்து இலாதார்=தன்னைக்கலக்கவாராதவர், எரியில் பாயவும்=தீயில் குதிக்கவும், மாலது ஆகி= ஆசைகொண்டு, மயக்கம் எய்தியும்=மயக்கமடைந்தும், பூதரம் அதனில்=பூமியில், புரண்டுவீழ்ந்து அலறியும்=புரண்டு வீழ்ந்தலறியும், கால் விசைத்து ஓடி=காலால்வேகங்கொண்டு ஓடி, கடல் புக மண்டி= கடலில் விழநெருங்கி, நாத நாத என்று=நாதனே நாதனே என்று, அழுது அரற்றி=அழுது கத்தி, பாதம் எய்தினர்=திருவடியையடைந்தவர்கள், பாதம் எய்தவும்=திருவடியை யடையவும், பதஞ்சலிக்கு அருளிய=பதஞ்சலி முனிவருக்கு அருள் செய்த, பரம நாடக என்று=மேலான கூத்தனே என்று, இதம் சலிப்பு எய்த நின்று=இதயம் வருந்த நின்று, ஏங்கினர் ஏங்கவும்=ஏங்கினவர் ஏங்காநிற்பவும், எழில் பெறும் இமயத்து இயல்பு உடை=அழகு பெற்ற இமயமலையின் தன்மைவாய்ந்த, அம் பொன் பொலிதரு=அழகிய ஸ்வர்ணமயமாய் விளங்குகின்ற, புலியூர் பொதுவினில்=தில்லையம்பலத்தினில், நடம் நவில்=நடனஞ்செய்த, கனி தரு செவ்வாய்= கொவ்வைக்கனிபோன்ற சிவந்த வாயினையுடைய, உமையொடு= உமாதேவியோடு, காளிக்கு=காளிக்கும், அருளிய=அருள்செய்த, திருமுகத்து = திருமுகத்தில், அழகு உறு சிறு நகை=அழகாகிய புன்னகையையுடைய, இறைவன்=எம்பெருமான், ஈண்டிய=தன் திருவடியை சரணாகக்கொண்ட, அடியவரோடும்=தொண்டர்களுட

னே, ஒலிதரு=ஒலிக்கின்ற, கயிலை=கயிலாயமலையில், உயர்=உயர்ந்த, கிழவோன்=பழையோன், பொலிதரு புலியூர்=விளங்குகின்ற புலியூரில், புக்கு=எழுந்தருளி, இனிது அருளினன்=இனிதாக அருள்செய்தனன், எ - று.

திருச்சிற்றம்பலம்.

## மூன்றாவது
# திருவண்டப்பகுதி.

### சிவனது தூலசூக்குமத்தை வியந்தது.

இணைக்குறளாசிரியப்பா.

திருச்சிற்றம்பலம்.

அண்டப்பகுதியினுண்டைப்பிறக்க
மளப்பருந்தன்மைவளப்பெருங்காட்சி
யொன்றனுக்கொன்றுநின்றெழில்பகரி
னூற்றொருகோடியின்மேற்படவிரிந்தன
வின்னுழைகதிரின்றுன்னணுப்புரையச்
சிறியவாகப்பெரியோன்றெரியின்
வேதியன்றொகையொடுமாலவன்மிகுதியுந்
தோற்றமுஞ்சிறப்புமீற்றொடுபுணரிய
மாப்பேரூழியுநீக்கமுநிலையுஞ்
சூக்கமொடுதூலத்துச்சூறைமாருதத்
தெறியதுவளியின்
கொட்கப்பெயர்க்குங்குழகன்முழுவதும்
படைப்போற்படைக்கும்பழையோன்படைத்தவை
காப்போற்காக்குங்கடவுள்காப்பவை
கரப்போன்கரப்பவைகருதாக்
கருத்துடைக்கடவுடிருத்தகு
மறுவகைச்சமயத்தறுவகையோர்க்கும்
வீடுபேறாய்நின்றவிண்ணோர்பகுதி
கீடம்புரையுங்கிழவோனாடொறு
மருக்கனிற்சோதியமைத்தோன்றிருத்தகு
மதியிற்றண்மைவைத்தோன்றிண்டிறற்

றீயின்வெம்மைசெய்தோன்பொய்தீர்
வானிற்கலப்புவைத்தோன்மேதகு
காலினூக்கங்கண்டோனிழறிகழ்
நீரினின்சுவைநிகழ்ந்தோன்வெளிப்பட
மண்ணிற்றிண்மைவைத்தோனென்றென்
றெனைப்பலகோடியெனைப்பலபிறவு
மனைத்தனைத்தவ்வயினடைத்தோனஃதான்று
முன்னோன்காண்கமுழுதோன்காண்க
தன்னேரில்லோன்றானேகாண்க
ஏனத்தொல்லெயிறணிந்தோன்காண்க
கானப்புலியுரியரையோன்காண்க
நீற்றோன்காண்கநினைதொறுநினைதொறு
மாற்றேன்காண்கவந்தோகெடுவேன்
இன்னிசைவீணையிலிசைந்தோன்காண்க
அன்னதொன்றவ்வயினறிந்தோன்காண்க
பரமன்காண்கபழையோன்காண்க
பிரமன்மால்காணாப்பெரியோன்காண்க
அற்புதன்காண்கவநேகன்காண்க
சொற்பதங்கடந்ததொல்லோன்காண்க
சித்தமுஞ்செல்லாச்சேட்சியன்காண்க
பத்திவலையிற்படுவோன்காண்க
ஒருவனென்னுமொருவன்காண்க
விரிபொழின்முழுதாய்விரிந்தோன்காண்க
அணுத்தருந்தன்மையிலையோன்காண்க
இணைப்பரும்பெருமையிலீசன்காண்க
அரியதிலரியவரியோன்காண்க
மருவியெப்பொருளும்வளர்ப்போன்காண்க
நூலுணர்வுணராநுண்ணியோன்காண்க
மேலொடுகீழாய்விரிந்தோன்காண்க
அந்தமுமாதியுமகன்றோன்காண்க
பந்தமும்வீடும்படைப்போன்காண்க
நிற்பதுஞ்செல்வதுமானோன்காண்க
கற்பமுமிறுதியுங்கண்டோன்காண்க
யாவரும்பெறவுறுமீசன்காண்க
தேவருமறியாச்சிவனேகாண்க
பெண்ணாணலியெனும்பெற்றியன்காண்க

கண்ணுலியானுங்கண்டேன்காண்க
வருணனிசுரக்குமமுதேகாண்க
கருணையின்பெருமைகண்டேன்காண்க
புவனியிற்சேவடிதீண்டினன்காண்க
சிவனெனயானுந்தேறினன்காண்க
வவனெனையாட்கொண்டருளினன்காண்க
குவளைக்கண்ணிகூறன்காண்க
வவளுந்தானுமுடனேகாண்க
பரமானந்தப்பழங்கடலதுவே
கருமாமுகிலிற்றோன்றித்
திருவார்பெருந்துறைவரையிலேறித்
திருத்தகுமின்னொளிதிசைதிசைவிரிய
வைம்புலப்பந்தனைவாளரவிரிய
வெந்துயர்க்கோடைமாத்தலைகரப்ப
நீடெழிற்றோன்றிவாளொளிமிளிர
வெந்தம்பிறவியிற்கோபமிகுத்து
முரசெறிந்துமாப்பெருங்கருணையின்முழங்கிப்
பூப்புரையஞ்சலிகாந்தள்காட்ட
வெஞ்சாவின்னருணுண்டுளிகொள்ளச்
செஞ்சுடர்வெள்ளந்திசைதிசைதெவிட்ட, வரையுறக்
கேதக்குட்டங்கையறவோங்கி
யிருமுச்சமயத்தொருபேய்த்தேரினை
நீர்நசைதரவருநெடுங்கண்மான்கணந்
தவப்பெருவாயிடைப்பருகித்தளர்வொடு
மவப்பெருந்தாபநீங்காதசைந்தன
வாயிடைவானப்பேரியாற்றகவயிற்
பாய்ந்தெழுந்தின்பப்பெருஞ்சுழிகொழித்துச்
சுழித்தெம்பந்தமாக்கரைபொருதலைத்திடித்
தூழூழோங்கியநங்க
ளிருவினைமாமரம்வேர்பறித்தெழுந்
துருவவருணீரோட்டாவருவரைச்
சந்தின்வான்சிறைகட்டிமட்டவிழ்
வெறிமலர்க்குளவாய்கோலிநிறையகின்
மாப்புகைக்கரைசேர்வண்டுடைக்குளத்தின்
மீக்கொளமேன்மேன்மகிழ்தலினோக்கி

யருச்சனைவயலுளன்புவித்திட்டுத்
தொண்டவுழவாராத்தந்த
வண்டத்தரும்பெறன்மேகன்வாழ்க
கரும்பணக்கச்சைக்கடவுள்வாழ்க
வருந்தவர்க்கருளுமாதிவாழ்க
வச்சந்தவிர்த்தசேவகன்வாழ்க
நிச்சலுமீர்த்தாட்கொள்வோன்வாழ்க
சூழிருந்துன்பந்துடைப்போன்வாழ்க
வெய்தினர்க்காரமுதளிப்போன்வாழ்க
கூரிருட்கூத்தொடுகுனிப்போன்வாழ்க
பேரமைத்தோளிகாதலன்வாழ்க
வேதிலர்க்கேதிலெம்மிறைவன்வாழ்க
காதலர்க்கெய்ப்பினில்வைப்புவாழ்க
நச்சரவாட்டியநம்பன்போற்றி
பிச்செமையேற்றியபெரியோன்போற்றி
நீற்றொடுதோற்றவல்லோன்போற்றி,நாற்றிசை
நடப்பனநடாஅய்க்கிடப்பனகிடாஅய்
நிற்பனநிறீஇச்
சொற்பதங்கடந்ததொல்லோ
னுள்ளத்துணர்ச்சியிற்கொள்ளவும்படாஅன்
கண்முதற்புலனாற்காட்சியுமில்லோன்
விண்முதற்பூதம்வெளிப்படவகுத்தோன்
பூவினாற்றம்போன்றுயர்ந்தெங்கு
மொழிவறநிறைந்துமேவியபெருமை
யின்றெனக்கெளிவந்தருளி
யழிதருமாக்கையொழியச்செய்த, வொண்பொரு
ளின்றெனக்கெளிவந்திருந்தனன்போற்றி
யளிதருமாக்கைசெய்தோன்போற்றி
யூற்றிருந்துள்ளங்களிப்போன்போற்றி
யாற்றாவின்பமலர்ந்தலைசெய்யப்
போற்றாவாக்கையைப்பொறுத்தல்புகலேன்
மரகதக்குவாஅன்மாமணிப்பிறக்க
மின்னொளிகொண்டபொன்னொளிதிகழத்
திசைமுகன்சென்றுதேடினர்க்கொளித்து
முறையுளியொற்றிமுயன்றவர்க்கொளித்து

மொற்றுமைகொண்டுநோக்குமுள்ளத்
துற்றவர்வருந்தவுறைப்பவர்க்கொளித்து
மறைத்திறநோக்கிவருந்தினர்க்கொளித்து
மித்தந்திரத்திற்காண்டுமென்றிருந்தோர்க்
கத்தந்திரத்தினவ்வயினொளித்து
முனிவறநோக்கிநனிவரக்கௌவி
யாணெனத்தோன்றியலியெனப்பெயர்ந்து
வாணுதற்பெண்ணெனவொளித்துஞ்சேண்வயி
னைம்புலன்செலவிடுத்தருவரைதொறும்போய்த்
துற்றவைதுறந்தவெற்றுயிராக்கை
யருந்தவர்காட்சியுட்டிருந்தவொளித்து
மொன்றுண்டில்லையென்றறிவொளித்தும்
பண்டேபயிறொறுமின்றேபயிறொறு
மொளிக்குஞ்சோரனைக்கண்டன
மார்மினார்மினாண்மலர்ப்பிணையலிற்
றாடளையிடுமின்
சுற்றுமின்சூழ்மின்றொடர்மின்விடேன்மின்
பற்றுமினென்றவர்பற்றுமுற்றொளித்துந்
தன்னேரில்லோன்றானேயானதன்மை
யென்னேரனையோர்கேட்கவந்தியம்பி
யறைகூவியாட்கொண்டருளி
மறையோர்கோலங்காட்டியருளலு
முளையாவன்பென்புருகவோலமிட்
டலைகடற்றிரையினார்த்தார்த்தோங்கித்
தலைதடுமாறாவீழ்ந்துபுரண்டலறிப்
பித்தரின்மயங்கிமத்தரின்மதித்து
நாட்டவர்மருளவுங்கேட்டவர்வியப்பவுங்
கடக்களிறேற்றாத்தடப்பெருமதத்தி
னாற்றேனாகவவயவஞ்சுவைதரு
கோற்றேன்கொண்டுசெய்தன
னேற்றார்மூதூரெழினகையெரியின்
வீழ்வித்தாங்கன்
றருட்பெருந்தீயினடியோமடிக்குடி
லொருத்தரும்வழாமையொடுக்கினன்
றடக்கையினெல்லிக்கனியெனக்காயினன்

சொல்லுவதறியேன்வாழிமுறையோ
தரியேனாயேன்றானெனைச்செய்தது
தெரியேனாவாசெத்தேனடியேற்
கருளியதறியேன்பருகியுமாரேன்
விழுங்கியுமொல்லகில்லேன்
செழுந்தண்பாற்கடற்றிரைபுரைவித்
துவாக்கடனள்ளுநீருள்ளகந்ததும்ப
வாக்கிறந்தமுதமயிர்க்காறோறுந்
தேக்கிடச்செய்தனன்கொடியேனூன்றழை
குரம்பைதோறுநாயுடலகத்தே
குரம்பைகொண்டின்றேன்பாய்த்திநிரம்பிய
வற்புதமானவமுததாரைக
ளெற்புத்துளைதொறுமேற்றினனுருகுவ
துள்ளங்கொண்டோருருச்செய்தாங்கெனக்
கள்ளூறாக்கையமைத்தனனொள்ளிய
கன்னற்கனிதேர்களிறெனக்கடைமுறை
யென்னையுமிருப்பதாக்கினனென்னிற்
கருணைவான்றேன்கலக்க
வருளொடுபராவமுதாக்கினன்
பிரமன்மாலறியாப்பெற்றியோனே.

திருச்சிற்றம்பலம்.

(இதன் பொருள்.)

அண்டம் பகுதியின் = அண்டப்பகுப்பினையுடைய, உண்டை பிறக்கம் = பூகோளத்தின் விளக்கம், அளப்பு அரும் தன்மை = அளத்தற்கரிய தன்மையையுடைய, வளம்பெருங்காட்சி = வளமாகிய பெருங்காட்சியை யுடையது, ஒன்றனுக்கு ஒன்று = ஒன்றுக்கொன்று, நின்ற எழில்பகரின் = நின்ற அழகைசொல்லுமிடத்து, நூற்று ஒரு கோடியின் = நூறுகோடியினும், மேற்பட விரிந்தன = மேற்பட்டு விரிந்தன, இல் நுழைகதிரின் = வீட்டில் நுழைகின்ற சூரியகிரணத்தில், துன் அணு புரைய = நெருங்கிய அணுக்களை நிகர்க்க, சிறிய ஆக = சிறியனவாக, பெரியோன் = பெரியவனா யிருப்பவன், தெரியின் = ஆராயுமிடத்து, வேதியன் தொகையொடு = பிரமன் தொகுதியோடு, மாலவன் மிகுதியும் = திருமாலின் ஏற்றமும், தோற்றமும் சிறப்பும் = உற்பத்தியும் மேன்மையும், ஈற்றொடு புணரிய = இறுதியடைய, மா பெரு ஊழியும் = மிகப்பெரிய ஊழிக்காலமும், நீக்கமும் நிலை

யும்=அழிவும் இருப்பும், சூக்குமம் ஒடு தூலத்து=சூக்குமத்தோடு தூலசரீரத்தை, சூறை மாருதத்து எறியது வளியில்=சூறைக்காற்று வீசுவதில், கொட்க=சுழல, பெயர்க்கும்=நிலை பெயர்க்கின்ற, குழகன்=அழகன், முழுவதும் = முழுதும், படைப்போன் படைக்கும் பழையோன்=பிரமனைப்படைக்கின்ற பழையவன், படைத்தவை காப்போன் காக்கும் கடவுள்=படைக்கப்பட்ட பொருள்களை காப்போனாகிய திருமாலை காக்கின்ற கடவுள், காப்பவை கரப்போன்=காக்கப்பட்ட பொருள்களைச் சங்கரிப்பவன், கரப்பவை கருதா கருத்து உடை கடவுள் = சங்கரிக்கப் பட்டவற்றை நினையாத கருத்தையுடைய கடவுள், திரு தகும்=அழகு பொருந்திய, அறுவகைச்சமயத்து=அறுவகைப்பட்ட சமயத்தையுடைய, அறுவகையோர்க்கும்=ஆறுவகைப்பட்ட சமயத்தவர்க்கும், வீடுபேறாய்நின்ற=முத்திப்பேறாய் நின்ற, விண்ணோர்பகுதி கீடம் புரையும்=தேவர்பகுப்புப் புழுக்களை நிகர்க்கின்ற, கிழவோன்=பெரியோன், நாள்தொறும்=தினந்தோறும், அருக்கனில் சோதியமைத்தோன்=சூரியனில் ஒளியையமைத்தோன், திருதகுமதியில் தண்மைவைத்தோன்=அழகுபொருந்திய சந்திரனில் குளிர்ச்சியை வைத்தவன், திண்திறல் தீயின் வெம்மை செய்தோன்=வலிய வெற்றியையுடைய நெருப்பில் வெப்பத்தையுண்டாக்கினவன், பொய்தீர்வானில் கலப்பு வைத்தோன்=உண்மையாகியஆகாயத்தில் வியாபிக்குந்தன்மையை யமைத்தோன், மேதகுகாலில் ஊக்கம்கண்டோன்=மேன்மைபொருந்திய காற்றில் வேகத்தை வைத்தவன், நிழல்திகழ்நீரில் இன்சுவை நிகழ்ந்தோன்=குளிர்ச்சி பொருந்திய நீரினிடத்து இனிய சுவையை வைத்தவன், வெளிபட மண்ணில் திண்மை வைத்தோன்=வெளிப்படையாக மண்ணினிடத்து திடத்தை யமைத்தவன், என்று என்று=என்று சொல்லி, எனை பல கோடி எனை பல பிறவும்=எத்தனைப் பலகோடியாகிய எத்தனைப்பலவாகிய பிறபொருள்களையும், அனைத்து அனைத்து அவ்வயின் அடைத்தோன்=அவ்வளவுஅவ்வளவாக அவ்வவ்விடங்களில் அடைத்துவைத்தவன், அஃது ஆன்று=அதுவன்றி, முன்னோன்காண்க=முன்னவன் காண்க, முழுதோன் காண்க=முழுதும் உடையவன் காண்க, தன் நேர் இல்லோன் தானே காண்க=தனக்கு நிகரில்லாதவன் தானே காண்க, தொல்=பழமையாகிய, ஏனம் எயிறு அணிந்தோன் காண்க=பன்றியின்பல்லை அணிந்தவன் காண்க, கானம்=காட்டில் வாழ்கின்ற, புலிஉரி=புலித்தோலை, அரையோன் காண்க=

அரையிலுடுத்தவன் காண்க, நீற்றோன் காண்க = திருவெண்ணீற்றை யுடையவன் காண்க, நினைதொறும் நினைதொறும் = நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும், ஆற்றேன் காண்க = சகியேன் காண்க, அந்தோ கெடுவேன் = ஐயோ கெடுவேன், இன் இசை வீணையில் இசைந்தோன் காண்க = இனிய வோசையையுடைய வீணையில் இசைந்தவன் காண்க, அன்னது ஒன்று = அப்படிப்பட்டதாகிய ஒன்றை, அவ்வயின் அறிந்தோன் காண்க = அவ்விடத்து அறிந்தவன் காண்க, பரமன் காண்க = மேலோன் காண்க, பழையோன் காண்க = பழையவன் காண்க, பிரமன்மால் காணா = பிரமனும் திருமாலும் காணவொண்ணாத, பெரியோன் காண்க = பெரியவன் காண்க, அற்புதன் காண்க = ஆச்சரியகரன் காண்க, அநேகன் காண்க = அநேகவுருவாயிருப்பவன் காண்க, சொல் பதம் கடந்த = சொல்லளவைக்கடந்த, தொல்லோன் காண்க = பழையோன் காண்க, சித்தமும் செல்லா = மனமும் சென்றுபற்றாத, சேட்சியன் காண்க = தூரத்தன் காண்க, பத்திவலையில் படுவோன் காண்க = பத்தியாகிய வலையில் அகப்படுவோன் காண்க, ஒருவன் என்னும் ஒருவன் காண்க = ஒப்பற்றவன் என்னும் ஒருவன் காண்க, விரி பொழில் முழுதாய் விரிந்தோன் காண்க = விரிந்த உலகமுழுதுமாகி விரிந்தவன் காண்க, அணு தரும் தன்மையில் = அணுப்போன்ற தன்மையினையுடைய, ஐயோன் காண்க = அழகன் காண்க, இணைப்பு அரு பெருமையில் = இணையற்ற பெருமையையுடைய, ஈசன் காண்க = ஈச்சுரன் காண்க, அரியதில் அரிய = அரியபொருளினும் அரியபொருளாகிய, அரியோன் காண்க = அரியவன் காண்க, மருவி = பொருந்தி, எ பொருளும் = எந்தப்பொருளையும், வளர்ப்போன் காண்க = வளர்ப்பவன் காண்க, நூல் உணர்வு உணரா = நூலறிவால் உணரப்படாத, நுண்ணியோன் காண்க = நுண்மையன் காண்க, மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க = மேலோடு கீழுமாகி விரிந்தவன் காண்க, அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க = முடிவும் முதலும் நீங்கினவன் காண்க, பந்தமும் வீடும் படைப்போன் காண்க = கட்டும் விடும் உண்டாக்குவோன் காண்க, நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க = அசரமும் சரமும் ஆனவன் காண்க, கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க = கற்பத்தையும் அதன் முடிவையும் கண்டவன் காண்க, யாவரும் பெற உறும் = எல்லாரும் அடையும் பொருட்டு எழுந்தருளுகின்ற, ஈசன் காண்க = ஈச்சுரன் காண்க, தேவரும் அறியா = தேவரும் அறியவொண்ணாத, சிவனே காண்க = சிவபெருமானே காண்க, பெண் ஆண் அலி என்னும் பெற்றியன்

தான் கண்=பெண் ஆண் பேடு என்னும் தன்மையன் காண்க, கண்ணால் யானும் கண்டேன் காண்க=கண்ணால் நானும் கண்டேன் காண்க, அருள் நனி சுரக்கும் அமுதே காண்க=அருள் மிகவும் சுரக்கின்ற அமிர்தமே காண்க, கருணையின் பெருமைகண்டேன் காண்க=கருணை வடிவாகிய நினது ஏற்றத்தைக் கண்டேன் காண்க, புவனியில் சேவடி தீண்டினன் காண்க=பூமியில் திருவடிபடச் செய்தான் காண்க, சிவன் என=சிவபிரான் என்று, யானும் தேறினன் காண்க=நானும்தெளிந்தேன் காண்க, அவன் என்னை ஆட்கொண்டு அருளினன் காண்க=அவன் என்னை அடிமைகொண்டருளினன் காண்க, குவளை கண்ணி கூறன் காண்க=நீல மலர்போலும் கண்களையுடையவளாகிய உமாதேவியின் பாகன் காண்க, அவளும் தானும் உடனே காண்க=அத்தகைய உமாதேவியாரும் தானாகிய இறைவனும் உடனே காண்க, பரமானந்தப் பழங்கடலதுவே=மேலான பழைய இன்பக் கடலென்னும் அதுவே, கருமாமுகிலின் தோன்றி=கரிய பெரிய மேகம்போலத் தோன்றி, திரு ஆர் பெருந்துறைவரையில்ஏறி=அழகு பொருந்திய திருப்பெருந்துறை யென்னும் மலைமீதேறி, திரு தகும்=அழகு பொருந்திய, மின்ஒளி திசை திசை விரிய=ஒளியாகிய மின்னல் திக்குக்கள் தோறும் பரவ, ஐம்புலன் பந்தனை = ஐம்புலன்களின் கட்டாகிய, வாள்அரவு இரிய=ஒளி பொருந்திய பாம்புகள் பயந்தோட, வெம் துயர் கோடை மாதலை கரப்ப=வெவ்விய துன்பமாகிய வெயில் தன்பெரிய தலையைக்காட்டாது மறைய, நீடு எழில் தோன்றி வாள் ஒளி மிளிர=மிக்க அழகுவாய்ந்த தோன்றிகள் வாள்போலும் ஒளி பிரகாசிக்க, எம் தம் பிறவியின் கோபம் மிகுத்து=எமது பிறவியாகிய கோபப்பூச்சி அதிகரித்து, மா பெருங்கருணையின் முரசு எறிந்து முழங்கி=மிகப்பெரிய கருணையாகிய முரசு ஒலித்து முழங்கி, பூ புரை அஞ்சலில் காந்தள் காட்ட=தாமரை மலர்போன்ற கை குவித்தலாகிய காந்தள் தோன்ற, எஞ்சா இன் அருள் நுண்துளி கொள்ள=குறையாத இனிய அருளாகிய நுண்ணிய துளிகள் உண்டாக, செம் சுடர் வெள்ளம் திசை திசை தெவிட்ட=செவ்விய ஒளிப்பெருக்கு திக்குக்கள்தோறும் நிறைந்து மேலிட, வரை உற=மலையையடைய, தேக்குட்டம் கையற=துன்பமாகியகுளம் கரை அழிய, ஓங்கி=உயர்ந்து, இரு முச்சமயத்து ஒருபேய்த்தேரினை=அறு சமயமாகிய ஒப்பற்ற கானல்நீரை, நீர் நசை தரவரும்=நீர் வேட்கையுண்டாகவந்த, நெடுங்கண் மான் கணம்=நெடிய கண்களாகிய மான்

கூட்டம், தவப்பெரு வாயிடை பருகி=தவமாகிய பெரிய வாயி
னுல் பருகி, தளர்வொடும் அவப்பெருந்தாபம் நீங்காது அசைந்
தன=தளர்ச்சியோடும் வீணாகிய பெரு வெப்பம் நீங்காது துவண்
டன, ஆயிடை=அவ்விடத்து, வானம் பேர் ஆறு அகம் வயின்=
வானமாகிய பெரிய யாற்றின் உள்ளிடத்தில், பாய்ந்து எழுந்து=
பாய்ந்து ஓங்கி, இன்பம் பெரும் சுழி கொழித்து சுழித்து=இன்
பமாகிய பெரிய சுழி கொழித்துச் சுழித்து, எம் பந்தம் மாகரை
பொருது அலைத்து இடித்து=எமது பந்தமாகிய பெரிய கரையை
மோதி அலைத்திடித்து, ஊழ் ஊழ் ஓங்கிய=முறைமுறையாய் விருத்
தியடைந்த, நங்கள்=எம்முடைய, இருவினை மா மரம்=நல்வினை
தீவினையாகிய பெரிய மரத்தை, வேர்பறித்து எழுந்து=வேரோடு
பறித்துக் கொண்டெழுந்து, உருவ அருள் நீர் ஓட்டா=முழுதும்
அருளாகிய நீரைச்செலுத்தி, அருவரை சந்தின் வான் சிறைகட்டி=
அரியமலைச்சந்தின் பெரியகரையைக் கட்டி, மட்டு அவிழ் = தேன்
விரிகின்ற, வெறி மலர் குளம் வாய் கோலி=மணமலர்க் குளங்களி
னிடங்களை வளைத்து, நிறை அகில் மா புகை கரை சேர்=நிறை
யாகிய அகிலின் புகைகளை சேரும்படியான, வண்டு உடை குளத்தின்
மீ கொள=வண்டுகளையுடைய குளத்தின்மேற் கொள்ள, மேன்
மேன் மகிழ்தலின் நோக்கி=மேலும் மேலும் மகிழ்தலைப் பார்த்து,
தொண்ட உழவர் = தொண்டராகிய உழவர்கள், ஆர = உண்ண,
தந்த=அருள் செய்த, அண்டத்து = பரமாகாயத்திலுள்ள, அரும்
பெறல்=பெறுதற்கரிய, மேகன்வாழ்க=மேகம்போல்பவன் வாழ்க,
கரும் பணம் கச்சை கடவுள்வாழ்க=கரியபடப்பாம்பாகிய கச்சையை
யுடைய கடவுள்வாழ்க, அரும் தவர்க்கு அருளும் ஆதி வாழ்க=அரிய
தவத்தினர்க்கு அருள்கின்ற முதல்வன்வாழ்க, அச்சம் தவிர்த்த சேவ
கன்வாழ்க=பிறவியச்சத்தைநீக்கின சேவகன் வாழ்க, நிச்சலும் ஈர்
த்து ஆட்கொள்வோன்வாழ்க=தினந்தோறும் எம்மைவலியவிழுந்து
ஆட்கொள்பவன் வாழ்க, சூழ் இரும் துன்பம் துடைப்போன்வாழ்க=
எம்மை வளைந்துகொள்கின்ற பெருந்துன்பத்தை நீக்குவோன் வா
ழ்க, எய்தினர்க்கு ஆர் அமுது அளிப்போன்வாழ்க=தன்னை அடைந்
தவர்க்கு அரிய அமிர்தத்தைத் தருவோன் வாழ்க, கூர் இருள்கூத்
தொடு குனிப்போன் வாழ்க=மிகுந்த இருளில் கூத்தொடு நடிப்
போன்வாழ்க, பேர் அமை தோளி காதலன்வாழ்க=பெரிய மூங்கில்
போலும் தோள்களையுடைய உமாதேவிக்கு அன்பன் வாழ்க, ஏதி
லர்க்கு ஏதில் எம் இறைவன் வாழ்க=அயலார்க்கு அயலவனாயி

ருக்கிற எம் தலைவன் வாழ்க, காதலர்க்கு எய்ப்பினில் வைப்புவா
ழ்க=அன்பர்க்கு இளைத்தகாலத்தில் நிதிபோல்பவன் வாழ்க, நச்சு
அரவு ஆட்டிய நம்பன்போற்றி=நஞ்சையுடைய பாம்பை யாட்டு
வோன் எம்மால் வணங்கப்படுவன், எம்மை பிச்சு ஏற்றியபெரியோன்
போற்றி=எம்மைப் பித்தேற்றின பெரியவன் எம்மால் வணங்கப்ப
டுவன், நீற்றொடுதோற்றவல்லோன் போற்றி=திருவெண்ணீற்றொடு
தோற்றவல்லவன் எம்மால் வணங்கப்படுவன், நாற்றிசை=நான்கு
திக்கிலும், நடப்பன நடாஅய்=நடப்பவற்றை நடத்தி, கிடப்பன
கிடாஅய்=கிடப்பவற்றைக் கிடத்தி, நிற்பன நிறீஇ=நிற்பவற்றை
நிறுத்தி, சொல்பதம் கடந்த தொல்லோன்=சொல்லளவைக்கடந்த
பழையோன், உள்ளத்து உணர்ச்சியின் கொள்ளவும் படான்=மனவு
ணர்ச்சியால் கொள்ளவும்படாதவன், கண்முதல் புலனால் காட்சி
யும் இல்லோன்=கண்முதலாகிய புலன்களுக்குக் காணவும் படாத
வன், விண்முதல் பூதம்வெளிப்பட வகுத்தோன்=ஆகாய முதலிய
பஞ்சபூதங்களை வெளியாகப்படைத்தவன், பூவில் நாற்றம்போன்று=
மலரின்மணம்போன்று, உயர்ந்து=ஓங்கி, எங்கும்=எவ்விடத்தும்,
ஒழிவு அற நிறைந்து=நீக்கமில்லாமல் நிறைந்து, மேவிய பெரு
மை=பொருந்திய பெருமை, இன்று=இப்பொழுது, எனக்கு=அடி
யேனுக்கு, எளிவந்து அருளி=எளியனாய்வந் தருள் செய்து, அழி
தரும் ஆக்கை ஒழியச்செய்த=அழிகின்ற இவ்வுடம்பை ஒழியப்பண்
ணின, ஒண்பொருள்=ஒட்பமாகிய பொருள், இன்று எனக்கு எளி
வந்திருந்தனன் போற்றி=இன்று எனக்கு எளியனாகவந்திருந்தனன்
(அவன் எம்மால்) போற்றப்படுவன், அளிதரும் ஆக்கை செய்தோன்
போற்றி=கனிந்தழிகின்ற வுடம்பைப் படைத்தோன் போற்றி, ஊற்
றிருந்து உள்ளம் களிப்போன் போற்றி=ஊறியிருந்து மனமகிழ்
வோன்போற்றி, ஆற்றா இன்பம்=சகியாத இன்பம், அலர்ந்து=
பரவி, அலை செய்ய=அலைத்தலைச்செய்ய, போற்றா ஆக்கையை=
விரும்பவொண்ணாத வுடம்பை, பொறுத்தல் புகலேன்=தாங்குவ
தைக்குறித்துச் சொல்லமாட்டேன், மரகதம் குவால் மா மணி பிறக்
கம்=மரகதத்திரளும் மாணிக்க ஒளியும், இன் ஒளிகொண்ட பொன்
ஒளிதிகழ=இனிய ஒளியைக்கொண்ட பொன்னினொளி விளங்க, தி
சைமுகன் சென்று தேடினர்க்கு ஒளித்தும்=போய்த் தேடின பிரம
னுக்கு மறைந்தும், முறையுளி ஒற்றி முயன்றவர்க்கு ஒளித்தும்=மு
றைமையாக அடுத்துமுயன்றவர்க்கு மறைந்தும், ஒற்றுமைகொண்டு
நோக்கு உள்ளத்து=ஒருமைப்பாடு கொண்டுநோக்குகின்ற மனத்தை,

யுடைய, உற்றவர் வருந்த உறைப்பவர்க்கு ஒளித்தும்=உற்றவர் வருந்தத்தாக்குவார்க்கு மறைந்தும், மறை திறம் நோக்கி வருந்தினர்க்கு ஒளித்தும்=வேத வொழுக்கத்தை நோக்கி வருந்தினர்க்கு மறைந்தும், இ தந்திரத்தின் காண்டும் என்று இருந்தோர்க்கு = இந்த வுபாயத்தால் காண்போமென் றிருந்தவர்க்கு, அ தந்திரத்தின் அவ்வயின் ஒளித்தும்=அந்த வுபாயத்துக்கும் அவ்விடத்து மறைந்தும், முனிவு அற நோக்கி=கோவமில்லாமல் நோக்கி, நனிவரக் கௌவி=மிகுதியாகப்பற்றி, ஆண் எனத் தோன்றி=ஆண்போலத் தோன்றி, அலி என பெயர்ந்து=அலிபோல நிலை பெயர்ந்து, வாள் நுதல் பெண் என ஒளித்தும்=ஒளியுள்ள நெற்றியையுடைய பெண்போல மறைந்தும், சேண் வயின்=தூரத்தில், ஐம்புலன் செல்லவிடுத்து=ஐம்புலன்களைப் போகவிட்டு, அருவரை தொறும்போய்=அரிய மலைகள் தோறும் சென்று, துற்றவை துறந்த=பொருந்தினவற்றை விட்ட, வெறு உயிர் ஆக்கை=வெற்றுயிரோடு கூடிய உடம்பையுடைய, அருந்தவர் காட்சியுள்=அரிய தவத்தினர் நோக்குக்கும், திருந்த ஒளித்தும்=திருத்தமாக மறைந்தும், ஒன்று=ஒரு பொருள், உண்டு இல்லை என்ற அறிவு ஒளித்தும்=உண்டு இல்லையென்று பிரமித்த அறிவுக்கு மறைந்தும், பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்=முன்னே பழகுந்தோறும் இப்பொழுது பழகுந்தோறும், ஒளிக்கும் சோரனை=மறைகின்ற கள்ளனை, கண்டனம்=கண்டோம், ஆர் மின் ஆர் மின்=ஆரவாரியுங்கள் ஆரவாரியுங்கள், நாள் மலர் பிணையலின்=புதிய மலர் மாலைகளால், தாள் தளை யிடுமின்=திருவடியைக் கட்டுங்கள், சுற்றுமின்=சுற்றுங்கள், சூழுமின்=சூழுங்கள், தொடர்மின்=தொடருங்கள், விடேன் மின்=விடாதேயுங்கள், பற்றுமின்=பற்றுங்கள், என்றவர்=என்றவர்களது, பற்று=பற்றுதற்கு, முற்று ஒளித்தும்=முழுதும் ஒளித்தும், தன் நேர் இல்லோன்=தனக்கு நிகரில்லாதவன், தானே ஆன தன்மை=தானேயாகிய தன்மையை, என் நேர் அனையோர் கேட்க=என்போல்வார் கேட்கும்படி, வந்து இயம்பி=வந்து சொல்லி, அறை கூவி=பொர அழைத்து, ஆட்கொண்டு அருளி=அடிமைகொண்டருளி, மறையோர் கோலம் காட்டி அருளலும்=வேதியர் கோலத்தைக் காட்டியருளுதலும், உளையா=உளைந்து, அன்பு என்பு உருக ஓலமிட்டு=அன்பினால் என்புருக முறையிட்டு, அலை கடல் திரையின்=அசையாநின்ற கடலலைகள் போல, ஆர்த்து ஆர்த்து=இடையறாது ஆரவாரித்து, ஓங்கி=மேலெழுந்து, தலை தடுமாறு வீழ்ந்து=தலை தடுமாறி வீழ்ந்து, புரண்டு

அலறி=புரண்டு அரற்றி, பித்தரின் மயங்கி=பித்தர்போல மயங்கி,
மத்தரின் மதித்து=உன்மத்தர்போல மதித்து, நாட்டவர் மருளவும்
=நாட்டார் மருட்சிகொள்ளவும், கேட்டவர் வியப்பவும்=கேட்டவர்
வியப்புக்கொள்ளவும், கடம் களிறு ஏற ஆ=மதயானை மதித்த இட
பம் இவைபோல, தடம் பெரு மதத்தின்=மிகப் பெரிய மதத்தால்,
ஆற்றேன் ஆக=தரியேனாக, அவயவம்=உறுப்புக்கள், சுவைதரு
கோல் தேன் கொண்டு செய்தனன்=சுவையுள்ள கோற்றேனால் செய்
யப்பட்டவன், ஏற்றார்=பகைவருடைய, மூதூர்=பழைய ஊரை,
எழில் நகை எரியின் வீழ்வித்து=அழகிய நகையாகிய நெருப்பினால்
அழித்து, ஆங்கு=அவ்விடத்தே, அருள் பெரும் தீயின்=அருளா
கிய பெரு நெருப்பில், அடியோம் அடி குடில்=அடியோங்களுடைய
அடிமைக்குடும்பத்தில், ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன்=ஒருத்த
ரும் தவறாமல் ஒடுக்கிக்கொண்டனன், எனக்கு=அடியேனுக்கு, தட
ம் கையின் நெல்லி கனி ஆயினன்=பெரிய கையிலுள்ள நெல்லிக்
கனிபோன்றிருந்தான், சொல்லுவது அறியேன்=இதைக்குறித்துச்
சொல்லுதலறியேன், வாழி முறையோ = வாழ்தல் முறையோ,
நாயேன் தரியேன்=நாயினேன் ஆற்றேன், தான் என்னை செய்
தது தெரியேன்=தான் என்னைச் செய்தவிதத்தைத் தெரிந்திலேன்,
ஆவா செத்தேன்=ஐயோ செத்தேன், அடியேற்கு அருளியது அறி
யேன் = அடியேனுக்கு அருள்செய்ததை அறியேன், பருகியும்
ஆரேன்=பருகியும் தெவிட்டேன், விழுங்கியும் ஒல்லகில்லேன்=
விழுங்கியும் ஆற்றேன், செழு தண் பால் கடல் திரை புரைவித்து=
செழுமையாகிய குளிர்ந்த பாற்கடலின் அலைகளை நிகர்வித்து,
உவாக்கடல்=பூர்ணசந்திரோதயகாலத்திற் பெருகும் கடலின், நள்
ளும் நீர்=பொருந்திய நீர்போல, உள் அகம் ததும்ப=மனத்தினுள்
ளே ததும்புதலுண்டாக, வாக்கு இறந்த அமுதம்=சொல்லிறந்த
அமுதமானது, மயிர் கால்தோறும்=மயிர்க்கால்கள்தோறும், தேக்
கிடச் செய்தனன்=நிறையச் செய்தனன், கொடியேன்=கொடிய
னேன், ஊன் தழை=மாமிசம் செழித்த, குரம்பைதோறும்=உடம்
புகள் தோறும், நாய் உடல் அகத்தே=நாயுடலின் கண்ணே, குரம்
பை கொண்டு=உடம்பு கொண்டு இன் தேன் பாய்த்தி=இனிய தே
னைப் பாய்ச்சி, நிரம்பிய=நிறைந்த, அற்புதமான=ஆச்சரியமான,
அமுத தாரைகள்=அமிர்த தாரைகள், எற்பு துளைதொறும்=எலும்
புத் துளைகள் தோறும், ஏற்றினன்=ஏறப் பண்ணினன், உருகுவது
உள்ளம் கொண்டு=உருகுவதாகிய, ஒரு மனத்தைக்கொண்டு, ஓர்

உரு செய்தாங்கு=ஒரு உருவமைத்தாற்போல, எனக்கு=அடியேனுக்கு, அன்பூறு ஆக்கை அமைத்தனன்=அன்பூறுமுடம்பை அமைத்தனன், கன்னல் கனிதேர் களிறு என=இனிதாகிய கனியைத்தேடுகிற யானைபோல, கடைமுறை=இறுதியில், என்னையும் இருப்பது ஆக்கினன்=என்னையும் இருப்பதாகச் செய்தருளினன், என் இல்=என்னுள்ளே, கருணை வான்தேன் கலக்க=அருளாகிய பெருந்தேன் பாயும்படி, அருளொடு=அருளோடெழுந்தருளி, பரா அமுது ஆக்கினன்=மேலான அமிர்தமாக்கிக்கொண்டனன், பிரமன் மால் அறியா பெற்றியோன்=பிரமனும் திருமாலும் தேடியும் அறியாத தன்மையுள்ளவன், எ - று.

திருச்சிற்றம்பலம்.

---

## நான்காவது

# போற்றித்திருவகவல்.

### சகத்தினுற்பத்தி.

நிலைமண்டிலவாசிரியப்பா.

திருச்சிற்றம்பலம்.

நான்முகன்முதலாவானவர்தொழுதெழ
வீரடியாலேமூவுலகளந்து
நாற்றிசைமுனிவருமைம்புலன்மலரப்
போற்றிசெய்கதிர்முடித்திருநெடுமாலன்
றடிமுடியறியுமாதரவதனிற்
கடுமுரணேனமாகிமுன்கலந்
தேழ்தலமுருவவிடந்துபின்னெய்த்
தூழிமுதல்வசயசயவென்று
வழுத்தியுங்காணாமலரடியிணைகள்
வழுத்துதற்கெளிதாய்வார்கடலுலகினில்
யானைமுதலாவெறும்பீறாய
வூனமில்யோனியினுள்வினைபிழைத்து
மானுடப்பிறப்பினுண்மாதாவுதரத்
தீனமில்கிருமிச்செருவினிற்பிழைத்து

மொருமதித்தான்றியினிருமையிற்பிழைத்து
மிருமதிவிளைவினொருமையிற்பிழைத்து
மும்மதிதன்னுளம்மதம்பிழைத்து
மீரிருதிங்களிற்பேரிருள்பிழைத்து
மஞ்சுதிங்களின்முஞ்சுதல்பிழைத்து
மாறுதிங்களினூறலர்பிழைத்து
மேழுதிங்களிற்றாழ்புவிபிழைத்து
மெட்டுத்திங்களிற்கட்டமும்பிழைத்து
மொன்பதில்வருதருதுன்பமும்பிழைத்துந்
தக்கதசமதிதாயொடுதான்படுந்
துக்கசாகரத்துயரிடைப்பிழைத்து
மாண்டுகடோறுமடைந்தவக்காலை
யீண்டியுமிருத்தியுமெனைப்பலபிழைத்துங்
காலைமலமொடுகடும்பகற்பசிநிசி
வேலைநித்திரையாத்திரைபிழைத்துங்
கருங்குழற்செவ்வாய்வெண்ணகைக்கார்மயி
லொருங்கியசாயனெருங்கியுண்மதர்த்துக்
கச்சறநிமிர்ந்துகதிர்த்துமுன்பணைத்
தெய்த்திடைவருந்தவெழுந்துபுடைபரந்
தீர்க்கிடைபோகாவிளமுலைமாதர்தங்
கூர்த்தநயனக்கொள்ளையிற்பிழைத்தும்
பித்தவுலகர்பெருந்துறைப்பரப்பினுண்
மத்தக்களிறெனுமவாவிடைப்பிழைத்துங்
கல்வியென்னும்பல்கடற்பிழைத்துஞ்
செல்வமென்னுமல்லலிற்பிழைத்து
நல்குரவென்னுந்தொல்விடம்பிழைத்தும்
புல்வரம்பாயபலதுறைபிழைத்துந்
தெய்வமென்பதோர்சித்தமுண்டாகி
முனிவிலாததோர்பொருளதுகருதலு
மாறுகோடிமாயாசத்திகள்
வேறுவேறுதம்மாயைகடொடங்கின
வாத்தமானாரயலவர்கூடி
நாத்திகம்பேசிநாத்தழும்பேறினர்
சுற்றமென்னுந்தொல்பசுக்குழாங்கள்
பற்றியழைத்துப்பதறினர்பெருகவும்

விரதமேபரமாகவேதியருஞ்
சரதமாகவேசாத்திரங்காட்டினர்
சமயவாதிகடத்தமதங்களே
யமைவதாகவரற்றிமலைந்தனர்
மிண்டியமாயாவாதமென்னுஞ்
சண்டமாருதஞ்சுழித்தடித்தாஅர்த்
துலோகாயதனெனுமொண்டிறற்பாம்பின்
கலாபேதத்தகடுவிடமெய்தி
யதிற்பெருமாயையெனைப்பலசூழவுந்
தப்பாமேதாம்பிடித்ததுசலியாத்
தழலதுகண்டமெழுகதுபோலத்
தொழுதுளமுருகியழுதுடல்கம்பித்
தாடியுமலறியும்பாடியும்பரவியுங்
கொடிறும்பேதையுங்கொண்டதுவிடாதெனும்
படியேயாகிநல்லிடையறாவன்பிற்
பசுமரத்தாணியறைந்தாற்போலக்
கசிவதுபெருகிக்கடலெனமறுகி
யகங்குழைந்தனுகுலமாய்மெய்விதிர்த்துச்
சகம்பேயென்றுதம்மைச்சிரிப்ப
நாணதுவொழிந்துநாடவர்பழித்துரை
பூணதுவாகக்கோணுதலின்றிச்
சதுரிழந்தறிமால்கொண்டுசாருங்
கதியதுபரமாவதிசயமாகக்
கற்றாமனமெனக்கதறியும்பதறியு
மற்றோர்தெய்வங்கனவிலுநினையா
தருபரத்தொருவனவனியில்வந்து
குருபரனாகியருளியபெருமையைச்
சிறுமையென்றிகழாதேதிருவடியிணையைப்
பிறிவினையறியாநிழலதுபோல
முன்பினாகிமுனியாதத்திசை
யென்புநைந்துருகிநெக்குநெக்கேங்கி
யன்பெனுமாறுகரையதுபுரள
நன்புலனொன்றிநாதவென்றரற்றி
யுரைதடுமாறியுரோமஞ்சிலிர்ப்பக்
கரமலர்மொட்டித்திருதயமலரக்

கண்களிகூரநுண்டுளியரும்பச்
சாயாவன்பினைநாடொறுந்தழைப்பவர்
தாயேயாகிவளர்த்தனைபோற்றி
மெய்தருவேதியனாகிவினைகெடக்
கைதரவல்லகடவுள்போற்றி
ஆடகமதுரையரசேபோற்றி
கூடலிலங்குகுருமணிபோற்றி
தென்றில்லைமன்றினுளாடிபோற்றி
இன்றெனக்காரமுதானாய்போற்றி
மூவாநான்மறைமுதல்வாபோற்றி
சேவார்வெல்கொடிச்சிவனேபோற்றி
மின்னாருருவவிகிர்தாபோற்றி
கன்னாருரித்தகனியேபோற்றி
காவாய்கனகக்குன்றேபோற்றி
ஆவாவென்றனக்கருளாய்போற்றி
படைப்பாய்காப்பாய்துடைப்பாய்போற்றி
இடரைக்களையுமெந்தாய்போற்றி
ஈசபோற்றியிறைவபோற்றி
தேசப்பளிங்கின்றிரளேபோற்றி
அரைசேபோற்றியமுதேபோற்றி
விரைசேர்சரணவிகிர்தாபோற்றி
வேதிபோற்றிவிமலாபோற்றி
ஆதிபோற்றியறிவேபோற்றி
கதியேபோற்றிகனியேபோற்றி
நதிசேர்செஞ்சடைநம்பாபோற்றி
உடையாய்போற்றியுணர்வேபோற்றி
கடையேனடிமைகண்டாய்போற்றி
ஐயாபோற்றியணுவேபோற்றி
சைவாபோற்றிதலைவாபோற்றி
குறியேபோற்றிகுணமேபோற்றி
நெறியேபோற்றிநினைவேபோற்றி
வானோர்க்கரியமருந்தேபோற்றி
ஏனோர்க்கெளியவிறைவாபோற்றி
மூவேழ்சுற்றமுமுரணுறுநரகிடை
ஆழாமேயருளரசேபோற்றி
தோழாபோற்றிதுணைவாபோற்றி

வாழ்வேபோற்றியென்வைப்பேபோற்றி
முத்தாபோற்றிமுதல்வாபோற்றி
யத்தாபோற்றியரனேபோற்றி
யுரையுணர்விறந்தவொருவபோற்றி
விரிகடலுலகின்விளைவேபோற்றி
யருமையிலெளியவழகேபோற்றி
கருமுகிலாகியகண்ணேபோற்றி
மன்னியதிருவருண்மலையேபோற்றி
யென்னையுமொருவனாக்கியிருங்கழற்
சென்னியில்வைத்தசேவகபோற்றி
தொழுதகைதுன்பந்துடைப்பாய்போற்றி
யழிவிலாவானந்தவாரிபோற்றி
யழிவதுமாவதுங்கடந்தாய்போற்றி
முழுவதுமிறந்தமுதல்வாபோற்றி
மானேர்நோக்கிமணாளாபோற்றி
வானகத்தமரர்தாயேபோற்றி
பாரிடையைந்தாய்ப்பரந்தாய்போற்றி
நீரிடைநான்காய்நிகழ்ந்தாய்போற்றி
தீயிடைமூன்றாய்த்திகழ்ந்தாய்போற்றி
வளியிடையிரண்டாய்மகிழ்ந்தாய்போற்றி
வெளியிடையொன்றாய்விளைந்தாய்போற்றி
யளிபவருள்ளத்தமுதேபோற்றி
கனவிலுந்தேவர்க்கரியாய்போற்றி
நனவிலுநாயேற்கருளினைபோற்றி
யிடைமருதுறையுமெந்தாய்போற்றி
சடையிடைக்கங்கைதரித்தாய்போற்றி
யாரூரமர்ந்தவரசேபோற்றி
சீரார்திருவையாறாபோற்றி
யண்ணாமலையெம்மண்ணாபோற்றி
கண்ணாரமுதக்கடலேபோற்றி
யேகம்பத்துறையெந்தாய்போற்றி
பாகம்பெண்ணுருவானாய்போற்றி
பராய்த்துறைமேவியபரனேபோற்றி
சிராப்பள்ளிமேவியசிவனேபோற்றி
மற்றோர்பற்றிங்கறியேன்போற்றி
குற்றாலத்தெங்கூத்தாபோற்றி

கோகழிமேவியகோவேபோற்றி
யீங்கோய்மலையெம்மெந்தாய்போற்றி
பாங்கார்பழனத்தழகாபோற்றி
கடம்பூர்மேவியவிடங்காபோற்றி
யடைந்தவர்க்கருளுமப்பாபோற்றி
யித்திதன்னின்கீழிருமூவர்க்
கத்திக்கருளியவரசேபோற்றி
தென்னாடுடையசிவனேபோற்றி
யெந்நாட்டவர்க்குமிறைவாபோற்றி
யேனக்குருளைக்கருளினைபோற்றி
மானக்கயிலைமலையாய்போற்றி
யருளிடவேண்டுமம்மான்போற்றி
யிருள்கெடவருளுமிறைவாபோற்றி
தளர்ந்தேனடியேன்றமியேன்போற்றி
களங்கொளக்கருதவருளாய்போற்றி
யஞ்சேலென்றிங்கருளாய்போற்றி
நஞ்சேயமுதாநயந்தாய்போற்றி
யத்தாபோற்றியையாபோற்றி
நித்தாபோற்றிநிமலாபோற்றி
பத்தாபோற்றிபவனேபோற்றி
பெரியாய்போற்றிபிரானேபோற்றி
யரியாய்போற்றியமலாபோற்றி
மறையோர்கோலநெறியேபோற்றி
முறையோதரியேன்முதல்வாபோற்றி
யுறவேபோற்றியுயிரேபோற்றி
சிறவேபோற்றிசிவமேபோற்றி
மஞ்சாபோற்றிமணாளாபோற்றி
பஞ்சேரடியாள்பங்காபோற்றி
யலந்தேனாயேனடியேன்போற்றி
யிலங்குசுடரெம்மீசாபோற்றி
கவைத்தலைமேவியகண்ணேபோற்றி
குவைப்பதிமலிந்தகோவேபோற்றி
மலைநாடுடையமன்னேபோற்றி
கலையாரரிகேசரியாய்போற்றி
திருக்கழுக்குன்றிற்செல்வாபோற்றி

பொருப்பமர்பூவணத்தரனேபோற்றி
யருவமுமுருவமுமானாய்போற்றி
மருவியகருணைமலையேபோற்றி
துரியமுமிறந்தசுடரேபோற்றி
தெரிவரிதாகியதெளிவேபோற்றி
தோளாமுத்தச்சுடரேபோற்றி
யாளானவர்கட்கன்பாபோற்றி
யாராவமுதேயருளேபோற்றி
பேராயிரமுடைப்பெம்மான்போற்றி
தாளியறுகின்றாராய்போற்றி
நீளொளியாகியநிருத்தாபோற்றி
சந்தனச்சாந்தின்சுந்தரபோற்றி
சிந்தனைக்கரியசிவமேபோற்றி
மந்திரமாமலைமேயாய்போற்றி
யெந்தமையுய்யக்கொள்வாய்போற்றி
புலிமுலைபுல்வாய்க்கருளினைபோற்றி
யலைகடன்மீமிசைநடந்தாய்போற்றி
கருங்குருவிக்கன்றருளினைபோற்றி
யிரும்புலன்புலரவிசைந்தனைபோற்றி
படியுறப்பயின்றபாவகபோற்றி
யடியொடுநடுவீறானாய்போற்றி
நரகொடுசுவர்க்கநானிலம்புகாமற்
பரகதிபாண்டியற்கருளினைபோற்றி
யொழிவறநிறைந்தவொருவபோற்றி
செழுமலர்ச்சிவபுரத்தரசேபோற்றி
கழுநீர்மாலைக்கடவுள்போற்றி
தொழுவார்மையறுணிப்பாய்போற்றி
பிழைப்புவாய்ப்பொன்றறியாநாயேன்
குழைத்தசொன்மாலைகொண்டருள்போற்றி
புரம்பலவெரித்தபுராணபோற்றி
பரம்பரஞ்சோதிப்பரனேபோற்றி
போற்றிபோற்றிபுயங்கப்பெருமான்
போற்றிபோற்றிபுராணகாரண
போற்றிபோற்றிசயசயபோற்றி.

திருச்சிற்றம்பலம்

(இதன் பொருள்.)

நான்முகன் முதலா=பிரமன் முதலாக, வானவர் தொழுது எழ=தேவர்கள் தொழுது எழா நிற்க, ஈர் அடியாலே=இரண்டு திருவடியாலே, மூ உலகு அளந்து=மூன்றுலகங்களையும் அளந்து, நால்திசை முனிவரும்=நான்கு திக்கிலுள்ள முனிவர்களும், ஐம்புலன் மலர=ஐம்புலன்களும் மகிழும்படி, போற்றிசெய்=வணங்குகின்ற, கதிர்முடி=ஒளி பொருந்திய திருமுடியை யுடைய, திரு நெடுமால்=அழகிய நெடுமால், அன்று=அந்நாளில், அடிமுடி அறியும்=அடிமுடிகளை யறியவேண்டுமென்கிற, ஆதரவு அதனில்=விருப்பத்தால், கடுமுரண் ஏனம் ஆகி=வேகமும் வலியுமுள்ள பன்றியாகி, முன் கலந்து=முன் வந்து, ஏழ் தலம் உருவ இடந்து=ஏழுலகங்களும் ஊடுருவும்படி தோண்டி, பின் எய்த்து=பின்னே இளைத்து, ஊழி முதல்வ=ஊழி முதல்வனே, சய சய என்று=வெல்க வெல்கவென்று, வழுத்தியும்=துதித்தும், காணா மலர் அடி இணைகள்=காணப்பெறாத தாமரை மலர் போலுந்திருவடியிணைகள், வழுத்து தற்கு எளிதாய்=துதித்தற்கெளிதாகி, வார்கடல் உலகினில்=நெடிய கடலாற்சூழப்பட்ட உலகத்தில், ஆனை முதலா=யானை முதலாக, எறும்பு ஈறு ஆய=எறும்பு இறுதியாகிய, ஊனம் இல் யோனியினுள்=ஊனமில்லாதயோனிபேதங்களில், வினைபிழைத்து=நல்வினையால் தப்பி, மானுடம்பிறப்பின் உள்=மனிதப்பிறப்பில், மாதா உதரத்து=தாயின் வயிற்றில், ஈனம் இல் கிருமிச்செருவினில் பிழைத்தும்=நிறைந்த புழுக்களின் போருக்குத்தப்பியும், ஒரு மதிதான்றியின் இருமையில் பிழைத்தும்=ஒரு மாசத்தின் கழிவின் மிகுதியில் தப்பியும், இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும் = இரண்டுமாசத்தின் நிகழ்ச்சியின் ஒருமைப்பாட்டில் தப்பியும், மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்=மூன்றுமாதத்தின் அந்த மதப்பெருக்குக்குத்தப்பியும், ஈர் இரு திங்களில் பேர் இருள் பிழைத்தும்=நான்கா மாசத்தில் பெரிய இருளுக்குத் தப்பியும், அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்=ஐந்தா மாசத்தில் முதிர்தலுக்குத் தப்பியும், ஆறு திங்களின் ஊறு அலர் பிழைத்தும்=ஆறு மாசத்தில் மிகுகின்ற துன்பத்துக்குத் தப்பியும், ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்=ஏழாமாசத்தில் பெரிய வுலகத்தில் பிழைத்தும், எட்டு திங்களில் கட்டமும் பிழைத்தும்=எட்டாமாசத்தில் கஷ்டத்தைத் தப்பியும், ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்=ஒன்பதாமாசத்தில் வருகிற துன்பத்துக்குத் தப்பியும், தக்க தசமதி=தகுதியாகிய பத்தா மாசத்தில், தாயொடு தான் படும்=

தாயோடுதான்படுகிற, துக்க சாகரத்துயர் இடை பிழைத்தும்=துன்
பக்கடலின் துன்பத்துக்குத் தப்பியும், ஆண்டுகள் தோறும் அடை
ந்த அ காலை=வருடங்களெல்லாம் அடைந்த அக்காலத்தில், ஈண்
டியும் இருத்தியும் = நெருங்கியும் இருத்தியும், எனை பல பிழைத்
தும்=எனையபல துன்பங்களுக்குத் தப்பியும், காலைமலமொடு=காலை
யில் மலவுபாதியோடு, கடும்பகல்=கடும்பகலில், பசி=பசியும், நிசி
வேலை=இராக்காலத்தில், நித்திரை=தூக்கமும் ஆகிய, யாத்திரை
பிழைத்தும்=யாத்திரையில் தப்பியும், கரும் குழல்=கரிய கூந்தலை
யும், செவ்வாய்=செவ்வாயினையும், வெள்நகை=வெள்ளிய நகையி
னையும், கார் மயில் ஒருங்கிய சாயல்=கார்காலத்து மயில்போலும்
சாயலையும், நெருங்கி=நெருக்கமாகி, உள் மதர்த்து=உள்ளேமதர்
த்து, கச்சு அற நிமிர்ந்து=கச்சு அற்றொழியும்படி அண்ணாந்து,
கதிர்த்து=ஒளிபெற்று, முன்பணைத்து=முன்னே பருத்து, இடை
எய்த்து வருந்த எழுந்து=இடையிளைத்து வருந்தும்படி எழுந்து,
புடை பரந்து=பக்கங்களில்பரவி, ஈர்க்கு இடைபோகா=ஈர்க்கும்
இடையே நுழையப்பெறாத, இளமுலை=இளமுலைகளையும் உடைய,
மாதர்=மாதருடைய, கூர்த்த=கூர்மையாகிய, நயனக்கொள்ளையில்
பிழைத்தும்=கண்களின் மிகுதிக்குத் தப்பியும், பித்தவுலகர்=பித்த
உலகினரது, பெருந்துறைபரப்பினுள்=பெரிய வுலகப்பரப்பில், மத்
தக்களிறு என்னும்=மதயானையென்று சொல்லத்தக்க, அவா இடை
பிழைத்தும்=ஆசைக்குத் தப்பியும், கல்வியென்னும்=கல்வியென்
கிற, பல்கடல் பிழைத்தும்=பல கடலுக்குத்தப்பியும், செல்வம் என்
னும்=செல்வமென்கிற, அல்லலில் பிழைத்தும்=துன்பத்துக்குத்
தப்பியும், நல்குரவு என்னும்=தரித்திரமென்கிற, தொல் விடம்
பிழைத்தும்=பழைய விஷத்துக்குத் தப்பியும், புல்வரம்பு ஆய=
புல் எல்லையாகிய, பல துறை பிழைத்தும்=பல துறைகளுக்குத்
தப்பியும், தெய்வம் என்பது=தெய்வமென்பதாகிய, ஓர் சித்தம்
உண்டாகி=ஒரு நினைப்புண்டாகி, முனிவு இலாதது=வெறுப்பில்
லாததாகிய, ஓர் பொருள் கருதலும்=ஒரு பொருளை நினைத்தலும் ஆறு
கோடி மாயா சக்திகள்=ஆறாகிய கோடியையுடைய மாயா சத்திகள்,
வேறு வேறு தம்மாயைகள் தொடங்கினர்=வேறு வேறாகிய தமது
மாயைகளைச் செய்யத்தொடங்கினார்கள், ஆத்தமானார்=ஆப்தரானவர்
களும், அயலவர்=அயலாரும், கூடி=கலந்து, நாத்திகம் பேசி=
நாஸ்திகத்தைப்பேசி, நா தழும்பு ஏறினர்=நாவில் தழும்பேறப்
பெற்றார்கள், சுற்றம் என்னும்=உறவினர் என்கிற, தொல்=பழமை

யாகிய, பசுக்குழாங்கள்=பசுக்கூட்டங்கள், பற்றி அழைத்து=பின்பற்றி அழைத்து, பதறினர் பெருகவும்=பதறிப்பெருகவும், விரதமே பரம் ஆக=விரதத்தையே மேன்மையாக, வேதியரும்=மறையோரும், சரதம் ஆக=உண்மையாக, சாத்திரம் காட்டினர்=சாத்திரத்தைக் காட்டினார்கள், சமயவாதிகள்=சமயவாதிகளெல்லாம், தம்தம் மதங்களில் அமைவதாக=தங்கள் தங்கள் மதங்களில் அமைந்திருப்பதாக, அரற்றி மலைந்தனர்=அரற்றிப் போர்செய்தார்கள், மிண்டிய மாயா வாதம் என்னும்=நெருங்கிய மாயாவாதமென்கிற, சண்டமாருதம்=பெருங்காற்றானது, சுழித்து அடித்து ஆர்த்து=சுழித்தெறிந்து ஆரவாரித்து, உலோகாயதன் எனும்=லோகாயதனென்கிற, ஒள் திறல் பாம்பின்=ஒள்ளிய வெற்றியுள்ள பாம்பின், கலா பேதத்த=சாஸ்திரபேதத்தையுடைய, கடு விடம் எய்தி=கடிய விஷமானதுவந்து, அதில்=அதிலே, பெரு மாயை=பெரிய மாயை, எனை பல சூழவும்=என்னைப் பலபடியாகச் சூழ்ந்துகொள்ளவும், தப்பாமே=தவறாமல், தாம் பிடித்தது=தாம் பிடித்ததை, சலியா=சலித்துவிடாமல், தழல் கண்ட மெழுகுபோல=நெருப்பைக்கண்ட மெழுகுபோல, தொழுது உள்ளம் உருகி=வணங்கி மனமுருகி, அழுத உடல் கம்பித்து=அழுது உடல் நடுங்கி, ஆடியும்=ஆடுதல் செய்தும், அலறியும்=அலறுதல் செய்தும், பாடியும்=பாடுதல் செய்தும் பரவியும்=வழிபட்டும், கொடிறும் பேதையும்=பேயும் பேதையும் கொண்டது விடாது என்னும் படியே ஆகி = கொண்டதை விடாது என்கிறபடியேயாகி, நல்=நல்ல, இடை அறா அன்பின்=இடையறாத அன்பினால், பசுமரத்து=பச்சைமரத்தில், ஆணி அறைந்தால் போல=ஆணி அடித்தாற்போல, கசிவு பெருகி=கசிதல் பெருகி, கடல் என மறுகி=கடல்போல மயங்கி, அகம் குழைந்து=மனங்குழைந்து, அநுகுலமாய் மெய் விதிர்த்து=அநுகூலமாக சரீரம் நடுங்கி, சகம் பேய் என்று தம்மை சிரிப்ப=உலகமானது பேயென்று தம்மை நோக்கிச் சிரிக்க, நாண் ஒழிந்து=நாணம் நீங்கி நாடவர் பழித்து உரை=நாட்டார் பழித்துச் சொல்லுஞ் சொற்க பூண் ஆக=ஆபரணமாக, கோணுதல் இன்றி=கோணுதலில்லாம சதுர் இழந்து=சதுரை மறந்து, அறிமால் கொண்டு சாரும்=அறி மயக்கங்கொண்டு அடையத் தகுந்த, கதி யது=கதியே, பரம அ சயமாக=மேலான அதிசயமாக, கற்று மனம் எனா=கற்றாவின் மனம்போல, கதறியும் பதறியும் = கூவியும் நடுங்கியும், மற்

ஓர் தெய்வம்=வேறொரு தெய்வத்தை, கனவிலும் நினையாது=கனவிலும் நினையாமல், அருபரத்து ஒருவன்=அரிய மேலோன் ஒருவன், அவனியில் வந்து=பூமியில் வந்து, குரு பரன் ஆகி=ஆசாரிய சிரேஷ்டனாகி, அருளிய பெருமையை=அருளின பெருமையை, சிறுமை என்று இகழாதே=சிறுமையென்று இகழாமல், திருவடி இணையை=திருவடி யிரண்டையும், பிறிவினை அறியா நிழல்போல=பிரிவறியாத நிழலைப்போல, முன் பின் ஆகி முனியாது=முன் பின்னாய் வெறுக்காமல், அ திசை = அத்திசையில், என்பு நைந்து உருகி=எலும்பு நைந்துருகி, நெக்கு நெக்கு ஏங்கி=நெகிழ்ந்து நெகிழ்ந்து அழுது, அன்பு என்னும் ஆறு=அன்பென்னும் நதியானது, கரை புரள=கரை கடக்க, நன் புலன் ஒன்றி=நல்ல புலன்கள் ஒருமைப்பட்டு, நாத என்று அரற்றி = நாதனேயென் றரற்றி, உரை தடுமாறி=சொற்கள் தடுமாறி, உரோமம் சிலிர்ப்ப=மயிர் சிலிர்க்க, கரமலர் மொட்டித்து=கைம்மலர் குவித்து, இருதயம் மலர=இதய மலர் விரிய, கண் களிகூர=கண்கள் களிப்பு மிகவும், நுண் துளி அரும்ப=நுண்ணிய துளிகள் அரும்பவும், சாயா அன்பினை=கெடாத அன்பை, நாள்தொறும் தழைப்பவர்=தினந்தோறும் வளர்ப்பவர்களுக்கு, தாயே ஆகி வளர்த்தனை=தாயாகியே வளர்த்தாய், போற்றி=போற்றி, மெய்தரு வேதியன் ஆகி=உண்மையான மறையோனாகி, வினை கெட=வினைகள் அழியும்படி, கை தர வல்ல கடவுள்=கை கொடுக்க வல்ல கடவுளே, போற்றி=போற்றி, ஆடகம்=பொன்மயமாயிருக்கிற, மதுரை அரசே=மதுரைக்கரசனே, போற்றி=போற்றி, கூடல் இலங்கு=கூடற்பதியில் விளங்குகின்ற, குருமணி போற்றி=குருமணியே போற்றி, தென் தில்லைமன்றின் உள்=தென் தில்லையம்பலத்தில், ஆடி=ஆடுவோனே, போற்றி=போற்றி, இன்று எனக்கு ஆர் அமுது ஆனாய்=இன்று எனக்கு அரிய அமிர்தமாயினாய், போற்றி=போற்றி, மூவா=கெடாத, நான்மறை முதல்வா=நான்கு வேதங்களுக்கு முதல்வனே, போற்றி=போற்றி, சே ஆர்=இடபவுருப்பொருந்திய, வெல் கொடி=வெற்றிக்கொடியையுடைய, சிவனே=சிவபிரானே, போற்றி=போற்றி, மின் ஆர் உருவம் விகிர்தா=மின்னுதல் பொருந்திய உருவத்தையுடைய வேறுபாட்டோடு கூடினவனே, போற்றி = போற்றி, கல் நார் உரித்த கனியே=கல்லில் நார் உரித்த கனியே, போற்றி=போற்றி, காவாய் கனகம் குன்றே=காத்தருளாய் பொன்

மலையே, போற்றி=போற்றி, ஆவா=ஐயோ, என்றனக்கு அருளாய்=எனக் கருள்செய்யாய், போற்றி=போற்றி, படைப்பாய்=படைப்பவனே, காப்பாய்=காப்பவனே, துடைப்பாய்=சங்கரிப்பவனே, போற்றி=போற்றி, இடரைக் களையும் எந்தாய்=துன்பத்தை வேரறுக்கிற எமது தந்தையே, போற்றி=போற்றி, ஈச=ஈசனே, போற்றி=போற்றி, இறைவ=இறைவனே, போற்றி=போற்றி, தேசம்=ஒளி பொருந்திய, பளிங்கின் திரளே=பளிங்கின் திரட்சியே, போற்றி=போற்றி, அரைசே=அரசனே, போற்றி=போற்றி, அமுதே=அமிர்தமே, போற்றி=போற்றி, விரைசேர் சரணம் விகிர்தா=மணம் பொருந்திய திருவடியை யுடைய விகிர்தியா பகனே, போற்றி=போற்றி, வேதி=வேதியனே, போற்றி=போற்றி, விமலா =விமலனே, போற்றி=போற்றி, ஆதி போற்றி=முதல்வனே போற்றி, அறிவே=உணர்வே, போற்றி=போற்றி, கதியே போற்றி=கதியே போற்றி, கனியே போற்றி=கனியே போற்றி, நதிசேர் செம் சடை=கங்கையாறு தங்கிய செஞ்சடையை யுடைய, நம்பா=நம்பனே, போற்றி=போற்றி, உடையாய் போற்றி=உடையவனே போற்றி, உணர்வே போற்றி=உணர்வானவனே போற்றி; கடையேன்=கடையனேன், உன் அடிமை=உன் தொண்டன், போற்றி=போற்றி,ஐயா=ஐயனே, போற்றி=போற்றி, அணுவே=அணு ரூபமே, போற்றி=போற்றி, சைவா=சைவனே, போற்றி=போற்றி, தலைவா=தலைவனே, போற்றி=போற்றி, குறியே போற்றி = குறியே போற்றி, குணமே போற்றி=குணமே போற்றி, நெறியே=நல் வழியே, போற்றி=போற்றி, நினைவே=எண்ணமே, போற்றி=போற்றி, வானோர்க்கு அரிய மருந்தே=தேவர்களுக்கும் அரிதாகிய அமிர்தமே, போற்றி=போற்றி, ஏனோர்க்கு=மற்றையர்க்கு, எளிய இறைவா=எளிதான இறைவனே, போற்றி=போற்றி, மூவேழ் சுற்றம்=மூவேழ் தலைமுறைச் சுற்றத்தார், முரண் உறு நரகிடை=வலிய நரகத்தில், ஆழாமே=ஆழ்ந்து போகாமல், அருள்=அருள் செய்த, அரசே=அரசனே, போற்றி=போற்றி, தோழா=தோழனே, போற்றி=போற்றி, துணைவா=துணைவனே, போற்றி=போற்றி, வாழ்வே=வாழ்க்கையே, போற்றி=போற்றி, என் வைப்பே=என் நிதியே, போற்றி=போற்றி, முத்தா=முத்தனே, போற்றி=போற்றி, முதல்வா=முதல்வனே, போற்றி=போற்றி, அத்தா=அத்தனே, போற்றி=போற்றி,

அரனே போற்றி=சிவனே போற்றி, உரை உணர்வு இறந்த=சொல்லையும் அறிவையும் கடந்த, ஒருவ=ஒருவனே, போற்றி=போற்றி, விரி கடல் உலகின்=விரிந்த கடல்சூழ்ந்த உலகத்தின், விளைவே=பயனே, போற்றி=போற்றி, அருமையில் எளிய அழகே=அருமையில்லாத எளிய அழகே, போற்றி=போற்றி, கருமுகில் ஆகிய கண்ணே=கரிய மேகம்போன்ற ஆதாரமே, போற்றி=போற்றி, மன்னிய=நிலைபெற்ற, திருவருள் மலையே=திருவருளாகிய மலையே போற்றி=போற்றி, என்னையும் ஒருவன் ஆக்கி=என்னையும் ஒரு அடியவனாக்கி, இருகழல்=பெருமையாகிய திருவடியை, சென்னியில் வைத்த=என் தலையில் வைத்த, சேவக=சேவகனே, போற்றி=போற்றி, தொழுதகை=வணங்கினவுடனே, துன்பம் துடைப்பாய்=துன்பங்களை நீக்குவோனே, போற்றி=போற்றி, அழிவிலா=அழிவில்லாத, ஆநந்தவாரி=இன்பக் கடலே, போற்றி=போற்றி, அழிவதும் ஆவதும்=அழிவதும் பிறப்பதும் ஆனவைகளை, கடந்தாய்=கடந்தவனே, போற்றி=போற்றி, முழுவதும் இறந்த முதல்வா=எல்லாம் கடந்தமுதல்வனே, போற்றி=போற்றி, மான் நேர் நோக்கி=மானை நிகர்த்த நோக்கத்தையுடைய உமாதேவியின், மணாளா=மணவாளனே, போற்றி=போற்றி, வானகத்து=விண்ணுலகத்துள்ள, அமரர் தாயே=தேவர்களுக்குத் தாயே, போற்றி=போற்றி, பார் இடை ஐந்தாய் பரந்தாய் = பூமியில் ஐந்தாய்ப் பரவியிருப்பவனே, போற்றி=போற்றி, நீரிடை நான்காய் திகழ்ந்தாய்=நீரில் நான்காயிருப்பவனே, போற்றி=போற்றி, தீயிடை மூன்றாய் திகழ்ந்தாய்=நெருப்பில் மூன்றாய் விளங்கினவனே, போற்றி=போற்றி, வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் = காற்றில் இரண்டாகி மகிழ்ந்தவனே, போற்றி = போற்றி, வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் = ஆகாயத்தில் ஒன்றாகித்தோன்றினவனே, போற்றி = போற்றி, அளிபவர் உள்ளத்து அமுதே = கனிபவருடைய மனத்தில் அமிர்தாயிருப்பவனே, போற்றி = போற்றி, கனவிலும்=சொப்பனத்திலும், தேவர்க்கு அரியாய்=தேவர்கட்கு அரியவனே, போற்றி=போற்றி, நாயேற்கு நனவிலும் அருளினை=சாக்கிரத்திலும் அடியேனுக்கு அருள் செய்தனை, போற்றி=போற்றி, இடை மருது உறையும் எந்தாய்=திருவிடைமருதூரில் வாசம் பண்ணுகிற எந்தையே, போற்றி=போற்றி, சடையிடை கங்கை தரித்தாய் = சடையில் கங்கையைத்தாங்கினவனே, போற்றி=போற்றி, ஆரூர் அமர்ந்த

அரசே=திருவாரூரில் அமர்ந்தருளின அரசனே, போற்றி=போற்றி, சீர் ஆர் திருவையாறா=சிறப்புப் பொருந்திய திருவையாற்றில் உள்ளவனே, போற்றி=போற்றி, அண்ணாமலை எம் அண்ணா=திரு அண்ணாமலையிலுள்ள எம் தந்தையே, போற்றி = போற்றி, கண் ஆர் அமுதம் கடலே=பெருமையுள்ள அமிர்த சாகரமே, போற்றி=போற்றி, ஏகம்பத்து உறை=திருவேகம்பத்தில் வாழ்கின்ற, எந்தாய்=எந்தையே, போற்றி=போற்றி, பாகம் பெண் உரு ஆனாய்=பாகம் பெண்ணுருவானவனே, போற்றி=போற்றி, பராய்த்துறை மேவிய பரனே=திருப்பராய்த்துறையிற் பொருந்திய மேலோனே, போற்றி=போற்றி, சிராப்பள்ளி மேவிய சிவனே=திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளிய சிவபிரானே, போற்றி=போற்றி, இங்கு மற்று ஓர் பற்று அறியேன்=இவ்விடத்து வேறொரு பற்றையும் அறிந்திலேன், போற்றி=போற்றி, குற்றாலத்து=திருக்குற்றாலத்தில் எழுந்தருளிய, எம் கூத்தா = எம் கூத்தனே, போற்றி=போற்றி, கோகழி மேவிய=திருவாவடுதுறையிற் பொருந்திய, கோவே=இறைவனே, போற்றி=போற்றி, ஈங்கோய் மலை=திரு வீங்கோய் மலையில் வாழ்கின்ற, எம் எந்தாய்=எமது தந்தையே, போற்றி=போற்றி, பாங்கு ஆர் பழனத்து=அழகுநிறைந்த திருப்பழனத்திலுள்ள, அழகா=அழகனே, போற்றி=போற்றி, கடம்பூர் மேவிய விடங்கா=திருக்கடம்பூரில் எழுந்தருளிய அழகனே, போற்றி=போற்றி, அடைந்தவர்க்கு அருளும் அய்யா=அடுத்தவர்க்கு அருள்செய்கின்ற அப்பனே, போற்றி=போற்றி, இத்தி தன்னின் கீழ்=துவர்மரம் பத்தினுள் ஒன்றாகிய இத்திமரத்தின்கீழ், இருமூவர்க்கு=அறுவருக்கும், அத்திக்கு=யானைக்கும், அருளிய=அருள்செய்த, அரசே=அரசனே, போற்றி=போற்றி, தென்நாடு உடைய சிவனே=தென்னாட்டையுடைய சிவபிரானே, போற்றி=போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா=எந்த நாட்டார்க்கும் இறைவனே, போற்றி=போற்றி, ஏனக்குருளைக்கு அருளினை=பன்றிக்குட்டிக் கருளினவனே, போற்றி=போற்றி, மானக் கயிலைமலையாய்=பெரிய கைலாயமலையை யுடையவனே, போற்றி=போற்றி, அருளிடவேண்டும் அம்மான்=அருள் செய்யவேண்டும் அம்மானே, போற்றி=போற்றி, இருள்கெட அருளும் இறைவா=அஞ்ஞான இருள் அழியும்படி அருள் செய்கிற இறைவனே, போற்றி=போற்றி, தளர்ந்தேன் அடியேன் தமியேன்=தளர்ச்சியடைக்தேன் அடியேன் தனியேன், போற்றி= போற்றி, களம்கொளக்

கருத அருளாய்=கள்ளஞ்செய்ய நினைக்கும்படி அருளாதவனே, போற்றி=போற்றி, அஞ்சேல் என்று இங்கு அருளாய்=அஞ்சாதேயென்று இவ்விடத்தருள்செய்யவேண்டும், போற்றி=போற்றி, நஞ்சே அமுதாய் நயந்தாய்=நஞ்சையே அமுதமாக விரும்பினவனே, போற்றி=போற்றி, அத்தா=அத்தனே, போற்றி=போற்றி, ஐயா=ஐயனே, போற்றி=போற்றி, நித்தா=நித்தனே, போற்றி=போற்றி, நிமலா=நிர்மலனே, போற்றி=போற்றி, பத்தா=பத்தனே, போற்றி=போற்றி, பவனே=சிவனே, போற்றி=போற்றி, பெரியாய்=பெரியோனே, போற்றி=போற்றி, பிரானே=உபகாரகனே, போற்றி=போற்றி, அரியாய்=அரியவனே, போற்றி=போற்றி, அமலா=அமலனே, போற்றி=போற்றி, மறையோர் கோலம் நெறியே=வேதங்களில் வல்லவர்க்கு அழகிய நெறியாயிருப்பவனே, போற்றி=போற்றி, முறையோ தரியேன் முதல்வா=முறையோ ஆற்றேன் முதல்வனே, போற்றி=போற்றி, உறவே=சுற்றமே, போற்றி=போற்றி, உயிரே=பிராணனே, போற்றி=போற்றி, சிறவே=சிறப்பே, போற்றி=போற்றி, சிவமே=சிவபெருமானே, போற்றி=போற்றி, மஞ்சா=அழகனே, போற்றி=போற்றி, மணாளா=மணவாளனே, போற்றி=போற்றி, பஞ்சு ஏர் அடியாள் பங்கா=பஞ்சுபூட்டிய அழகிய பாதங்களையுடைய உமாதேவி பாகனே போற்றி=போற்றி, அலந்தேன் நாயேன் அடியேன்=வருந்தினேன் நாயடியேன், போற்றி=போற்றி, இலங்கு சுடர் எம் ஈசா=விளங்குகின்ற ஒளியையுடைய எம்மீசனே, போற்றி=போற்றி, கவைத்தலை மேவிய கண்ணே=கவைத்தலையிற் பொருந்திய பெருமையே, போற்றி=போற்றி, குவைப்பதி மலிந்த கோவே=குவைப்பதியிற் பொருந்திய இறைவனே, போற்றி=போற்றி, மலைநாடு உடைய மன்னே=மலைநாட்டையுடைய மன்னனே, போற்றி=போற்றி, கலை ஆர் அரி கேசரியாய்=கலைகள் நிறைந்த பகைவர் சிங்கமே, போற்றி=போற்றி, திருக்கழுக்குன்றிற் செல்வா=திருக்கழுக்குன்றிலுள்ள செல்வனே, போற்றி=போற்றி, பொருப்பு அமர் பூவணத்து அரனே=மலைகளமைந்த திருப்பூவணத்திலுள்ள அரனே, போற்றி=போற்றி, அருவமும் உருவமும் ஆனாய்=அருவமும் உருவமும் ஆனவனே, போற்றி=போற்றி, மருவிய கருணை மலையே=பொருந்திய அருள்மலையே, போற்றி=போற்றி, துரியமும் இறந்தசுடரே=துரிய பதத்தையும் கடந்த சோதியே, போற்றி=போற்றி, தெரிவு அரிது

ஆகிய தெளிவே=தெரிதல் அருமையாகிய தெளிவே, போற்றி=போற்றி, தோளா முத்த சுடரே=தொளைக்காத முழு முத்தின் சோதியே, போற்றி=போற்றி, ஆளானவர்கட்கு அன்பா=அடிமையானவர்க்கு அன்பனே, போற்றி=போற்றி, ஆரா அமுதே=தெவிட்டாத அமிர்தமே, அருளே=திரு அருளே, போற்றி=போற்றி, பேர் ஆயிரம் உடை பெம்மான்=ஆயிரம் பெயர்களையுடைய பெருமானே, போற்றி=போற்றி, தாளி அறுகின் தாராய்=தாளியறுகின் மாலையைத்தரித்தவனே, போற்றி=போற்றி, நீள் ஒளி ஆகிய நிருத்தா=பேரொளியாகிய கூத்தனே, போற்றி=போற்றி, சந்தன சாந்தின் சுந்தர=சந்தனம் விபூதி என்பவைகளால் அலங்கரிக்கப்பட்ட அழகனே, போற்றி=போற்றி, சிந்தனைக்கு அரிய சிவமே=நினைத்தற்கரிய சிவமே, போற்றி=போற்றி, மந்திரம் மாமலை மேயாய்=வீடாகப்பெரிய கைலைமலையைப் பொருந்தினவனே, போற்றி=போற்றி, எம் தம்மை உய்யக் கொள்வாய்=எம்மை உய்யக் கொள்வோனே, போற்றி=போற்றி, புலி முலை புல்வாய்க்கு அருளினை=புலி முலையை மானுக்கு அருளினவனே, போற்றி=போற்றி, அலை கடல் மீமிசை நடந்தாய்=அசையா நின்ற கடலின்மேல் நடந்தவனே, போற்றி=போற்றி, கருங் குருவிக்கு அன்று அருளினை=கரிக் குருவிக்கு அன்று அருள் செய்தவனே, போற்றி=போற்றி, இரும் புலன் புலர இசைந்தனை=பெரிய புலன்கள் அறும்படி இருந்தவனே, போற்றி=போற்றி, படி உற பயின்ற பாவக=பூமியில் மிகவும் பயின்ற பரிசுத்தனே, போற்றி=போற்றி, அடி யொடு நடு ஈறு ஆனாய்=அடியொடு நடுவும் இறுதியும் ஆனவனே, போற்றி=போற்றி, நரகொடு சுவர்க்கம் நால் நிலம் புகாமல்=நரகம் சுவர்க்கம் பூமி என்பவற்றில் பிரவேசியாமல், பரகதி பாண்டியற்கு அருளினை=பரகதியைப் பாண்டியனுக்கு அருள் செய்தவனே, போற்றி=போற்றி, ஒழிவு அற நிறைந்த ஒருவ=நீக்கமற நிறைந்த ஒருவனே, போற்றி=போற்றி, செழு மலர் சிவபுரத்து அரசே=செழு மலர்களையுடைய சிவபுரத்துக்கு அரசனே, போற்றி=போற்றி, கழு நீர் மாலை கடவுள்=கழுநீர் மாலையை யணிந்த கடவுளே, போற்றி=போற்றி, தொழுவார் மையல் துணிப்பாய்=வணங்குவோருடைய மயக்கத்தை அறுப்பவனே, போற்றி=போற்றி, பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியா நாயேன்=பிழைத்தல் பேறு என்பவற்றைச் சிறிதும் அறியாத நாயினேனது, குழைத்த சொல் மாலை=மனங் குழைந்து சொன்ன சொல்மாலையை, கொண்டருள்=

கொண்டருள வேண்டும், போற்றி=போற்றி, புரம் பல எரித்த=திரி புரங்களை யெரித்த, புராண=பழையோனே, போற்றி=போற்றி, பரம் பரம் சோதி பரனே=மேலான ஒளியையுடைய மேலோனே, போற்றி=போற்றி, போற்றி=போற்றி, போற்றி=போற்றி, புயங் கப் பெருமான்=புயங்கப் பெருமானே, போற்றி போற்றி=போற்றி போற்றி, புராண காரண=புராதநமாகிய மூல காரணனே, போற்றி போற்றி=போற்றி போற்றி, சய சய=வெற்றி யுண்டாக வெற்றி யுண்டாக, போற்றி=போற்றி, எ - று.

திருச்சிற்றம்பலம்.

# திருச்சதகம்.

பத்திவைராக்கிய விசித்திரம்.

திருப்பெருந்துறையில் அருளிச்செய்யப்பட்டது.

## மெய்யுணர்தல்.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

மெய்தானரும்பிவிதிர்விதிர்த்துன்விரையார்கழற்கென்
கைதான்றலைவைத்துக்கண்ணீர்ததும்பிவெதும்பியுள்ளம்
பொய்தான்றவிர்ந்துன்னைப்போற்றிசயசயபோற்றியென்னும்
கைதானெகிழவிடேனுடையாயென்னைக்கண்டுகொள்ளே.

பதவுரை.

உடையாய் - உடையவனே, உன் - உனது, விரை ஆர் - மணம் நிறைந்த, கழற்கு - திருவடியைப் பெறும்பொருட்டு, என் - என்னுடைய, மெய் அரும்பி - உடல்பொடித்து, விதிர்விதிர்த்து - நடுநடுங்கி, கைதலைவைத்து - கைகளைச்சிரமேல் வைத்து, கண்நீர் ததும்பி - கண்களில் நீர்நிரம்பி, வெதும்பி - வாடி, உள்ளம் - மனமானது, பொய்தவிர்ந்து - பொய்யொழுக்கத்தினின்றுநீங்கி, உன்னை - உன்னை, போற்றி - போற்றி, சயசயபோற்றி - சயசயபோற்றி, என்னும் - என்று வழிபடுகின்ற, கை - ஒழுக்கத்தை, நெகிழவிடேன் - (அடியேன்) நழுவவிடேன் (ஆகையால்,) என்னை - எனது நிலைமையை, கண்டு - நோக்கி, கொள் - (என்னை) ஏற்றுக்கோடல் வேண்டும், எ - று.

## கருத்துரை.

உடையவனே! மணம் நிறைந்த உன் திருவடியைப்பெறும் பொருட்டு, என் மெய்முதலிய முக்கரணங்களாலும் உன்னைவழிபடுதலில் சோர்விலேன், ஆதலால் எனது நிலைமையை நோக்கி, என்னையேற்றுக் கொண்டருளல்வேண்டும் என்பது.

## விசேடவுரை.

மெய், கை, பொய், கை என்பவற்றை யடுத்து நிற்கும் தான் நான்கும், ஈற்றேகாரமும் அசைகள். மெய்தான் அரும்பி என்பதற்கு, மெய்தானாகவேயரும்பியென்றுரைத்தலும்பொருந்தும். பொய்யாகிய வுடம்பை மெய்யென்றது மங்கலவழக்கு. அரும்புதல் - பொடித்தல் (மயிர் சிலிர்த்தல்,) விதிர்விதிர்த்து என்னும் அடுக்கு மிகவும் நடுங்கியென்னும்பொருளது. கைதலைவைத்தலாவது - கைகூப்பிச் சிரமேல்வைத்தல் (அஞ்சலிசெய்தல்.) ததும்புதல் - வழிதல், ஒழுகுதலுமாம். வெதும்புதல் - உடம்பிளைத்தல். உள்ளம்பொய்தவிர்தலாவது - மனந்தூயராதல். உலகத்தாரை வஞ்சிக்கக்கருதி வெளிக்கு மெய்யன்பர்போல நடித்து மனத்தில் அன்பிலராகிய கூடாவொழுக்கத்தார்போலாது "வேர்க்குங் கண்ணீர் ததும்புங்கம்பித்து மெய்நடுங்கும், வார்த்தை நழுவு மனம் பதறும், கார்க்கதமாய்க், கார்துமுரோமாஞ்சலியாகுங்காதலித்தார்க், கேய்ந்த குணமாமிவையெட்டும்" என்றவாறே முக்கரணங்களாலும் வழிபடா நின்றேன் என்பார், "மெய்தானரும்பி—கொள்ளே" என்றருளினர். மெய் அரும்புதல், கைதலைவைத்தல், கண்ணீர்ததும்புதல், வெதும்புதல் என்பவை மெய்யின் தொழில் ஆதலாலும், உள்ளம் பொய்தவிர்தல் என்றது மனத்தின் தொழில் ஆதலாலும், போற்றி சயசயபோற்றிஎன்றது வாக்கின்தொழில் ஆதலாலும் முக்கரணவழிபாடும் பெறப்பட்டது. முக்கரண வழிபாட்டை வடநூலார் காயிகம் வாசிகம் மானசிகம் என்பர். விரையார்கழல் - அன்பரிட்ட நறுமலரான் வெறிகமழுங்கழல். இதனை, "விண்ணுஞ்செலவறியா வெறியார்கழல்" என்ற திருக்கோவைச் செய்யுளுரையிற்காண்க. போற்றி என்பது வணக்கம் என்னும் பொருளது. போற்றல் என்றது - வணங்கல், வாழ்த்தல், நினைத்தல் என்னும் முப்பொருளையும் உணர்த்தும் பொதுச்சொல். இன்னதை உடையாய் என்னாமையால், எல்லாப் பொருள்களையும் உடைத்தாதல்பெறப்படும். படவே முற்றுணர்ச்சி

முதலியனவுமுடையான் என்பது போதரும். போதரவே என்னுண்மை நிலையையும் நீயறிதியென்றாராயிற்று. விடேன்என்பதற்கு எழுவாயாகிய நான் என்பது வருவிக்கப்பட்டது. சயசய என்பது வெல்க வெல்க என்னும் பொருளது. இறைவனை உடையாய் என்றதனால் தம்மை உடைமை யென்றாருமாயினர். உன்விரையார் கழற்கு என்றது ஆன்மாக்களுக்கு இறைவன் திருவடியே புகலிடமாதலானென்க. "இறுமாந்திருப்பன்கொலோ, ஈசன்பல் கணத்தெண்ணப்பட்டுச், சிறுமானேந்தி தன் சேவடிக்கீழ்ச் சென்றங், கிறுமாந்திருப்பன்கொலோ" என்றற்றொடக்கத்தனவும் இக்கருத்துடையனவே.

கொள்ளேன்புரந்தரன்மாலயன்வாழ்வுகுடிகெடினும்
நள்ளேனினதடியாரொடல்லானரகம்புகினும்
எள்ளேன்றிருவருளாலேயிருக்கப்பெறினிறைவா
உள்ளேன்பிறதெய்வமுன்னையல்லாதெங்களுத்தமனே.

(ப-ரை.) இறைவா - இறைவனே, எங்கள் உத்தமனே-எங்கள் உத்தமனே, திருவருளாலே இருக்கப்பெறின் - யான் உன் திருவருளோடு கூடியிருக்கப்பெறுவேனாயின், புரந்தரன்மால் அயன்வாழ்வு - இந்திரன் திருமால் பிரமன் என்பவர்களுடைய வாழ்வையும், கொள்ளேன் - (ஒரு பொருளாக என் மனத்தில்) கொள்ளேன், குடிகெடினும் - என் குடிகெட்டாலும், நினது அடியாரொடு அல்லால் - உன் தொண்டரோடு கூடுவதன்றி, நள்ளேன் - (பிறரோடு) கூடேன். நரகம்புகினும் - நரகத்தில் புகப்பெறினும், எள்ளேன் - அதனை இகழேன், உன்னை அல்லாது - உன்னை நினைத்தலன்றி, பிறதெய்வம் - வேறு தெய்வங்களை, உள்ளேன் - நினையேன், எ-று.

(க-ரை.) இறைவனே! உத்தமனே! யான் உன் திருவருளோடு கூடியிருக்கப்பெறுவேனாயின், அத்திருவருட் பேற்றின்பலத்தால் இந்திரன் முதலானோரது பெருவாழ்வையுமதியேன். என் குடிகெட்டாலும் உன் தொண்டரோடன்றி வேறொருவரோடுகூடேன். நரகம்புகப்பெறினும் அதனையிகழேன். உன்னைநினைத்தலன்றிப்பிறதெய்வங்களை நினையேன் என்பது.

(வி - ரை.) இறைவன் - தலைவன் (இறைமைத்தன்மையுள்ளவன். அதாவது இயங்குதிணை நிலைத்திணை என்னும் இருவகையுயிர்களையும் தோற்றிக்காத்தழித்துத்திரோபவிப்பித்து அநுக்கிரகிக்க

வல்லனாய்த் தானொருமுதற்பொருளா யிருத்தல்.) உத்தமன் - பெரியோன், உத்-தமன் - என்றிரண்டு சொல்லாகப்பிரித்துத் தாண்டப்பட்ட தமத்தையுடையவன் எனப்பொருள்கூறுவர் வடநூலார். உத் - தாண்டுதல், தமன் இருளையுடையவன். தமம் - இருள். தமத்தைக்கடந்தவன் என்றபடி, அதாவது மூலப்பகுதியாகிய இருளைக் கடந்தவன் எனக்கொள்க. புரந்தரன் மால் அயன்வாழ்வு என்பதனீற்றில் உயர்வு சிறப்பும்மைதொகுத்தல். இந்திரன்முதலிய இறையவர் வாழ்வையும் மதியேன் என்கையால் மற்றையர்வாழ்வை மதியாமை சொல்லாமேயமையும். குடிகெடினும் நரகம்புகினும் என்பவற்றீற்றும்மைகள் இழிவுசிறப்பு. திருவருட்பேற்றின் அருமை தோன்றத், "திருவருளாலே யிருக்கப்பெறின்" என்றார். காயமும் வாக்கும் மனத்தின் வழியவாகலான், "உள்ளேன் பிறதெய்வம்" என மனத்தின் றொழிலைக்கூறினார். கூறினாரேனும் இனம்பற்றிக் காயத்தால் வணங்கேன், வாக்கினால் வாழ்த்தேன், என்பனவுங்கொள்க. குடி - குடும்பம் (வமிசம்.) (௨)

உத்தமனத்தனுடையானடியேநினைந்துருகி
மத்தமனத்தொடுமாலிவனென்னமனநினைவில்
ஒத்தனவொத்தனசொல்லிடவூரூர்திரிந்தெவரும்
தத்தமனத்தனபேசவெஞ்ஞான்றுகொல்சாவதுவே.

(ப - ரை.) உத்தமன் - உத்தமனும், அத்தன் - அத்தனும், (ஆகிய)உடையான் - உடையவனது, அடியே - திருவடியையே, நினைந்துஉருகி - மனத்தால் நினைந்து உருகி, மத்தமனத்தொடு - உன்மத்தங்கொண்டமனத்துடன், இவன்மால் என்ன - இவன் மயக்கங்கொண்டவன் என்று, மனநினைவில் ஒத்தன ஒத்தன - மனக்கருத்தில் தோன்றின தோன்றினவற்றை, சொல்லிட - கண்டோர்சொல்லவும், ஊர்ஊர் திரிந்து - ஊர்கள்தோறும் திரிந்து, எவரும் - அவ்வூர்களிலுள்ள எல்லாரும், தத்தமனத்தனபேச - தத்தம்மனத்திற் றோன்றினவற்றைச் சொல்லவும், சாவது - (அவற்றைக்கேட்டு) யானிறக்கப்பெறுவது, எஞ்ஞான்றுகொல் - எந்நாளோ (அறியேன்.) எ-று.

(க - ரை.) உத்தமனும் அத்தனுமாகிய உடையவனது திருவடியையே நினைந்துருகி, உன்மத்தங்கொண்ட மனத்தோடு, இவன் பித்தனென்று உலகத்தார் சொல்லக்கேட்டு நான் செயலற்றிருப்பது எந்நாளோ என்பது.

(வி - ரை.) அத்தன் - எல்லாவுயிர்களுக்கும் தந்தை. அத்தம்-பொருள்எனக்கொண்டு எல்லாப்பொருள்களையுமுடையவன் எனினும், சகலவேதாகமப்பொருளாயிருப்பவன் எனினும், அத்தம் - பொன் எனக்கொண்டு எனக்குப் பொற்குவையாயிருப்பவன் எனினும்பொருந்தும். அடியே என்ற தேற்றேகாரம் மேற்பாட்டில் "உன்விரையார்கழற்கு" என்றதைவற்புறுத்தவந்தது. நினைந்து என்றது நினைந்துருகியென்றதற்கேற்ப மத்தமனம் என்றார். மால்-மயக்கம். இது மயக்கமுடையவனை யுணர்த்தியது. மயக்கமுடையவன் - பித்தன். மனநினைவிலொத்தன வொத்தனசொல்லிட என்றது- தம்மூரவர்பேசும் பேச்சை. தத்தமனத்தன பேசஎன்றது - பிறவூர்கள்தோறுமுள்ளார் பேசும்பேச்சை. சாதலாவது - செயலற்றிருத்தல். (ட)

சாவமுன்னாட்டக்கன்வேள்வித்தகர்தின்றுநஞ்சமஞ்சி
யாவவெந்தாயென்றவிதாவிடுநம்மவரவரோ
மூவரென்றேயெம்பிரானொடுமெண்ணிவிண்ணாண்டுமண்மேல்
தேவரென்றேயிறுமாந்தென்னபாவந்திரிதவரே.

(ப - ரை.) முன்நாள்-முற்காலத்தில், தக்கன்-தக்கன், சாவ - இறக்க, வேள்வித்தகர் தின்று - அவன்செய்த யாகத்தகரையுண்டு, நஞ்சம்அஞ்சி - (பாற்கடலிற்பிறந்த) விஷத்துக்கஞ்சி, ஆவ-ஐயோ, எந்தாய் என்று - எமக்குத் தந்தையேயென்று, அவிதாஇடும் - முறையிட்ட, நம்மவர்அவரே - நமர்தாமோ, எம்பிரானொடும் - எம்பெருமானொடும், மூவர் என்று எண்ணி - மூவர் என்று எண்ணப்பட்டு, விண் ஆண்டு - தத்தமக்குரிய விண்ணுலகங்களையாண்டு, மண்மேல்-மண்ணுலகத்தினும், தேவர் என்று - தேவர்கள் என்று சொல்லப்பட்டு, இறுமாந்து - இறுமாப்படைந்து, திரி - திரிகின்ற, தவர்-தலைவர்கள், என்னபாவம் - இது என்னபாவம், எ-று.

(க - ரை.) முற்காலத்தில் தக்கன் இறக்க, அவன் செய்த யாகத்தகரையுண்டு, பாற்கடலிற் றோன்றின நஞ்சையஞ்சி, எந்தையே! என்று முறையிட்ட நம்மவர்கள்தாமோ, எம்பிரானோடு மூவர் என்று எண்ணப்பட்டு, தத்தமக்குரிய விண்ணுலகங்களை யாண்டு, மண்ணுலகத்தினும் தேவரென்று சொல்லப்பட்டு இறுமாப்படைந்து திரிகின்ற தலைமைப்பாடுடையவர்கள், இதென்னபாவம் என்பது.

(வி - ரை.) தக்கன்வேள்வி முன்னாள் சாவஎன நிறுத்தி, தக்கனும் அவனால் செய்யப்பட்ட யாகமும் முற்காலத்தில் அழிய எனப்

பொருள்கூறினு மமையும். தகர் என்பது, இங்கு ஆடு என்னுந் தன் பொருளை யுணர்த்தாது பசுவை யுணர்த்திற்று. வேள்வித்தகர்-யாக பசு. நஞ்சம் அஞ்சி என்பதற்கு-நஞ்சத்தையஞ்சி, நஞ்சத்துக்கஞ்சி என்றிரண்டனுருபும் நான்கனுருபும் விரித்துரைத்துக் கோடலமையு ம். ஆவ-இரக்கக் குறிப்புச்சொல். அவிதாஇடுதல்-முறையிடுதல். நம் மவரவரே-என்பதில் ஈற்றேகாரம் இழிவைச் சிறப்பிக்கவந்த வினா. மூவரென்றே யெம்பிரானொடுமெண்ணி என்றகுறிப்பால், நம்மவ ரவர், திரிதவர், என்றது-பிரமன் விட்டுணு என்பவர்களை. விண் என்றது - விண்ணுலகங்களுக்காயிற்று. இது இடவாகுபெயர். அவ் வுலகங்கள் சத்தியலோகம் முதலியன. இறுமாத்தல் - அகங்கரித் தல். வேள்வித் தகர்இன்று என்றது - யாகபசுவை அவிசுடனுண்ட தைக்குறித்தது. (சு)

தவமேபுரிந்திலன்றண்மலரிட்டுமுட்டாதிறைஞ்சேன்
அவமேபிறந்தவருவினையேனுனக்கன்பருள்ளாம்
சிவமேபெறுந்திருவெய்திற்றிலேனின்றிருவடிக்காம்
பவமேயருளுகண்டாயடியேற்கெம்பரம்பரனே.

(ப-ரை.) பரம்பரனே - கடவுளே, அவமேபிறந்த - வீணாகவே பிறந்த, அருவினையேன்-தொலைத்தற்கரிதாகிய தீவினையையுடையே னாகிய நான், தவம்புரிந்திலன் - தவஞ்செய்திலேன், முட்டாது- குறையாமல், தண்மலர்இட்டு-தண்ணியமலர்களால் உன்னை அருச்சி த்து, இறைஞ்சேன்-வணங்கேன், உனக்கு அன்பர்உள்ஆம் - உன்னி டத்தன்பு செய்யும் அடியாரூடு கலத்தலாகிய, சிவமேபெறும்திரு- மங்களகரத்தையுடைய செல்வத்தை, எய்திற்றிலேன் - அடைந்தி லேன் (இனியாயினும்,) அடியேற்கு-தொண்டனேனுக்கு, நின்திரு வடிக்கு ஆம் பவமே - உன்திருவடிக் காளாதற்குரிய பிறப்பையே, அருள்-நீ அருள்செய்யவேண்டும், எ - று.

(க - ரை.) தவமுதலியவற்றைச் செய்யாமைக்குரிய பயனில் பிறவிபிறந்தே னாதலால் இனியாயினும் உன்திருவடிக் கன்புசெய்த ற்குரிய பிறவியை அடியேனுக்கு அருள் செய்யவேண்டும் என்பது.

(வி - ரை.) தவமாவது-மனம்பொறிவழியே செல்லாது நிற்ற ற்பொருட்டு, விரதங்களான் உண்டிசுருக்கல், கோடைக்காலத்து வெ யில் நிலைநிற்றல், மாரிக்காலத்தும் பனிக்காலத்தும் நீரில் நிலைநிற்

றல் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம்முயிர்க்குள வாகுந் துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்களைக் காத்தல். இதனை "உற்றநோய் நோன்றலுயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற்குரு." என்னுந்திருக்குறளானுணர்க. தண் என்றது, சாதியடை. முட்டாது மலரிடுதலாவது, சங்கற்பித்துக்கொண்ட தொகையிற் குறையாதனவும் மாசற்றனவும் ஆகிய மலர்களால் அருச்சித்தல். முட்டாது இறைஞ்சலாவது, விதிப்படி எட்டுறுப்பும் நிலந்தோய வீழ்ந்து வணங்கல். அன்பருள்ளாம் சிவமேபெறுந் திருவெய்தலாவது, அடியார் நடுவுளிருத்தலாகிய மங்களகரத்தையுடைய பெருஞ் செல்வத்தை யடைதல். தவம் முதலியவற்றைச் செய்யாமையால் அவமேபிறந்த அருவினையேன் என்றார். பரம்பரன்-தொன்றுதொட்டுள்ளோன், மிக்கமேன்மையுடையோன் எனினுமமையும். (ரு)

பரந்துபல்லாய்மலரிட்டுமுட்டாதடியேயிறைஞ்சி
இரந்தவெல்லாமெமக்கேபெறலாமென்னுமன்பருள்ளம்
கரந்துநில்லாக்கள்வனேநின்றன்வார்கழற்கன்பெனக்கு
நிரந்தரமாயருளாய்நின்னையேத்தமுழுவதுமே.

(ப - ரை.) பரந்து - பரம்பி, பல் - பலவாகிய, ஆய்மலர்-ஆராய்ந்தெடுத்த மலர்களைக்கொண்டு, இட்டு-அருச்சித்து, அடியே-உன் திருவடியையே, முட்டாது இறைஞ்சி-விதிமுறையிற் குறையாமல் வணங்கி, இரந்த எல்லாம் - வேண்டுவன வெல்லாம், பெறல்-பெறுதல், எமக்குஆம் - எமக்குக்கூடும், என்னும் - என்கிற, அன்பர் - அன்பரது, உள்ளம் - மனத்தில், கரந்துநில்லா-மறைந்து நில்லாத, கள்வனே - கள்வா, முழுவதும்-என்வாணாள் முழுதும், நின்னையேத்த, உன்னைத்துதிக்க, நின்றன் - உன்னுடைய, வார்கழற்கு-நெடியகழலையணிந்த திருவடிக்கு, நிரந்தரமாய் - எப்பொழுதும், அன்பு-அன்புசெய்தலை, எனக்கு - அடியேனுக்கும், அருளாய் - அருள்புரிவாயாக, எ - று.

(க - ரை.) அன்பருள்ளத்து வெளிப்பட்டு நிற்பாயாதலால் எனக்கும் உன் திருவடிக் கன்புசெய்யக் கருணைபுரிய வேண்டும் என்பது.

(வி - ரை.) பரத்தல் - பரம்பிநிற்றல். ஆய்மலர்என்றது* "எடுத்து—ஆகமமே" என்றபடியே மலர்களுள் நிஷேதிக்கப்பட்ட மலர்

* புட்பவிதி கஙு - வது செய்யுள்.

களாகிக்கிக் கொள்ளப்பட்டனவும் * "வில்வமுடன் கொன்றைமலர் சங்கரற்கு நேயம்" என்றபடி இறைவனதுளத்துக்குவப்பா யிருப்பனவுமாகிய மலர்களை. அன்பருள்ளங் கரந்துநில்லா என்றமையால், அன்பரல்லாதா ருள்ளத்திற் கரந்து நிற்றல் பெறப்படு மாதலாலும், அன்பருள்ளத்து வெளிப்பட்டு நிற்றலும் அன்பரல்லாதா ருள்ளத்து மறைந்து நிற்றலுமாகிய இரண்டுதன்மையுண்மையானும், கள்வனே யென்றார். துதித்தற்கு அன்புகாரணமாதலால் "நின்றன் வார்கழற்கன் பெனக்கு நிரந்தரமாயருளாய் நின்னையேத்த முழுவதுமே" என்றும், முழுவதும் என்றதற்கேற்ப நிரந்தரமாய் என்றும் திருவாய்மலர்ந்தருளினர். கழல் - ஆடவர் கொடையாலும் வீரத்தாலும் காலிலணியும்பூண். இறைவனுக்குஅருட்கொடையும், அடுத்தாைப் பல் பிறவித்தொகையாகிய பகையைவென்று ஆட்கோடலாகிய வீரமுங்கொள்க. அன்பருள்ளங்கரந்து நில்லாது வெளிப்பட்டுநிற்பவனுதலாலும் அன்பிருந்தால் என்னுள்ளத்தும் நீ வெளிப்பட்டு நிற்பாயென்பதும் தோன்ற, "அன்பருள்ளங்கரந்துநில்லாக் கள்வனே, நின்றன்வார்கழற் கன்பெனக்கு நிரந்தரமாயருளாய்" என்றார். எனக்கு என்பதனீற்றில் இழிவு சிறப்பும்மை தொக்கது.

முழுவதுங்கண்டவனைப்படைத்தான்முடிசாய்த்துமுன்னாள்
செழுமலர்கொண்டெங்குந்தேடவப்பாலனிப்பாலெம்பிரான்
கழுதொடுகாட்டிடைநாடகமாடிக்கதியிலியாய்
உழுவையின்றோலுடுத்துன்மத்தமேல்கொண்டுழிதருமே.

(ப - ரை.) முழுவதும் - எல்லாப் பொருள்களையும், கண்டவனை - சிருட்டி செய்தவனுகிய பிரமனையும், படைத்தான் - தன் உந்திக்கமலத்துத் தோற்றுவித்த திருமால், முன்னாள் - முற்காலத்தில், முடிசாய்த்து - தலையைவளைத்து, செழுமலர்கொண்டு - செழுமையாகிய மலர்களைக் கைக்கொண்டு, எங்கும்தேட - எவ்விடத்தும் தேடாநிற்க, அப்பாலன் - அப்பாலாயிருந்தவனுகிய, எம்பிரான் - எம்பெருமான், இப்பால் - இவ்விடத்தில், காட்டிடை - மயானத்தில், கழுதொடு - பேய்களோடு, நாடகம் ஆடி - கூத்தாடி, கதிஇலியாய் - ஆதாரமில்லாதவனாய், உழுவையின்தோல்உடுத்து - புலித்தோலைத்தரித்து, உன்மத்தம் மேல்கொண்டு - உன்மத்தத்தை மேற்கொண்டு, உழிதரும் - திரியாநிற்பன், ஏ - இஃதோர் வியப்பிருந்தவாறென்னை, எ - று.

* புட்பவிதி உஎ - வது செய்யுள்.

(க - ரை.) திருமால் மலர்களைக்கொண்டு தேடியும் அறியவொண்ணாதவன், மயானத்தில் பேய்களோடு நடித்துத் திரிகின்றான், இதென்ன வியப்பு என்பது.

(வி - ரை.) முழுவதும் என்றது சராசரத் மசமாகிய உயிர் முதலானவற்றை. காண்டல்-சிருஷ்டித்தல். முழுவதும் கண்டவனை என்பதனீற்றில் உயர்வு சிறப்பும்மை தொகுத்தல். ஏற்றேகாரம் வியப்பின்கண்வந்த இடைச்சொல். வியப்புக்குக் காரணம் திருமால் தேட மறைந்திருந்தவன், இவ்வுலகத்துச் சிறுமனிதர் காணக்காட்டிடைக் கழுதொடு நடித்தல். பட்டாடை முதலிய உடையனல்லாமையேயன்றி, நூலாடையுமுடையனல்லானாய்ப் புலித்தோலையுடையவனாயிருத்தலால், "கதியிலி யாயுழுவையின்றோ லுடுத்துன்மத்த மேல்கொண்டுழிதருமே" என்றார். உன்மத்தமேற்கொண்டவனாதலானன்றே சர்வ சிருஷ்டிகளாகிய பிரமனையுந் தன் னுந்திக்கமலத்துத் தோற்றுவித்த பெரியோனாகிய திருமாலருச்சிக்கத் தேட மறைந்து, இவ்விடத்துச் சிறுமானிடர் காணும்படி காட்டிடைக் கழுதோடாடுவது. இடுகாடு, சுடுகாடு என்னும் இரண்டு மடங்கக் காட்டிடை என்றார். (எ)

உழிதருகாலுங்கனலும்புனலொடுமண்ணும்விண்ணும்
இழிதருகாலமெக்காலம்வருவதுவந்ததற்பின்
உழிதருகாலத்தவுன்னடியேன்செய்தவல்வினையைக்
கழிதருகாலமுமாயவைகாத்தெம்மைக்காப்பவனே.

(ப - ரை.) உழிதருகாலும் - உழலாநின்ற காற்றும், கனலும்- நெருப்பும், புனலொடு - நீரோடு, மண்ணும் விண்ணும் - பூமியும் ஆகாயமும், இழிதருகாலம் - அழிகின்ற சர்வசங்காரகாலம், எக்காலம் வருவது - எந்நாள் உண்டாவது, வந்தசற்பின் - அது உண்டானபின்னும், உழிதருகாலத்த-நிலைத்திருக்கிற காலதத்துவத்தையுடையவனே, தருகாலமுமாய் - உண்டாக்கப்பட்ட காலதத்துவமுமாகி, அவைகாத்து - அவற்றைக்காத்து, எம்மை காப்பவனே - எம்மையும் காப்பவனே, உன் அடியேன் செய்த - உன் தொண்டனேன்செய்த, வல்வினையை – வலியவினைப்பயன்களை, கழிதரு - கழித்தருளல்வேண்டும், எ - று.

(க - ரை.) பிரபஞ்சத் தோற்றவொடுக்கங்களுக்கு முன்னும் பின்னு முள்ளவனாகிய உனக்கு என் வல்வினையைக் கழித்து என்னைக்காத்தருளல் அரிதன்றென்பது.

(வி - ரை.) காற்றுக்குச் சலநசர்மமும், சதாகதி யென்னும் பெயரும் உண்மையால், ஊழிதருகால், என்றார். கனலுந்தொழி லுடையதைக் கனல் என்றது முதனிலைத்தொழி லாகுபெயர். ஐம்பெரும்பூதங்களைக் கூறவே அவற்றாலாகிய சராசராத்மகமான பிரபஞ்சமெல்லாம் அடங்கு மாதலாலும், இவையழியுங்காலம் சர்வ சங்காரகாலமாதலாலும், அது வந்தபின்னும் உளதாயிருக்கிற கால தத்துவத்தையும் நியமித்திருப்பவன் இறைவனாதலாலும், "ஊழிதரு காலும்—காலத்த" என்றார். உழிதருகால் அத்த என்பதற்கு, நிலை பெற்றிருக்குந் திருவடியையுடைய அத்தனே என்றும் பொருள் கூறலாம். உழிதரு என்பது ஒருசொல். இதற்குப் பகுதி உழிதா. பிரபஞ்சத் தோற்றத்துக்கு முன்னும், அதன் ஒடுக்கத்துக்குப் பின் னும், இறைவனுளனாதலால் இவ்வாறு கூறலாயிற்று. "மூப்பானிளை யவன் முன்னவன் பின்னவன்" என்பது திருக்கோவையார். (அ)

பவனெம்பிரான்பனிமாமதிக்கண்ணிவிண்ணோர்பெருமான்
சிவனெம்பிரானென்னையாண்டுகொண்டானென்சிறுமைகண்டும்
அவனெம்பிரானென்னநானடியேனென்னவிப்பரிசே
புவனெம்பிரான்றெரியும்பரிசாவதியம்புகவே.

(ப - ரை.) பவன் எம்பிரான் - பவன் என்னுந் திருநாமத்தை யுடைய எம்பிரான், பனிமாமதிக்கண்ணி - குளிர்ந்தழகிதாகிய கலை மாலையையணிந்த, விண்ணோர் பெருமான் - தேவர்பெருமான், சிவ ன்எம்பிரான் - சிவன் என்னுந் திருநாமத்தையுடைய எம்பிரான், புவன் எம்பிரான் - புவனாகிய எம்பிரான், என் சிறுமைகண்டும்-என் இழிவையறிந்தும், அவன் எம்பிரான் என்ன - கண்டோர் அவன் எம்மிறைவனெனவும், நான் அடியேன் என்ன - நான் அடியவன் என்னவும், என்னை ஆண்டுகொண்டான் - என்னை ஆண்டுகொண்ட ருளினான், இப்பரிசு - இந்தப்பிரகாரத்தை, தெரியும் பரிசுஆவது - தெரிந்துகொள்ளும் வழியாவதனை, இயம்புக - சொல்லுக, எ-று.

(க - ரை.) எல்லாப்பொருள்களுக்கு முதற்காரணனாய்த் தேவ ர்பெருமானா யிருப்பவன், என்சிறுமை கருதாது என்னை ஆட்கொண் டமைக்குக் காரணம்யாதோ நீவிர் கூறுவீராமின் என்பது.

(வி - ரை.) பவன் - எல்லாப் பொருள்களுக்கும் பிறப்பிடமா யுள்ளவன். சிவன் - மங்களகரன், புவன்-ஸ்வயம்பு, தானேயுண்டா

யிருப்பவன் - இதுவேயுமன்றி எக்காலத்தும் குன்றாத பொலிவை யுடையவன் எனவும், எல்லாவற்றையும் தோன்றுவிப்போன் எனவும் கூறுவர். மதி, இவ்விடத்து ஒரு கலையாகிய திங்களுக்காயிற்று இறைவன் திருமுடிமே லணியப்பட்டிருப்ப ததுவேயாதலால். இது, "தாரென்ன வோங்குஞ் சடைமுடிமேற் றனித்திங்கள் வைத்த, காரென்ன வாருங்கறைமிடற் றம்பலவன்" என்னுந் திருக்கோவையாருரையானும் இனிது விளங்கும். மதி, மலர்மாலைபோல விளங்கிருத்தலால் கண்ணியென்றார். விண்ணோர் பெருமான் ஒருசொல். இயம்புக என்பது - வியங்கோளாதலால் நீவிர் சொல்லுக என அறிஞரை நோக்கிக் கூறினதாகக்கொள்க. பிரான்-உபகாரசீலன். சீலம்-குணம், உபகாரகுணம் இவ்விடத்தென்னெனின், எல்லாப்பொருள்கட்கும் பிறப்பிடமாயிருத்தலும் சிறுமை கண்டும் ஆட்கோடலுமாம். (கூ)

புகவேதகேனுனக்கன்பருள்யானென்பொல்லாமணியே
தகவேயெனையுனக்காட்கொண்டதன்மையெப்புன்மையரை
மிகவேயுயர்த்திவிண்ணோரைப்பணித்தியண்ணாவமுதே
நகவேதகுமெம்பிரானென்னைநீசெய்தநாடகமே.

(ப - ரை.) என் பொல்லாமணியே - என் பொள்ளாமணியே, யான் - நான், உனக்கு அன்பர்உள் - உன்னிடத் தன்புசெய்வாராகிய அடியார்நடுவே, புகவே தகேன் - நுழையவே தகுதியில்லேன், என்னை - அத்தன்மையனாகிய என்னை, உனக்கு ஆட்கொண்ட தன்மை - உனக்கு அடிமைகொண்ட தன்மை, தகவே-தகுதியோ, (அன்றுஆயினும் நீசுதந்திரனாதலால்,) எப்புன்மையரை - எந்நிலைப்புல்லியோரையும், மிகவே உயர்த்தி - மிகவும் உயரச்செய்கின்றனை, விண்ணோரைப் பணித்தி - (மேன்மையுடையோராகிய) தேவரையும் தாழ்த்துகின்றனை, அண்ணா-அத்தனே, அமுதே-அமிர்தமே, எம்பிரான் - எம்பிரானே, என்னை நீசெய்த நாடகம் - என்னை நீசெய்த கூத்து, நகவே தகும் - நகைத்தற்கே தகுதியாயிருக்கின்றது, எ-று.

(க - ரை.) இறைவனே, உன்னன்பர் குழாத்திடைப் புகவுந் தகுதியில்லாத என்னை நீயே யாட்கொண்டவாற்றை நோக்கின் நகுந் தகுதியதாயிராநின்றது என்பது.

(வி - ரை.) பொள்ளல் - தொளைத்தல், பொள்ளாமணி - தொளைக்காதமணி, (முழுமணி.) இது வடநூலார் மதம்பற்றி பொல்லா

மணியென வந்தது. மணியென்பது - நவமணிகட்கும் பொதுவாயினும் இங்கு மாணிக்கத்தை யுணர்த்திற்று. "சூளாமணி யும்பர்க் காயவன்" என்னுந் திருக்கோவையார் - சஎ - ம் செய்யுளுரையில் மணியென்பதற்கு மாணிக்கம் எனப் பொருள் கூறியிருத்தல்காண்க. மணி முன்றானையில் முடிந்தாளலாம்படி எளிதாயிருத்தல்போலத் தமக்கு மிகவும் எண்மையனு யிருத்தலால் இறைவனை மணியென்றார். புகவே என்பதில் ஏகாரம் இழிவு சிறப்பும்மைப்பொருள் குறித்து வந்தது. அன்றி இகழ்ச்சிக்குறிப் புணர்த்தவந்ததெனினும் பொருந்தும். தகவேயென்பதில் ஏகாரம் தேற்றமெனினும் அமையும். அண்ணு அமுதே என்பதற்கு, சார்தற்கரிய அமுதமே யென்றலுமாம். தாழ்ந்ததை யுயர்த்தலும் உயர்ந்ததைத் தாழ்த்தலும் இறைவனது சுதந்திர குணத்தினியல்பென்க. அங்ஙனமாயினும் தம்மைத் தாழ்ந்தாரிற் றாழ்ந்தாராக மதித்து "நகவேதகு மெம்பிரானென்னை நீசெய்த நாடகமே" என்றார். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# அறிவுறுத்தல்.

தரவுகொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

நாடகத்தா லுன்னடியார்போ னடித்துநானடுவே
வீடகத்தேபுகுந்திடுவான்மிகப்பெரிதும்விரைகின்றேன்
ஆடகச்சீர்மணிக்குன்றேயிடையறாவன் புனக்கென்
னூடகத்தேநின்றுருகத்தந்தருளெம்முடையானே.

(ப - ரை). நான் - நான், நாடகத்தால் - கூத்தாட்டால், உன் அடியார் போல் – உன்மெய்த்தொண்டர் போல, நடுவே - அவர்களுக்கிடையே, நடித்து – நடனஞ்செய்து, வீடு அகத்தே புகுந்திடுவான் - முத்தியுலகத்திற் புகுதற்கு, மிகப்பெரிதும் விரைகின்றேன்- மிகப்பெரிதாகவும் விரையாநின்றேன், (ஆதலால்) சீர் – சிறப்புவாய்ந்த, ஆடகக்குன்றே – பொன்மலையே, மணிக்குன்றே – மாணிக்கமலையே, எம் உடையானே - எம்மை உடையவனே, உனக்கு – உன்னிடத்து, இடையறா அன்பு - இடையறாத அன்பு, என் அகத்தூடு-

என் மனத்தூடு, நின்று - நிலைத்துநின்று, (அதனால்) உருக -என் மன முருகும் வண்ணம், தந்தருள் - கிருபைசெய்தருள்வாயாக, எ - று,

(க - ரை.) யான் உன்னிடத்தன்பிலேனாயிருந்தும், உன்மெய் யன்பர்போல நடித்து முத்தியுலகிற் புகவிரைகின்றேன், அதற்கேற்ப இனியேனும் உன்னிடத்தன்பு செய்தலை எனக்கருள்புரியவேண்டும் என்பது.

(வி - ரை). நாடகத்தால் என்பதற்கு நாட்டினுள் என்றுரைப் பினும் பொருந்தும். நாடு - உலகம் எனக்கொள்க. நடித்தல் - அபி நயித்தல். புகுந்திடுவான் என்பதில், வான் வினையெச்சவிகுதி. குன்றே என்பதை ஆடகத்தோடும் மணியோடும் இயைத்துக்கொள்க. ஆடகம், நால்வகைப்பொன்னுள்ஒன்று. நால்வகைப் பொன்றாவன— ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம் என்பன. மணி- இங்கு மாணிக்கத்தை யுணர்த்திற்று. என் ஊடகத்து என்பதனை என் அகத்தூடு என மாறுக. வீட்டகத்தே யெனற்பாலது, வீட கத்தே யென நின்றது "காடகம் புகுவார்க்கே யோடுமென் மனனே காண்" என்பதுபோல. (கக)

யானேதும்பிறப்பஞ்சேனிறப்பதனுக்கென்கடவேன்
வானேயும்பெறில்வேண்டேன்மண்ணாள்வான்மதித்துமிரேன்
தேனேயுமலர்க்கொன்றைச்சிவனேயெம்பெருமானெம்
மானேயுன்னருள்பெறுநாளென்றென்றேவருந்துவனே.

(ப - ரை.) யான் - நான், ஏதும் — சிறிதும், பிறப்பு அஞ் சேன் - பிறவியை யஞ்சேன், இறப்பதனுக்கு - இறப்புக்கு, என் கடவேன் - என் செய்யக்கடவேன், வானேயும் பெறில் வேண் டேன் - விண்ணுலகத்தாட்சியையும் பெறலாயிருப்பின் விரும்பேன், மண் ஆள்வான் - மண்ணுலகத்தையாள, மதித்தும் இரேன் - நினைத் துமிரேன், தேன் எயும் - தேன் பொருந்திய, மலர்க்கொன்றை- கொன்றைமலர் மாலையைத்தரித்த, சிவனே - சிவபெருமானே, எம்பெருமான் - எம்பெருமானே, எம்மானே - எம்பெரியோனே, உன் அருள் பெறும் நாள் - உன் திருவருளைப் பெறுங்காலம், என்றே என்று - எக்காலமோவென்று, வருந்துவன் - வருந்து வேன், எ - று.

(க - ரை.) யான் பிறப்புத்துன்பத்தினை யஞ்சேன் - இறப் புத்துன்பத்தினுக் கென்செய்யக் கடவேன், மண்ணுலக வாட்சியை

யும் விண்ணுலக வாட்சியையும் மதியேன். உன் திருவருட்குரித் தாகுங்கால மெக்காலமோ வென்று வருந்தா நின்றேன். ஆதலால் என் பிறப்பிறப்புக்களை யொழித்தருளவேண்டு மென்பது.

(வி - ரை.) பிறப்புத்துன்பத்தினும் இறப்புத்துன்பம் மிக்க தாதலால் "யானேதும் பிறப்பஞ்சேனிறப்பதனுக் கென்கடவேன்" என்றார். அது, "இந்த மாவிறப்பிற்றுன்பம் பவத்துன்பத் தெண் மடங்கே" என்பதனால் இனிது விளங்கும். எம்மான் என்பதில் மான் என்பது மஹான் என்னும் வடமொழிச்சிதைவு. என்று என்றே யென்பதை என்றே யென்று என மாறுக. என்றே யென்னும் ஏகாரம் ஐயம். (சஉ)

வருந்துவனின்மலர்ப்பாதமவைகாண்பானுயடியேன்
இருந்துநலமலர்புனையேனேத்தேனுத்தழும்பேறப்
பொருந்தியபொற்சிலைகுனித்தாயருளமுதம்புரியாயேல்
வருந்துவனற்றமியேன்மற்றென்னேநானுமாறே.

(ப - ரை.) வருந்துவன் - வருந்துதலொன்றனையே செய்யாநின் றேன், நின்மலர்ப்பாதம் அவைகாண்பான் - உன் தாமரைமலர்போ லும் பாதங்களாகிய அவற்றைக் காணும்பொருட்டு, நாய் அடியேன் - நாய்போலும் அடியனேன், இருந்தும் - வருந்தியிறவாதிருந்தும், நல் லமலர் புனையேன் - நன்மையாகிய மலர்களைச் சூட்டேன், நா தழும்பு ஏற - நாவில்தழும்புண்டாகும்படி, ஏத்தேன் - உன்னைத் துதியேன், பொருந்திய - உன் கைக்கிசைந்த, பொன்சிலை குனித்தாய் - பொன் னுலியன்ற வில்லைவளைத்தவனே, அருள் அமுதம் புரியாயேல் - உன் திருவருளாகிய அமிர்தத்தைக் கிருபைசெய்யாயாயின், நல்தமியேன் - மிகவும் தமியனேன், வருந்துவன் - வருந்துவேன், (அவ்வளவே யன்றி) நான் ஆம் ஆறு - நான் உனக்குரியனும் வகை, மற்று என் - வேறுயாது, எ - று.

(க - ரை.) தமியேன் உன் மலர்ப்பதங்காண்டற்கு மலர் சூட் டுதல் செய்யேன், நாத்தழும்புபடத் துதியேன், இது காரணமாக நீ உன்னருளமுதத்தைக் கிருபைசெய்யாயாயின், நான் வருந்துதலே யன்றி உனக்காளாம் வகை மற்றியாது என்பது.

(வி - ரை.) மலர்ப்பாதம் என்பதில், மலர் தாமரைமலருக்கா யிற்று, பாதத்துக்கு உவம மாவதுவே யாதலால், "பொன்வண்ண

மெய்வண்ண மவ்வண்ணமேனி" "பொன்னார்மேனியனே" "பொன் பனைத் தன்னவிறை" என்றிறபடியே பொன்மேனியனாதலால் பொற்சிலை குனித்தலே பொருத்தமுடைத்தென்பார் "பொருந்திய பொற்சிலை குனித்தாய்" என்றார். நல்தமியேன் என்பதில் நன்மை மிகுதிக்காயிற்று. (கந)

ஆமாறுன் றிருவடிக்கேயகங்குழையேனன்புருகேன்
பூமாலைபுனைந்தேத்தேன்புகழ்ந்துரையேன்புத்தேளிர்
கோமானின் றிருக்கோயிறூகேன்மெழுகேன்கூத்தாடேன்
சாமாறேவிரைகின்றேன்சதுராலேசார்வானே.

(ப - ரை.) சதுராலே சார்வானே - அறிஞரது சதுரப்பாட்டினால் அடையப்படுவோனே, உன் திருவடிக்கே ஆம் ஆறு - உன் திருவடிக்கே ஆளாம்வண்ணம், அகம் குழையேன் - மனங்குழையேன், அன்பு உருகேன் - அன்பினால் உருகேன், பூமாலை புனைந்து ஏத்தேன் - பூமாலையைச்சூட்டித் துதியேன், புகழ்ந்து உரையேன் - புகழ்ந்து சொல்லேன், புத்தேளிர் கோமான் - தேவர்பெருமானாகிய, நின் - உனது, திருக்கோயில் - திருக்கோயிலை, தூகேன் - திருவலகு செய்யேன், மெழுகேன் - மெழுகுதலைச் செய்யேன், கூத்துஆடேன் - கூத்தாடலைச் செய்யேன், (மற்று நான் செய்வது என்னெனின்) சாம்ஆறே - இறக்கும்வழியிலே, விரைகின்றேன் - துரிதப்படுகின்றேன், எ - று.

(க - ரை.) அறிஞர் அறிவுக்குப் புலப்படுவோனே, உன் திருவடிக்கு ஆளாம்படி அகங்குழைதல் முதலாயின செய்யேன் ஆயினும் இந்த மண்ணுலகவாழ்வையொழித்து உன் திருவடியைப்பெற விரையாநின்றேன். உன் திருவுளமிரங்கி என் குறையை முடித்தருள வேண்டும் என்பது.

(வி - ரை.) சதுர் - சதுரப்பாடு, அது இவ்விடத்து அறிவுக்காயிற்று. குழைதல் - இளகுதல். உருகுதல் - நீர்போலக்கரைதல். புனைதல்-அலங்கரித்தல் எனினுமமையும். ஏத்தல் - பாட்டால் துதித்தல். புகழ்ந்துரைத்தல் - சொல்லாற் புகழ்தல். புத்தேளிர் - தேவர். தூகல் - அலகிடல் (விளக்கல்). மெழுகல் - கோமயத்தால் நிலத்தைப் பூசுதல். சாமாறு என்பதில் சாதல் - உடம்பைவிட்டு நீங்குதல். சாமாறுவிரைதலிற் பயன் யாதெனின் இறைவன் திருவடியடைதல் பயனென்க. திருவடிப்பேற்றுக்குத் தடையாயிருப்பது உடம்பாகலால் சாமாறே விரைகின்றேன் என்றார். (கச)

வானாகிமண்ணாகிவளியாகியொளியாகி
ஊனாகியுயிராகியுண்மையுமாயின்மையுமாய்க்
கோனாகியானெனதென்றவரவரைக்கூத்தாட்டு
வானாகிநின்றாயையென்சொல்லிவாழ்த்துவனே.

(ப - ரை.) வான்ஆகி - ஆகாயமாகி, மண்ஆகி - நிலமாகி, வளி ஆகி - காற்றாகி, ஒளிஆகி - ஒளியுடைப் பொருள்களாகி, ஊன்ஆகி - உடம்பாகி, உயிர்ஆகி - ஆன்மாவாகி, உண்மையும் ஆய் - மெய்யுமாகி, இன்மையும்ஆய் - பொய்யுமாகி, கோன்ஆகி - தலைவனாகி, அவர வரை - அவ்வவர்களை, யான் எனது என்று கூத்தாட்டுவான் ஆகி - யான் எனது என்று கூத்தாடச்செய்பவனாகி, நின்றாயை - நின்ற வுன்னை, என்சொல்லி வாழ்த்துவன் - நான் யாதுசொல்லித் துதிப் பேன், எ - று.

(க - ரை.) வான்முதலாகிய எல்லாப் பொருள்களுமாகியும், அவற்றது உண்மையின்மைகளாகியும், அவற்றை யியக்குவோனாகி யும் நிற்கும் தலைவனாகிய உன்னை யாதுசொல்லி வாழ்த்துவேன் என் பது.

(வி - ரை.) ஒளியென்றது சூரியன் சந்திரன் அக்கினி என் னும் ஒளியுடைப்பொருள்கள் மூன்றனையும் உணர்த்தும். வானாகி மண்ணாகி என முதலிறுதிகளைக் கூறவே இடையிலுள்ளவை யடங்கு மாதலாலும், வான் மண் என்பவற்றோடு வளியொளிகளையுங் கூற லால் இனம்பற்றி நீரும் அடங்குமாதலாலும், அட்டமூர்த்தமாய் நின் றாயையெனவும், அவற்றது உண்மையின்மைகளுமாய் நின்றாயை எனவும் பொருள்கூறுக. ஒருபொருளே யிவ்வாறு பலபொருள்க ளாய் நிற்றல் கூடுமோவெனின், மேல்கோனாகியானென தென்றவ ரவரைக் கூத்தாட்டுவானாகி நின்றாயையென, இறைவனது சுதந்தி ரத்துவத்தைக் கூறலால் கூடுமென்க. சுதந்திரத்துவம் - தன்வயத்த னாதல். அவரவரை என வுயர்திணையைக்கூறலால் அஃறிணையுங் கொள்ளப்படும். (கரு)

வாழ்த்துவதும்வானவர்கடாம்வாழ்வான்மனநின்பால்
தாழ்த்துவதுந்தாமுயர்ந்துதம்மையெல்லாந்தொழவேண்டிச்
சூழ்த்துமதுகரமுரலுந்தாரோயைநாயடியேன்
பாழ்த்தபிறப்பறுத்திடுவான்யானுமுன்னைப்பரவுவனே.

(ப - ரை.) மதுகரம் - வண்டுகள், சூழ்த்து - சூழ்ந்து, முரலும் - சத்திக்கின்ற, தாரோனை - கொன்றைமாலையைத் தரித்தவுன்னை, வானவர்கள் - தேவர்கள், வாழ்த்துவதும் - துதிப்பதும், தாம்வாழ்வான் - தாம் வாழும்பொருட்டே, நின்பால் - உன்னிடத்தில், மனம் தாழ்த்துவதும் - மனம் பதியச்செய்வதும், தாம்உயர்ந்து - தாம் உயர்வடைந்து, தம்மை - தங்களை, எல்லாம் - யாவரும், தொழவேண்டி - தொழவிரும்பியே, நாயடியேன் யானும் - நாயடியேனாகிய நானும், பாழ்த்தபிறப்பு அறுத்திடுவான் - பாழாகிய பிறவித்தளையைச் சேதிக்கும்பொருட்டு, உன்னை பரவுவன் - உன்னைத் துதியாநின்றேன், எ - று.

(க - ரை.) தேவர்கள் தாம் உயர்ந்து, தம்மை யாவரும் தொழவிரும்பி, உன்னை வழிபடுகிறார்கள். அடியேன் பிறவித்தளையையறுத்துக்கொள்ள விரும்பி உன்னை வழிபடுகின்றேன் என்பது.

(வி - ரை.) வானவர் - விண்ணுலகத்தார், அவர் இந்திரன் முதலியோர். வாழ்தல் - செல்வப்பெருக்கோடிருத்தல். தாழ்த்துதல் - அழுத்துதல். சூழ்ந்து என்றது சூழ்த்து என வலித்தல் பெற்றது. தேனையீட்டுவதாதலால் வண்டுக்கு மதுகரம் என்னும் பெயருண்டாயிற்று. மது - தேன், கரம் - செய்வது (ஈட்டுவது.) எனவே தேனைச் சேர்ப்பதென்பது பொருள். அறுத்திடுவான் என்றதற்கேற்பப் பிறப்பைத்தளையென் றுரைக்கலாயிற்று. (கசு)

பரவுவாரிமையோர்கள்பாடுவனநால்வேதம்
குரவுவார்குழன்மடவாள்கூறுடையாளொருபாகம்
விரவுவார்மெய்யன்பினடியார்கண்மேன்மேலுன்
அரவுவார்கழலிணைகள்காண்பாரோவரியானே.

(ப - ரை.) அரியானே - அரியவனே, உன் - உன்னுடைய, அரவு - அராவிச்செய்யப்பட்ட, வார்கழல் இணைகள் - நெடியவீரக்கழலையணிந்த இரண்டு திருவடிகளையும், இமையோர்கள் - தேவர்கள், பரவுவார் - வழிபடாநிற்பார்கள், நால்வேதம் - நான்குவேதங்களும், பாடுவன - பாடாநிற்பன, குரவு - குராமலரையணிந்த, வார் - நெடிய, குழல் - கூந்தலையுடைய, மடவாள் - உமாதேவி, ஒருபாகம் - ஒருபாகத்தை, கூறு உடையாள் - தன்பங்காக வுடையவளாயிருக்கின்றனள், மெய்யன்பின் அடியார்கள் - மெய்யன்பினையுடைய அடியார்

கள், மேன்மேல் - மேலும் மேலும், விரவுவார் - கூட்டங் கூடினவர்களாய், காண்பார் - தரிசியாநிற்பர்கள், எ - று.

(க - ரை.) அரியவனே, உன் அருமைகருதி, தேவர்பரவுகின்றனர். வேதங்கள் பாடாநின்றன. உமாதேவி ஒருபாகத்தமர்ந்து நீங்காதிருக்கின்றனள். மெய்யன்பர் கூடித்தரிசியாநின்றனர். யான் ஒன்றுஞ் செய்திலேன். என்னை உன் பெருங்கருணையால் அடிமைகொள்ளவேண்டும் என்பது.

(வி - ரை.) அரியான்-மனோவாக்குக்காயங்களுக் கெட்டாதவன். அரவு சாதியடை. இமையாதவரை இமையோர் என்றது மங்கலம். வேதங்கள் அளவில்லன வாயினும் பயிற்சி மிகுதிபற்றி நால்வேதம் என்றார். நால்வேதம் பாடுதலாவது மற்றெல்லாத் தேவரினும் மிக்கோனெனப் புகழ்தல். மடவாள் - மடப்பத்தை யுடையவள். மடப்பம் - இளமை, அன்றிப் பெண்குணம் நான்கனுள் ஒன்று என்றலும் பொருந்தும். கூறுடையா ளொருபாகம் என மேல்வருதலால், குரவுவார் குழன்மடவாள் என்பது உமாதேவிக் காயிற்று. குரவுநறுமணம் எனினும் பொருந்தும். ஒருபாகம் என்றது இடப்பாகத்தை. மேன்மேல்- மிகுதியாக. ஓ - அசைநிலை, வினியென்றலும் பொருந்தும். இமையோர் முதலாயினோர் உன் கழலிணைகள் காண்பாரோ, மெய்யன்பினடியார்கள் விரவுவார் என்றியைத்துக்கூறினுமாம். (கஎ)

அரியானே யாவர்க்கு மம்பரவா வம்பலத்தெம்
பெரியானே சிறியேனை யாட்கொண்ட பெய்கழற்கீழ்
விரையார்ந்த மலர்தூவேன் வியந்தலறே னயந்துருகேன்
தரியேனு மாறென்சா வேனான்சா வேனே.

(ப - ரை.) யாவர்க்கும் அரியானே - யாவருக்கும் அரியவனே, அம்பரவா - சிதாகாசத்தை யுடையவனே, அம்பலத்து எம்பெரியானே -பொன்னம்பலத்தி லெழுந்தருளி யிருக்கும் பெரியோனே, சிறியேனை-சிறுமையுடையேனை, ஆட்கொண்ட - அடிமைகொண்ட, பெய்கழல் கீழ்-வீரக்கழலையணிந்த திருவடியில், விரைஆர்ந்த-மணமமைந்த, மலர்-மலர்களை, தூவேன் - அருச்சியேன், வியந்து அலறேன் - அதிசயித்துஅலறேன், நயந்து உருகேன் - விரும்பியுருகேன், தரியேன் - தரித்திரேன், (இங்ஙனம் ஒன்றுஞ் செய்யாதநான்) ஆம் ஆறுஎன் - உனக்கு ஆளாகும் வகையாது, (ஒன்றுமில்லை மற்று நான் செய்யக்கிடக்

தநுயாதெனின்) நான் சாவேன் சாவேன் - நான் இறந்துபடுவேன் இறந்துபடுவேன்; எ - று.

(க - ரை.) இறைவனே, சிறியேனை யாட்கொண்ட உன் திருவடிகளை யர்ச்சித்தல் முதலியன செய்துய்யும் வழியறியாதுயிர் வாழ்தலினும் நான் இறத்தலே தகுதியுடைத்தென்பது.

(வி - ரை.) இறைவன் யாவருக்கும் அரியவனுய்ச் சிதாகாயத்தி லுறைபவனுயினும், எம்போலியர் வழிபட் டுய்யும்பொருட்டுத் தில்லையம்பலத்தி லெழுந்தருளியிருக்கின்றான் என்பார் அம்பரவா என்றதை யடுத்து அம்பலத் தெம்பெரியானே யென்றார். இங்ஙனம் பெரியான் சிறியேனை யாட்கொண்டமைகுறித்து, அவன் திருவடியை மலர்களைக்கொண் டருச்சித்தல்முதலியவற்றைச் செய்திலேனே யென்றிரங்குவாராய், சிறியேனையாட்கொண்ட பெய்கழற்கீழ் விரையார்ந்த மலர்தூவேன் வியந்தலறேன் நயந்துருகேன் என்றும், இங்ஙனம் உய்யுமாறு காணுத நான் உயிர்வாழ்தலினும் சாவதே தகுதியுடைத்தென்றற்குத் தரியேன் சாவேனுன் சாவேனே என்றும் கூறினார். பெய்கழற் கீழ்என்பதில் கீழ்எழனுருபு. (கஅ)

வேனில்வேண்மலர்க்கணைக்கும்வெண்ணகைச்செவ்வாய்க்கரிய
பானலார்கண்ணியர்க்கும்பதைத்துருகும்பாழ்நெஞ்சே
ஊனெலாநின்றுருகப்புகுந்தாண்டானின்றுபோய்
வானுளான்காணுய்நீமாளாவாழ்கின்றுயே.

(ப - ரை.) வேனில்வேள் - வசந்தகால மன்மதனுடைய, மலர்கணைக்கும் - புஷ்ப பாணங்களுக்கும், வெள்நகை - வெள்ளிய நகையினையும், செவ்வாய் - செவந்த வாயினையும், கரியபானல் ஆர் கண்ணியர்க்கும் - கருங்குவளை மலர்போன்ற கண்களையும் உடைய மங்கையர்க்கும், பதைத்து உருகும்-பதறியுருகாநின்ற,பாழ்நெஞ்சே-பாழ்மனமே. ஊன்எல்லாம் நின்று உருக - உடம்பு முழுதும் உருகி நிற்கும்படி, புகுந்துஆண்டான் - தானே வந்து அன்று ஆட்கொண்ட இறைவன், இன்றுபோய் - இன்று நம்மை நீங்கிச் சென்று, வான்உளான் - ஆகாயத்தில் மறைந்துளான், காணுய் நீ - அவனைக் காணுதாயாகிய நீ, மாளா - இறவாது, வாழ்கின்றுயே - உயிர் வாழாநின்றனையே, எ - று.

(க - ரை.) மனமே மலர்க்கணைக்கும் மங்கையர்க்கும் பதைத் துருகுகின்ற நீ இறைவன் பிரிவுக்குப் பதைத்துருகி யிறந்தாயில்லை யாதலால் நீ பயனிலியாதி யென்பது.

(வி - ரை.) மன்மதனுக்கு வசந்தகாலம் மிகச்சிறந்ததாதலால் வேனில்வேள் என்றார். மன்மதன்கணை ஐந்தாதலால் மலர்க்கணை என்பதில் கணை பால் பகாவஃறிணைப்பெயர். கணை ஐந்தாவன - தாமரைமலர், மாமலர், அசோகமலர், முல்லைமலர், நீலமலர் என்பன. (நீலம் - கருங்குவளை.) இக்கணை ஐந்தனையும் முறையே உன்மத்தம், மதநம், சம்மோகம், சந்தாபம், வசிகரணம் என்பர் வடநூலார். இவை யெய்தற்குரிய இடங்களாவன முறையே நெஞ்சு, தனம், விழிகள், சிரம், குய்யம் என்பன. இவை செய்யும் அவத்தைக ளாவன - முறையே நினைப்புண்டாதல், பசலைபோர்த்தல், உணவு வெறுத்தல், கிடத்தல், இறத்தல் என்பன. இவற்றை முறையே சப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்பர் வடநூலார், இன்னும் இவற்றின் விரிவெல்லாம் மதநாகமங்களிற் காண்க. நகை - பல், வாய் - இதழ், பாழ் என்றது பயனின்மையை. நின்று உருக என்பதனை உருகி நிற்க எனமாறுக. இன்றுபோய் வானுளான் என்றமையால், ஆண்டது அன்று என்பது பெறப்பட்டது. அது திருப்பெருந்துறையிற் குருந்தமரநீழலிற் குருமூர்த்தமா யெழுந்தருளி யாட்கொண்ட நாள். ஊனெலாம் நின்றுருகப் புகுந் தாண்ட பெருங்கருணை யாளனது பிரிவுக்கிறந்து படாது உயிர் வாழ்கின்றனையே என்றற்கு காணாய் நீ மாளா வாழ்கின்றாயே என்றார். இறைவனைக் காணா துயிர்வாழ்தலால் பாழ்நெஞ்சே என்றார் வானுளானாதல் இறைவன் ஆகாயத்தில் மறைந்ததைக் குறித்தது மாளாது என்பது மாளா என ஈறு தொகுத்தலாயிற்று. (கசு

வாழ்கின்றாய்வாழாதநெஞ்சமேவல்வினைப்பட்
டாழ்கின்றாயாழாமற்காப்பானையேத்தாதே
சூழ்கின்றாய்கேடுனக்குச்சொல்கின்றேன்பல்காலும்
வீழ்கின்றாய்நீயவலக்கடலாயவெள்ளத்தே.

(ப - ரை.) வாழ்கின்றாய் - பயனற்ற வாழ்வு வாழ்கின்றனை, வாழாத - பயனுற வாழ்வுபெற்று வாழாத, நெஞ்சமே - மனமே, வல்வினைப்பட்டு - வலியவினைக்கடலி லகப்பட்டு, ஆழாமல் - அழுந்

தாமல், காப்பானை - நம்மையெடுத்துக் காப்பவனாகிய இறைவனை, ஏத்தாதே - துதியாதே, ஆழ்கின்றாய் - அழுந்தா நின்றனை, நீ உனக்கு கேடு சூழ்கின்றாய் - நீயே உனக்குக் கேடு சூழ்கின்றனை, பல்காலுஞ் சொல்கின்றேன் - பலதரமும் இடித்துச் சொல்லாநின்றேன், (சொல்லியும் நீ என் வழிவராமல்) அவலம்கடல் ஆயவெள்ளத்து - துன்பக் கடலாகிய பெருவெள்ளத்தில், நீ வீழ்கின்றாய் - நீ விழாநின்றனை, (உன் தன்மை யிருந்தவாறென்னை.) எ - று.

(க - ரை.) மனமே யான் வற்புறுத்திச் சொல்லியும், இறைவனை யேத்தி யுய்யாமல் உனக்கு நீயே கேடுசூழ்ந்து துன்பக்கடல்களில் வீழ்ந்தழுந்துகின்றனை, உன்பேதைமைக்கு யானென் செய்குவேன் என்பது.

(வி - ரை.) ஆழ்கின்றாய் ஆழாமல் என்னும் வினைகளுக்கேற்ப வல்வினையைக்கடலாக்கி யுரைக்கப்பட்டது. கேடு சூழ்தல் - கேடடைய வெண்ணுதல், வெள்ளம் - பெருக்கு. கடல் எனவே யமைவதாயிருக்க, வெள்ளம் எனவுங் கூறியது துன்ப மிகுதியை விளக்கற்கென்க. (உ0)

திருச்சிற்றம்பலம்.

## சுட்டறுத்தல்.



எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.



திருச்சிற்றம்பலம்.

வெள்ளந்தாழ்விரிசடையாய்விடையாய்விண்ணோர்
பெருமானேயெனக்கேட்டுவேட்டநெஞ்சாய்ப்
பள்ளந்தாழுறுபுனலிற்கீழ்மேலாகப்
பதைத்துருகுமவர்நிற்கவென்னையாண்டாய்க்
குள்ளந்தாணின்றுச்சியளவுநெஞ்சா
யுருகாதாலுடம்பெல்லாங்கண்ணாயண்ணா
வெள்ளந்தான்பாயாதாலெஞ்சங்கல்லாங்
கண்ணிணையுமரமாந்திவினையினேற்கே.

(ப - ரை.) வெள்ளம் தாழ் - கங்கைதங்கிய, விரிசடையாய் பரந்தசடையை யுடையவனே, விடையாய் - இடபவாகனத்தையுடையவனே, விண்ணோர் பெருமானே - தேவர்கோமானே, எனக்கேட்டு - என்றுபிறர்சொல்லக் (கேட்டு,) வேட்ட நெஞ்சு ஆய் - விரும்பின நெஞ்சுடையராகி, பள்ளம்தாழுறு புனலின் - பள்ளத்தில் விரைந்தோடித்தங்குகிற நீர்போல, கீழ்மேல் ஆக - கீழதுமேலதாகி, பதைத்து உருகு மவர்நிற்க - பதைத்துருகுவோர் நிற்க, என்னை ஆண்டாய்க்கு - என்னையாண்டருளின உன்பொருட்டு, உள்ளந்தாள் நின்று - உள்ளங்கால்முதல், உச்சி அளவும் - உச்சி வரைக்கும், நெஞ்சு ஆய் - நெஞ்சாகக்கொண்டு, உருகாதால் - உருகாமையாலும், உடம்பு எல்லாம் - உடம்பு முழுதும், கண் ஆய் - கண்களாகக்கொண்டு, அண்ணா - இட்டவொண்ணாத, வெள்ளம் பாயாதால் - வெள்ளம் பாயாமையாலும், தீவினையினேற்கு - தீவினையையுடையேனுக்கு, நெஞ்சம் கல் ஆம் - மனம் கல்லேயாகும், கண் இணையும் - இருகண்களும், மரம் ஆம் - மரமேயாகும், எ - று.

(க - ரை.) மெய்யடியார் நிற்க என்னை வலிந்தாண்ட உன் பெருங்கருணையைக் குறித்து மனமுருகேன் கண்ணீர் பெருக்கேன், இது என்தீவினைப்பயன் என்பது.

(வி - ரை.) வெள்ளம் - நீர்ப்பெருக்கு, அது தாழ்விரிசடையாய் என்றமையால் கங்கைக்காயிற்று. பகீரதன் கபிலமகாமுனிவரது கோபத்தீயால் நீறுபட்ட, தன் மூதாதைகளை நற்கதியிலுய்க்க நினைத்து தேவலோகத்திலுள்ள கங்கையைப் பூலோகத்திற்கு வரும்படிக் கங்கையைக்குறித்துத் தவஞ்செய்தான், அப்பொழுது அந்த மகாநதி தான் பூலோகத்துக்கு வரும்போது தன் வேகத்தைத் தாங்கவல்லா ரொருவரை நியமித்துக்கொண்டால் தான் வருவதாயொப்புக்கொள்ள, அப்பொழுது பகீரதன் உருத்திரமூர்த்தியைக் குறித்துத் தவஞ்செய்து அவரது அநுக்கிரகம் பெற்றுக் கங்கையைப் பிரார்த்திக்க, கங்கை மிகுவேகமாய் பூமிக்குவரும்போது உருத்திரமூர்த்தி அக்கங்கையைத் தன்னருகில்வரச் செய்து தமது சடாமகுடத்தில் அடக்கிவைத்திருந்து, சிலநாள் கழிந்தபிறகு பகீரதன் பிரார்த்திக்கத் தன் திருமுடியினின்றும் ஏழுதுளிகளை நிலத்தில் விடுத்தார். அந்தத் துளிகள் விழுந்த இடம் பிந்து சரசு எனப்படும், அதினின்றே கங்காநதிபெருகும் என்பது புராணகதை யாதலால் வெள்

ளந்தாழ்விரிசடையாய் என்றும், சடைக்குவிரியென்னும் அடைகொடுத்தோதியது அத்தன்மையதாகிய ஆகாய கங்கையடங்குதற்குரிய இடமுடைத்தென்பதை விளக்குதற்கென்க. வெள்ளந்தாழ்விரிசடையாய், விடையாய், விண்ணோர் பெருமானே என்று பிறர்சொல்லக் கேட்டலும் மனம் பதைத்துருகும் மெய்யடியார் நிற்க, ஒன்றுக்கும் பற்றாதசிறியேனை யாண்டருளின உன் பெருங்கருணையைக் குறித்து உள்ளங்கால்முதல் உச்சியளவும் நெஞ்சமாகப் பெற்றுருகவேண்டும், உடம்பெல்லாங்கண்களாகப்பெற்று நீரைப்பெருக்கவேண்டும், அங்ஙனஞ் செய்யாமையால் என்மனங் கல்லாணியன்றது,என் கண்ணிணை மரத்தாணியன்றன என்பார், "வெள்ளந்தாழ்விரிசடையாய் விடையாய் விண்ணோர் பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப் பள்ளந்தாழுறுபுனலிற் கீழ்மேலாகப்பதைத் துருகுமவர் நிற்க வென்னையாண்டாய்க்குள்ளந் தாணின்றுச்சியளவு நெஞ்சாயுருகாதா லுடம்பெல்லாங்கண்ணாயண்ணா வெள்ளந்தான் பாயாதானெஞ்சங் கல்லாங் கண்ணிணையுமரமாந்தீ வினையினேற்கே" என்றார். உருகாதால் நெஞ்சங் கல்லாம், வெள்ளம் பாயாதால் கண்ணிணை மரமாம் என வியைக்க. அண்ணா என்பதை விளியாக்கி அத்தா எனப் பொருள் கூறலுமாம். (உக)

வினையிலேகிடந்தேனைப்புகுந்துநின்று
போதுநான்வினைக்கேடனென்பாய்போல
இனையனானென்றுன்னையறிவித்தென்னை
யாட்கொண்டெம்பிரானானாய்க்கிரும்பின்பாவை
யனையநான்பாடேனின்றாடேனந்தோ
வலறிடேனுலறிடேனாவிசோரேன்
முனைவனேமுறையோநானானவாறு
முடிவறியேன்முதலந்தமாயினானே,

(ப - ரை.) வினையிலே கிடந்தேனை - வினையிற் கிடந்தேன் பொருட்டு, புகுந்துநின்று - வலிய வந்துநின்று, போது - வா, நான் வினைக்கேடன் - நான் வினைகளைக் கெடுப்பவன், என்பாய்போல - என்று சொல்வாய்போல, நான் இனையன் என்று - நான் இத்தன்மையனென்று, உன்னை அறிவித்து - உன்னை யுணர்வித்து, என்னை ஆட்கொண்டு - என்னை யடிமைகொண்டு, எம்பிரான் ஆனாய்க்கு -

எம்மிறைவனாகிய வுன்பொருட்டு, இரும்பின்பாவை அனையநான் - இருப்புப்பாவையை நிகர்த்த நான், பாடேன் - பாடுதல் செய்யேன், நின்று ஆடேன் - நின்று ஆடுதல் செய்யேன், அந்தோ - ஐயோ, அலறிடேன் - அலறேன், உலறிடேன் - காயேன், ஆவிசோரேன் - உயிர் தளரேன், முனைவனே - கடவுளே, முதல் அந்தம் ஆயினானே - ஆதியும் அந்தமும் ஆனவனே, முறையோ - முறையோ, நான் ஆன ஆறு முடிவு அறியேன் - நான் உண்டானவாறும் முடிவும் அறியேன் எ - று.

(க - ரை.) வலியப்புகுந்து என்னையு முன்னையுமெனக் கறிவித்து என்னை யடிமைகொண்ட வுன்னைக்குறித்துப் பாடுதல் முதலாயின செய்யேன், நான் ஆமாறும் அழியுமாறும் அறியேன், உனக்கே யபயம் என்பது.

(வி - ரை.) இனையனானென் றுன்னையறிவித்து என்பதற்கு நான் இத்தன்மையனென் றறிவித்து, உன்னையு மறிவித்து எனப் பொருள்கூறலுமாம். இரும்பின் பாவை - இரும்பினாற் செய்யப்பட்ட பாவை, உலறுதல் - காய்தல் (வற்றுதல்.) முனைவன் என்பதற்கு முன்னோன் என்பது பொருள். எல்லாப் பொருள்களுக்கும் முன்னுமிருத்தல் பின்னுமிருத்தல் என்னு மிருதன்மையு முளனாதலால் முதலந்தமாயினானே யென்றார். (உஉ)

ஆயநான்மறையவனுநீயேயாத
லறிந்தியானியாவரினுங்கடையனாய
நாயினேனாதலையுநோக்கிக்கண்டு
நாதனேநானுனக்கோரன்பனென்பே
னாயினேனாதலாலாண்டுகொண்டா
யடியார்தாமில்லையேயன்றிமற்றோர்
பேயனேனிதுதானின்பெருமையன்றே
யெம்பெருமானென்சொல்லிப்பேசுகேனே.

(ப - ரை.) ஆய - அறிஞரால் ஆராயப்பட்ட, மறையவனும் - வேதங்களாலும் பிரதிபாதிக்கப்பட்டவனும், நீயே ஆதல் அறிந்து - நீயேயாதலை யுணர்ந்து, யான் - நான், யாவரினும் கடையன் ஆய - எல்லாரினுங் கடையனாகிய, நாயினேன் ஆதலையும் - நாய்போக்லே

னாதலையும், நோக்கி கண்டு - நன்றாயறிந்து, நாதனே - இறைவனே, நான் - நானும், உனக்கு ஓர் அன்பன் என்பேன் ஆயினேன் - உனக்கோர் அன்பன் என்று சொல்வேனானேன், ஆதலால் - ஆகையால், ஆண்டுகொண்டாய் - என்னை ஆண்டுகொண்டருளினை, (நீயாட்கொள்ள,) ஓர் பேயனேன் அன்றி - ஒப்பற்ற பேயினேனல்லது, மற்று அடியார்தாம் இல்லையே - வேறு அடியார்களில்லையோ, இது - (அடியாரிருக்க என்னை யாண்டருளின) இது, நின்பெருமை அன்றே - உன் பெருந்தன்மையன்றோ, எம்பெருமான் - எம்பெருமானே, என் சொல்லி பேசுகேன் - உன்னை யாதுசொல்லிப் புகழ்வேன், எ - று.

(க - ரை.) சதுர்வேதப் பிரதிபாத்தியனாகிய பெரியோன் நீயாதலையும், யாவரினுங் கடையனாகிய சிறியன் நானாதலையும் நன்றாயறிந்து, உனக்கு நானும் அடியன் என்றேனாதலால் ஆண்டுகொண்டருளினை, அவ்வளவேயன்றி உனக்கு அடியாரில்லாக் குறையாலன்று, இது உன் பெருமைக்கியல்பாம். உன் பெருநீர்மையைக் குறித்து நான் என்சொல்லிப் புகழ்வேன் என்பது.

(வி - ரை.) நான்மறையவன் - பிரமன் எனப் பொருள்கோடல் ஒருவாற்றானும் பொருந்தாமை யாய்ந்துணர்க. மறை அலகில்லனவாகவும், நான்மறையென்றது - இவ்வுலகத்துப் பெரும்பாலும் பயின்றுவருதல் நோக்கி. மறை என்பதற்கு அந்தணரல்லாத மற்றையோர்க் குரித்தன்றென மறுக்கப்பட்டது என்றும், அறமுதலிய நாற்பொருளும் மறைந்துநிற்றற் கிடனாயிருப்பது என்றும், பொருள்கூறுவர். (உந)

பேசிற்றாமீசனேயெந்தாயெந்தை
 பெருமானேயென்றென்றேபேசிப்பேசிப்
பூசிற்றான்றிருநீறேநிறையப்பூசிப்
 போற்றியெம்பெருமானேயென்றுபின்றா
நேசத்தாற்பிறப்பிறப்பைக்கடந்தார்தம்மை
 யாண்டானேயவாவெள்ளக்கள்வனேனை
மாசற்றமணிக்குன்றேயெந்தாயந்தோ
 வென்னைநீயாட்கொண்டவண்ணந்தானே.

(ப - ரை.) தாம் பேசில் - தாம் சொன்னால், ஈசனே - ஈசனே, எந்தாய் - கடவுளே, எந்தை பெருமானே - எந்தையாகிய பெரு

மானே, என்றென்றே பேசிப்பேசி - என்றென்றே சொல்லிச் சொல்லி, பூசில் - பூசினால், திருநீறே - திருவெண்ணீற்றையே, நிறையப்பூசி - சர்வாங்கமும் உத்தூளனஞ்செய்து, எம்பெருமானே போற்றி என்று - எம்பெருமானே நின்னை வணங்குகிறேனென்று, பின்றாநேசத்தால் - பிறகிடாத அன்பினால், பிறப்பு இறப்பை கடந்தார்தம்மை - பிறப்பிறப்புக்களைக்கடந்தவர்களை, ஆண்டானே - ஆண்டருளினவனே, அவாவெள்ளம் - ஆசைப் பெருக்கத்தையுடைய, கள்வனேனை - கள்வனாகிய என்னை, மாசுஅற்ற - குற்றமற்ற, மணிக்குன்றே - மாணிக்கமலையே, எந்தாய் - எந்தையே, நீ ஆட்கொண்ட வண்ணம் என்னை - நீ அடிமைகொண்டதன்மை என்னை, அந்தோ - அதிசயம், எ - று.

(க - ரை) இறைவனே, அன்பரையாளு மியல்பினனாகிய நீ அன்பனல்லாத என்னை யாண்டருளினது வியக்குந் தகுதியுடைத்தென்பது.

(வி - ரை.) ஈசன் - ஐசுவரியத்தை யுடையவன், ஐசுவரியமாவது எல்லாவுலகங்களையுந் தன்னுடைமையாகப் படைத்து அவற்றிற்குத் தான் உடையவனாயிருத்தல். பின்றல் - பிறகிடல் (பிற்படல்). அன்பே பற்றுக்கோடாகக்கொண்டு பிறப்பிறப்புக்களைக் கடந்தவராதலால் நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் என்றார். அன்புப் பெருக்கையுடையவரை யாண்டருளு மியல்புடையனாகிய நீ ஆசைப்பெருக்கை யுடையவனாகிய என்னை யாண்டருளினது வியக்கத் தக்கதென்பார், நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மையாண்டானே அவாவெள்ளக் கள்வனேனை நீ யாட்கொண்ட வண்ணம் என்னை என்றார். அந்தோ - அதிசய விரக்கச்சொல். (உச)

வண்ணந்தான்சேயதன்றுவெளிதேயன்ற
னேகனேகனணுவணுவிலிறந்தாயென்றங்
கெண்ணந்தான்றடுமாறியிமையோர்கூட்ட
மெய்துமாறறியாதவெந்தாயுன்றன்
வண்ணந்தானதுகாட்டிவடிவுகாட்டி
மலர்க்கழல்களவைகாட்டிவழியற்றேனைத்
திண்ணந்தான்பிறவாமற்காத்தாட்கொண்டா
யெம்பெருமானென்சொல்லிச்சிந்திக்கேனே.

(ப - ரை.) இமையோர்கூட்டம் - தேவர்குழாம், வண்ணந் தான் - நிறந்தான், சேயதன்று - செந்நிறத்ததன்று, வெளிது அன்று - வெண்ணிறத்ததுமன்று, அநேகன் - பலவாந்தன்மையன், ஏகன் - ஒன்றாந் தன்மையன், அணு அணுவில் இறந்தாய் - அணுவாகியும் அணுவினு நுண்ணிதாகியுமிருப்போய், என்று - என்று சொல்லி, அங்கு - அவ்வாறே, எண்ணம் தடுமாறி, நினைவும் தடுமாறப்பெற்று, எய்தும் ஆறு - உன்னையடையும் நெறியை, அறியாத - அறியவொண்ணாத, எந்தாய் - எந்தையே, உன்றன்வண்ணம் அதுகாட்டி - உன் வண்ணமாகிய அதனைக் காட்டி, வடிவுகாட்டி - உருவுகாட்டி, மலர்க் கழல்கள் அவைகாட்டி - தாமரைமலர்போலுந் திருவடிகளாகிய அவற்றைக்காட்டி, வழிஅற்றேனை - உய்யும்வகையில்லாத வென்னை, திண்ணம் - உண்மையாக, பிறவாமல் - பிறவாமல், காத்து ஆட்கொண்டாய் - தடுத்தாட்கொண்டனை, எம்பெருமான் - எம்பெருமானே, என்சொல்லி - யாதுசொல்லி, சிந்திக்கேன் - உன்னை நினைக்கக்கடவேன், எ - று.

(க - ரை.) தேவர்கள் உன்வண்ண முதலாயினவற்றை யுணராது தடுமாறுநிற்க, உய்யுநெறி சிறிதுமறியாத என்னைத் தடுத்தாட் கொண்டனையே, உன்னைநான் என்னென்று வாக்கினாற்சொல்லி என்னென்று மனத்தினால் நினைப்பேன் என்பது.

(வி - ரை.) வண்ணம் சேயதன்று வெளிதன்று என்றது, நிறம் செம்மையன்று வெண்மையன்று என்றபடி. அங்கு என்றது. வண்ணந்தான் சேயதன்று வெளிதேயன்றநேகனேக னணுவணுவி லிறந்தாயென்று வாக்கினாற் றடுமாறினாற்போல என்றபடி. காத்தல் - தடுத்தல். வண்ணமது என்றதில், அது பகுதிப் பொருள் விகுதி.

சிந்தனைநின் றனக்காக்கிநாயினேன்றன்
கண்ணிணைநின் றிருப்பாதப்போதுக்காக்கி
வந்தனையுமம்மலர்க்கேயாக்கிவாக்குன்
மணிவார்த்தைக்காக்கியைம்புலன்களார
வந்தனையாட்கொண்டுள்ளேபுகுந்தவிச்சை
மாலமுதப்பெருங்கடலேமலையேயுன்னைத்
தந்தனைசெந்தாமரைக்காடனையமேனித்
தனிச்சுடரேயிரண்டுமிலித்தனியனேற்கே.

(ப - ரை.) நாயினேன் - நாயேனது, சிந்தனை - நினைப்பை,
நினக்குஆக்கி - உனக்குரியதாகச்செய்து, கண்இணை - இருகண்க
ளும், நின் திருப்பாதப்போதுக்கு ஆக்கி - உன் திருவடிமலருக் குரி
யனவாகச்செய்து, வந்தனையும் அ மலர்க்கே ஆக்கி - வணக்கத்தை
யும் அம்மலர்க்கே உரியதாகச்செய்து, வாக்கு - வாக்கினை, உன்மணி
வார்த்தைக்கு ஆக்கி - உன் திருவார்த்தைக்கு உரியதாகச்செய்து,
ஐம்புலன்கள் ஆர - ஐம்புலன்களாலும் நுகரும்படி, வந்தனை - எழுந்
தருளினையாகி, ஆட்கொண்டு - அடிமைகொண்டு, உள்ளேபுகுந்த -
மனத்துள்ளே நுழைந்த, விச்சை - வித்தையையுடைய, மால் - பழ
மையாகிய, பெரு - பெரிய, அமுதம்கடலே - அமிர்தசாகரமே, மலை
யே - பொற்குன்றமே, செந்தாமரைக்காடு அனைய - செந்தாமரைக்
காட்டை நிகர்த்த, மேனி - திருமேனியையுடைய, தனி சுடரே - ஒப்
பற்ற ஒளியே, இரண்டும் இல் - இரண்டுமற்ற, இ - இந்த, தனிய
னேற்கு - தனியேனுக்கு, உன்னை தந்தனை - உன்னைத்தந்தாய், ஏ -
இதென்ன வியப்பு, எ - று.

(க - ரை.) இறைவனே, இருமையுமறியாத என் மனமுதலிய
வற்றை யுனக்கேயாக்கி என்னை யடிமைகொண்ட உன் பெருங்கரு
ணையை யென்னென்று புகழ்வேன் என்பது.

(வி - ரை.) சிந்தனை நின்றனக்காக்கி என்பதற்கு, என் மன
முன்னையே நினைக்கும்படி செய்து என்றும், கண்ணிணை நின் றிருப்
பாதப்போதுக்காக்கி என்பதற்கு, என்னிரண்டு கண்களும் உன் திரு
வடியையே நோக்கச்செய்து என்றும், வந்தனையு மம்மலர்க்கேயாக்கி
என்பதற்கு, அத்திருவடியையே நான் வணங்கச்செய்து என்றும்,
வாக்குன் மணிவார்த்தைக்காக்கி என்பதற்கு, வாய் உன் திருவார்த்
தையைப் பேசச்செய்து என்றும் பொருள்கொள்க. புலன் என்றது,
பொறியை. ஐம்புலன்களாவன மெய், வாய், கண், மூக்கு, செவி,
என்பன. இவை நுகர்தலாவது, இவையைந்திற்கும் இறைவனையே
விடயமாக்கி யின்புறுதல். (அதாவது தீண்டலாலும், சுவைத்தலா
லும், காண்டலாலும், கந்தித்தலாலும், கேட்டலாலும் இன்புறல்.)
வாய் என்றது நாவை. வந்தனை - முற்றெச்சம். வித்தை, விச்சை
யென்றாயிற்று. இறைவன் திருமேனி பொன்னினை நிகர்க்குமாத
லால் மலையென்றது - பொன்மலையை. அமுதக்கடல் நாவொன்றற்
கே யினிமைபயக்கும். இது ஐம்பொறிகளுக்கும் மனத்துக்கும் இனி

மையர்தலால் அமுதக்கடலே யென்னாது மாலமுதப் பெருங்கடலே யென்றார். பெரு இரண்டும் அமுதக்கடற்கு விசேடணம். மால்அமுதம் என்பவற்றை மலைக்கும் விசேடணமாக்கி அமுதமலையெனினும் பொருந்தும். என்னை பொருந்துமாறெனின், இறைவன் திருமேனிமுழுதும் திருவெண்ணீற்றான் மறைக்கப்பட்டு வெண்மையாகிய அமுதத்தா னியன்றதோர் மலையெனத் தோன்றுதலால் பொருந்துமென்க. கடல் மலைகள் யாவும் அழியுங்காலத்தும் அழியாமையால் அமுதக்கடலே அமுதமலையே என்றார் எனினுமமையும். அமுதம் - அழியாதது (இறவாதது.) செந்தாமரை என்றது - செந்தாமரை மலரை. இறைவன் திருமேனி செந்தாமரை மலர்த்திரள் போறலால் செந்தாமரைக்காடனைய மேனியென்றார். அன்றித் திருமுகம், திருவாய், திருக்கைமுதலிய வுறுப்புக்கள் பலவும் செந்தாமரைமலர் பூத்தாற்போன் றுளிர்தலால் இங்ஙனங் கூறினதாகக் கோடலுமமையும். சோமசூரியாக்கினிகளாகிய முச்சுடர்களினும் மிக்கு விளங்குவோனாதலால்தனிச்சுடரே யென்றார். இரண்டும் என்றது இம்மை மறுமைகளை. தனியனேற்கு என்பதில் தனிமை இழிவினாலினையின்மையை உணர்த்திநின்றது. ஏ - வியப்பின்கண்வந்தது, அறப்பெரியோனாகிய இறைவன் அறச்சிறியேனாகிய எனக்குத் தன்னை முற்றூட்டாக்கினான், இஃதோர் வியப்பிருந்தவாறென் னையென்பதை யுட்கொண்டுநிற்றலான். (உகூ)

தனியனேன்பெரும்பிறவிப்பௌவத்தெவ்வத்
 தடந்திரையாலெற்றுண்டுபற்றொன்றின்றிக்
கனியைநேர்துவர்வாயாரென்னுங்காலாற்
 கலக்குண்டுகாமவான்சுறவின்வாய்ப்பட்
டினியென்னேயுய்யுமாறென்றென்றெண்ணி
 யஞ்செழுத்தின்புணைபிடித்துக்கிடக்கின்றேனை
முனைவனேமுதலந்தமில்லாமல்லற்
 கரைகாட்டியாட்கொண்டாய்மூர்க்கனேற்கே.

(ப - ரை.) தனியனேன் - தனியேனாகி, பிறவி பெரு பௌவத்து - பிறவியாகிய பெருங்கடலில் வீழ்ந்து, எவ்வம் - துன்பங்களாகிய, தடம் திரையால் - பேரலைகளால், எற்றுண்டு - எறியுண்டு, பற்றுஒன்று இன்றி - ஆதாரம் சிறிதுமின்றி, கனியைநேர் - கொவ்

கைக்கனியை நிகர்த்த, துவர்வாயார் என்னும் காலால் - பவளவ்வாயா ராகிய மாதரென்கிற காற்றால், கலக்குண்டு - கலக்கப்பட்டு, காமம் - காமமாகிய, வான் - பெரிய, சுறவின்வாய்ப்பட்டு - சுறவின்வாயிற் சிக்கி, உய்யும் ஆறு - உயிர்பிழைக்கும் வழி, இனிஎன்னேஎன்று என்றுஎண்ணி - இனியாதோவென்று பலகாலும் எண்ணி, அஞ்சு எழுத்தின் புணைபிடித்து - ஐந்தெழுத்தாகிய புணை யைப்பற்றி, கிடக்கின்றேன் - செயலற்றுக் கிடவாநின்றேன், முனைவனே - கடவுளே, மூர்க்கனேற்கு - இங்ஙனம் மூர்க்கனாகிய எனக்கு, முதல் அந்தம் இல்லா - முதலீறுகளில்லாத, மல்லல் - வளம்பொருந்திய, கரைகாட்டி - (முத்திக்) கரையைக்காட்டி, ஆட்கொண்டாய் - அடிமைகொண்டனை. ஏ - இஃதோர் வியப்பிருந்தவாறென்னே, எ - று.

(க - ரை.) தனியனாய்ப் பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து, பலவகைத் துன்பங்களாகிய அலைகளால் எறியப்பட்டு, மற்றொன்றுமின்றி, மாதர் என்னும் பெருங்காற்றாற் கலங்கி, காமமாகிய பெருஞ் சுறவின் வாயிற்சிக்கி, இனி உய்யும்வழி யாதென்று சிந்தித்துத் தெளிந்து, உன் ஐந்தெழுத்தாகிய புணையைப்பற்றிக் கிடக்கின்ற என்னை முத்தியாகிய கரையிலேற்றி ஆட்கொண்டனையே, இஃதோர் வியப்பிருந்தவாறென்னை யென்பது.

(வி - ரை.) பிறவிதோறும் தாம் செய்தவினைக் கீடாய்வந்துற்ற தாய்தந்தையாதியர் அவ்வுடனீக்கத்தில் விட்டொழிதலால் தனியனேன் என்றார். தனியனேன் என்பதனை முற்றெச்சமாகக் கொள்க. கடத்தலரிதாதல்நோக்கி பெரும் பிறவிப் பௌவம் என்றார். "பிறவிப் பெருங்கடனீந்துவர் நீந்தா ரிறைவனடிசேரா தார்" எனப் பிறர் கூறுதலுங்காண்க. எண்ணுதல் - ஆலோசித்தல். இங்ஙனம் தனியனாதலே எவ்வத்திரை முதலியவற்றால் எற்றுண்ணல் முதலிய துன்பங்களுக்குக் காரணமென்க. புணைபிடித்துக் கிடக்கின்றேனே என்ற சொல்லாற்றல் செயலறுதியை யுணர்த்திநின்றது. அஞ்செழுத்தின் புணை என்பதில், இன் அவ்வழிச்சாரியை. புணை, மரக்கலம், (தெப்பம்.) மரமுதலியவற்றானியன்ற புணையைப் பிறரெல்லாம் பற்ற, நான் எழுத்தானியன்ற புணையைப்பற்றினேன் எனத் தமக்கு ஸ்ரீ பஞ்சாட்சரத்தின்கண்ணதாகிய மனவுறுதியை வெளியிட்டருளினவாறு காண்க. வாகீசர் இவ்வெழுத்துப் புணையைப்பற்றி உவர்க்கடல் பவக்கடல் இரண்டனையுங் கடந்தமைநோக்கி,

தாம் பவக்கடலொன்றனைக் கடத்தல் எளிதெனத் துணிந்து பற்றி ஞர்போலும். முதல் அந்தமில்லாமல்லற் கரையென்றது முத்தியை, அதற்கு முதலந்தமில்லாமையாவது தோற்றக்கேடுகளில்லாமை. ஈற்றேகாரம் வியப்பின்கண் வந்தது. கிடக்கின்றேனை யென்பதில், ஐ சாரியை. (உஎ)

கேட்டாருமறியாதான்கேடொன்றில்லான்
கிளையிலான்கேளாதேயெல்லாங்கேட்டான்
நாட்டார்கள்விழித்திருப்பஞாலத்துள்ளே
நாயினுக்குத்தவிசிட்டுநாயினேற்கே
காட்டாதனவெல்லாங்காட்டிப்பின்னும்
கேளாதனவெல்லாங்கேட்பித்தென்னை
மீட்டேயும்பிறவாமற்காத்தாட்கொண்டான்
எம்பெருமான்செய்திட்டவிச்சைதானே.

(ப - ரை.) ஆரும்கேட்டு அறியாதான் - யாவராலும் கேட்டறியப்படாதவன், கேடொன்று இல்லான் - அழிவு சிறிதுமில்லாதவன், கிளையிலான் - உறவில்லாதவன், கேளாதே எல்லாம் கேட்டான் - கேளாமலே யெல்லாவற்றையுங் கேட்டவன், நாட்டார்கள் விழித்திருப்ப - நாட்டிலுள்ளவர் விழித்திருக்க, ஞாலத்துள்ளே - உலகத்தில், நாயினுக்கு தவிசு இட்டு - நாய்க்கு ஆசநமிட்டு, நாயினேற்கு - நாயினேனுக்கு, காட்டாதன எல்லாங்காட்டி - காட்டவொண்ணாதவற்றையெல்லாங் காட்டி, பின்னும் - மேலும், கேளாதன எல்லாம் கேட்பித்து - கேட்காதன யாவையும் கேட்பித்து, என்னை - என்னை, மீட்டேயும் பிறவாமல் - மீட்டும் பிறவாமல், காத்து ஆட்கொண்டான் - தடுத்தாண்டான், (இது) எம்பெருமான் செய்திட்ட - எம்பெருமான் செய்த, விச்சைதான் - ஒருவித்தையேயாம், எ - று.

(க - ரை.) ஒருவரானுங் கேட்டறியப்படாதவனும், தனக்கொரு கேடில்லாதவனும், உறவில்லாதவனும், கேளாமலே யெல்லாம் கேட்டவனும் ஆகிய எம்பெருமான் என் சிறுமை நோக்காது, நாய்க்குத் தவிசிட்டாற்போலத் தன்னருகிருத்திக் காட்டற்கரிய தன்னுண்மைநிலையைக் காட்டி, யான் ஒருஞான்றுங் கேளாத வேதசிவாகமாதிகளி னுட்பொருள்களை யெல்லாங் கேட்பித்து, மீட்டும் பிறவாமல் என்னைத் தடுத்தாட்கொண்டான், இஃதோர் வித்தையேயாமென்பதாம்.

(வி - ரை.) கேட்டாருமறியாதான் என்பதற்குக் கேட்டினையுடைய எல்லாராலும் அறியப்படாதவன் என்றுரைத்தலும் பொருந்தும். கேடு - அழிவு. இறைவன் தன்னுண்மைநிலை முதலியவற்றைக்காட்டி, வேதசிவாகமாதிகளின் பொருள்களையெல்லாங் கேட்பித்து, மீட்டும் பிறவாமல் தம்மைத் தடுத்தாட்கொண்டமையால், காட்டாதனவெல்லாங்காட்டிப் பின்னுங்கேளாதனவெல்லாங் கேட்பித்தென்னை மீட்டேயும் பிறவாமற் காத்தாட்கொண்டான் என்றார். நாயினுக்குத் தவிசிட்டு என்றது உடையவனாகிய இறைவனது பெருமையையும் உடைமையாகிய தமது சிறுமையையும் உணர்த்தற்கென்க. (௨அ)

விச்சைதானிதுவொப்பதுண்டோகேட்கின்
மிகுகாதலடியார்தம்மடியனாக்கி
யச்சந்தீர்த்தாட்கொண்டானமுதமூறி
யகநெகவேபுகுந்தாண்டானன்புகூர
வச்சனாண்பெண்ணலியாகாசமாகி
யாரழலாயந்தமாயப்பானின்ற
செச்சைமாமலர்புரையுமேனியெங்கள்
சிவபெருமானெம்பெருமான்றேவர்கோவே.

(ப - ரை.) அச்சன் - (எமது) தந்தையும், ஆண் பெண் அலி ஆகாசம்ஆகி - ஆண் பெண் பேடு ஆகாயம் என்பவைகளாகி, ஆர்அழல் ஆய் - நிறைந்த நெருப்பாகி, அந்தம்ஆய் - இவையாவுக்கும் முடிவாகி, அப்பால்நின்ற - அதற்கும் அப்பாற்பட்டுநின்ற, மா - அழகாகிய, செச்சைமலர் புரையும் - செச்சைமலரைநிகர்த்த, மேனி - திருமேனியையுடைய, எங்கள் சிவபெருமான் - எங்கள் சிவபெருமானும், எம்பெருமான் - எம்பெருமானும், தேவர்கோ - தேவர்பெருமானும் ஆகிய இறைவன், மிகுகாதல் - மிக்க அன்பினையுடைய, அடியார் தம் அடியன்ஆக்கி - தன்னடியார்க் கடியனாக்கி, அச்சம் தீர்த்து - பயத்தைத் தவிர்த்து, ஆட்கொண்டான் - என்னைத் தடுத்தாட்கொண்டவனாய், அமுதம் ஊறி - அமிர்தம் சுரந்து, அகம்நெக - மனம் நெகிழவும், அன்புகூர - அன்புமிகவும், புகுந்து ஆண்டான் - வலியவந் தாண்டருளினன், கேட்கின் - கேட்குமிடத்து, இது ஒப்பது - இதனை நிகர்ப்பதாகிய, விச்சையுண்டோ - வித்தையொன்றுளதோ, எ - று.

(க ரை.) ஆண், பெண், அலி, என்னும் உருவங்களை யிகந்தவ னாய், பஞ்சபூதவடிவனாய், அவற்றின் முடிவிடமாகிய மூலப்பகுதியாய், அதனையுங்கடந்து நின்ற சிவபெருமான், ஒன்றுக்கும் பற்றாத சிறி யேனைத் தன்னடியனாக்கிப் பிறவித்துன்பத்தினின்றும் நீக்கி ஆட்கொ ண்டருளி யென் மனமுருகும்படி அதனுள்ளேபுகுந்து நிலைபெற்றிரு ந்தான். இதுபோன்ற வித்தையொன் றுலகத்திலுண்டோ வென் பது.

(வி - ரை.) வித்தைதானிது வொப்பதுண்டோ: கேட்கின் என் றது, இதனை நிகர்ப்பதாகிய வித்தையொன் றுண்டாகக் கட்புலனா லறியாமையேயன்றிச் செவிப்புலனாற் கேட்டுமறியோம் என்றபடி. அச்சம் என்றது, பிறப்பிறப்பு முதலியவற்றிற் கஞ்சுதலை. மிகு காத லடியார் - பேரன்பினையுடைய அடியார் (மெய்யடியார்.) ஒரு பொ ருள் கிடைப்பின் அதனை முதலில் அடுத்தவர்க்குதவி, அதன்பிறகு தானுகர்வது பெருந்தகையார்க் கியல்பாதல்போல, இறைவன் என்னை முந்தித் தன் அடியார்க்கடியனாக்கிப் பிறகு தனக்காட்கொண்டான் என்பார், "மிகுகாதலடியார் தம்மடியனாக்கி அச்சந்தீர்த்தாட்கொண் டா னமுதமூறியகநெகவே புகுந்தாண்டா னன்புகூர" என்றும் "மிகுகாதலடியார்க்குந் தமக்கும் பொருத்தமுண்டாக, அமுதமூறி யகநெகவே புகுந்தாண்டானன்புகூர" என்றும், அருளிச்செய்தனர். இவ்வாறே பிறாண்டும் "தன்சீரடியார் குலம்பணிகொள்ள வெனைக்கொ டுத்தோன்" எனக் கூறுதல்காண்க. அந்தம் என்றது முடிவிடம். அது இங்கு மூலப்பகுதியை யுணர்த்திற்று. அப்பால் என்றது - அப்பகுதிக் கப்புறத்ததாகிய முத்தியுலகினை. நின்ற என்றது, இறை வனது நிலைபேற்றை யுணர்த்தற்கு. இறைவனது நிலைபேற்றானே அம்முத்தியுலகிற்கும் நிலைபேறுகொள்க. செக்கைமலர் - வெட்சிம லர், அன்றி செக்கைமாமலர் என இரண்டாகப்பிரித்து செச்சைமல ரையும் செந்தாமரைமலரையும் கோடலும் பொருந்தும். செச்சை - செஞ்சந்தனமுமாம். மா - பெருமை, "பூவிற்குத் தாமரையே" என் கிறபடி மலர்களுட் பெருமைவாய்ந்ததாதலால் மாமலர் என்றது தா மரைக்காயிற்று எனக்கொண்டு, செச்சையையும் செந்தாமரையை யுந்நிகர்த்த திருமேனியென்க. உசு - ம் பாடல் செந்தாமரைக் காடனையமேனி என்றதற்கும். இதற்கும் பொருத்த முண்மை யறிக.

தேவர்கோவறியாததேவதேவன்
　　செழும்பொழில்கள்பயந்துகாத்தழிக்குமற்றை
மூவர்கோனாய்நின்றமுதல்வன்மூர்த்தி
　　மூதாதைமாதாளும்பாகத்தெந்தை
யாவர்கோனென்னையும்வந்தாண்டுகொண்டான்
　　யாமார்க்குங்குடியல்லோம்யாதுமஞ்சோ
மேவினோமவனடியாரடியாரோடு
　　மேன்மேலுங்குடைந்தாடியாடுவோமே.

(ப - ரை.) தேவர்கோ அறியாத - தேவர்கட்கரசனாகிய இந்திரனும் அறியாத, தேவதேவன் - தேவர்களுக்குத் தேவன், செழு பொழில்கள் - செழுமையாகிய உலகங்களை, பயந்து - படைத்து, காத்து - காப்பாற்றி, அழிக்கும் - சங்கரிக்கிற, மற்றை - மற்றையோராகிய, மூவர் கோன் ஆய் நின்ற - மூவர்க்கும் தலைவனாகி நின்ற, முதல்வன் - ஆதிபுருடன், மூர்த்தி - அட்டமூர்த்தமாயிருப்பவன், மூதாதை - யாவர்க்கும் பாட்டன், மாது ஆளும் - உமாதேவியால் ஆளப்பட்ட, பாகத்து - பங்கினையுடைய, எந்தை - எமது தந்தை, யாவர்கோன் - எல்லார்க்குந்தலைவன், (இத்தன்மையன்) வந்து - எழுந்தருளி, என்னையும் - நாயினேனையும், ஆண்டுகொண்டான் - ஆண்டுகொண்டருளினன், (ஆதலால் இனி) யாம்-நாம், ஆர்க்கும் - எவர்க்கும், குடிஅல்லோம் - குடிகள் அல்லோம், யாதும்அஞ்சோம் - எதனையும் அஞ்சோம், அவன் அடியார் அடியாரோடு - அவனது அடியார்க்கடியரோடு, மேவினோம் - கூடினோம், மேன்மேலும் - மேலுமேலும், குடைந்து - கவிந்து, ஆடிஆடுவோம் - பலகாலும் ஆடுவோம், எ - று.

(க - ரை.) இறைவன் தானே எழுந்தருளி என் சிறுமைநோக்காது என்னைத் தடுத்தாட்கொண்டமையால் இனி நாம் யார்க்குங் குடிகளல்லோம், எதற்கும் அஞ்சோம், அவனடியாரடியாரோடு கூடினோம், மேன்மேலும் குடைந்தாடுவோம் என்பது.

(வி - ரை.) மூவர் என்றது பிரமன், விட்டுணு, உருத்திரன் என்பவர்களை. மூர்த்தி - மூர்த்தத்தையுடையவன், மூர்த்தம் - உருவம். அட்டமூர்த்தம் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சந்தி

ரன், சூரியன், ஆன்மா என்பன. பாகம் என்றது இடப்பாகத்தை. யாதும் என்பதற்குச் சிறிதும் எனப் பொருள்கூறினுமமையும், குடைந்தாடியாடுதல் - விளைந்தாடுதல். (௯௦)

திருச்சிற்றம்பலம்.

# ஆத்தும சுத்தி.

அதாவது அநுபவத்தழுந்தல்.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆடுகின்றிலைகூத் துடையான்கழற்கன்பிலையென்புருகிப்
பாடுகின்றிலைபதைப்பதுஞ்செய்கிலைபணிகிலைபாதமலர்
சூடுகின்றிலைசூட்டுகின்றதுமிலைதுணையிலிபிணநெஞ்சே
தேடுகின்றிலைதெருவுதோறலறிலைசெய்வதொன்றறியேனே.

(ப - ரை.) துணையிலி - ஒப்பிலியாகிய, பிணம் நெஞ்சே - பேய்போலும் மனமே, கூத்து ஆடுகின்றிலை - கூத்தாடுகின்றிலை, உடையான் கழற்கு - உடையவனது திருவடிக்கு, அன்பு இலை - அன்பு செய்கின்றிலை, என்பு உருகி பாடுகின்றிலை - என்புருகிப்பாடுதலும் செய்கின்றிலை, பதைப்பதும் செய்கிலை - பதைத்தலும் செய்கின்றிலை, பணிகிலை - வணங்குகின்றிலை, பாதமலர் - திருவடிமலரை, சூடுகின்றிலை - தரிக்கின்றிலை, சூட்டுகின்றதும் இலை - சூட்டுவதும் செய்கின்றிலை, தேடுகின்றிலை - தேடுவதும் செய்கின்றிலை, தெருவு தோறு அலறிலை - தெருக்கள் தோறும் நின்று அலறுகின்றிலை, (நீ இத்தன்மையை யாதலால்) செய்வது - செய்யக்கடவதாகிய, ஒன்று - ஒருபாயத்தையும், அறியேன் - யான் அறிந்திலேன், எ - று.

(க - ரை.) நெஞ்சே, உடையவனது திருவடிக்கு அன்பு செய்கின்றிலை, அவ்வன்பின்மேலீட்டால் கூத்தாடுதல் முதலியவையுஞ் செய்கின்றிலை, நீ யிவ்வாறான பின்பு யான் செய்யும்வகை யொன்றும் அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) ஆடுதல் முதலிய காரியங்கள் நிகழ்தற்கு அன்பு காரணமாதலால் அதனை முன் வைக்கவேண்டியிருக்க, ஆடுகின்றிலை யென முற்கூறினது செய்யுள் நடையாதலாலென்க. பாதமலர் சூடுகின்றிலை என்பதற்குத் திருவடியில் அன்பரிட்ட மலரைச் சூடுகின்றிலை யெனவும், திருவடி மலரில் மலரைச் சூட்டுதல் பொருத்த முடைமையின், அதைத் துச் சூட்டுகின்றது மிலையெனவும் கூறுக. பிணநெஞ்சேயென மேல்வந்தமையால் துணையிலி யென்றது இழிவினால் ஒப்பின்மையைக் குறித்தது. பிணநெஞ்சே யென்றது பயனின்மையைக் குறித்தது. (௩௧)

அறிவிலாதவெனைப்புகுந்தாண்டுகொண்டறிவதையருளிமே
னெறியெலாம்புலமாக்கியவெந்தையைப்பந்தனையறுப்பானைப்
பிறிவிலாதவின்னருள்கள்பெற்றிருந்துமாறுடிதிபிணநெஞ்சே
கிறியெலாமிகக்கீழ்ப்படுத்தாய்கெடுத்தாயென்னைக்கெடுமாறே.

(ப - ரை.) பிணம் நெஞ்சே - பேய் மனமே, அறிவு இலாத - அறிவற்ற, என்னை - என்னை, புகுந்து ஆண்டு கொண்டு - எழுந்தருளி வந்தாண்டு கொண்டு, அறிவதை அருளி - அறிவை அருள் செய்து, மேல் நெறி எல்லாம் - மேலாகிய வழிகளையெல்லாம், புலம் ஆக்கிய - புலப்படுத்தின, எந்தையை - எமது தந்தையை, பந்தனை அறுப்பானை - பிறவித்தளையைச் சேதிப்பவனை, பிறிவு இல்லாத - நீக்கமில்லாத, இன் அருள்கள் பெற்றிருந்தும் - இனிய அருள்களைப் பெற்றிருந்தும், மாறுடிதி - மாறுபடா நின்றனை, கிறி எல்லாம் மிக - பொய்ந்நெறிகள் மிகாநிற்க, என்னை கீழ் படுத்தாய் - என்னைத் தாழ்வு படுத்தினை, கெடும் ஆறு கெடுத்தாய் - யான் கெடும் வண்ணம் கெடுத்தனை, எ - று.

(க - ரை.) நெஞ்சே, அறிவில்லாத என்னைத் தானே வலிய வந்தாட்கொண்டதனையும், எந்தையாகிய சிவபெருமான் பலவகையாக அருள் செய்ததனையும், சிறிதும் நினையாது மாறுபடுகின்றனை யாதலால் என்னைக் கெடுத்தே விட்டனை யென்பது.

(வி - ரை.) மேல்நெறி யென்றது முத்திநெறியை. புலமாக்குதல் - உணர்த்துதல். கிறி - பொய். கிறியெலா மிக என்றமையால் மெய்யெலாம் தாழவென்றும் பொருள் போதரும். கெடுமாறு கெடுத்த

லாவது, கெடுத்தற்குரிய வுபாயத்தாற் கெடுத்தல். என்னைக் கெடுத்தல் உனக்குங் கெடுதியா மென்பதைக் குறித்திலை யாதலால், பய னிலியாதி யென்றற்குப் பிணநெஞ்சே யென்றருளினார். (ருஉ)

மாறிநின் றென்னைக்கெடக்கிடந்தனையெம்மதியிலிமடநெஞ்சே
தேறுகின்றிலமினியுனைச்சிக்கெனச்சிவனவன்றிரடோண்மே
னீறுநின்றதுகண்டனையாயினுநெக்கிலையிக்காயங்
கீறுகின்றிலைகெடுவதுன்பரிசிதுகேட்கவுங்கில்லேனே.

(ப - ரை.) எம்மதியிலி - எமது அறிவிலியாகிய, மடநெஞ்சே- அறியாமையையுடைய மனமே, என்னை மாறிநின்று - என்னை மாறுபட்டுநின்று, கெட - யான் கெட, கிடந்து - சும்மாவிருந்து, அனை யை - அத்தன்மையையாயினை, (ஆதலால்) இனி - இனி, உன்னை - உன்னை, சிக்கென - உறுதியாக, தேறுகின்றிலம் - தெளிகின்றிலம், சிவன் அவன் - சிவபெருமானாகிய அவனது, திரள்தோள்மேல் - திரண்டபுயங்களின்மீது, நீறுநின்றது - திருவெண்ணீறிருந்ததனை, கண்டனைஆய் - கண்டும், இன்னும் நெக்கிலை - இன்னம் மனமுருகினையில்லை, இ காயம் கீறு கின்றிலை - இந்த வுடம்பைப் பிளக்கின்றிலை, உன் பரிசு இது - உன் தன்மையாகிய இது, கெடுவது - கெடுதற்குரியது, (அதை) கேட்கவும் கில்லேன் - கேட்கவும் சம்மதியேன், எ - று.

(க - ரை.) அறிவில்லாத நெஞ்சே என்னை யிவ்வாறு செய்த வுன் வரலாற்றை யுறுதியாகத் தெளிந்திலேன் என்பது.

(வி - ரை.) கிடந்தனையைத் தேறுகின்றிலம் என இயைப்பினும் பொருந்தும். சிவபெருமானது திரடோளும் நீற்றழகும் எத்தகையாரையும் கண்கவர் வனப்பினவாதலால் அவற்றைக் கண்டிருந்தும் மனமுருகாமலும் இக்காயத்தைக் கீறாமலுமிருந்தனை, உன் றன்மை கெடுதற்சேயுரியது, அதனைக் கேட்கவும் சகியேன் என்றற்குச் "சிவனவன்றிரடோள் மேனீறுநின்றது கண்டனையாயினு நெக்கிலை யிக்காயங்; கீறுகின்றிலை கெடுவதுன் பரிசிதுகேட்கவுங்கில்லேன்" என்றருளினர். மதியிலி யென்பது நெஞ்சோடியையும். கில் ஆற்றற் பொருண்மையதாதலால் கேட்டுச் சகிக்குமாற்றலிலேன் என் றுங் கூறலமையும். (ருரு)

கிற்றவா மனமேகெடுவா யுடையானடிநாயேனை
விற்றெலாமிகவாள்வதற்குரியவன்விரைமலர்த்திருப்பாத
முற்றிலாவிளந்தளிர்பிரிந்திருந்துநீயுண்டனவெல்லாமுன்
அற்றவாறுநின்னறிவுநின்பெருமையுமளவறுக்கில்லேனே.

(ப - ரை.) கிற்று - வேண்டுகிற்றெல்லாம், அவாம் - ஆசைப்படுகிற, மனமே - நெஞ்சே, கெடுவாய் - கெடுவாயாக, அடிநாயேனை உடையான் - அடிநாயேனை யுடையவன், எல்லாம் விற்று - எல்லாவகையாலும் விற்று, மிக - மிகுதியாக, ஆள்வதற்கு என்னையாண்டருளுதற்கு, உரியவன் - உரிமையுடையவன், (அவ்விறைவனது) விரைமலர் - மணம்பொருந்திய தாமரைமலர்போன்ற, திருப்பாதம் - திருவடியாகிய, முற்றிலா இளந்தளிர் - முதிராத இளந்தளிரை, பிரிந்திருந்து - நீங்கியிருந்து, நீ உண்டன எல்லாம் - நீ நுகர்ந்தனயாவும், முன் அற்ற ஆறும் - முன்னரே அற்றொழிந்த விதத்தையும், நின் அறிவும் - உன்னறிவையும், நின்பெருமையும் - உன் பெருமையையும், அளவறுக்கில்லேன் - அளவுபடுத்தும் ஆற்றலிலேன், எ - று.

(க - ரை.) மனமே, இறைவனது திருவடியைப் பிரிந்து நீ நுகர்ந்த விடய வின்பங்களையும் உன் அறிவுமுதலியவற்றையும் அளவு செய்கிலேன் என்பது.

வி - ரை.) கெடுவாய் - வியப்பின்கண் வந்த முன்னிலை யசையிடைச்சொல். கிரய விக்கிரயங்களைச் செய்தற்குரியவன் என்றற்கு விற்றெலா மிக வாள்வதற்குரியவன் என்றருளினர். இளந்தளிர் என்றலே யமைவதாயிருக்க, முற்றிலா என்றது மிகவும் இளந்தளிர் என்றற்கு. அளவு - எல்லை. (௯௪)

அளவறுப்பதற்கரியவனிமையவர்க்கடியவர்க்கெளியானங்
களவறுத்துநின்றுண்டமைகருத்தினுட்கசிந்துணர்ந்திருந்தேயு
முளகறுத்துனைநினைந்துளம்பெருங்களன்செய்ததுமிலைநெஞ்சே
பளகறுத்துடையான்கழல்பணிந்திலைபரகதிபுகுவானே.

(ப - ரை.) இமையவர்க்கு - தேவர்களுக்கு, அளவறுப்பதற்கு - அளவுபடுத்தற்கு, அரியவன் - அருமையானவன் - அடியவர்க்குஎளியான் - அடியவர்க் கெளிதானவன், (அவன்) நம் களவு அறுத்து

நின்று - நமது களவுமார்க்கத்தைச் சேதித்து நின்று, ஆண்டமை - ஆண்டருளின படியை, கருத்தினுள் - கருத்தினுள்ளே, கசிந்து உணர்ந்திருந்தேயும் - கசிந்தறிந்திருந்தும், உன் - உன்னுடையவாகிய குற்றங்களை, கறுத்து - கோபித்து, உன்னை நினைத்து - உன் நிலைமையைச் சிந்தித்து. உளம் - தன் திருவுளத்தில், பெருகளன் செய்ததும் இல்லை - பெருவஞ்சகம் செய்ததுமில்லை, (இங்ஙனமாக) பரகதி புகுவான் - பரகதியிற் புகும்பொருட்டு, பளகுஅறுத்து - குற்றங்களையொழித்து, உடையான்கழல் - உடையான் திருவடியை, பணிந்திலை - வணங்கினாயில்லை, எ - று.

(க - ரை.) நெஞ்சே, தேவர்களுக்கும் அரியனாகிய இறைவன் நம்மையோர் பொருளாக்கி யாட்கொண்டருளினமையைச் சிந்தித்து, உன் குற்றங்களைநீக்கிப் பரகதியடைதற்கு உடையவன் திருவடியைப் பணிந்தனையில்லை, உன் றன்மையிருந்தவாறென்னை யென்பது.

(வி - ரை.) களவு - கள்ளம். கறுத்தல் - கெடுத்தல். பளகு - குற்றம். புகுவான் என்பதில் வான் எதிர்கால வினையெச்சவிகுதி.

புகுவதாவதும்போதரவில்லதும்பொன்னகர்புகப்போதற்
குருகுவதாவதுமெந்தையெம்பிரானென்னையாண்டவன்கழற்கன்பு
நெகுவதாவதுநித்தலுமமுதொடுதேனொடுபால்கட்டி
மிகுவதாவதுமின்றெனின் மற்றிதற்கென்செய்கேன்வினையேனே.

(ப - ரை.) புகுவதாவதும் - புகுவதாயிருப்பதும், போதரவு இல்லதும் - மீண்டுவருத லில்லாததும், பொன்னகர் - சிவலோகமே, புகப்போதற்கு - (அதைப்)பெறுமாறு செல்வதற்கு, உருகுவதாவதும் - மனம்குழைவதாதலும்,எந்தை - எமது தந்தை,எம்பிரான் - எம்பெருமான், என்னை ஆண்டவன் - என்னை யாண்டருளினவன், (அவனது) கழற்கு - திருவடிக்கு, அன்பு நெகுவதாவதும் - அன்பினால் நெகிழ்வதாதலும், நித்தலும் - நாள்தோறும், அமுதொடுதேனொடு - அமிர்தத்தோடும் தேனோடும், பால்கட்டி - பாற்கட்டியினும், மிகுவதாவதும் - சுவையால் மேற்படுவதாதலும், இன்றெனில் - இல்லையாயின், இதற்கு - இதற்கு, வினையேன் - தீவினையை யுடையேன், என் செய்கேன் - யாதுசெய்வேன், எ - று.

(க - ரை.) நெஞ்சே, போக்குவரவற்ற முத்தியுலகத்திற் புகுதற்கு இறைவன் திருவடிக்கு அன்புசெய்தல் முதலிய குணங்கள் உன்னிடத்தில்லையாயின் யானெவ்வாறுய்வேன் என்பது.

(வி - ரை.) புகுவது - போதல். போதரவு - மீளல். பொன் - அழகு. சிவபுரத்தின் மிக்க அழகுளதொன்றின்மையின் அதனைப் பொன்னகர் என்றருளினர். நெஞ்சே, உன்னைத் திருத்தவலியிலேன் என்பார் "இதற்கென்செய்கேன்" என்றருளினர். வினையேன் என்றது தீவினையையுடையேன் என்றபடி. (௩௬)

வினையென்போலுடையார்பிறாருடையானடிநாயேனைத்
தினையின்பாகமும்பிறிவதுதிருக்குறிப்பன்றுமற்றதனாலே
முனைவன்பாதநன்மலர்பிரிந்திருந்துநான்முட்டிலேன்றலைகீறே
னினையன்பாவனையிரும்புகன்மனஞ்செவியின்னதென்றறியேனே.

(ப - ரை.) என்போல் - என்னைப்போல், வினை உடையார் - தீவினையையுடையவர், பிறர்ஆர் - பிறர் யாருளர், உடையான் - உடையவன், அடி நாயேனை - அடி நாயினேனை, தினையின் பாகமும் - தினை யளவும், பிறிவது - நீங்குவது, திருக்குறிப்பு அன்று - திருக்குறிப்பன்றாகும், அதனாலே - அதினாலே, முனைவன் பாதம் - இறைவனது திருவடியாகிய, நல்மலர் பிரிந்திருந்தும் - நல்லமலரை நீங்கி யிருந்தும், நான் முட்டிலேன் - நான் (தூண் முதலியவற்றில்) முட்டிக்கொள்ளகிலேன், தலைகீறேன் - தலையைப் பிளந்து கொள்ளேன், இனையன் - இத்தன்மையேனாகிய என்னுடைய, பாவனை - சிந்தனை, இரும்பு - இரும்பாகும், மனம் கல் - மனங்கல்லாகும், செவி இன்னதென்று அறியேன் - காது இன்னதென்று சொல்ல அறியேன், எ - று.

(க - ரை.) இறைவனது திருவடியைப் பிரிந்திருந்தலாற்றாது முட்டுதல் தலைகிறுதல் முதலியன செய்திலேன். ஆகலால் என் பாவனை முதலியன இரும்பு முதலியவற்றை நிகர்க்குமென்பது.

(வி - ரை.) ஆர் என்ற வினு எதிர்மறையாய் ஒருவருமில்லையென்பதை யுணர்த்தியது. தினையென்பது சிறுமைக்குக் காட்டுமோரளவை. முனைவன் - முன்னேன். திருவடி பிறவிப்பெருங்கடனீந்துதற்கு மரக்கலம் போறலால் பாதநன்மலர் என்றருளினர். (௩௭)

ஏனையாவருமெய்திட லுற்றுமற்றின்னதென் றறியாத
தேனையானெய்யைக்கரும்பினின்றேறலைச்சிவனையென் சிவலோகக்
கோனைமானனநோக்கிதன்கூறனைக்குறுகிலேனெடுங்கால
மூனையானிருந்தோம்புகின்றேன்கெடுவேனுயிரோயாதே.

(ப - ரை.) ஏனையாவரும் - மற்றையோர் எல்லாரும், எய்திடல் உற்று - அடையத் தொடங்கி, இன்னது என்று அறியாத - இன்னதென்றுணராத, தேனை - தேனை, ஆன் நெய்யை - பசுவின் நெய்யை, கரும்பின் இன் தேறலை - கரும்பின் இனிமையான சாற்றை, சிவனை - சிவபெருமானை, என் சிவலோக கோனை - என் சிவலோகத்தரசனை, மான் அன்ன - பெண் மானின் நோக்கம் போன்ற, நோக்கி - திருநோக்கத்தையுடையவளாகிய உமாதேவியின், கூறனை - பங்கனை, குறுகிலேன் - அணுகிலேன், யான் - நான், நெடுங்காலம் இருந்து, ஊனை - உடம்பை, ஓம்புகின்றேன் - வளர்க்கின்றேன், கெடுவேன் - கெடுவேனாகிய எனது, உயிர் - உயிரானது, ஓயாதே - ஒழியாதோ, எ - று.

(க - ரை.) இறைவனை யடையாது இப்பொய்யுடலைக் காத்திருந்தேன். இப்படிப் பயனிலியாகிய என்னுயிரழியாதோ என்பது.

(வி - ரை.) ஏனையாவரும் என்றது - பிரமன் இந்திரன்முதலிய தேவர்களை. தேனும் கரும்பின்றேறலும் நாவிற்குச் சுவைபயத்தலன்றி, உடம்பிலுள்ள சத்த தாதுக்களுக்கும் உறுதிபயத்தலுடைய நெய்போலச் சிறந்த தன்மையின், அதனை நடுநாயகமாய் வைத்தருளினர். மான் என்றது - மானோக்கத்தை. கூற்றன் எனற்பாலது கூறன்என நின்றது. ஊன் - தசை, அது இவ்விடத்து மிகுதிபற்றி உடம்புக்காயிற்று. (௫௮)

ஒய்விலாதனவுவமனிலிறந்தனவொண்மலர்த்தாடந்து
நாயிலாகியகுலத்தினுங்கடைப்படுமென்னைநன்னெறிகாட்டித்
தாயிலாகியவின்னருள்புரிந்தவென்றலைவனைநனிகாணேன்
றீயில்வீழ்கிலேன்றிண்வரையுருள்கிலேன்செழுங்கடல்புகுவேனே.

(ப - ரை.) ஒய்வு இலாதன - அழியாதனவும், உவமனில் இறந்தன - உவமைப் பொருள்களினின்று நீங்கினவும் ஆகிய, ஒள் - ஒட்பமாகிய, மலர் - தாமரை மலர்போன்ற, தாள் - திருவடிகளை, தந்து -

கொடுத்து, நாயில் ஆகிய குலத்தினும் - நாய்ச்சாதியினும், கடைப் படும் - கடையாகின்ற, என்னை - அடியேனுக்கு, நல் நெறிகாட்டி - நல்வழிகாட்டி, தாயில் ஆகிய - தாய்போன்ற, இன் அருள் புரிந்த - இனிய அருள்செய்த, என் தலைவனை நனி காணேன் - என் இறைவனை மிகவும் காண்கிலேன், தீயில் வீழ்கிலேன் - நெருப்பில் வீழ்கிலேன், திண்வரை உருள்கிலேன் - வலியமலையினின்றும் உருள்கிலேன், செழு கடல் புகுவேனே - செழுமையாகிய கடலிலாயினும் வீழ்வேனோ, அதுவுஞ் செய்யேன், எ - று.

(க - ரை.) அறிவு உவமைகளில்லாதனவாகிய தன் திருவடிகளை யருள்செய்து, நாயினுங் கடைப்பட்ட என்னை நன்னெறி காட்டி ஆண்டருளி, தாயினுமிக்க அருள்செய்த இறைவனைக்காணாத நான் தீப்பாய்தல் முதலிய செய்திலேன், என் மனவலியிருந்தவாறென்னை யென்பது.

(வி - ரை.) ஒப்பிலா தனதாள், உவமனிலிறந்தனதாள் என இயைக்க: நாயிலாகிய குலம் என்றது, நாய்க்குலம் என்றபடி. என்னை-யென்னும் இரண்டனுருபு நான்கனுருபாய் அருள்புரிந்த என்னும் வினைகொண்டது. (௩௯)

வேனில்வேள்கணைகிழித்திட மதிசுடுமதுதனைநினையாதே
மானிலாவியநோக்கியர்படிறிடைமத்திடுதயிராகித்
தேனிலாவியதிருவருள்புரிந்தவென்சிவனகர்புகப்போகே
னூனிலாவியையோம்புதற்பொருட்டினுமுண்டுடுத்திருந்தேனே.

(ப - ரை.) வேனில் வேள்கணை - வேனிற்காலத்து மன்மதனுடைய பாணங்கள், கிழித்திட - உடம்பு முழுதும் தொளையாநிற்க, மதி சுடுமது தன்னை - சந்திரன் சுடுவதையும், நினையாதே - சிந்தியாமலே, மான் நிலாவிய - மானின் பார்வைபோன்று விளங்குகின்ற, நோக்கியர் - பார்வையையுடையவராகிய மாதரது, படிறிடை - வஞ்சவொழுக்கத்தில், மத்து இடுதயிர் ஆகி - மத்திட்டுக் கடையப்படும் தயிர்போல மனஞ்சுழன்று, தேன் நிலாவிய - தேனின் இனிய தன்மை நிலைத்த, திருவருள் புரிந்த - திருவருள் செய்த, என் சிவன் - என் சிவபெருமானது, நகர் - சிவபுரத்தில், புகப்போகேன் - புகப்போகின்றிலேனாகி, ஊனில் ஆவியை - உடம்பினுள் உயிரை, ஓம்புதற்பொருட்டு - வளர்த்தற்பொருட்டு, இன்னும் - இன்ன

மும், உண்டு உடுத்து இருந்தேன் - உண்டும் உடுத்தும் இருந்தேன், எ - று.

(க - ரை.) மாதர் மயக்கத்தில் அகப்பட்டுழன்ற என்னை யாட்கொண்டருளின இறைவனது சிவபுரத்தை யடையேனாகி, உடலுயிர்களை யோம்புதற்பொருட்டு இன்னும் உண்டும் உடுத்தும் இருந்தேன் என்பது.

(வி - ரை.) பரிறு - பொய், வஞ்சம். மத்திமத்தியிராகி என்றது, மனச்சுழற்சிக் கெடுத்துக் காட்டுவதோருவமை. எல்லார்க்குமினிமை பயத்தலால் திருவருளைத் "தேனிலாவிய திருவருள்" என்றருளினர். போகேன் என்னும் முற்றெச்சம், உண்டுடுத்திருந்தேன் என்னும் வினைகொண்டது. (௨0)

திருச்சிற்றம்பலம்.

# கைம்மாறுகொடுத்தல்.

அதாவது தன்னைச் சிவனிடத்திலே கொடுத்தல்.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இருகையானையையொத்திருந்தென்னுளக்
கருவையான்கண்டிலேன்கண்டதெவ்வமே
வருகவென்றுபணித்தனைவானுளோர்க்
கொருவனேகிற்றிலேன்கிற்பனுண்ணவே.

(ப - ரை.) என்னுள் இருகையானையை ஒத்திருந்து - என் மனத்தில் நீ இருகையானையை யொத்திருந்தும், அக்கருவை - அந்த மேன்மையை, யான் கண்டிலேன் - நான் அறிந்திலேன், கண்டது - (மற்றுநான்கண்டது யாதெனின்,) எவ்வமே - துன்பமே, வானுளோர்க்கு ஒருவனே - விண்ணுளோராகிய தேவர்களுக்குள் ஒப்பற்றவனே, வருக என்று - வருவாயாகவென்று, பணித்தனை - கட்டளை

விட்டருளினை, இற்பன் உண்ணகிற்றிலேன் - சதுரப்பாடுடையனாகி அந்த அநுபவசுகத்தை நுகரப்பெற்றிலேன், எ - று.

(க - ரை.) நீ யென் மனத்தி லெழுந்தருளியிருந்தும் நான் துன்பமநுபவியா நிற்றற்கிரங்கி வருகவென்று பணித்தருளினை, அந் தச்சுகாநுபவத்தை நுகரகில்லேன் என்பது.

(வி - ரை.) இறைவன் மாநடச்சட்டையைச் சாத்தியெழுந்தருளின குருமூர்த்தத்தை நினையாநின்று, இருகையானையை யென்றருளினர். எவ்வம் - குறை. அது குறைதற்குக் காரணமாகிய துன்பத்துக்காயிற்று. பணித்தல் - கட்டளையிடுதல். (௪௧)

உண்டொரொண்பொருளென்றுணர்வார்க்கெலாம்
பெண்டிராணலியென்றறியொண்கிலை
தொண்டனேற்குள்ளவாவந்துதோன்றினாய்
கண்டுங்கண்டிலேனென்னகண்மாயமே.

(ப - ரை.) ஓர் ஒண்பொருள் - ஒருஒட்பமாகியபொருள், உண்டு என்று - உளதென்று, உணர்வார்க்கு எல்லாம் - அறிவோர்க்கெல்லாம், பெண்டிர் ஆண் அலி என்று - பெண் ஆண் அலியென்று, அறிய ஒண்கிலை - உணரவொண்ணுகின்றிலை, தொண்டனேற்கு - அடியனேனுக்கு, உள்ள ஆறு - உள்ளபடி, வந்துதோன்றினாய் - வந்து காட்சிகொடுத்தனை, கண்டும் - கண்டும், கண்டிலேன் - கண்டிலேனேனென், (இது) என்னகண்மாயமே - என்னகண்மாயமோ, எ - று.

(க - ரை.) மேலானபொருளொன்றுண்டென்றுணர்ந்தார்க்கும் அறிதற்கரிய நீ யெனக்குள்ளவாறு வந்து காட்சி கொடுத்தனை. அங்ஙனங் காட்சிகொடுத்த வுன்னைக்கண்டும், காணேனாய் மயங்காநின்றேன், இது என்ன கண்மாயம் என்பது.

(வி - ரை.) ஒண்பொருள் - சிறந்தபொருள், அலி - பேடு. உள்ளவாறு என்பது ஈறுதொகுத்தது. கண்மாயம் - கண்கட்டு வித்தை (கண்ணைமறைக்கும் வித்தை.) (௪௨)

மேலைவானவரும்மறியாததோர்
கோலமேயெனையாட்கொண்டகூத்தனே
ஞாலமேவிசும்பேயிவைவந்துபோங்
காலமேயுனையென்றுகொல்காண்பதே.

(ப - ரை.) மேலைவானவரும் அறியாதது - மேன்மையுள்ள தேவர்களும் அறியாததாகிய, ஓர் கோலமே - ஒப்பற்ற கோலமே, என்னை ஆட்கொண்ட கூத்தனே - என்னை யாட்கொண்டருளின கூத்தப்பிரானே, ஞாலம் விசும்பு இவை - மண் விண் என்னும் இவையாவும், வந்துபோம் - தோற்றி யொடுங்குகின்ற, காலமே - காலரூபமாயிருப்பவனே, உன்னை - (இத்தன்மையையாகிய) உன்னை, காண்பது - யான் காணப்பெறுவது, என்று கொல் - எந்நாளோ, எ - று.

(க - ரை.) மேன்மையாகிய தேவர்களும் அறியவொண்ணாத கடவுளே, உன்னை நான் காணப் பெறுவது எந்நாளோ என்பது.

(வி - ரை.) மேலைவானவர் என்றது மக்கள் முதலியோரினுஞ் சிறந்தாராதல் நோக்கி. மேலைவானவர் - மேலுலகத்துள்ள தேவர் என்றலுமாம். வானவர் என்பதில் வான் மேன்மையெனவும், விண் எனவும் பொருள்கொண்டு, மேன்மையுடையார் எனவும் விண்ணுலகத்திலுள்ளார் எனவும் கூறுக. மேலைவானவர் - சாமாநிய தேவர்களினுஞ் சிறந்த தேவராகிய பிரம விட்டுணுக்கள் என்றலு மொன்று. மேலைவானவர் - மேலிருப்பதாகிய விண்ணுலகத்தார் எனவும், மேலை முற்காலத்தில் எனவும் கூறலுமாம். கோலம் - உருவம். ஐம்பெரும் பூதங்களுள் முதலிறுதிகளாகிய மண் விண்களைக் கூறவே இடையனவாகிய நீர் நெருப்பு வாயுக்களும் அடங்குமாதலால், "ஞாலமே விசும்பே" என்றருளினர். என்று எனலே யமைவதாயிருக்க, கொல் எனமேலுங் கூறல் காண்டற் கருமை தோன்றற்கென்க. (சஅ)

காணலாம்பரமேகட்கிறந்ததோர்
வாணிலாப்பொருளேயிங்கொர்பார்ப்பெனப்
பாணனேன்படிற்றாக்கையைவிட்டெனைப்
பூணுமாறறியேன்புலன்போற்றியே.

(ப - ரை.) கட்கு - கண்ணுக்கு, காணல்ஆம் - காணலாகின்ற, பரமே - பரம்பொருளே, கட்கு இறந்தது - கண்ணுக்குக் காணலாகாத, ஓர் - ஒப்பற்ற, வாள் நிலா பொருளே - ஒளிநிலைபெற்ற பொருளே, இங்கு - இவ்வுலகத்தில், ஓர் பார்ப்பு என - ஒருபறவைக் குஞ்சுபோல, பாழ்நனேன் - பாழ்நனாகிய நான், படிறு ஆக்கையை விட்டு - பொய்யுடம்பை விட்டு, புலன்போற்றி - ஐம்பொறிகளைத்

தடுத்து, உன்னை பூணும்ஆறு - (மெய்யாகிய) உன்னை யடையும் வழியை, அறியேன் - அறிந்திலேன், எ - று.

(க - ரை.) கட்புலனாலறியப் படுதலும் அறியப்படாமையுமாகிய இருதன்மையுமுள்ள இறைவனே, அடியேன் இந்தப் பொய்யுடம்பைவிட்டு உன்னை யடையும் வழியை யறிந்திலேன் என்பது.

(வி - ரை.) கட்கு என்பதனை காணலாம் என்பதனோடும் இறந்தது என்பதனோடும் இயைக்க. பார்ப்பு - பறவைக்குஞ்சு. இதுதனக்குப் பறக்கும்பருவம் வருதலும் கூட்டைவிட்டு மேலிடத்திற் பறத்தல்போல, யானும் இந்த வுடம்பைவிட்டு மேலிடத்தானாகிய வுன்னையடைய வகையிலேன் என்றற்கு, "இங்கொர் பார்ப்பெனப் பாணனேன்படிற் றாக்கையைவிட்டுனைப் பூணுமாறறியேன்" என்றருளினர். அம்பலவாணன், குன்றவாணன் என்பவற்றில் வாழ்நன் என்பது வாணன் என நின்றாற்போல, பாழ்நன் பாணன் என நின்றது. படிற்றாக்கையை விட்டு என்றதனால் உன்னையென்பதற்கு மெய்யாகிய வுன்னையெனப் பொருளுரைக்கப்பட்டது. ஆக்கை - ஆக்கப்பட்டது. படிற்றாக்கை யென்பதற்கு, பொய் வஞ்சம் என்பவற்றாலாக்கப்பட்டது எனப் பொருள்கூறுக. (௯௪)

போற்றியென்றும்புரண்டும்புகழ்ந்துநின்
றாற்றன்மிக்கவன்பாலழைக்கின்றிலே
னேற்றுவந்தெதிர்தாமரைத்தாளுறுங்
கூற்றமன்னதொர்கொள்கையென்கொள்கையே.

(ப - ரை.) போற்றி என்றும் - போற்றியென்று சொல்லியும், புரண்டும்-புரண்டும், புகழ்ந்தும் - புகழ்ந்து உரைத்தும், நின்று - நின்று, ஆற்றல் மிக்க அன்பால் - வலிமிகுந்த அன்பினால், அழைக்கின்றிலேன் - அழையாநின்றிலேன், என்கொள்கை - எனதுகொள்கையானது, எதிர் ஏற்று வந்து - எதிர்த்துவந்து, தாமரைதாள் உறும் - தாமரை மலர்போலுந் திருவடியையடைந்த, கூற்றம் அன்னது - யமனை நிகர்த்ததாகிய, ஓர் கொள்கை - ஓர் கோட்பாடேயாம், எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னை அன்பினால் அழையேனாயினேன், இயமனைத் திருவடியால் திருத்திக்கொண்டாற்போல என்னையும் திருத்திக்கோடல்வேண்டும் என்பது.

(வி - ரை.) ஆற்றன்மிக்க அன்பு - ஒருவராலும் சலிப்பிக்க வொண்ணாத அன்பு. தாமரைமுதலாகுபெயர். கூற்றம் - கூறுபடுத்தல் (பிரித்தல்) உடலுயிர்களைப்பிரிப்பவனாதலால் இயமனுக்கு இப்பெயர் உண்டாயிற்று. (௭௫)

கொள்ளுங்கில்லெனையன்பரிற்கூய்ப்பணி
கள்ளும்வண்டுமறாமலர்க்கொன்றையா
னள்ளுங்கீழுளுமேலுளும்யாவுளு
மெள்ளுமெண்ணெயும்போனின்றவெந்தையே.

(ப - ரை.) கள்ளும் - தேனும், வண்டும் - வண்டுகளும், அறா - நீங்காத, கொன்றைமலரான் - கொன்றைமலர்மாலையை யுடையவனாகி, நள்ளும் - நடுவினும், கீழுளும் - முதலினும், மேலுளும் - இறுதியினும், யாவுளும் - எல்லாவுயிர்களுள்ளும், எள்ளும் எண்ணெயும் போல் - எள்ளையும் எண்ணெயையும்போல, நின்ற - வியாபித்து நின்ற, எந்தையே - எமது தந்தையே, கொள்ளும் கில்லெனை - உன்னையறிந்துகொள்ளும் ஆற்றலில்லாத என்னையும், அன்பரின் - உன்மெய்யடியாரைப்போல, கூய்ப்பணி - கூவிக்கொண்டு பணித்தருள்வாயாக, எ - று.

(க - ரை.) கொன்றை மலர்மாலையுடையவனே, எள்ளும் எண்ணெயும்போல எல்லாப்பொருள்களினும் நீக்கமின்றி நிறைந்திருப்பவனே, உன்னையறிந்தடையும் வழி யறியாத என்னையும், உன் அன்பரைப்போலக் கூவிப்பணித்துக்கொண்டருளல் வேண்டும் என்பது.

(வி - ரை.) கொன்றைமலரான் எனற்பாலது மலர்க்கொன்றையான் எனமுன் பின்னாக மாறிநின்றது. மலர்க்கொன்றையான், எந்தை, என்பவற்றை எழுவாயும் பயனிலையுமாக்கியுரைத்தலுமாம். இதில் பணியென்பதனைப் பெயரெச்சமாக்கி கொன்றையானென்னும் பெயரோடு முடிக்க. நள் - நடு. (௭௬)

எந்தையாயெம்பிரான்மற்றுமியாவர்க்குந்
தந்தைதாய்தம்பிரான்றனக்கஃதிலான்
முந்தியென்னுள்புகுந்தனன்யாவருஞ்
சிந்தையாலுமறிவருஞ்செல்வனே.

(ப - ரை.) யாவரும் - எல்லாரும், சிந்தையாலும் - மனத்தாலும், அறிவு அரு செல்வன் - அறிதல் அருமையாகிய செல்வன், எந்தை ஆய் - எமது தந்தையாகி, எம்பிரான் ஆய் - எம்பெருமானாகி, மற்றும் யாவர்க்கும் தந்தை தாய் ஆகி - மற்றுமுள்ள எல்லார்க்கும் தந்தை தாயர் ஆகி, தம்பிரான் ஆய் - தம்பிரானாகி, தனக்கு அஃது இலான் - தனக்கு அது இல்லாதவனாகிய இறைவன், முந்தி - முற்பட்டு, என் உள் புகுந்தனன் - என் மனத்திற் புகுந்தான், எ - று.

(க - ரை.) யாவரும் மனத்தாலும் அறிய வொண்ணாத கடவுள், என் மனத்திற் புகுந்தனன் இது என்னவியப்பு என்பது.

(வி - ரை.) காயம் வாக்கு என்பவற்றானே யன்றி எனப் பொருள்படுதலால், சிந்தையாலும் என்ற வும்மை இறந்ததுதழீஇயது. அஃது என்றது, தந்தை தாய் முதலியோரையுடைத்தாதற்றன்மையை. தனக்காட்படுந் தன்மையெனக் குண்டாவதன் முன்னம் என் மனத்திற் புகுந்தான் என்றற்கு, "முந்தியென்னுள் புகுந்தனன்" என்றருளினர். இது "எழுடையான் பொழில்" என்னும் திருக்கோவையார் செய்யுளில், "என்னை முன்னாளுழுடையான்" என்பதற்குரைக்கப்பட்ட வுரையால் இனிது விளங்கும். (சஎ)

செல்வநல்குரவின்றிவிண்ணோர்புழுப்
புல்வரம்பின்றியார்க்குமரும்பொரு
ளெல்லையில்கழல்கண்டும்பிரிந்தனன்
கல்வகைமனத்தேன்பட்டகட்டமே.

(ப - ரை.) செல்வம் - செல்வமும், நல்குரவு - வறுமையும், இன்றி - இல்லாமல், விண்ணோர் - தேவர்களும், புழு புல் - புழுவும் புல்லுமாகிய, வரம்பு இன்றி - எல்லையில்லாமல், எல்லை இல் கழல் கண்டும் - மேன்மைக்கோர் எல்லையில்லாத திருவடியைக் கண்டும், பிரிந்தனன் - நீங்கினேன், கல்வகை மனத்தேன் பட்ட - கல்வினமாகிய மனத்தினையுடையேன் அடைந்த, கட்டமே - கட்ட காலந்தானோ, எ - று.

(க - ரை.) மேன்மைக்கோரெல்லையில்லாத இறைவனடியைக் கண்டும் அதனைப் பிரிந்தேன், இது என் கெட்ட காலமோ என்பது.

(வி - ரை.) கழல் - அடி. யார்க்கும் என்ற வும்மை முற்றும்மை "யார்க்கு மரும்பொருள் எல்லையில் கழல் கண்டும் பிரிந்த

மையால், "கல்வகை மனத்தேன்பட்ட கட்டமே" என்றருளினர். வகை என்றது, இங்கு இனத்தை. கல்வகை மனத்தேன், வன்மையாற் கல்லைநிகர்த்த மனத்தினேன் என்றவாறு. கட்டம் - துன்பமுமாம். (௪௮)

கட்டறுத்தெனையாண்டுகண்ணாரநீ
றிட்டவன்பரொடியாவருங்காணவே
பட்டிமண்டபமேற்றினையேற்றினை
யெட்டினோடிரண்டுமறியேனையே.

(ப - ரை.) கட்டு அறுத்து - பிறவித்தளையைச் சேதித்து, என்னை ஆண்டு - என்னை யாண்டருளி, நீறு இட்ட - திருவெண்ணீற்றை யணிந்த, அன்பரோடு - அன்பர்களோடு, யாவரும் - எல்லாரும், கண் ஆர காண - கண்ணாரக்காணும்படி, பட்டி - கள்வனாய், எட்டினோடு இரண்டும் அறியேனை - எட்டோடு இரண்டினையும் அறியாத என்னை, மண்டபம் ஏற்றினை ஏற்றினை - உன் திருவோலக்க மண்டபத்தில் ஏறச்செய்தனை ஏறச்செய்தனை, ஏ - இஃதென்ன வியப்பு, எ - று.

(க - ரை.) எட்டிரண்டறியாத கள்வனாகிய என்னை, உன் மெய்யடியார் முதலினராகிய எல்லாருங் காணும்படி யாண்டருளி உன் திருவோலக்க மண்டபத்தி லேறச்செய்தருளினை. இஃதென்ன வியப்பு என்பது.

(வி - ரை.) கட்டு - பிறவித்தளை. கண்ணார ஆண்டு என்றியைத்து, கண்ணோக்கத்தா லாண்டருளி யென்றுரைப்பினுமாம். இதனைச் சட்சுதீட்சையென்பர். அன்பர் யாவர்க்கும் நீறு சிறந்த சின்னமாதலால் நீறிட்ட அன்பர் என்றருளினர். பட்டி - இடம். பட்டி மண்டபம், இடமகன்ற மண்டபம். பட்டி என்பதற்கு நாய் எனவும் பொருள் கூறுதலுண்டு, அது நாய் சிவிகை யேற்றுவித்த" என்பதனோ டொருபுடை யொத்திருத்தலானென்க. எட்டு இரண்டு என்றது அகர உகரங்களை. மறைப்பொருளனவாகிய இவற்றின் விரிவெல்லாம் குருமுகத்தா னுணர்ந்தமைக. (௪௯)

அறிவனேயமுதேயடிநாயினே
னறிவனாகக்கொண்டோவெனையாண்டது
வறிவிலாமையன்றேகண்டதாண்டநா
ளறிவனோவல்லனோவருளீசனே.

(ப - ரை.) அறிவனே - அறிவுருவனே, அமுதே - அமிர்தமே அடிநாயினேன் - உன் திருவடிக்கீழ் நாய்போல்வேன், அறிவன் ஆக கொண்டோ - அறிவுடையவனாகக்கொண்டோ, என்னை ஆண்டது - என்னையாண்டருளினது, அன்றே கண்டது - அந்நாளே நீ கண்டது, அறிவிலாமை - அறியாமையே, ஆண்டநாள் - என்னை யாண்டருளின நாளில், அறிவனோ - நான் அறிவுடையேனோ, அல்லனோ - அறிவிலேனோ, ஈசனே - பெருஞ்செல்வனே, அருள் - அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) நான் உனக்கடிமைப்பட்ட காலத்தில் எனக்கிருந்தது அறியாமையே, அங்ஙனமாக என்னை அறிவுடையவனாகக் கொண்டோ நீ யாண்டருளினது என்பது.

(வி - ரை.) ஞானமயனாதலால் அறிவனே என்றும், அன்பர்க்கு அமுதம்போல்பவனாதலால் அமுதே என்றும் அருளிச்செய்தனர். அடுத்தாரையும் அழிவிலிகளாக்கித் தானும் அழிவிலியாயிருத்தலால் அமுது என்றார் எனினும் பொருந்தும். (௫0)

திருச்சிற்றம்பலம்.

---

# அநுபோகசுத்தி.

அதாவது சுகமேலீடு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஈசனேயென்னெம்மானேயெந்தைபெருமானென்பிறவி
நாசனேநான்யாதுமொன்றல்லாப்பொல்லாநாயான
நீசனேனையாண்டாய்க்குநினைக்கமாட்டேன்கண்டாயே
தேசனேயம்பலவனேசெய்வதொன்றுமறியேனே.

(ப - ரை.) ஈசனே - செல்வப்பெருக்கையுடையவனே, என் எம்மானே - என் எம்பெருமானே, எந்தை பெருமான் - எமது தந்தையாகிய பெருமானே, என் பிறவி நாசனே - என் பிறவியை நசிக்கச்செய்வோனே, நான் - யான், யாதும் ஒன்று அல்லா - ஒரு பொருளுமல்லாத, நாயான - நாய்போன்ற, நீசனேனை - நீசனாகிய என்னை, ஆண்டாய்க்கு - ஆண்டருளின உன்னைக் குறித்து, நினைக்கமாட்டேன் - சிந்திக்கமாட்டேன், தேசனே - ஒளியுருவனே, அம்பலவனே - அம்பலத்தையுடையவனே, செய்வது - செய்யக்கடவதை, ஒன்றும் அறியேன் - சிறிதும் அறியமாட்டேன், எ - று.

(க - ரை.) இறைவனே, என் பிறவி நசிக்கும்படி என்னையாண்டருளின உன்னைக் குறித்துச் சிந்தியேன், செய்யக்கடவதையும் அறியேன் என்பது.

(வி - ரை.) ஈசன் - பெருஞ் செல்வத்தையுடையவன். (எல்லாப்பொருள்களையும் தனக்குடைமையாக வுடையவன்) தேசு - ஒளி.

செய்வதறியாச்சிறுநாயேன்செம்பொற்பாதமலர்காணாப்
பொய்யர்பெறும்பேறத்தனையும்பெறுதற்குரியேன்பொய்யிலா
மெய்யர்வெறியார்மலர்ப்பாதமேவக்கண்டுங்கேட்டிருந்தும்
பொய்யனேனானுண்டுடுத்திங்கிருப்பதானேன்போரேறே.

(ப - ரை.) செய்வது அறியா - செய்வதற்குரியதை அறியாத, சிறு நாயேன் - சிறு நாயினேன், செம்பொன் - செம்பொன்போன்ற, பாத மலர் - உன் திருவடித்தாமரை மலரை, காணா - காணாத, பொய்யர் - பொய்யர்கள், பெறும்பேறு அத்தனையும் - அடையும் பேறுகளையெல்லாம், பெறுசற்கு உரியேன் - அடைதற்குரியேனாகி, பொய் இல்லா - பொய்யற்ற, மெய்யர் - மெய்யினர், வெறி ஆர் - மணம் நிறைந்த, மலர் பாதம் - தாமரைமலர்போலும் (உன்) திருவடியை, மேவக்கண்டும் - அடையக்கண்டும், கேட்டிருந்தும் - கேள்விப்பட்டிருந்தும், பொய்யனேன் நான் - பொய்யினேனாகிய நான், உண்டு உடுத்து - உண்டும் உடுத்தும், இங்கு இருப்பதானேன் - இவ்வுலகத்தில் இருக்கலாயினேன், போர் ஏறே - போரில் ஆண்சிங்கம்போல்பவனே, எ - று.

(க - ரை.) செய்ய வடுப்பதிது வென்றறியாத நாயேன் உன் திருவடியைக்காணாத பொய்யர் பெறும் பேறெல்லாம் பெறுதற்குரி

யேனாகி, உன் மெய்யன்பர் உன் திருவடியை யடையக்கண்டும் கேட்டும், அதனையடைய முயலாது பொய்யனாய் உண்டுடுத்துக் காலங்கழிக்கின்றேன் என்பது.

(வி - ரை.) செய்வதறியா என்றாரேனும் செய்வதுந் தவிர்வதுமறியா எனப்பொருள் கொள்க. சிறு நாயேன் - சிறுமையையுடைய நாயினேன். செம்பொற்பாத மலர் என்றது எய்தற்கருமை நோக்கி. பொய்யர் பெறும் பேறு என்றது துன்பத்தை. (௫௨)

போரேறேநின்பொன்னகர்வாய்நீபோந்தருளியிருணீக்கி
வாரேறிளமென்முலையாளோடுடன்வந்தருளவருள்பெற்ற
சீரேறடியார்நின்பாதஞ்சேரக்கண்டுங்கண்கெட்ட
வூரேறாயிங்குழல்வேனோகொடியேனுயிர்தானுலவாதே.

(ப - ரை.) போர் ஏறே - போரேறு போல்பவனே, நின் பொன் நகர்வாய் - உன்பொன்னகரினின்றும், நீ போந்து அருளி - நீயெழுந்தருளி, இருள் நீக்கி - மனத்திருளை நீக்கி, வார் ஏறு - வாரணியப்பெற்ற, இளமெல் முலையாளோடு உடன் - இளமையாகிய மெல்லிய தனங்களையுடையவளாகிய உமாதேவியோடுகூட, வந்து அருள - வந்து அருள்செய்ய, அருள்பெற்ற - உன் திருவருள்பெற்ற, சீர் ஏறு அடியார் - சிறப்பு மிகுந்ததொண்டர், நின்பாதம் சேரகண்டும் - உன் திருவடியை அடையக்கண்டும், கொடியேன் உயிர் உலவாது - கொடியேன் உயிரழியாமல், கண்கெட்ட ஊர் ஏறு ஆய் - கண்ணிழந்த ஊர்ப்பன்றி போன்று, இங்கு உழல்வேனோ - இவ்வுலகத்தில் சுழலாநிற்பேனோ, எ - று.

(க - ரை.) இறைவனே, நீ உன் சிவபுரத்தினின்றும் எம்பிராட்டியோடும் இவ்விடத் தெழுந்தருளி, அருள்செய்யப்பெற்ற உன் அன்பர் உன் திருவடியை யடையக்கண்டும், கண்கெட்ட ஊர்ப் பன்றிபோன்று இவ்விடத் துழலாநிற்பேனோ, இத்தன்மையேனது உயிர் நீங்காதோ என்பது.

(வி - ரை.) பொன்நகர் - அழகாகியநகர். இதிற் சிறந்தழகிதானநகர் ஒன்றின்மையால், பொன்னகர் என்றருளினர். பொன்னகர்வாய் என்பதில் வாய் நீங்கற்பொருளதாகிய ஐந்தனுருபாகக் கொள்ளப்பட்டது. அருளுருவாகிய பிராட்டியோடு கூடாவழி

அருள்செய்தலியலாமையால் "வாரேறிளமென் முலையாளோடுடன் வந்தருள" என்றருளினர். அருள்பெற்ற சீரேறடியார் என்றமை யால், சீரேறுதற்குக் காரணம் அருளென்றதாயிற்று. ஊரேறு என் றொழியாது கண்கெட்ட என விசேடணங்கொடுத்தது மிகவும் தம்மையிழித்தற்கென்க. ஊரேறு என்றதில் ஏறு - இடபமெனினும் பொருந்தும். (ருக)

உலவாக்காலந்தவமெய்தியுறுப்பும்வெறுத்திங்குனைக்காண்பான்
பலமாமுனிவர்நனிவாடப்பாவியேனைப்பணிகொண்டாய்
மலமாக்குரம்பையிதுமாய்க்கமாட்டேன்மணியேயுனைக்காண்பா
னலவாநிற்குமன்பிலேனென்கொண் டெழுகேனெம்மானே.

(ப - ரை.) உலவாகாலம் - ஒழியாதகாலம், தவம் எய்தி - தவத் தை மேற்கொண்டு, உறுப்பும் வெறுத்து - உடம்பையும் வெறுத்து, இங்கு உன்னை காண்பான் - இவ்வுலகத்தில் உன்னைக் காணும்பொரு ட்டு, பலமாமுனிவர் - பலராகிய பெரியமுனிவர், நனிவாட - மிகவும் வாடாநிற்க, பாவியேனை - பாவியாகிய என்னை, பணிகொண்டாய் - ஏவல்கொண்டாய், மணியே - மாணிக்கமே, உன்னைக்காண்பான் - உன்னைக்காணும்பொருட்டு, மா - பெரிய; மலம் குரம்பை - மலக் கூடாகிய, இது - இதனை, மாய்க்கமாட்டேன் - ஒழிக்கமாட்டேன், அலவாநிற்கும் - துன்புறா நிற்கிற, அன்பு இலேன் - அன்பற்றே னாகிய நான், என்கொண்டு எழுகேன் - யாதுகொண்டு உயர்வேன், எம்மானே - எம்பெரியோனே, எ - று.

(க - ரை.) அளவில்லாத காலம் உடம்பையும் வெறுத்துத் தவம்புரிந்த பலமுனிவரும் வாடாநிற்க, பாவியாகிய என்னைப்பணி கொண்டனை, அங்ஙனமாகவும், இந்த மலவுடம்பை யொழிக்க முயலேன், உன்கண் அன்பில்லாத நான் எதனைக்கொண்டுய்வேன் என்பது.

(வி - ரை.) உலவுதல் — ஒழிதல், (கெடுதல்). உறுப்பு இங்கு உடம்புக்காயிற்று. இதனைவெறுத்தலாவது "என்பெழுந்தியங்கும் யாக்கையர்" என்றவாறே உடம்பை யொறுத்தல். "சுடச்சுடரும் பொன் போ லொளிவிடுந்துன்பஞ் சுடச்சுடநோற்கிற்பவர்க்கு" என் பது திருக்குறள். உறுப்பும் என்பது வீடுபேற்றுக்குத் துணைக்காரண மாதற் சிறப்புநோக்கி யாதலால் உம்மை உயர்வு சிறப்பு. ஏனையவற்

றை வெறுத்தலே யன்றி யெனப்பொருள்படலால் இறந்தது தழீஇ யதுமாம். அலவாநிற்றல் — அங்கலாய்த்தல், துன்புறல். (௬௪)

மானேர்நோக்கியுமையாள்பங்காவந்திங்காட்கொண்ட
தேனேயமுதேகரும்பின்றெளிவேசிவனேதென்றில்லைக்
கோனேயுன்றன்றிருக்குறிப்புக்கூடுவார்நின்கழல்கூட
வூனார்புழுக்கூடிதுகாத்திங்கிருப்பதானேனுடையானே.

(ப - ரை.) மான்நேர்நோக்கி - மானினது நோக்கத்தை நிகர்த்த நோக்கத்தை யுடையாளாகிய, உமையாள் பங்கா - உமாதேவி பாகனே, இங்குவந்து ஆட்கொண்ட - இங்கு எழுந்தருளி அடிமை கொண்ட, தேனே - தேறலே, அமுதே - அமிர்தமே, கரும்பின் தெளிவே - கருப்பஞ்சாற்றின் தெளிவே, சிவனே - சிவபெருமானே, தென்தில்லைக் கோனே - தென்றில்லைக்கதிபனே, உன் திருக்குறிப்புகூடுவார் - உன் திருக்குறிப்பைப் பெறுவோர், நின் கழல்கூட - உன் திருவடியைச் சேராநிற்க, (நான்) ஊன்ஆர் - தசைநிறைந்த, புழுக்கூடு இது - புழுக்கூடாகிய இதனை, காத்து - வளர்த்து, இங்கு இருப்பது ஆனேன் - இவ்விடத்தில் இருக்கலாயினேன், உடையானே - உடையவனே, எ - று.

(க - ரை.) இறைவனே, உன் திருவுளப்பாங்காக வொழுகும் அன்பர் உன் திருவடியை யடையாநிற்ச, நான் இந்தப் புழுக்கூட்டைக் காத்திருக்கின்றேன் என்பது.

(வி - ரை.) வந்து இங்கு ஆட்கொண்ட என்றமையால், தடுத்தாட்கொண்டமை பெறப்பட்டது. தேன் கரும்பின் றெளிவு என்பவற்றிடையே அமுதுவைத்தருளினர் சிறப்பு நோக்கி. (௬௫)

உடையானேநின்றனையுள்கியுள்ளமுருகும்பெருங்காத
லுடையாருடையாய்நின்பாதஞ்சேரக்கண்டிங்கூர்நாயிற்
கடையானேனெஞ்சுருகாதேன்கல்லாமனத்தேன்கசியாதேன்
முடையார்புழுக்கூடிதுகாத்திங்கிருப்பதாகமுடித்தாயே.

(ப - ரை.) உடையானே - உடையவனே, நின்றனை உள்கி - உன்னை நினைத்து, உள்ளம் உருகும் - மனமுருகாநின்ற, பெருங்

காதல் உடையார் - பேரன்பினையுடையார், உடையாய் - அடிமை கொண்டவனாகிய, நின்பாதம் - உன் திருவடியை, சேர கண்டு - அடையக்கண்டும், இங்கு - இவ்விடத்தில், ஊர் நாயின் - ஊர் நாயினும், கடை ஆனேன் - கடைப்பட்டவனும், நெஞ்சு உருகாதேன் - மனமுருகாதவனும், கல் ஆம் மனத்தேன் - கல்லை நிகர்த்த மனத்தையுடையவனும், கசியாதேன் - மனங்கரையாதவனுமாகிய நான், முடை ஆர் - புலால்நாற்றம் நிறைந்த, புழுக்கூடு இது - புழுக்கூடாகிய இதனை, காத்து - வளர்த்து, இங்கு இருப்பதாக முடித்தாய் - இவ்விடத்தில் இருப்பதாக முடிவுசெய்தாய், எ - று.

(க - ரை.) உடையவனே, உன்னை நினைந்துருகும் அன்பர் உன் திருவடியைச் சேரக்கண்டும், நான் இந்தப் புழுக்கூட்டைக் காத்திருப்பதாக முடிவுசெய்தாய், என்பாவமிருந்த வாறென்னை யென்பது.

(வி - ரை.) உள்கல் - நினைத்தல். காதல் - அன்பு. கல்லா மனத்தேன் என்பதற்குக் கற்றறிவில்லாத மனத்தையுடையேன் என்றுரைத்தலு மொன்று. முடை - முடைநாற்றம். (துர்க்கந்தம்.)

முடித்தவாறுமென் றனக்கேதக்கதே முன்னடியாரைப்
பிடித்தவாறுஞ்சேராமற்சோர னேனிங்கொருத்திவாய்
துடித்தவாறுந் துகிலிறையேசோர்ந்தவாறுமுகங்குறுவேர்
பொடித்தவாறுமிவையுணர்ந்துகேடென் றனக்கேசூழ்ந்தேனே.

(ப - ரை.) முடித்தவாறும் - முடித்தவிதமும், என்றனக்கு தக்கதே - எனக்குத் தகுந்ததே, முன் - முன்னே, அடியாரை - உன் அடியாரை, பிடித்தவாறும் சேராமல் - பற்றினவிதமும் கைகூடாமல், சோரனேன் - கள்ளனாகிய நான், இங்கு - இவ்விடத்தில், ஒருத்திவாய் துடித்தவாறும் - ஒருத்தியின்வாய் பதைத்தவிதமும், துகில் இறை சோர்ந்தவாறும் - ஆடை சிறிது நெகிழ்ந்தவிதமும், முகம் குறுவேர் பொடித்தவாறும் - முகத்தில் சிறிய வெயர்வை அரும்பின விதமும் ஆகிய, இவை உணர்ந்து - இவற்றைக்கண்டு, என்றனக்கே கேடுசூழ்ந்தேன் - எனக்கே கேட்டினைச்செய்துகொண்டேன், எ-று.

(க - ரை.) நீ முடித்தவிதம் எனக்குத் தக்கதே, நான் உன் அடியாரைப் பற்றாதுவிட்டதனால், என்னை மாயையாகிய பெண் வருத்த, எனக்கு நானே கேடுசூழ்ந்தேன் என்பது.

(வி - ரை.) "முன்னடியாரைப் பிடித்தவாறு" என்றது திருப்பெருந்துறையில் அடியாரை யடைந்ததைக் குறித்தது. அவர்கள் மறைதலும் மாயை தம்மை வருத்தினமைதோன்ற இவ்வாறு கூறியருளினர். வாய் என்றது அதரத்தை "வாய்பவளந்துடிக்கின்றவா" என்பது திருக்கோவையார். வாய்துடித்தல் முதலிய குறிகள் காம மிகுதியாலுண்டாவன. (௧௭)

தேனைப்பாலைக்கன்னலின்றெளியையொளியைத்தெளிந்தார்த
மூனையுருக்குமுடையானையும்பரானைவம்பனே
னானின்னடியேனீயென்னையாண்டாயென்றாலடியேற்குத்
தானுஞ்சிரித்தேயருளலாந்தன்மையாமென்றன்மையே.

(ப - ரை.) தேனை - தேறலை, பாலை - பாலை, கன்னலின்தெளியை - கருப்பஞ்சாற்றின் தெளிவை, ஒளியை - பிரகாசத்தை, தெளிந்தார் - தெளிந்தவரது, ஊனைஉருக்கும் - உடலையுருக்குகின்ற, உடையானை - உடையவனை, உம்பரானை - சிதாகாயத்தையுடையவனை, வம்பனேன் - துட்டனாகிய நான், நான் நின்அடியேன் - நான் உன் அடியேன், நீ என்னை ஆண்டாய் - நீயென்னையாண்டவன், என்றால் - என்றுசொன்னால், என் தன்மை - என் தன்மையானது, அடியேற்குத்தானும் - அடியேனுக்கும், சிரித்தே அருளலாம் தன்மை ஆம் - சிரித்தே அருள்செய்யலாகும் தன்மையதாம், எ - று.

(க - ரை.) இறைவனே, நீ மிகவும் எளிதாக என்னையாட்கொண்டருளலாம், என்பது.

(வி - ரை.) "தேனைப்பாலைக்கன்னலின்றெளியை யொளியைத்தெளிந்தார்தம் ஊனையுருக்கும்" என்றதற்கேற்ப, "உடையானே" என்றருளினர், உம்பர்-மேலிடம். (௧௮)

தன்மைபிறராலறியாததலைவாபொல்லாநாயான
புன்மையேனையாண்டையாபுறமேபோகவிடுவாயோ
வென்னைநோக்குவார்யாரேயென்னான்செய்கேனெம்பெருமான்
பொன்னேதிகழுந்திருமேனியெந்தாயெங்குப்புகுவேனே.

(ப - ரை.) பிறரால் அறியாததன்மை - (அன்பரானன்றி) பிறரால் அறியப்படாததன்மையையுடைய, தலைவா - தலைவனே, பொல்

லா நாய் ஆன - பொல்லாதநாய்போன்ற, புன்மையேனை - இழிவுடையேனாகிய என்னை, ஆண்டு - ஆண்டருளி, ஐயா - ஐயனே, புறமே போகவிடுவாயோ - புறத்தே செல்லவிடுவாயோ, என்னை நோக்குவார் யார் - என்னை நோக்குவோர்யாவர், நான் என் செய்கேன் - நான் யாதுசெய்வேன், எம்பெருமான் - எம்பெருமானே, பொன்திகழும் - பொன்போலப் பிரகாசிக்கிற, திரு மேனி - திருமேனியையுடைய, எந்தாய் - எந்தையே, எங்கு புகுவேன் - எவ்விடத்தில் அடைக்கலம் புகுவேன், எ - று.

(க - ரை.) இறைவனே, புன்மையையுடையேனை ஆண்டருளிப் புறத்தே போகவிடுதியோ, நீயே யவ்வாறு செய்யின், யான் என் செய்வேன், எங்குப் புகுவேன், என்னை நோக்குவோர் யார் என்பது.

(வி - ரை.) தன்மை - குணம், சுபாவம். ஆளாதுபுறம் போகவிடுதலினையும். ஆண்டுபுறம்போகவிடுதலியையாது என்றற்கு, "ஆண்டையாபுறமே போகவிடுவாயோ" என்றருளினர். (௫௯)

புகுவேனெனதேநின்பாதம்போற்றுமடியாருண்ணின்று
நகுவேன்பண்டுதோணோக்கிநாணமில்லாநாயினே
னெகுமன்பில்லைநினைக்காணநீயாண்டருளவடியேனுந்
தகுவனேயென்றன்மையேயெந்தாயந்தோதரியேனே.

(ப - ரை.) எனதே நின் பாதம் புகுவேன் - எனதேயாகிய உன் திருவடியில் அடைக்கலம் புகுவேன், போற்றும் - வணங்குகிற, அடியாருள் நின்று - அடியார் நடுவில் நின்று, பண்டு தோள் நோக்கி - பழமையாகிய தோள்களைப் பார்த்து, நாணம் இல்லா நாயினேன் - நாணமற்ற நாயினேன், நகுவேன் - சிரிப்பேன், நின்னை காண - உன்னைக் காணுதற்கு, நெகும் அன்பு இல்லை - மன முருகாநின்ற அன்பு இல்லை, நீ ஆண்டருள - நீ யாண்டருளுதற்கு, அடியேனும் தகுவனே - அடியேனும் தகுவேனோ, என் தன்மையே - இது என்ன தன்மையோ, எந்தாய் - எந்தையே, அந்தோ - ஐயோ, தரியேன் - தரிக்கமாட்டேன், எ - று.

(க - ரை.) இறைவனே, உன்திருவடியை அடைகின்றேன், உன்னைக்காண்பதற்கு அன்புடையேனல்லேன், ஆயினும் நீ யாண்டருளத் தகுதியுடையேனோ, எந்தாய், இங்குத்தரித்திரேன் என்பது.

(வி - ரை.) பண்டு - முன்னே, யெனினுமாம். தரித்தல் - சகித்தல். (௬0)

திருச்சிற்றம்பலம்.

# காருணியத்திரங்கல்.

அதாவது சிவனுடைய வெற்றிப்பாட்டிரங்கல்.

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தரிக்கிலேன்காயவாழ்க்கைசங்கராபோற்றிவான
விருத்தனேபோற்றியெங்கள்விடலையேபோற்றியொப்பி
லொருத்தனேபோற்றியும்பர்தம்பிரான்போற்றிதில்லை
நிருத்தனேபோற்றியெங்கணின்மலாபோற்றிபோற்றி.

(ப - ரை.) காயவாழ்க்கை - உடம்போடுகூடி வாழும் வாழ்வை, தரிக்கிலேன் - தாங்ககில்லேன், சங்கரா - சங்கரனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், வான விருத்தனே போற்றி - சிதாகாயத்தில் வாழ்கின்ற பழையோனே உனக்கு நமஸ்காரம், எங்கள் விடலையே போற்றி - எங்கள் திண்ணியனே உனக்கு நமஸ்காரம், ஒப்பு இல் ஒருத்தனே போற்றி - நிகரற்ற ஒருவனே உனக்கு நமஸ்காரம், உம்பர் தம்பிரான் போற்றி - தேவர் பிரானே உனக்கு நமஸ்காரம், தில்லை நிருத்தனே போற்றி - தில்லையில் நடனஞ்செய்வோனே உனக்கு நமஸ்காரம், எங்கள் நின்மலா போற்றி போற்றி - எங்கள் நிர்மலனே உனக்கு நமஸ்காரம் நமஸ்காரம், எ - று.

(க - ரை.) இறைவனே, இந்த வுடம்போடுகூடி வாழும் வாழ்க்கையை யொழித்தருளவேண்டும், இதன்பொருட்டு உன்னை வணங்குகின்றேன் என்பது.

(வி - ரை.) சங்கரன் - சுகத்தைச்செய்பவன். சம் - சுகம், கரன் - செய்பவன். நிருத்தம் - கூத்து, நின்மலன் - மலரகிதன்.

போற்றியோநமச்சிவாயபுயங்கனேமயங்குகின்றேன்
போற்றியோநமச்சிவாயபுகலிடம்பிறிதொன்றில்லை
போற்றியோநமச்சிவாயபுறமெனைப்போக்கல்கண்டாய்
போற்றியோநமச்சிவாயசயசயபோற்றிபோற்றி.

(ப - ரை.) புயங்கனே மயங்குகின்றேன் - பாம்பணியையுடை, யவனே மயங்கா நின்றேன், ஓ நமச்சிவாய - ஓநமச்சிவாயனே. போற்றி - உனக்கு நமஸ்காரம், புகல் இடம் பிறிது ஒன்று இல்லை - நான் சரண்புகுதற்குரிய இடம் வேறொன்றில்லை, ஓ நமச்சிவாய - ஓநமச்சிவாயனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், என்னை புறம் போக்கல் - என்னைப் புறத்தே போகவிடாதே, ஓ நமச்சிவாய - ஓநமச்சிவாயனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், ஓ நமச்சிவாய - ஓநமச்சிவாயனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், சய சய - உனக்கு வெற்றியுண்டாக வெற்றியுண்டாக, போற்றி போற்றி - உனக்கு நமஸ்காரம் நமஸ்காரம், எ - று.

(க - ரை.) இறைவனே, மயங்குகின்றேன், உன்னை யன்றி வேறு புகலிடமில்லை, ஆதலால் என்னைக் கைவிடாது காத்தருள வேண்டும் என்பது.

(வி - ரை.) புயங்கம் - பாம்பு. புயங்கம் - கூத்து என்றும் பொருள்படலால் புயங்கமென்னும் கூத்தையுடையவனே யென்றலுமாம். (௬௨)

போற்றியென்போலும்பொய்யர்தம்மையாட்கொள்ளும்வள்ளல்
போற்றிநின்பாதம்போற்றிநாதனேபோற்றிபோற்றி
போற்றிநின்கருணைவெள்ளப்புதுமதுப்புவனநீர்தீக்
காற்றியமானன்வானமிருசுடர்க்கடவுளானே.

(ப - ரை.) என் போலும் - என்னைப் போன்ற, பொய்யர் தம்மை - பொய்யர்களை, ஆட்கொள்ளும் - அடிமை கொள்ளுகின்ற, வள்ளல் - வள்ளலே, போற்றி - உனக்கு நமஸ்காரம், நின் பாதம் - உன் திருவடிகளுக்கு, போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம், நாதனே - தலைவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், நின் கருணை வெள்ளம் புதுமது போற்றி - உனது கருணைப் பெருக்காகிய புதிய

தேனுக்கு நமஸ்காரம், புவனம் - மண், நீர் - நீர், தீ - நெருப்பு, காற்று - வாயு, இயமானன் - உயிர், வானம் - ஆகாயம், இருசுடர் - இருசுடர்கள், (இவையாவுமாகி நின்ற) கடவுளானே - தேவனே; போற்றி - உனக்கு நமஸ்காரம், எ - று.

(க - ரை.) என்போலும் பொய்யனையும் ஆட்கொள்ளும் வள்ளலே, அட்டமூர்த்தமுமா யிருப்பவனே, உனக்கு நமஸ்காரம் என்பது.

(வி - ரை.) வள்ளல் - வரையாது கொடுப்போன். இறைவன் மெய்யரை யாட்கொள்ளுதலே யன்றிப் பொய்யரையும் வரையாது ஆட்கொள்வோனாதலால் வள்ளல் என்றார். வரைதல் - நீக்கல்.

கடவுளேபோற்றியென்னைக்கண்டுகொண்டருளுபோற்றி
விடவுளேயுருக்கியென்னையாண்டிடவேண்டும்போற்றி
யுடலிதுகளைந்திட்டொல்லையும்பர்தந்தருளுபோற்றி
சடையுளேகங்கைவைத்தசங்கராபோற்றிபோற்றி.

(ப - ரை.) கடவுளே போற்றி - கடவுளே உனக்கு நமஸ்காரம், என்னை கண்டு கொண்டு அருள் போற்றி - என் நிலைமையைக் கண்டு அருள் செய்வாயாக உனக்கு நமஸ்காரம், விட உள் உருக்கி - நெகிழ்வடையும்படி மனத்தை யுருகச்செய்து, என்னை ஆண்டிட வேண்டும் - என்னை ஆண்டருளவேண்டும், போற்றி - உனக்கு நமஸ்காரம், உடல் இது களைந்திட்டு - இந்த வுடம்பைக் கழித்திட்டு, ஒல்லை - விரைவாக, உம்பர் - மேலிடமாகிய முத்தியுலகத்தை, தந்தருள் - கொடுத்தருள்வாயாக, போற்றி - உனக்கு நமஸ்காரம், சடை உள் - சடையில், கங்கை வைத்த - கங்கையை யமைத்த, சங்கரா - சங்கரனே, போற்றி போற்றி - உனக்கு நமஸ்காரம் நமஸ்காரம், எ - று.

(க - ரை.) கடவுளே, இந்த வுடம்பின் தொடர்பை நீக்கி எனக்கு முத்தியைத் தந்தருளவேண்டும் என்பது.

(வி - ரை.) கடவுள் - எல்லாவற்றையும் கடந்தவன். உடல் இது - உடலாகிய இது. உம்பர் - மேலிடம். அது முத்தியுலகத்தைக் குறித்தது.

(கூச)

சங்கராபோற்றிமற்றோர்சரணிலேன்போற்றிகோலப்
பொங்கராவல்குற்செவ்வாய்வெண்ணகைக்கரியவாட்கண்
மங்கையோர்பங்கபோற்றிமால்விடையூர்திபோற்றி
யிங்கிவாழ்வாற்றகில்லேனெம்பிரானிழித்திட்டேனே

(ப - ரை.) சங்கரா - சங்கரனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், மற்று ஓர் சரண் இலேன் - வேறொருபுகலிடமுடையேனல்லேன், போற்றி - உனக்கு நமஸ்காரம், கோலம் - அழகாகிய, பொங்கு அரா - சீறுகின்ற பாம்பின் படம்போன்ற, அல்குல் - அல்குலையும், செவ்வாய் - சிவந்த அதரத்தையும், வெள்நகை - வெள்ளிய பற்களையும், கரிய வாள் கண் - கருமையாகிய வாள்போன்ற கண்களையும் உடைய, மங்கை - மங்கைப்பருவத்தினளாகிய உமாதேவியை, ஓர் பங்க - ஒருபாகத்தி லமைத்தவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், மால் விடை ஊர்தி - பெரிய இடபவாகநத்தை யூர்வோனே, போற்றி - உனக்கு நமஸ்காரம்,இங்கு - இவ்வுலகத்தில், இ வாழ்வு - இந்தப் பொய்வாழ்க்கையை, ஆற்றகில்லேன் - சகிக்கிலேனாகி, எம்பிரான் - எம்பிரானே, இழித்திட்டேன் - தாழ்வுபடுத்தினேன், எ-று.

(க - ரை.) இறைவனே, உன்னையன்றி வேறோர் புகலிடமில்லை, அதுவேயுமன்றி இந்தவுடம்போடு கூடிவாழும் வாழ்க்கையைச் சகிக்கிலேன், ஆதலால் என்னைக் கைவிடேல் என்பது.

(வி - ரை.) பொங்குதல் - சீறுதல், பொலிதல் எனினுமாம். இழித்தல் - வெறுத்தல். அரா - பாம்பு, இது அதின்படத்துக்காயிற்று. (சுரு)

இழித்தனனென்னையானேயெம்பிரான்போற்றிபோற்றி
பழித்திலேனுன்னையென்னையாளுடைப்பாதம்போற்றி
பிழைத்தவைபொறுக்கையெல்லாம்பெரியவர்கடமைபோற்றி
யொழித்திடிவ்வாழ்வுபோற்றியும்பர்நாட்டெம்பிரானே.

(ப - ரை) என்னை யானே இழித்தனன் - என்னை நானே யிழிவுபடுத்தினேன், எம்பிரான் - எம்பிரானே, போற்றி போற்றி - உனக்கு நமஸ்காரம் நமஸ்காரம், உன்னை பழித்திலேன் - உன்னை நிந்தித்திலேன், என்னை ஆள் உடை பாதம் - என்னை அடிமையாகவு

டைய திருவடிக்கு, போற்றி - நமஸ்காரம், பிழைத்தவை எல்லாம் - சிறியவர் செய்த பிழைகளையெல்லாம், பொறுக்கை - பொறுத்துக்கொள்ளுதல், பெரியவர் கடமை - பெரியவரது கடமையாம், போற்றி - உனக்கு நமஸ்காரம், உம்பர் நாட்டு - மேலுலகத்தையுடைய, எம்பிரானே - எம்பெருமானே, இவாழ்வு ஒழித்திடு - இந்தவாழ்வை ஒழித்தருள்வாயாக, போற்றி - உனக்கு நமஸ்காரம், எ - று.

(க - ரை.) இறைவனே, என்னை யானே யிழித்தலன்றி உன்னை நிந்தித்திலேன், சிறியோர் பிழைத்தவற்றைப் பெரியோர் பொறுத்தல்கடமை யாதலால், என்பிழைகளைப் பொறுத்து, இந்தப்பொய் வாழ்வை யொழித்தருளவேண்டும் என்பது.

(வி - ரை) என் தீவினையைக் குறித்து என்னையானே நிந்திப்பதன்றி உன்னை நிந்தித்திலேன் என்பார் ''இழித்தன னென்னை யானே, பழித்திலே னுன்னை'' என்றருளினர். பொறுக்கையெல்லாம் பெரியவர்கடமை யென்றதனால் பிழைத்தவை யென்பதற்குக் கருத்தா சிறியோர் என்பது பெறப்பட்டது. (௯௯)

எம்பிரான்போற்றிவானத்தவரவரேறுபோற்றி
கொம்பரார்மருங்குன்மங்கைகூறவெண்ணீறபோற்றி
செம்பிரான்போற்றிதில்லைத்திருச்சிற்றம்பலவபோற்றி
யும்பராபோற்றியென்னையாளுடையொருவபோற்றி.

(ப - ரை.) எம்பிரான் போற்றி - எம்பிரானே உனக்கு நமஸ்காரம், வானத்து - விண்ணுட்டிலுள்ள, அவர் அவர் - அந்தந்தத்தேவர்களுக்கு, ஏறு - ஆண்சிங்கம்போல்பவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், கொம்பர் - பூங்கொம்புபோன்ற, ஆர் - காண்பதற்கரிதாகிய, மருங்குல் - இடையையுடைய, மங்கை - உமாதேவியை, கூற - ஒருபாகத்திலுடையவனே, வெள் நீற - திருவெண்ணீற்றை யுடையவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், செம்மை பிரான் போற்றி - செம்மையாகிய பிரானே உனக்கு நமஸ்காரம், தில்லை திருச்சிற்றம்பலவ - தில்லைத் திருச்சிற்றம்பலத்தை யுடையவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், உம்பரா - மேலாகிய முத்தியுலகத்தை யுடையவனே, என்னை ஆள் உடை - என்னை அடிமையாக வுடைய, ஒருவ - ஒப்பற்றவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், எ - று.

(க - ரை.) தேவ தேவனே, உமாதேவிபங்கனே, திருவெண்ணீற்றை யுடையவனே, செவந்த திருமேனியை யுடையவனே, திருச்சிற்றம்பலத்தையுடையவனே, முத்தியுலகத்தை யுடையவனே, என்னை யடிமையாக வுடையவனே, உனக்கு நமஸ்காரம் என்பது.

(வி - ரை.) ஏறு - சிறந்தவன் என்னும் பொருளது, கொம்பு கொம்பர் எனப் போலியாயிற்று. செம்பிரான் - செவந்த திருமேனியை யுடையவன், செவ்விய உபகாரகுணமுள்ளவன் எனினுமாம். உடைய என்பது ஈறுதொகுத்தலாய் உடை என நின்றது. (௬௭)

ஒருவனேபோற்றியொப்பிலப்பனேபோற்றிவானோர்
குருவனேபோற்றியெங்கள்கோமளக்கொழுந்துபோற்றி
வருகவென்றென்னைநின்பால்வாங்கிடவேண்டும்போற்றி
தருகநின்பாதம்போற்றிதமியனேன்றனிமைதீர்த்தே.

(ப - ரை.) ஒருவனே - ஒப்பற்றவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், ஒப்பு இல் அப்பனே - நிகரில்லாத அப்பனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், வானோர் குருவனே - தேவர்களுக்குக் குருவானவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், எங்கள் - எங்களுடைய, கோமளம் கொழுந்து - இளஞ்செவ்வியை யுடைய கொழுந்தே, போற்றி - உனக்கு நமஸ்காரம், வருக என்று - வருவாயாகவென்று, என்னை - என்னை, நின்பால் - உன்னிடத்துக்கு, வாங்கிட வேண்டும்- அழைத்துக்கொள்ளவேண்டும், போற்றி - நமஸ்காரம், தமியனேன் - தமியேனது, தனிமை தீர்த்து - தனித்தன்மையை நீக்கி, நின்பாதம் தருக - உன் திருவடியைத் தருவாயாக, போற்றி - உனக்கு நமஸ்காரம், எ - று.

(க - ரை.) இறைவனே, என்னை உன்னிடத்துக்கழைத்து உன் திருவடியை யெனக்குத் தந்தருளவேண்டும் என்பது.

(வி - ரை.) இறைவன் என்று மறியாத் தந்தை யாதலால் ஒப்பிலப்பனே யென்றருளினர். வாங்குதல் - வளைத்தல் என்றலுமாம். தனிமை - தனியே யிருக்குந் தன்மை. அதனைத் தீர்த்தலாவது அடியார் குழாத்துட்புகவிடல். (௬௮)

தீர்ந்தவன்பாயவன்பர்க்கவரினுமன்பபோற்றி
பேர்ந்துமென்பொய்மையாட்கொண்டருளிடும்பெருமைபோற்றி
வார்ந்தநஞ்சயின்றுவானோர்க்கமுதமீவள்ளல்போற்றி
யார்ந்தநின்பாதநாயேற்கருளிடவேண்டும்போற்றி.

(ப - ரை.) தீர்ந்த - (இருவகைப்பற்றினையும்) விட்ட, அன்பு ஆய அன்பர்க்கு - அன்புருவமாகிய அன்பருக்கு, அவரினும் அன்ப - அவரினும் அன்புள்ளவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், என் பொய்மை பேர்ந்தும் - என் பொய்மை நிலைபெயரவும், ஆட்கொண்டு அருளிடும் - அடிமை கொண்டருள்கின்ற, பெருமை - உன் பெருமைக்கு, போற்றி - நமஸ்காரம், வார்ந்த நஞ்சு - பெரிதாயெழுந்த நஞ்சை, அயின்று - உண்டு, வானோர்க்கு - தேவர்களுக்கு, அமுதம் ஈ - அமிர்தத்தைக் கொடுத்த, வள்ளல் - வள்ளலே, போற்றி - உனக்கு நமஸ்காரம், ஆர்ந்த நின் பாதம் - எங்கும் நிறைந்த உனது திருவடியை, நாயேற்கு அருளிடவேண்டும் - நாயினேனுக்கு அருள் செய்யவேண்டும், போற்றி - உனக்கு நமஸ்காரம், எ - று,

(க - ரை.) அன்பரிடத்து மிகுந்த அன்புடையவனே, என் பொய்ம்மை நீங்க என்னை ஆண்டருளினவனே, விடத்தையுண்டு தேவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுத்தவனே, உன் திருவடியை அடியேனுக்குத் தந்தருளவேண்டும், உனக்கு நமஸ்காரம் என்பது.

(வி - ரை.) தீர்ந்த அன்பு பேரன்பு எனினும் பொருந்தும், பேர்ந்து பேர என்பதன் திரிபு. அயிலல் - உண்ணல். தீமையயக்கும் நஞ்சைத்தானுண்டு நன்மையயக்கும் அமிர்தத்தைத் தேவர்களுக்குக் கொடுத்ததனால் வள்ளல் என்றருளினர். (கூக)

போற்றியிப்புவனநீர்தீக்காலொடுவானமானாய்
போற்றியெவ்வுயிர்க்குந்தோற்றமாகிநீதோற்றமில்லாய்
போற்றியெல்லாவுயிர்க்குமீறாயீறின்மையானாய்
போற்றியைம்புலன்கணின்னைப்புணர்கிலாப்புணர்க்கையானே.

(ப - ரை.) இப்புவனம் - இந்தமண், நீர் - நீர், தீ - நெருப்பு, காலொடு - காற்றுடன், வானம் ஆனாய் - ஆகாயமும் ஆனவனே, போற்றி - உனக்கு நமஸ்காரம், எவ்வுயிர்க்கும் - எவ்வகையாகிய

உயிர்கட்கும், தோற்றம் ஆகி - பிறப்பிடமாகி, நீ தோற்றம் இல்லாய் - நீ பிறத்தல் இல்லாதவனே, போற்றி - நமஸ்காரம், எல்லாவுயிர்க்கும் - எல்லா வுயிர்களுக்கும், ஈறு ஆய் - முடிவிடமாகி, ஈறு இன்மை ஆனாய் - முடிவின்மையுமாயினவனே, போற்றி - நமஸ்காரம், ஐம்புலன்கள் - ஐம்புலன்களும், நின்னை புணர்கிலா - உன்னை யடையாத, புணர்க்கையானே - தந்திரத்தையுடையவனே, போற்றி - நமஸ்காரம், எ - று.

(க - ரை.) பஞ்சபூதங்களா யிருப்பவனே; எல்லாவுயிர்க்கும் பிறப்பிடமாகியும் உனக்குப் பிறப்பிடமில்லாதவனே, எல்லாவுயிர்க்கும் இறுதியும் இறுதியின்மையுமானவனே, ஐம்புலன்கள் தொடராத தந்திரத்தையுடையவனே, உனக்கு நமஸ்காரம் என்பது.

(வி - ரை.) இறைவன் எல்லாவுயிர்க்கும் காரணனுயிருத்தலன்றித் தனக்கொரு காரணனையுடைய னல்லாமையால், "எவ்வுயிர்க்குந் தோற்றமாகி நீ தோற்றமில்லாய்" என்றருளினர். ஈறுமீறின்மையாதலாவது, எல்லாவுயிரும் முடியத்தான் முடியாதிருத்தலும், அவை தோன்றுதற்குக் காரணமாயிருத்தலும். ஐம்புலன் என்றது ஐம்புலவாசையை. அவற்றை யியல்பாகவே வென்றிருப்பவனாதலால், "ஐம்புலன்கள் புணர்கிலாப் புணர்க்கையானே" என்றருளினர். (௭0)

திருச்சிற்றம்பலம்.

# ஆனந்தத்தழுந்தல்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

புணர்ப்பதொக்கவெந்தையென்னையாண்டுபூணநோக்கினாய்
புணர்ப்பதன்றிதென்றபோதுநின்னொடென்னொடென்னிதாம்
புணர்ப்பதாகவன்றிதாகவன்புநின்கழற்கணே
புணர்ப்பதாகவங்கணாளபுங்கமானபோகமே.

(ப - ரை.) புணர்ப்பது ஒக்க - (ஆண்டவனோடு மாறுகொண்டு திரிகின்ற அடிமையானவனை அந்த ஆண்டவன் சதுர்வித உபாயப்

களிஞலும் தன்னடிமை யென்று தன்னோடும்) கூட்டிக்கொள்வதை நீசர்க்க, என்னை - (திருவடிக்கருகராகிய மெய்யடியார் குணங்கள் ஒன்று மில்லாதவனுய்க் காமவெகுளி மயக்கங்களிஞல் பிரபஞ்சத்தை மெய்யென்று கருதிச் சுழல்கின்ற) என்னை, எந்தை - எந்தையே, ஆண்டு - கருணையால் ஆசாரியமூர்த்தமா யெழுந்தருளிவந்து தடுத்தாட்கொண்டு, பூணநோக்கிஞய் - மெய்யடியார்கள் மேல்வைக்குந் திருபாநோக்கத்தை அடியேன் போதத்துக்குள்ளும் புறனுமாய் அழுந்தவைத்து அருளிச்செய்தாய், இது - (அரிபிரமாதிகட்கும் கிடையாத) இந்தக் கிருபாநோக்கம், புணர்ப்பது அன்று என்ற போது - (ஒன்றுக்கும் பற்றாத எனக்கு) கிடைப்பது அன்றென்று கிருபையின் அருமையை யறிந்தபோது, நின்ஞெடு என்ஞெடு என்னிது ஆம் புணர்ப்பு அது ஆக - என்னதாகி யிருந்த சகசமல மொன்றும் நின்னோடும் என்னை யிரண்டற்ற அத்துவிதமாய்க் கூட்டுவதாகவும், அன்று இது ஆக அன்பு நின் கழல்கண் ஏ புணர்ப்பதாக - முன்யான் எனதாய் நின்ற பிரபஞ்சமான இது இப்போது யான் எனது அன்ருகவும் இப்பிரபஞ்சத்தின் மேனின்ற அன்பு சுவாமிகள் திருவடிக்கண்ணே மீளாது நிற்பதாகவும் ஆயின, அங்கணுள புங்கம் ஆன போகமே - அழகிய கண்ணுளா, அரிபிரமாதிபோகங்களையும் கடந்திருப்பதான சிவாநந்த போகமே, இந்தக் காருண்யத்துக்கு நாயேஞல் கைம்மாறும் உண்டுகொலோ, எ - று.

(க - ரை.) ஆண்டவன் தன்ஞெடு மாறுகொண்டு திரிகின்ற அடிமையைச் சதுர்விதவுபாயங்களாலும் தன்னடிமையென்று தன்ஞெடு கூட்டிக்கொள்வது போல, மெய்யடியார் குணங்களொன்று மில்லாத என்னை ஆசாரிய மூர்த்தமாயெழுந்தருளித் தடுத்தாட்கொண்டு, மெய்யடியார் மீது வைக்கும் கிருபாநோக்கத்தை அடியேன் போதத்துக்குள்ளும் புறனுமாகவைத்தருளினை, பிரமாதிகட்கும் அரிதான இக்கிருபாநோக்கம் அடியேனுக்குக் கிடைத்தலரிதென்று அதன் அருமை யறிந்தபோது, எனதாயிருந்த சகசமல மொன்றும் என்னை நின்ஞெடு இரண்டறக் கூட்டுவதாகவும், இப்பிரபஞ்சத்தின்மேனின்ற அன்பு இறைவன் திருவடிக்கண் மீளாது நிற்பதாகவும் ஆயின, அழகிய கண்ணுளா, அரிபிரமாதி போகங்களையுங் கடந்திருப்பதான சிவாநந்த போகமே, இந்தக்காருணியத்துக்கு நாயேஞல் செய்யப்படுவதாகிய கைம்மாறும் உண்டோ என்பது.

(வி - ரை.) ஆண்டு பூணநோக்கிஞய் என்றமையான் புணர்ப்பது ஒக்க என்ற உவமைக்கு ஆண்டவன் அடிமை வருவிக்கப்பட்

டனை. பூனைநோக்குதல் - போதம் பழையாது வைத்துநோக்கும். இரு மையின் அருமையை யறிந்தபோது தம்செயல் முழுது மிறந்து சிவத்தோடு அத்துவிதமானபடியினாலே நின்றொடும் என்னைப் புணர்ப்பதாக என்றார். என்றொடும் என்ற மூன்றனுருபை என்னை யென்னும் இரண்டனுருபாகக்கொள்க. உம்மைகளும் ஆயின என் னும் ஆக்கமும் தொக்குநின்றன. (௭௪)

போகம்வேண்டிவேண்டிலேன்புரந்தராதியின்பமு
மேகநின்கழலிணையலாதிலேனெனெம்பிரா
னாகம்விண்டுகம்பம்வந்துகுஞ்சியஞ்சலிக்கணே
யாகவென்கைகண்கடாரையாறதாகவையனே.

(ப - ரை.) புரந்தரன் ஆதி இன்பமும் - இந்திரன் முதலியோ ருடைய இன்பங்களையும், போகம் வேண்டிவேண்டிலேன் - அநு பவிக்கவெண்ணி விரும்பினேனில்லை, (மற்றென்னெனின்) என் எம்பிரான் - என் எம்பிரானே, ஏகம் - ஒப்பற்ற, நின் - உன்னு டைய, கழல் இணை அல்லாது - திருவடித்துணையையன்றி, இலேன் - வேறொன்றையும் உடையேனல்லேன், ஐயனே - எந்தையே, ஆகம் விண்டு கம்பம் வந்து-சரீரம்பிளந்து நடுக்கமுண்டாகி, என்கை - என் கைகள், குஞ்சி அஞ்சலிக்கண்ணே ஆக - சிரமேல் அஞ்சலி செய்த லின்கண்ணேயாகுக, கண்கள் தாரை ஆறதாக - கண்களில் நீர்த்தாரை கள் யாறுய்ப்பெருகுக, எ - று.

(க - ரை.) ஐயனே, இந்திராதிபோகங்களையும் விரும்பிலேன், உன் திருவடியையன்றி மற்றோர்பற்றிலேன், என்கைகள் உன்னை அஞ்சலிக்கவும் என்கண்களில் ஆனந்தபாஷ்பம் ஆறாய்ப்பெருகவும் வேண்டும் என்பது.

(வி - ரை.) போகம் - அநுபவம். ஏகம் - தனிமை. அது ஒப் பின்மைக்காயிற்று. ஆகம் - மார்பு எனினுமாம். கம்பம் - நடுக்கம், குஞ்சி - குடுமி, அது அதனையுடைய சிரத்துக்காயிற்று. அஞ்சலி - கும்பிடல். தாரை - நீரொழுக்கு. (௭௫)

ஐயநின்னதல்லதில்லைமற்றோர்பற்றுவஞ்சனேன்
பொய்கலந்ததல்லதில்லைபொய்மையேனெனெம்பிரான்
மைகலந்தகண்ணிபங்கவந்துநின்கழற்கணே
மெய்கலந்தவன்பரென்னெனக்குமாகவேண்டுமே.

(ப - ரை.) ஐய - ஐயனே, நின்னது அல்லது - உனதுபற்றே யன்றி, மற்றோர்பற்று - வேறொருபற்று, இல்லை - இல்லை, வஞ்ச னேன் - வஞ்சகனாகிய நான், பொய்மையேன் - பொய்யினேன், பொய் கலந்த தல்லது - பொய் என்னிடத்திற் சேர்ந்திருந்ததேயன்றி இல்லை - (மெய்சேர்ந்தது) இல்லை, என் எம்பிரான் - என் எம்பிரா னே, மை கலந்த கண்ணி பங்க - மைசேர்ந்த கண்களையுடையளாகிய உமாதேவிபாகனே, வந்து நின் கழல்கண்ணே மெய் கலந்த - வந்து உன் திருவடியின்கண்ணே உண்மையாய்க் கலந்த, அன்பர் - அன்ப ரது, அன்பு - அன்பு, எனக்கும் ஆக வேண்டும் - எனக்கும் உண் டாகவேண்டும், எ - று.

(க - ரை.) ஐயனே, உன்னையன்றி வேறொரு பற்றிலேன், யான் முழுப்பொய்யனாயினும், உன் திருவடியையடைந்த மெய்யன் பரது அன்புபோன்ற, அன்பு எனக்கு முண்டாகும்படி அருள் புரிய வேண்டும் என்பது.

(வி - ரை.) பற்று - தஞ்சம், (ஆதாரம்). பொய்கலந்ததல்ல தில்லை பொய்மையேன் என்றருளினர், முழுப்பொய்யன் என் றற்கு. மை - அஞ்சனம், கருமை. மெய்கலந்த அன்பர் - மெய்யோடு கூடிய அன்பர், (மெய்யன்பினையுடையார்) எனினுமாம். (எ௩)

வேண்டுநின்கழற்கணன்புபொய்மைதீர்த்துமெய்ம்மையே
யாண்டுகொண்டுநாயினேனையாவவென்றருணீ
பூண்டுகொண்டடியனேனும்போற்றிபோற்றியென்றுமென்று
மாண்டுமாண்டுவந்துவந்துமன்னநின்வணங்கவே.

(ப - ரை.) அடியனேனும் - அடியேனும், பூண்டு கொண்டு - உன் திருத்தொண்டினைமேற் கொண்டு, போற்றி போற்றி என்றும் - நமஸ்காரம் நமஸ்காரம் என்றும், என்றும் - எக்காலத்தும், மாண்டு மாண்டு வந்து வந்து - இறந்தும் பிறந்தும், மன்ன - இறைவனே, நின்வணங்க - உன்னை வணங்க, நின் கழற்கண் அன்பு வேண்டும் - உன் திருவடியின் கண்ணே அன்புசெய்தல் என்னால் விரும்பப்படும், (ஆதலால்) நீ - நீ, நாயினேனை - நாயேனை, பொய்மை தீர்த்து - பொ ய்ந்நெறியினின்று நீக்கி, மெய்ம்மையே - உண்மையாகவே, ஆண்டு கொண்டு - என்னை அடிமையாகக் கொண்டு, ஆவ என்று - ஐயோ வென்று என் பேதைமை முதலியவற்றுக்கு இரங்கி, அருள் - அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) இறைவனே, நான் பிறந்திறந்துழன்றாலும், உன் திருத்தொண்டு செய்யும்படி எனக் கருள்புரியவேண்டும் என்பது.

(வி - ரை.) நின்வணங்க நின்கழற்கணன்புவேண்டும். ஆவ - இரக்கக்குறிப்பு. அருளு என்பதில் உகரம் சாரியை. மன்ன - நிலை பெற எனினுமாம். நின்வணங்க - நின்னைவணங்க என இரண்டனுருபு விரித்துரைத்துக்கொள்க. (எச)

வணங்குநின்னைமண்ணும்விண்ணும்வேதநான்குமோலமிட்
டுணங்குநின்னையெய்தலுற்றுமற்றோருண்மையின்மையின்
வணங்கியாம்விடேங்களென்னவந்துநின்றருளுதற்
கிணங்குகொங்கைமங்கைபங்கவென்கொலோநினைப்பதே.

(ப - ரை.) இணங்கு கொங்கை மங்கை பங்க - நெருங்கின கொங்கைகளையுடைய உமாதேவிபாகனே, மண்ணும் விண்ணும் - மண்ணுலகமும் விண்ணுலகமும், நின்னை வணங்கும் - உன்னை வணங்காநிற்கும், வேதம் நான்கும் - நான்கு வேதங்களும், நின்னை எய்தல் உற்று - உன்னையறியத் தொடங்கி, (அறிய வொண்ணாமையால்) ஓலம்இட்டு உணங்கும் - முறையிட்டு மெலியா நிற்கும், மற்று ஓர் உண்மை இன்மையின் - (உன்னையன்றி) வேறொரு மெய்ப்பொருள் இல்லாமையால், யாம் - நாங்கள், வணங்கி விடேங்கள் என்ன - வணங்கிவிடேமென்று சொல்ல, வந்து நின்று, எமக்கெதிரே வந்து நின்று, அருளுதற்கு - கருணைசெய்தற்கு, என் கொல் நினைப்பது - நீ திருவுளம் பற்றுவது என்னோ, எ - று.

(க - ரை.) இறைவனே, மண்ணும் விண்ணும் உன்னைவணங்காநிற்கும். நான்குவேதங்களும் உன்னையறியலுற்று, அறியவொண்ணாமையால் மெலியாநிற்கும், அங்ஙனமாக, யாம் உன்னைவணங்கி விடோமென்றலும் எமக்கெதிரில் வந்து எமக்கருள்செய்யக்காரணம் யாது என்பது.

(வி - ரை.) மண் விண் என்றது இடவாகு பெயராய் அவற்றிலுள்ளாரை யுணர்த்திற்று. அவராவார் மக்களும் தேவரும். எய்தல் - அறிதல். உண்மைப்பொருளை உண்மையென்றது பண்பாகுபெயர் உணங்குதல் - வாடுதல் எனினுமாம். இணங்குதல் - இவ்விடத்து நெருங்குதல் என்னும் பொருளது. (எரு)

நினைப்பதாகசிந்தைசெல்லுமெல்லையேயவாக்கினாற்
றினைத்தனையுமாவதில்லைசொல்லலாவகேட்பவே
யனைத்துலகுமாயநின்னையைம்புலன்கள்காண்கிலா
வெனைத்தெனைத்தெப்புறத்ததெந்தைபாதமெய்தவே.

(ப - ரை.) சிந்தை - என்மனம், நினைப்பதாக செல்லும் - நினைப்பதாக எழாநிற்கும், வாக்கினால் - நாவினால், எல்லை எய்த சொல்லல் - வரம்பு உண்டாகச் சொல்லுதல், தினைத்தனையும் ஆவதில்லை - தினையளவும் பொருந்துதலில்லை, அனைத்து உலகும் - எல்லாவுலகங்களும், கேட்ப - உன்பெருமையைக் கேட்பனவாயிராநின்றன, ஆவ - ஆவா, ஆய நின்னை - அப்படிப்பட்டவுன்னை, ஐம்புலன்கள் காண்கிலா - ஐம்புலன்களும் காண்கின்றில, (அங்ஙனமாக) எந்தை பாதம் எய்த - எந்தையாகிய உன் திருவடியையடைய, எனைத்து எனைத்து - அது எவ்வெவ்வளவினது, எ புறத்தது - எவ்விடத்தது, எ - று.

(க - ரை.) இறைவனே, மனோவாக்குகளுக்கும் எட்டாமலிருக்கிற உன் திருவடியை யான் காணும்வகை யாது என்பது.

(வி - ரை.) எய்தல் - உண்டாதல், தனை - அளவு, எல்லை - வரம்பு. (௭௬)

எய்தலாவதென்றுநின்னையெம்பிரானிவ்வஞ்சனேற்
குய்தலாவதுன்கணன்றிமற்றொருண்மையின்மையிற்
பைதலாவதென்றுபாதுகாத்திரங்குபாவியேற்
கீதலாதுநின்கணொன்றும்வண்ணமில்லையீசனே.

(ப - ரை.) நின்னை - உன்னை, எய்தலாவது - அடைதலாவது, என்று - எந்நாள், எம்பிரான் - எம்பெருமானே, இ வஞ்சனேற்கு - இந்தவஞ்சகனாகிய எனக்கு, உய்தலாவது - உஜ்ஜீவித்தலாவது, உன் கண் அன்றி - உன்னிடத்தன்றி, மற்று ஓர் உண்மை இன்மையின் - வேறோர் உண்மைப்பொருள் இல்லாமையால், பைதல் ஆவதென்று - துன்பமுண்டாமென்று, பாதுகாத்து - காப்பாற்றி, இரங்கு - இரங்கியருள்வாயாக, பாவியேற்கு - பாவியேனுக்கு, ஈது அலாது - இதுவன்றி, நின்கண் - உன்னிடத்தில், ஒன்றும் வண்ணம் இல்லை - சேரும்வகையில்லை, ஈசனே - பெருஞ்செல்வனே, எ - று.

(க - ரை.) ஈசனே யான் உன்னையடைவது எந்நாளோ, எனக்கு உன்னையன்றி வேறு புகலில்லாமையால், என் துன்பத்தைக்கண் டிரங்கிப் பாதுகாக்கவேண்டும், இக்காலம் நீயே யாட்கொண்டருளி னன்றி, உன்னை யணுகும்வகையில்லை யென்பது.

(வி - ரை.) எய்தல் - பெறுதல். உய்தல் - பிழைத்தல். பை தல் - துன்பம். பாதுகாத்தல் - ஒருசொல். ஒன்றுதல் - சேர்தல். (எ௭)

ஈசனேநீயல்லதில்லையிங்குமங்குமென்பதும்
பேசினேனொர்பேதமின்மைபேதையேனெனெம்பிரா
னீசனேனையாண்டுகொண்டநின்மலாவோர்நின்னலாற்
றேசனேயோர்தேவருண்மைசிந்தியாதுசிந்தையே.

(ப - ரை.) ஈசனே - ஈசனே, நீ யல்லது - நீயன்றி, இங்கும் அங்கும் - இவ்விடத்தும் அவ்விடத்தும், இல்லை யென்பதும் - இல்லை யென்பதையும், பேதையேன் - பேதையாகிய நான், ஓர் பேதம் இன்மை - ஒரு வேறுபாடின்றி, பேசினேன் - சொன்னேன், என் எம்பிரான் - என் எம்பிரானே, நீசனேனை - நீசனாகிய என்னை, ஆண்டு கொண்ட - ஆண்டு கொண்டருளின, நின்மலா - நின்மலனே, தேசனே - ஒளியுருவனே, ஓர் நின் அலால் - ஒப்பற்ற நின்னை யன்றி, ஓர் தேவர் உண்மை - ஒரு தேவரது உண்மையையும், சிந்தை சிந்தி யாது - என்மனம் சிந்திக்காது, எ - று.

(க - ரை.) ஈசனே, இகத்தினும் பரத்தினும் நீயன்றிவே றொரு தலைவன் இல்லை யென்பதை வேற்றுமையின்றிப் பேசி னேன், என் மனம் உன்னையன்றி வேறொரு தெய்வத்தைச் சிந்தி யாது என்பது.

(வி - ரை.) இங்கு - இவ்வுலகம். அங்கு - அவ்வுலகம். எம் பிரான் - ஒருசொல். நீசன் - ஈனன். தேசம் - ஒளி. தேசன் - ஒளியையுடையவன். (எ௮)

சிந்தைசெய்கைகேள்விவாக்குச்சீரிலைம்புலன்களான்
முந்தையானகாலநின்னையெய்திடாதமூர்க்கனேன்
வெந்தையாவிழுந்திலேனெனுள்ளம்வெள்கிவிண்டிலே
னெந்தையாயநின்னையின்னமெய்தலுற்றிருப்பனே.

(ப - ரை.) சிந்தை செய்கை கேள்வி வாக்கு சீர் இல் ஐம்புலன்களால் - மனனம் பண்ணுதலாலும் கேட்டலாலும் பேசலாலும் சிறப்பில்லாத ஐம்புலன்களாலும், முந்தை ஆன காலம் - முற்காலத்தில், நின்னை - உன்னை, எய்திடாத - அடையாத, மூர்க்கனேன் - மூர்க்கனாகிய நான், ஐயா - ஐயனே, வெந்து விழுந்திலேன், வெந்து விழுந்திலேன், என் உள்ளம் வெள்கி - என்மனம் நாணி, விண்டிலேன் - நெஞ்சு வெடித்திலேன், எந்தை ஆய நின்னை - எமது தந்தையாகிய உன்னை, இன்னம் - இன்னமும், எய்தல் உற்று இருப்பன் - அடைய வுத்தேசித்திருக்கின்றேன், எ - று.

(க - ரை.) முற்காலத்து உன்னைச் சிந்தித்தல் முதலியசெய்து அடையப்பெறாத மூர்க்கனாகிய நான், வெந்தொழிந்திலேன், நெஞ்சு வெடித்திலேன், இங்ஙனமாகியும் இன்னமும் உன்னையடைய முயலாநின்றேன் என்பது.

(வி - ரை.) ஆல் என்பதனை சிந்தை முதலியவற்றோடும் கூட்டுக. முந்தை - முன். உள்ளம் வெள்கி என்றதை யடுத்து விண்டிலேன் என்றமையால் நெஞ்சு வருவித்துரைக்கப்பட்டது. எய்தலுற்றிருப்பனே என்பதற்கு, கிடைக்கப் பெறுவேனோ என்றுரைத்தலுமாம். (எக)

இருப்புநெஞ்சவஞ்சனேனையாண்டுகொண்டநின்னதாட்
கருப்புமட்டுவாய்மடுத்தெனைக்கலந்துபோகவு
நெருப்புமுண்டியானுமுண்டிருந்ததுண்டதாயினும்
விருப்புமுண்டுநின்கணென்கணென்பதென்னவிச்சையே.

(ப - ரை.) இருப்பு நெஞ்சம் - இரும்பு போன்ற வன்மனத்தையுடைய, வஞ்சனேனை - வஞ்சனாகிய என்னை, ஆண்டுகொண்ட - ஆண்டருளின, நின்ன - உன்னுடைய, தாள் - திருவடியாகிய, கருப்புமட்டு - கருப்பஞ்சாறு, வாய்மடுத்து - வாய்மடுக்கப்பட்டு, என்னை கலந்துபோகவும் - என்னைக்கூடிப்பிரியவும், நெருப்பும் உண்டு - நெருப்புமுண்டு, யானும் உண்டு - நானும் உண்டு, அது இருந்தது உண்டு ஆயினும் - அது இருந்தது உண்டு ஆனாலும், என்கண் - என்னிடத்தில், நின்கண் - உன்னிடத்துச் செய்யவேண்டிய, விருப்பும் உண்டு என்பது - அன்பும் உண்டென்பது, என்னவிச்சை - என்னவித்தை, எ - று.

(க - ரை.) இரும்புபோலும் வலிய மனத்தினையுடைய நான், என்னை யாண்டருளின உன் திருவடியைப் பிரிந்தும், தீப்பாய்தல் செய்து மடிந்தொழிந்திலேன், இத்தன்மையேனாகிய என்னிடத்து உன்னிடத்துச் செய்யவேண்டிய அன்பிருப்பது என்ன வியப்பு என்பது.

(வி - ரை.) இரும்பு கரும்பு என்பன, இருப்பு கருப்பு என வலித்தல் பெற்றன. இருப்பு நெஞ்சம் என்றதனால் இரும்பின் தருமமாகிய வன்மை நெஞ்சுக்குங் கொள்ளப்பட்டது. "நெருப்பு முண்டி யானு முண்டிருந்ததுண்ட தாயினும்" என்றதனால், தீயில் வீழ்ந்திலேன் எனக் குறிப்பித்தாராயிற்று. இங்ஙனமாகிய என்னிடத்து உன்மீது செய்யவேண்டிய அன்பிருத்தல் அதிசயம் என்பார் "விருப்புமுண்டு நின்கணென்க ணென்பதென்ன விச்சை" என்றருளினர்.

திருச்சிற்றம்பலம்.

---

# ஆநந்தபரவசம்.

கலிநிலைத்துறை.

திருச்சிற்றம்பலம்.

விச்சுக்கேடுபொய்க்காகாதென் றிங்கெனைவைத்தா
யிச்சைக்கானாரெல்லாரும்வந்துன்றாள்சேர்ந்தா
ரச்சத்தாலேயாழ்ந்திடுகின்றேனாரூரெம்
பிச்சைத்தேவாவென்னான்செய்கேன்பேசாயே.

(ப - ரை.) விச்சுகேடு - வித்தின் அழிவு, பொய்க்கு ஆகாது என்று - மித்தைக்கு ஆகாது என்று, இங்கு - இவ்வுலகத்தில், என்னை வைத்தாய் - என்னை வைத்தனை, இச்சைக்கு - உன்னன் புக்கு, ஆனார் எல்லாரும் - உரியரானாரெல்லாரும், வந்து உன் தாள் சேர்ந்தார் - வந்து உன் திருவடியை யடைந்தார்கள், அச்சத்தாலே ஆழ்ந்திடுகின்றேன் - பயமாகிய கடலிலே மூழ்கா நின்றேன், ஆரூர் - திருவாரூரிலெழுந்தருளி யிருக்கிற, எம் பிச்சை தேவா - எம்மால் விரும்பப்படும் பிக்ஷாடனத் திருக்கோலங்கொண்டருளிய தேவனே,

நான் என் செய்கேன் - நான் யாது செய்வேன், பேசாய் - சொல் வாயாக, எ - று.

(க - ரை.) இறைவனே பொய்க்கு இடமில்லையென்று என்னை யிங்குவைத்தனை. மெய்யடியார் உன் திருவடியை யடைந்தார்கள், நான் அச்சமாகிய கடலில் மூழ்குதலன்றி, வேறென்செய்ய வல்லேன் என்பது.

(வி - ரை.) வித்து, விச்சு என நின்றது. விச்சுக்கேடு - நிர்மூலம் (வேரோடழிதல்). விச்சுக்கேடு பொய்க்கு ஆகாது - பொய் வேரோடழியலாகாது. விச்சு விரையாயினும், இங்கு வேர் என்னும் பொருடந்து நின்றது. விச்சுக்கேடு பொய்க்காகாதென் றிங்கெனை வைத்தாய் என்றது, பொய்க்கு என்னை யிலக்காக்கி வைத்தனை யென்றபடி. ஆழ்ந்திடுகின்றேன் என்றதனால் அச்சத்தைக் கடலாக்கி யுரைக்கலாயிற்று. (அக)

பேசப்பட்டேனின்னடியாரிற்றிருநீறே
பூசப்பட்டேன்பூதலராலுன்னடியானென்
றேசப்பட்டேனினிப்படுகின்றதமையாதா
லாசைப்பட்டேனாட்பட்டேனுன்னடியேனே.

(ப - ரை.) நின் அடியாரின் - உன் அடியார்களால், பேசப் பட்டேன் - சொல்லப்பட்டேன், திருநீறே பூசப்பட்டேன் - உன் திருவெண்ணீற்றாலே பூசப்பட்டேன், பூதலரால் - உலகத்தாரால், உன் அடியான் என்று - உன் அடியவனென்று, ஏசப்பட்டேன் - வையப்பட்டேன், படுகின்றது அமையாதேல் - இத்துணையும் நான் படாநின்றது அமையாதாயின், உன் அடியேன் - உன் அடியேன், ஆசைப்பட்டேன் - விரும்பினேன், ஆட்பட்டேன் - ஆளானேன், எ - று.

(க - ரை.) உன் அடியார்களால் சொல்லப்பட்டேன். திருநீற்றாலே பூசப்பட்டேன், இறைவனே! உன் அடியவனென்று உலகத்தாரால் வையப்பட்டேன், இவ்வளவும் அமையாதாயின், மேலும் உனக்கு ஆசைப்பட்டேன், ஆட்பட்டேன், என்பது.

(வி - ரை.) நின் அடியாரின் என்பதில் இன் மூன்றுவதன் பொருளில் வந்தது. அடியாரின் பேசப்பட்டேன் - அடியாரோடு சேர்த்துச் சொல்லப்பட்டேன் எனினும் பொருந்தும். பூதலம் - பூமியாகிய இடம். பூதலர் - பூதலத்திலுள்ளார். (அஉ)

அடியேனல்லேன்கொல்லோதானெனையாட்கொண்டிலைகொல்லோ
வடியாராணாரெல்லாம்வந்துன்றாள்சேர்ந்தார்
செடிசேருடலமிதுநீக்கமாட்டேனெங்கள்சிவலோகா
கடியேனுன்னைக்கண்ணாரக்காணுமாறுகாணேனே.

(ப - ரை.) அடியேன் அல்லேன் கொல்லோ - அடியேனல்லேனோ, தான் என்னை ஆட்கொண்டு இலை கொல்லோ - நீயென்னை ஆட்கொண்டிலையோ, அடியார் ஆனார் எல்லாரும் - அடியாரானார் யாவரும், வந்து உன் தாள் சேர்ந்தார் - வந்து உன் திருவடியடைந்தார்கள், செடி சேர் உடலம் இது - பாவஞ்சேர்ந்த வுடம்பாகிய இதனை, நீக்கமாட்டேன் - ஒழிக்கமாட்டேன், எங்கள் சிவலோகா - எங்கள் சிவபுரத்தனே, கடியேன் - கடியனாகிய நான், உன்னை காணும் ஆறு - உன்னைக்காணும் வழியை, காணேன் - கண்டிலேன், எ - று.

(க - ரை.) நான் உன் அடியனல்லேனோ, நீ யென்னை யாட்கொண்டதில்லையோ, உன்னடியாரெல்லாரும் உன் திருவடியை யடையவும் நான் இவ்வுடம்பை யொழியாதிருக்கிறேன். கொடியவனாகிய நான் உன்னைக் கண்ணாரக் காணும் வழியைக்காணேன் என்பது.

(வி - ரை.) செடி - பாவம், கடியேன் - கடுமையுடையேன் (குரூரன்). கண்ணார - கண்ணிறைய. (கண்களிக்க). ஆறு - வழி.

காணுமாறுகாணேனுன்னையந்நாட்கண்டேனும்
பாணேபேசியென்றன்னைப்படுத்ததென்னபரஞ்சோதி
யாணேபெண்ணேயாரமுதேயத்தாசெத்தேபோயினே
னேணாணில்லாநாயினேனென்கொண்டெழுகேனெம்மானே.

(ப - ரை.) அந்நாள் கண்டேனும் - அந்நாளில் கண்டநானும், உன்னை காணும் ஆறு காணேன் - உன்னைக் காணும்வழியைக் கண்டிலேன், பாணேபேசி - பாழேசொல்லி, என் தன்னை - என்னை, படுத்தது என்ன - அகப்படுத்தினவிதம் யாது, பரம் சோதி - பரஞ்சுடரே, ஆணே - ஆணே, பெண்ணே - பெண்ணே, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, அத்தா - கடவுளே, செத்தே போயினேன் - இறந்தொழிந்தேன், ஏண் நாண் இல்லா நாயினேன் - பெருமை பொருந்திய நாணமில்லாத நாயினேன், என் கொண்டு எழுகேன் - யாது கொண்டு உயர்வேன், எ - று.

(க - ரை.) அந்நாள் உன்னைக்கண்ட நான் இந்நாள் உன்னைக் காணும்வழியைக் கண்டிலேன், யான் என்கொண்டு ஈடேறுவேன் என்பது.

(வி - ரை.) அந்நாட் கண்டேனும் காணுமாறு காணேன் என்றது "உணர்ந்தார்க் குணர்வரியோன்" என்றதைத் திருவுளத் தடைத்து. அன்றி அடியாரோடு வெளிப்பட்டு மறைந்ததைத் திருவுளத்தடைத் தெனினுமாம். பாணே என்பதைப் பாழினே என்பதன் சிதைவாகக்கொள்க. நாண், "தாயிற் சிறந்தன்று நாண்" எனவும், "நாணுடைமை மாந்தர் சிறப்பு" எனவும், "அணியன்றோ நாணுடைமை" எனவும், "நாணாலுயிரைத் துறப்பருயிர்ப்பொருட்டா னாண்டுறவார் நாணாள்பவர்" எனவும், பலவிடத்தும் சிறப்பித்துக் கூறப்படுதலால், "ஏனாண்" என்றருளினர். செத்தே போயினேன் என்பது இரக்கக் குறிப்புச்சொல். (௮௬)

மானேர்நோக்கியுடையாள்பங்காமறையீறறியாமறையோனே
தேனேயமுதேசிந்தைக்கரியாய்சிறியேன்பிழைபொறுக்குங்
கோனேசிறிதேகொடுமைபறைந்தேன்சிவமாநகர்குறுகப்
போனாரடியார்யானும்பொய்யும்புறமேபோந்தோமே.

(ப - ரை.) மான் நேர் நோக்கி - மானினது நோக்கம்போன்ற நோக்கத்தையுடையாளாகிய, உடையாள் - பல்லாயிரகோடி யண்டங்களையும் ஆட்கொண்டருளிய உமாதேவியாரது, பங்கா - பாகத்தையுடையவனே, மறை ஈறு - வேத முடிவும், அறியா - அறியவொண்ணாத, மறையோனே - அந்தணனே, தேனே - தேனே, அமுதே - அமுதமே, சிந்தைக்கு அரியாய் - மனத்துக்கும் அரியவனே, சிறியேன் பிழை பொறுக்கும் கோனே - சிறியேனுடைய குற்றங்களைப் பொறுக்கின்ற இறைவனே, சிறிதே கொடுமை பறைந்தேன் - கொஞ்சமாகக் கொடுமை பேசினேன், அடியார் - உன் அடியவர், மா சிவ நகர் குறுக போனார் - பெருமையுள்ள சிவபுரத்தை அணுகச்சென்றார்கள், யானும் பொய்யும் - நானும் பொய்யும், புறமே போந்தோம் - வெளியானோம், எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னடியார் சிவபுரம்புக, யானும் பொய்யும் புறமானோம் என்பது.

(வி - ரை.) மறை ஈறு அறியா என்பதற்கு, வேதமும் முடிவறியாத எனினுமாம். பறைதல் - சொல்லல். தாம் சிவமாநகர்

குறுகப்போகாது புறம்போந்தாற்போலப் பொய்யும் போந்தமை தோன்ற, "யானும் பொய்யும் புறமே போந்தோம்" என்றருளினது எற்றுக்கெனின், சிவமாதலர், பொய் நடையாடாதுமெய்யோடை யாடு மிடமாதலானென்க. யானும் பொய்யும் புறமே போந்தோம் என்றித் திருப்பாட்டினும் வருந் திருப்பாட்டினும் கூறியது "விச்சுக் கேடு பொய்க்காகாதென் றிங்கெனை வைத்தாய்" என்றதை வலி யுறுத்தற்கு. (அரு)

புறமேபோந்தோம்பொய்யும்யானுமெய்யன்பு
பெறவேவல்லேனல்லாவண்ணம்பெற்றேன்யா
னறவேநின்னைச்சேர்ந்தவடியார் மற்றொன் றறியாதார்
சிறவேசெய்துவழிவந்துசிவனேநின்றாள்சேர்ந்தாரே.

(ப - ரை.) பொய்யும் யானும் புறமே போந்தோம் - பொய்யும் நானும் புறமானேம், யான் - நான், மெய்யன்பு பெறவல்லேன் அல்லா வண்ணம் - மெய்யன்பு பெற வல்லேனல்லாத தன்மையை, பெற்றேன் - அடைந்தேன், சிவனே - சிவபெருமானே, அற - மிகுதியாக, நின்னை சேர்ந்த அடியார் - உன்னை யடைந்த அடியார்கள், மற்று ஒன்று அறியாதார் - வேறொன்றையும் அறியாதவராய், சிறவு செய்து - சிறத்தலைச் செய்து, வழி வந்து - நெறியானே வந்து, நின் தாள் சேர்ந்தார் - உன் திருவடியை அடைந்தார்கள், எ - று.

(க - ரை.) இறைவனே, பொய்யும் யானும் புறம்போந்தோம், மெய்யடியார் உன் திருவடியை யடைந்தார் என்பது.

(வி - ரை.) அற என்பதற்குப் பிறவித் தொடர்பு அற்றொழிய எனினுமாம். சிறவு செய்து - சிறத்தலைச் செய்து (சிறந்து), சிறவு - சிறத்தல், வழிவராவழித் தாள்சேர்தலருமைதோன்ற, "வழி வந்து சிவனே நின்றாள் சேர்ந்தார்" என்றருளினர். (அசு)

தாராயுடையாயடியேற்குன்றாளிணையன்பு
போராவுலகம்புக்காரடியார்புறமேபோந்தேன்யா
னூராமலைக்குருட்டாமலைத்திங்குன்றாளிணையன்புக்
காராயடியேனயலேமயல்கொண்டழுகேனே.

(ப - ரை.) உடையாய் - உடையானே, அடியேற்கு - அடியேனுக்கு, உன் தாள் இணை அன்பு தாராய் - உன் திருவடித்துணைக்கு

அன்பு செய்தலாகிய பேற்றைக் கொடுத்தருளாய், போரா உலகம் - புக வொண்ணாத முத்தியுலகத்தில், அடியார் புக்கார் - அடியவர்கள் புகுந்தார்கள், யான் - நானொருவன், புறமே போந்தேன் - புறமாயினேன், ஊர் ஆ மலைக்க - ஊரிலுள்ளபசுக்கள் போர்செய்ய, குருட்டு ஆ மலைத்தாங்கு - குருட்டுப் பசுவும் போர்செய்தாற்போல, உன் தாள் இணை அன்புக்கு - உன் திருவடியிணைக்குச் செய்யவேண்டிய அன்பு செய்கைக்கு, ஆராய் - யாராகி, அடியேன் - அடியனேன், அயலே - அயலிலே, மயல்கொண்டு அழுகேன் - மயக்கங்கொண்டு அழுவேன், எ - று.

(க - ரை.) இறைவனே, அடியேன் உன் திருவடிக் கன்பு செய்யச் செய்தருள்வாயாக, அடியார் முத்தியுலகம்புக, யான் புறம் போந்தேன். ஊர்ப்பசுக்கள் பொரக் குருட்டுப்பசுவும் பொருதல் போல, அன்பர் உன்திருவடிக் கன்புசெய்ய, யானும் யாவனுகி அன்புசெய்ய விரும்பி யெழுவது என்பது.

(வி - ரை.) ஊர் ஆ - ஊர்ப்பசு, குருட்டு ஆ - குருட்டுப்பசு, ஆராய் என்றது என்ன வுரிமையுடையேனுகி யென்றபடி. (அஎ)

அழுகேனின்பாலன்பாமனமாயழல்சேர்ந்த
மெழுகேயன்னூர்மின்னூர்பொன்னூர்கழல்கண்டு
தொழுதேயுன்னைத்தொடர்ந்தாரோடுந்தொடராதே
பழுதேபிறந்தேனென்கொண்டுன்னைப்பணிகேனே.

(ப - ரை.) அழுகேன் - அழுவேன், நின்பால் அன்பு ஆம் மனம் ஆய் - உன்னிடத்து அன்புள்ள மனத்தினையுடையவராய், அழல்சேர்ந்த மெழுகே அன்னூர் - நெருப்பைச்சேர்ந்த மெழுகையே நிகர்த்தவராய், மின் ஆர் - மின்னுதல் அமைந்த, பொன் ஆர் கழல் கண்டு - பொன்னினுற் செய்யப்பட்ட அரியகழலை யணிந்த திருவடியைக்கண்டு, தொழுது - வணங்கி, உன்னை தொடர்ந்தாரோடும் - உன்னைத் தொடர்ந்தவராகிய அடியவரோடும், தொடராதே - தொடராமல், பழுதே பிறந்தேன் - வீணுகவே பிறந்தேன், என்கொண்டு - யாதுகொண்டு, உன்னை பணிகேன் - உன்னை வணங்குவேன், எ - று.

(க - ரை.) இறைவனே, அழல்சேர்ந்த மெழுகுபோலுருகும் மெய்யடியார் உன்னைத்தொழுது தொடர்ந்தார், உன்னிடத்து அன்பில்லாத நான் என்கொண்டு உன்னைப்பணிவேன் என்பது.

(வி - ரை.) தொடர்தல் - பின்பற்றிச்சேறல். அவ்வாறு பின் பற்றிச் சேறலின்மையால் பழுதே பிறந்தேன் எனத் தம்மையிழித்துக்கூறினர். அன்பில்லாமையால் "என் கொண்டுன்னைப் பணிகேன்" என்றருளினர். (அஅ)

பணிவார்பிணிதீர்த்தருளிப்பழையவடியார்க்குன்
னணியார்பாதங்கொடுத்தியதுவுமரிதென்றாற்
றிணியார்மூங்கிலனையேன்வினையைப்பொடியாக்கித்
தணியார்பாதம்வந்தொல்லைத்தாராய்பொய்தீர்மெய்யானே.

(ப - ரை.) பணிவார் - வணங்குகின்றவராகிய அடியார்களுடைய, பிணி தீர்த்து அருளி - பிறவிப் பிணியை நீக்கியருளி, பழைய அடியார்க்கு - உன் பழவடியார்க்கு, உன் - உனது, அணி ஆர் பாதம் - அழகுபொருந்திய திருவடியை, கொடுத்தி - கொடுத்தருள்கிறாய், அதுவும் - அதுவும், அரிது என்றால் - அருமையானால், திணி ஆர் - வலிமை பொருந்திய, மூங்கில் அனையேன் - மூங்கிலை நிகர்ப்பேனாகிய எனது, வினையை - வினைகளை, பொடி ஆக்கி - நீறு செய்து, ஒல்லை வந்து - விரைவாக வந்து, தணி ஆர் பாதம் தாராய் - தட்பமமைந்த திருவடியைத் தருவாயாக, பொய் தீர் மெய்யானே - பொய்யொழிந்த மெய்யனே, எ - று.

(க - ரை.) இறைவனே, அடியவரது பிறவிப்பிணியை நீக்கியருளி உன் திருவடியைத்தந் தருளுவது அருமையாயின், மனக்கோட்டத்தை யுடையேனது வினைகளைப் பொடியாக்கி உன் திருவடியைத் தந்தருள்வது அருமையே, ஆயினும் எனக்கு வேறு புகலிடமின்மையால் என்னைத் திருத்தி யாட்கொள்வது உனக்குத் தகுதியாமென்பது.

(வி - ரை.) மூங்கிலனையேன் என்றது மனக்கோட்டத்தால். முத்தாபக் கோடையால் வருந்தினோர்க்கு நிழலைச் செய்தலால் திருவடியைத் "தணியார் பாதம்" என்றருளினர். பொய்தீர் மெய் - பொய் கலவாத மெய். (அகூ)

யானேபொய்யென்னெஞ்சும்பொய்யென்னன்பும்பொய்
யானால்வினையேனழுதாலுன்னைப்பெறலாமே
தேனேயமுதேகரும்பின்றெளிவேதித்திக்கு
மானேயருளாயடியேனுனைவந்துறுமாறே.

(ப - ரை.) யான் பொய் - நான் பொய், என் நெஞ்சும் பொய் - என் மனமும் பொய், என் அன்பும் பொய் - என் அன்பும் பொய், ஆனால் - ஆயின், வினையேன் - வினையினேன், அழுதால் - அழுத லைச் செய்தால், உன்னை பெறல் ஆமே - உன்னை யடையலாகுமோ, தேனே - தேனே, அமுதே - அமிர்தமே, கரும்பின் தெளிவே - கருப் பஞ் சாற்றின் தெளிவே, தித்திக்கும் - இனிக்கின்ற, மானே - பெரி யோனே, அடியேன் - அடியனேன், உன்னை வந்து உறும் ஆறு - உன்னை வந்தடையும் வழியை, அருளாய் - அருள்புரிவாயாக, எ - று.

(க - ரை.) இறைவனே, யானும் என்மன முதலியவும் பொய் யாயின், உன்னை யெங்ஙனம் பெறுவேன், நான் உன்னைப் பெறும் வழியை எனக்கு அருள் செய்யவேண்டும் என்பது.

(வி - ரை.) மான் - மகான், (பெரியோன்) இது மஹாந் என் னும வடமொழிச் சிதைவு. (௯0)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆநந்தாதீதம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாறிலாதமாக்கருணைவெள்ளமே
வந்துமுந்திநின்மலர்கொடாளிணை
வேறிலாப்பதப்பரிசுபெற்றநின்
மெய்ம்மையன்பருன்மெய்ம்மைமேவினா
ரீறிலாதநீயெளியையாகிவந்
தொளிசெய்மானுடமாகநோக்கியுங்
கீறிலாதநெஞ்சுடையனாயினேன்
கடையனாயினேன்பட்டகீழ்மையே.

(ப - ரை.) மாறு இல்லாத - ஒருகாலத்தும் மாறுபடுதலில் லாத, மாகருணைவெள்ளமே - பெருங்கருணைக்கடலே, முந்திவந்து - முற்பட்டுவந்து, நல் - அழகாகிய, மலர்கொள் - தாமரைமலரின்

தன்மையைக்கொண்ட, தாள் இணை - திருவடித்துணையினின்றும், வேறு இல்லா - வேறுதலில்லாத, பரப்பரிசுபெற்ற - பக்குவம் அடைந்த, நின் - உன்னுடைய, மெய்மை அன்பர் - மெய்யடியார்கள், உன் மெய்மை மேவினார் - உனது உண்மை நிலையையடைந்தார்கள், ஈறு இல்லாத நீ - முடிவில்லாத நீ, ஒளி செய் மானுடமாக - ஒளியைச்செய்கிற மானுடவுருவாக, எளியை ஆகி வந்து - எளியையாய் எழுந்தருளி, நோக்கியும் - கடாக்ஷித்தும், கீறு இல்லாத - பிளத்தலில்லாத, நெஞ்சு உடைய - நெஞ்சினையுடைய, நாயினேன் - நாயேன், கடையன் ஆயினேன் - கடையனானேன், (இங்ஙனம் நான் கடையனானதற்குக் காரணம்) பட்ட கீழ்மையே - என்னிடத்துண்டாகிய தீவினைதானோ, எ - று.

(க - ரை.) இறைவனே, உன் மெய்யடியார் முந்திவந்து உன் திருவடிக்கன்புசெய்து உன் மெய்ந்நிலையை யடைந்தார்கள், முடிவற்றபெரியோனாகிய நீ எளியனாகி வந்து என்னைக்கடைக்கணித்தும் மனமுருகாத நான் கடைப்பட்டேன், இது என் தீவினைப்பயனோ என்பது.

(வி - ரை.) இறுதிக்காலத்து மாறுபடும் ஏனைய கடல்கள் போலாது என்றும் ஒருதன்மையாய் நிலைநிற்கும் அருட்கடலாதலால் "மாறிலாதமாக்கருணை வெள்ளமே" என்றருளினர். "எளியையாகி வந்தொளிசெய் மானுடமாகநோக்கியும்" என்றது திருப்பெருந்துறையில் குருமூர்த்தமாயெழுந்தருளின வரலாற்றைக் குறித்தது. (கக)

மையிலங்குநற்கண்ணிபங்கனே
வந்தெனைப்பணிகொண்டபின்மழுக்
கையிலங்குபொற்கிண்ணமென்றலா
லரியையென்றுனைக்கருதுகின்றிலேன்
மெய்யிலங்குவெண்ணீற்றுமேனியாய்
மெய்ம்மையன்பருன்மெய்ம்மைமேவினார்
பொய்யிலங்கெனைப்புகுதவிட்டுநீ
போவதோசொலாய்பொருத்தமாவதே.

(ப - ரை.) மையிலங்கும் - கருமையாக விளங்குகின்ற, நல் - அழகாகிய, கண்ணி - கண்களையுடையவளாகிய உமாதேவியை, பங்க - இடப்பாகத்திலுடையவனே, வந்து - நீயே வலியவந்து, என்னை பணிகொண்ட பின் - என்னை யடிமைகொண்ட பின்பு, மழும் கை

இலங்கு - மென்மையாகிய கையினிடத்தில் விளங்குகின்ற, பொன் கிண்ணம் என்று அல்லால் - எளிதாகிய பொற்கிண்ணம்போல நினைத்ததே யன்றி, அரியை என்று - அருமையுடையா யென்று, உன்னை கருதுகின்றிலேன் - உன்னை நினைக்கின்றிலேன், மெய் இலங்கு - உண்மை விளங்குகின்ற, வெண்மை நீறு - திருவெண்ணீற்றை யணிந்த, மேனியாய் - திருமேனியையுடையவனே, மெய்மை அன்பர் - மெய்யடியார்கள், உன் மெய்மை மேவினூர் - உன் உண்மை நிலையை அடைந்தார்கள், என்னை - அடியேனை, பொய்யில் - பொய்யாகிய உலகத்தில், புகுத விட்டு - நுழைய விட்டு, நீ போவதோ - நீபோவதாறோ, பொருத்தம் ஆவது - தகுதியாவது, சொல்லாய் - சொல்வாயாக, எ - று.

(க - ரை.) இறைவனே, நீ எழுந்தருளி என்னைப் பணிகொண்ட பிறகு, உன்னை எளியையாய் நினைத்ததன்றி அரியையாய் நினைத்தேனில்லை, ஆயினும் உன் மெய்யன்பர் உன் உண்மை நிலையை அடைய, நாமொருவனுமே இவ்வுலகத்தில் தங்கி யிருக்கவிட்டு நீபோவது உனக்குத் தகுதியாமோ என்பது.

(வி - ரை.) மை - அஞ்சனம் எனினுமாம். வந்து என்றதனால் நீயே வலியவந்து எனக்கூறலாயிற்று, ஒரு அரியபொருள் எண்மையிற் கிடைப்பின் அதனைக் கரதலாமலகம் (கையினெல்லிக்கனி) என்பதுபோலக் கையிலங்கு பொற்கிண்ண மென்றருளினர். பொய் என்றது பொய்யாகிய உலகத்தை. அங்கு - அசை. (கூஉ)

பொருத்தமின்மையேன்பொய்மையுண்மையேன்
போதவென்றெனைப்புரிந்துநோக்கவும்
வருத்தமின்மையேன்வஞ்சமுண்மையேன்
மாண்டிலேன்மலர்க்கமலபாதனே
யரத்தமேனியாயருள்செயன்பரு
நீயுமங்கெழுந்தருளியிங்கெனை
யிருத்தினுய்முறையோவெனெம்பிரான்
வம்பனேன்வினைக்கிறுதியில்லையே.

(ப - ரை.) பொருத்தம் இன்மையேன் - தகுதியின்மையேன், பொய்மை உண்மையேன் - பொய்யையுடையேன், என்னை - என்னை, போத என்று - வருக என்று, புரிந்து நோக்கவும் - நீ விரும்பி நோக்கவும், வருத்தம் இன்மையேன் - வருத்தமில்லாதேன், வஞ்சம்

உண்மையேன் - வஞ்சகமுடையேன், மாண்டிலேன்* - இறந்திலேன், கமல மலர் பாதனே - தாமரை மலர்போன்ற திருவடியையுடையவனே, அரத்தம் மேனியாய் - செவ்வரத்தமலர்போலுஞ்செவந்த திருமேனியையுடையவனே, அருள் செய் அன்பரும் - உன்னால் அருள் செய்யப்பட்ட அன்பர்களும், நீயும் - நீயும், அங்கு எழுந்தருளி - அவ்விடத்தே யெழுந்தருளி, என்னை - அடியேனை, இங்கு இருத்தினாய் - இவ்விடத்தே யிருத்திவைத்தாய், முறையோ - (இப்படி செய்தல் உனக்கு) முறைமைதானோ, என் எம்பிரான் - என் எம்பெருமானே, வம்பனேன் வினைக்கு - வீணனேன் வினைக்கு. இறுதி யில்லையே - முடிவுக்காலம் இல்லையோ, எ - று.

(க - ரை.) பொய்யனாகிய என்னை நீ விரும்பி நோக்கவும் வஞ்சனேன் வருந்தி மாண்டிலேன். இறைவனே, உன் அன்பரும் நீயும் சிவபுரத்துக் கெழுந்தருளி, என்னை இவ்வுலகத்தில் இருத்துதல் முறைமையாமோ என்பது.

(வி - ரை.) பொருத்தம் - இணக்கம் எனினுமாம். போத என்பது புகுத என்பதன் மரூஉ. புரிதல் - விரும்புதல். வருத்தம் - அநுதாபம். மலர்க் கமலம் - மலர்தலையுடைய கமலம் எனினும் பொருந்தும். தேவர் முனிவர் முதலியோர்க்கும் எட்டுதற்கரியதும், உயர்வுக்கோரெல்லை யில்லாததும் ஆதலால் சிவபுரத்தை, அங்கு எனச் சேய்மைச் சுட்டாற் சுட்டியருளினர். (௩௫)

இல்லைநின்கழற்கன்பதென்கணே
　　யேலமேலுநற்குழலிபங்கனே
கல்லைமென்கனியாக்கும்விச்சைகொண்
　　டென்னைநின்கழற்கன்பனாக்கினா
யெல்லையில்லைநின்கருணையெம்பிரா
　　னேதுகொண்டுநானேதுசெய்யினும்
வல்லையேயெனக்கின்னுமுன்கழல்
　　காட்டிமீட்கவும்மறுவில்வானனே.

(ப - ரை.) நின் கழற்கு - உன் திருவடிக்கு, அன்பு - அன்பு செய்தல், என் கண் இல்லை - என்னிடத்தில் இல்லை, ஏலம் ஏலும் - மயிர்ச்சாந்து பொருந்திய, நல் - அழகாகிய, குழலி - கூந்தலையுடையவளாகிய உமாதேவியின், பங்க - பாகனே, கல்லை - கல்லினை,

மெல் கனி ஆக்கும் - மெல்லிய கனியாக்கிய, விச்சைகொண்டு - வித்தையைக்கொண்டு, என்னை - அடியேனை, நின் கழற்கு அன்பன் ஆக்கினாய் - உன் திருவடிக்கு அன்புடையவனாகச் செய்தாய், நின் கருணை - உன் கருணைக்கு, எல்லை இல்லை - அளவு இல்லை, எம்பிரான் - எம்பிரானே, எது கொண்டு - எதனைக்கொண்டு, நான் எது செய்யினும் - நான் எதனைச் செய்தாலும், மறு இல் - குற்றமற்ற, வானனே - முத்தியுலகையுடையவனே, இன்னும் - இன்னமும், எனக்கு - அடியேனுக்கு, உன் கழல் காட்டி மீட்கவும் வல்லையே - உன் திருவடியைக் காட்டி மீட்கவுந்தக்க சத்திமானாகவே யிருக்கின்றனை, எ-று.

(க - ரை.) இறைவனே, எனக்கு உன் திருவடிக்கண் அன்பில்லையாகவும், கல்லைக்குழைத்த வித்தையைக்கொண்டு என்னை உன் திருவடிக்கு அன்பனாக்கினாய், ஆகலால் உன் கருணைக்களவில்லையென்பது.

(வி - ரை.) கல்லைமென் கனியாக்கும் விச்சை - கல்லைக் குழைக்கும் வித்தை. அது மேருமலையை வில்லாக வளைத்தது. "தெவ்வரை மெய்யெரிகாய் சிலையாண்டென்னை யாண்டுகொண்ட செவ்வரை மேனியன்" என்றது உம் இக்கருத்தினதே. எதுகொண்டு நானெது செய்யினும் என்றது, மன முதலாகிய கருவிகளைக்கொண்டு என்ன தீமை செய்தாலும் என்றபடி. மீட்டல் - அத்தீமையினின்றும் திருப்புதல். (௯௪)

வானநாடருமறியொணாதநீ
　　மறையிலீறுமுன்றொடரொணாதநீ
யேனநாடருந்தெரியொணாதநீ
　　யென்னையின்னிதாயாண்டுகொண்டவா
வூனைநாடகமாடுவித்தவா
　　வுருகிநானுனைப்பருகவைத்தவா
ஞானநாடகமாடுவித்தவா
　　வைகவையகத்துடையவிச்சையே.

(பு - ரை.) வானநாடரும் - விண்ணுலகத்தாரும், அறியொணாத நீ - அறியவொண்ணாத நீ, மறையின் - வேதத்தின், ஈறும் முன் - அந்தமும் ஆதியும், தொடர் ஒண்ணாத நீ - தொடரவொண்ணாத நீ,

ஏனை நாடரும் - மற்றையுலகத்தாரும், தெரி யொணாத நீ - அறிய வொண்ணாத நீ, என்னை - அடியேனை, இன்னிதாய் - இனிதாக, ஆண்டு கொண்ட ஆறு - ஆண்டுகொண்ட வண்ணமும், ஊனை நாடகம் ஆடுவித்த ஆறு - இந்த வுடம்பை நாடகமாட்டின வண்ணமும், நான் உருகி - நான் மனமுருகி, உன்னை பருக வைத்தவா - உன்னைப் பருகச் செய்த வண்ணமும், ஞான நாடகம் ஆடுவித்தவா - ஞானநாடகம் ஆடுவித்த வண்ணமும், வையகத்துடைய இச்சை - உலகஆசை, நைய - எனக்கு ஒழியவேயாகும், எ - று.

(க - ரை.) இறைவனே, தேவர் முதலாயினோர்க்கு அரிமை யாகிய நீ, அடியேனை யாட்கோடல் முதலாயின வற்றை நோக்கின் எனக்கு இந்த உலகவிச்சை யொழிதற்கே யென்பது.

(வி - ரை.) வானநாடர் எனத் தேவரை முற்கூறியது சிறப்பு நோக்கி யென்க. ஏனைநாடர் என்றது பூதலம் பாதலம் என்பவற்றி லுள்ளாரை. நாடகம் - நடநம். பருகுதல் - நுகர்தல். வையகத் துடை அவிச்சை யெனப் பிரித்து, உலகின் அஞ்ஞானம் என்று ரைத்தலுமாம். (கூ)

விச்சதன்றியேவிளைவுசெய்குவாய்
　　விண்ணுமண்ணகமுழுதும்யாவையும்
வைச்சுவாங்குவாய்வஞ்சகப்பெரும்
　　புலையனேனையுன்கோயில்வாயிலிற்
பிச்சனாக்கினாய்பெரியவன்பருக்
　　குரியனாக்கினாய்தாம்வளர்த்ததோர்
நச்சுமாமரமாயினுங்கொலார்
　　நானுமங்ஙனேயுடையநாதனே.

(ப - ரை.) விண்ணும் - விண்ணுலகத்தையும், மண் அகம் முழுதும் - மண்ணுலக முழுதையும், யாவையும் - மற்றெல்லாவற்றையும், விச்சு இன்றியே - வித்தில்லாமலே, விளைவு செய்குவாய் - படைப்பாய், வைச்சு வாங்குவாய் - காத்து அழிப்பாய், வஞ்சகம் - வஞ்சத்தையுடைய, பெரும்புலையனேனை - பெரும்புலையனாகிய என்னை, உன் கோயில்வாயிலில் - உன் கோயிலின்கண் திரிகின்ற, பிச்சன் ஆக்கினாய் - பித்தனாக்கி விட்டாய், பெரிய அன்பருக்கு உரியன் ஆக்கினாய் - பேரன்பினராகிய உன்னடியார்க் குரியேனாகச் செய்தாய், தாம் வளர்த்தது - தாம் பாதுகாத்தது, ஓர் - ஒப்பற்ற, மா - பெரிய,

நச்சு மரம் ஆயினும் - விஷத்தன்மையுடைய மரமேயானாலும், கொல்லார் - (உலகத்தார் அதனை) அழிக்கமாட்டார்கள், உடைய நாதனே - என்னை அடிமையாகவுடைய இறைவனே, நானும் அங்ஙனே - நானும் அவ்வாறே உன்னாலே காக்கப்படுந் தன்மையேன், எ - று.

(க - ரை.) இறைவனே, எல்லாவுலகங்களையும் வித்தின்றிப் படைத்துக் காத்து அழிப்பவனே, என்னை உன் கோயில்வாயிலிற் பித்தனுக்கி, உன் அன்பராகு திருத்தொண்டிக்கும், உரியேனுக்கச்செய்தனை உலகத்தார் எட்டிமரத்தையும் வெட்டார், அடியேனும் உனக்கு அத்தன்மையனே என்பது.

(வி - ரை.) விச்சு - வித்து. வைச்சு - வைத்து. வைத்தல் - நிலைபெறுத்தல். வாங்குதல் - அழித்தல். தாம் வளர்த்ததோர் நச்சுமாமரமாயினுங்கொலார் என்பதற்கு எழுவாயாகிய உலகத்தார் என்பது வருவிக்கப்பட்டது. நஞ்சு - விடம். அது நச்சு என வலித்தல் பெற்றது. நச்சுமாமரம் - எட்டிமரம். (கூசு)

உடையநாதனேபோற்றிநின்னலாற்
பற்றுமற்றெனக்காவதொன்றினி
யுடையனேபணிபோற்றியும்பரார்
தம்பராபராபோற்றியாரினுங்
கடையனுயினேன்போற்றியென்பெருங்
கருணையாளனேபோற்றியென்னைநின்
னடியனுக்கினுய்போற்றியாதியு
மந்தமாயினுய்போற்றியப்பனே.

(ப - ரை) உடையநாதனே - எம்மையாளுடைய இறைவனே, போற்றி - நமஸ்காரம், நின் அல்லால் - உன்னையன்றி, எனக்கு - அடியேனுக்கு, இனி - இனி, ஆவது ஒன்று பற்று - ஆவதாகிய ஒரு பற்றினை, உடையனே - உடையேனே, பணி - கட்டளையிட்டருள், போற்றி - நமஸ்காரம், உம்பரார் தம் - தேவர்களுடைய, பராபரா - பராபரனே, போற்றி - நமஸ்காரம், யாரினும் கடையன் ஆயினேன், எல்லாரினும் கடையனுனேன், போற்றி - நமஸ்காரம், என் பெருங் கருணையாளனே - என் பெருங்கருணையாளனே, போற்றி - நமஸ்காரம், என்னை நின் அடியன் ஆக்கினுய் - என்னை உன்னடியவனுகச் செய்தாய், போற்றி - நமஸ்காரம், ஆதியும் அந்தமும் ஆயினுய் - முதலும்

இறுதியுமானாய், அப்பனே - எமது தந்தையே, போற்றி - நமஸ்காரம், எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னையன்றி யெனக்கு வேறோர் பற்றில்லை, உனக்கு நமஸ்காரஞ் செய்கிறேன், என்னைக் காத்தருளல் வேண்டும் என்பது.

(வி - ரை.) உடைய எனப் பொதுப்படக் கூறலால் எல்லாவற்றையுமுடைய எனப்பொருள் கொள்க. கருணையாளன் - கருணையையாளுதலுடையான் என்றபடி. (கஎ)

அப்பனே யெனக்கமுதனேயா
நந்தனேயகநெகவள்ளூறுதே
னொப்பனேயுனக்குரியவன்பரி
லுரியனாயுனைப்பருகநின்றதோர்
துப்பனேசுடர்முடியனே துணை
யாளனேதொழும்பாளரெய்ப்பினில்
வைப்பனேயெனைவைப்பதோசொலாய்
நையவையகத்தெங்கண்மன்னனே.

(ப - ரை.) எனக்கு அப்பனே - எனக்குத் தந்தையே, அமுதனே - அமிர்தம் போல்பவனே, ஆநந்தனே - ஆநந்தத்தையுடையவனே, அகம் நெக - மனம் நெகிழும்படி, அள் ஊறு தேன் ஒப்பனே - செவிகளுக்குச் சுரக்கின்ற தேனை நிகர்ப்பவனே, உனக்கு உரிய அன்பரில் - உனக்கு அருகராகிய அன்பரைப்போல, உரியன் ஆய் - உரியவனாகி, உன்னை பருக - உன்னைப் பருகும் வண்ணம், நின்றது - நின்றதாகிய, ஓர் - ஒரு, துப்பனே - அறிவுருவனே, சுடர் முடியனே - ஒளி பொருந்திய முடியை யுடையவனே, துணை ஆளனே - துணையாயிருப்பவனே, தொழும்புஆளர் - தொண்டர்களுக்கு, எய்ப்பினில் - இளைத்தகாலத்தில், வைப்பனே - நிட்சேபம்போல்பவனே, எங்கள் மன்னனே - எங்கள் வேந்தனே, நைய-வருந்தும்படி, என்னை - அடியேனை, வையகத்து - உலகத்தில், வைப்பதோ - வைப்பது தகுதியோ, சொலாய் - சொல்வாயாக, எ - று.

(க - ரை.) இறைவனே, என்னை இவ்வுலகத்தில் வைத்து வருத்துவது உன் பெருமைக்குத் தகுதியோ என்பது.

(வி - ரை.) வள் ஊறு எனப்பிரித்து வளமாகச் சுரக்கின்ற என்றலுமாம். துப்பன் உணவாயிருப்பவன் எனினுமாம். துணை

யாளன் எனப் பொதுப்படக்கூறலால் எல்லாவுயிர்களுக்கும் துணை யாயிருப்பவன் எனக்கொள்க. வைப்பு - சேமப்பொருள் (புதையல்).

மன்னவெம்பிரான்வருகவென்னென்னை
மாலுநான்முகத்தொருவன்யாரினு
முன்னவெம்பிரான்வருகவென்னென்னை
முழுதும்யாவையுமிறுதியுற்றநாட்
பின்னவெம்பிரான்வருகவென்னென்னைப்
பெய்கழற்கணன்பாயெனாவினாற்
பன்னவெம்பிரான்வருகவென்னென்னைப்
பாவநாசநின்சீர்கள்பாடவே.

(ப - ரை.) எம்பிரான் - எம்பிரானே, மன்ன - நிலைபெற்றிருக்க, என்னை வருக என் - என்னை வருகவென்பாய், மாலும் நான் முகத்து ஒருவனும், திருமாலும் நான்கு திருமுகங்களையுடைய ஒப்பற்றவனாகிய பிரமனும், யாரினும் - மற்றுமுள்ள எல்லாரினும், முன்ன - முன்னோனே, எம்பிரான் - எம்பிரானே, என்னை வருக என் - என்னைவருக வென்பாய், முழுதும் யாவையும் - எல்லாப்பொருள்களும், இறுதி உற்ற நாள் - முடிவையடைந்தகாலத்தில், பின்ன- பின்னவனா யிருப்பவனே, எம்பிரான் - எம்பிரானே, என்னைவருக என் - என்னைவருக வென்பாய், பெய்கழல் கண் அன்பு ஆய் - வீரக்கழலணிந்த திருவடிக்கண் அன்புடையேனாய், என் நாவினால் பன்ன - என்நாவினால் புகழவும், எம்பிரான் - எம்பிரானே, பாவநாச - பாவநாசனே, நின்சீர்கள்பாட - உன் பெருமைகளைப்புகழ்ந்து பாடவும், என்னை வருக என் - என்னைவருக வென்பாய், எ - று.

(க - ரை.) எம்பிரானே, உன்புகழ்களைப்பாடுதற்கு என்னைவருகவென்றருள் செய்தல் வேண்டும் என்பது.

(வி - ரை.) மன்ன - தலைவனே எனினுமாம். முன்ன பின்ன என்றது முன்னும் பின்னு முள்ளவன் என்றற்கு, "மூப்பானிளையவன் முன்னவன் பின்னவன்" என்பதூஉம் இக்கருத்துப் பற்றிவந்தது. பன்னுதல் - பலகாற்சொல்லல் (புகழ்தல்). (௯௯)

பாடவேண்டுநான்போற்றிநின்னையே
பாடிநைந்துநைந்துருகிநெக்குநெக்
காடவேண்டுநான்போற்றியம்பலத்
தாடுநின்கழற்போதுநாயினேன்

கூடவேண்டுநான்போற்றிப்புழுக்
கூடுநீக்கெனைப்போற்றிபொய்யெலாம்
விடவேண்டுநான்போற்றிவீடுதந்
தருளுபோற்றிநின்மெய்யர்மெய்யனே.

(ப - ரை.) நான் - அடியேன், நின்னையே - உன்னையே, பாட வேண்டும் - பாடுதல்வேண்டும், போற்றி - நமஸ்காரம், நான் - அடியேன், பாடி - பாடுதல்செய்து, நைந்து நைந்து உருகி - மனம் நைந்து நைந்துருகி, நெக்கு நெக்கு — நெகிழ்ந்து நெகிழ்ந்து, ஆடவேண்டும் - ஆடுதல் வேண்டும், போற்றி - நமஸ்காரம், நாயினேன் நான் - நாயினேனாகிய அடியேன், அம்பலத்து ஆடும் - அம்பலத்தில் நடிக்கின்ற - நின்கழல்போது - உன் திருவடித் தாமரைமலரை, கூடவேண்டும் - சேரவேண்டும், போற்றி - நமஸ்காரம், என்னை - அடியேனை, இ புழு கூடு நீக்கு-இந்தப் புழுக்கூட்டினின்றும் நீக்குவாயாக, போற்றி- நமஸ்காரம், நான் - அடியேன், பொய் எல்லாம் - பொய்களெல்லாவற்றையும், விடவேண்டும் - விடவேண்டும், போற்றி - நமஸ்காரம், நின்மெய்யர் மெய்யனே - உன் மெய்யன்பர்க்கு மெய்யன்பனே, வீடு தந்தருள் - முத்தியைக்கொடுத்தருள்வாயாக, போற்றி - உனக்கு நமஸ்காரம், எ - று.

(க - ரை.) இறைவனே யான் உன்னைப்பாடுதல் முதலாயின செய்தல்வேண்டும், நீ இந்த வுடம்பையொழித்து வீடுதந்தருளல்வேண்டும், உனக்கு நமஸ்காரம் என்பது.

(வி - ரை.) நைந்து நைந்து - மிகுதியாக நைந்து. நெக்கு நெக்கு - மிகவும் நெகிழ்ந்து. புழுக்கூடு என்றது உடம்பை. விட வேண்டும் என்பது வீடவேண்டும் என நீண்டது. வீடு - முத்தி. (மோ.கூ௩ம்.) (௧00)

திருச்சிற்றம்பலம்.

# நீத்தல்விண்ணப்பம்.

## பிரபஞ்சவைராக்கியம்.

உத்தரகோசமங்கையில் அருளிச்செய்யப்பட்டது.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

கடையவனேனைக்கருணையினாற்கலந்தாண்டுகொண்ட
விடையவனேவிட்டிடுதிகண்டாய்விறல்வேங்கையின்றோ
லுடையவனேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
சடையவனேதளர்ந்தேனெம்பிரானென்னைத்தாங்கிக்கொள்ளே.

(ப - ரை.) கடையவனேனை - கடையேனை, கருணையினால் - பெருங்கருணையால், கலந்து - வலியவந்தடைந்து, ஆண்டு கொண்ட - ஆண்டுகொண்டருளின, விடையவனே - இடபவாகநனே, விட்டிடுதி - என்னை விட்டுவிடுகின்றாயோ; விறல் - வலிமையுடைய, வேங்கையின் தோல் - புலித்தோலாகிய, உடையவனே - ஆடையைத் தரித்தவனே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோசமங்கைக்கு - திருவுத்தரகோசமங்கைக்கு, அரசே - அரசனே, சடையவனே - சடாமகுடத்தையுடையவனே, தளர்ந்தேன் - சோர்ந்தேன், எம்பிரான் - எம்பிரானே, என்னைத் தாங்கிக் கொள் - என்னைப் பொறுத்துக் கொள்வாயாக, எ - று.

(க - ரை.) கடையேனைத் தடுத்தாட்கொண்ட சிவபெருமானே, என்னை விட்டு விடுகின்றாயோ, விட்டு விட்டால் என்னைத் தாங்கிக் கொள்வோர் இல்லாமையால் என்னை நீயே தாங்கிக்கொள்ளவேண்டும் என்பது.

(வி - ரை.) வேங்கையின் தோல் உடையவனே என்பதற்கு புலித்தோலையுடையவனே யென்றலும் பொருந்தும். உத்தரகோச

மங்கை ஓர் திருப்பதி. கடையேனைக் கருணையினு லாண்டுகொண் டனை யன்றே அத்தன்மையையாகிய உனக்குத் தளர்ந்த என்னைத் தாங்கிக் கோடலுங்கடமையா மென்பார் "கருணையினுற் கலந்தாண்டு கொண்ட விடையவனே, தளர்ந்தேன் என்னைத் தாங்கிக்கொள்ளே" என்ருர். அரசு - பண்பாகு பெயர். (௧)

கொள்ளேர்பிளவகலாத்தடங்கொங்கையர்கொவ்வைச்செவ்வாய்
விள்ளேனெனினும்விடுதிகண் டாய்நின்விழுத்தொழும்பி
னுள்ளேன்புறமல்லேனுத்தரகோசமங்கைக்கரசே
கள்ளேனொழியவுங்கண்டுகொண் டாண்டதெக்காரணமே.

(ப - ரை.) கொள் ஏர் பிளவு அகலா - கொள்ளின் அழகாகிய பிளவளவும் நீங்காத, தடம் கொங்கையர் - மலைபோலும் தனங்களை யுடையராகிய மாதரது, கொவ்வை செவ்வாய் - கோவைக்கனிபோலும் செவப்பாகிய அதரத்தை, விள்ளேன் எனினும் - நான் விட்டு நீங்கேனுயினும், விடுதி - என்னைவிட்டு விடுகின்ருயோ, நின் - உனது, விழு தொழும்பின் உள்ளேன் - மேலாகிய திருத்தொண்டிலுள்ளேன், புறம் அல்லேன் - புறத்தினே னல்லேன், உத்தரகோசமங்கைக்கு - திருவுத்தரகோசமங்கைக்கு, அரசே - அரசனே, கள்ளேன் ஒழியவும் - கள்வனுகிய நான் உன்னைவிட்டு நீங்கவும், கண்டு கொண்டு - எனது நிலைமையைக்கண்டுகொண்டு, ஆண்டது - என்னை யாண்டருளினது, எ காரணமே - எந்தக் காரணத்தினுலோ (அறியேன்), எ - று.

(க - ரை.) திருவுத்தரகோச மங்கைக்கரசனே, நான் மாதர் மயக்கத்தி லகப்பட்டுழல்வேனுயினும் என்னை விட்டு விடுதல் உனக் குத் தகுதியன்று என்பது.

(வி - ரை.) கொள்ளேர் பிளவகலாத் தடங்கொங்கையர் என் றது, மிகவும் நெருங்கின தனங்களையுடையவர் என்றபடி. தடங் கொங்கை, பெரிய கொங்கை யெனினுமாம். கொவ்வை முதலாகு பெயர். செவ்வாய் என்றதற் கேற்பக் கொவ்வை யென்பதற்கு அதன் கனியெனக் கொள்ளலாயிற்று. கள்ளேன் - பொய்யனுகிய நான் எனினுமமையும். (௨)

காருறுகண்ணியனாம்புலனுற்றங்கரைமரமாய்
வேருறுவேனைவிடுதிகண்டாய்விளங்குந்திருவா
ரூருறைவாய்மன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
வாருறுபூண்முலையாள்பங்கவென்னைவளர்ப்பவனே.

(ப - வா.) கார் உறு கண்ணியர் - கருமை மிகுந்த கண்களையுடையராகிய மாதரது, ஐம்புலன் - ஐம்புலவின்பங்கள் என்கிற, ஆற்றங்கரை மரமாய் - ஆற்றங்கரை மரமாகி, வேர் உறுவேனை - வேரூன்றுகிற என்னை, விடுதி - விட்டுவிடுகிறாயோ, விளங்கும் - பிரகாசிக்கிற, திருவாரூர் உறைவாய் - திருவாரூரில் வசிப்பவனே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோச மங்கைக்கு - திருவுத்தரகோச மங்கைக்கு, அரசே - அரசனே, வார் உறு - கச்சு அணியப்பெற்ற, பூண் - ஆபரணங்களோடு கூடிய, முலையாள் - தனங்களை யுடையவளாகிய உமாதேவியின், பங்க - பாகனே; என்னை வளர்ப்பவனே - என்னைப் பாதுகாப்பவனே, எ - று.

(க - ரை.) மாதரது இன்பத்தை விரும்பி, ஆற்றங்கரை மரம் போன்று நிலையற்றுழல்வேனாயினும், என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) கார் உறு - அழகுமிகுந்த என்றலுமாம். உறுதல் பொருந்துதலுமாம். ஆற்றங்கரை மரத்திற்கு என்றும் அபாயமே யாதல்போல, மாதர்மயக்கத்திற் சிக்கி யுழல்வேனாகிய எனக்கும் அபாயமே யுளதாமென்பார், "காருறுகண்ணியரைம்புலனாற்றங்கரைமரமாய்" என்றருளினர். "கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறியுமைம்புலனும் ஒண்டொடிகண்ணே யுள" என்பது திருக்குறள். வார் - கச்சு. "என்னை வளர்ப்பவனே" என்றமையால், என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது போதரும். என்னை வளர்த்தல் எமதன்னையாகிய உமாதேவியாரோடு கூடி யல்லது இயை யாதென்பார், "வாருறுபூண்முலையாள்பங்கவென்னைவளர்ப்பவனே" என்றார்.

வளர்கின்றநின்கருணைக்கையில்வாங்கவுநீங்கியிப்பான்
மிளிர்கின்றவென்னைவிடுதிகண்டாய்வெண்மதிக்கொழுந்தொன்
றொளிர்கின்றநீண்முடியுத்தரகோசமங்கைக்கரசே
தெளிகின்றபொன்னுமின்னும்மன்னதோற்றச்செழுஞ்சுடரே.

(ப - ரை.) வளர்கின்ற - விர்த்தி யடைகிற, நின் - உனது, கருணை கையில் - கிருபையாகிய கையால், வாங்கவும் - வலிக்கவும், நீங்கி - விலகி, இப்பால் - இவ்விடத்தில், மிளிர்கின்ற என்னை -

விளங்குகிற என்னை, விடுதி - விட்டுவிடுகிறாயோ, வெள் - வெண்மையாகிய, மதிக்கொழுந்து ஒன்று - ஓரிளம்பிறையானது, ஒளிர்கின்ற - விளங்குகின்ற, நீள்முடி - நீண்ட சடைமுடியையுடைய, உத்தரகோச மங்கைக்கு - திருவுத்தரகோச மங்கைக்கு, அரசே - அரசனே, தெளிகின்ற பொன்னும் மின்னும் அன்ன - தெளியாநின்ற பொன்னையும் மின்னலையும் நிகர்த்த, தோற்றம் - காட்சியையுடைய, செழுஞ்சுடரே - செழுமையாகிய சோதியே, எ - று.

(க - ரை.) இறைவனே, உனது பெருங்கருணையாகிய கையால் என்னை வளைக்கவும் அகப்படாது விலகி இந்தப் பொய்யுலகில் உழலா நின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) இறைவனது கருணை என்றுமுங் குறையாது மேன்மேலும் அபிவிர்த்தியடைந்து வருதலால் "வளர்கின்ற நின் கருணை" என்றார். வளர்கின்ற கருணை யாதலால் பெருங்கருணையென்றுரைக்கப்பட்டது. வாங்குதல் - வளைத்தல். இப்பால் - இப்பிரபஞ்சப் பகுதியில், பால் - பகுதி. மதிக்கொழுந்தொன்று என்றதனால் ஒரு கலையாகிய திங்கள் எனக்கொள்க. நீண்முடி அரசே என வியையும். தெளிகின்ற பொன் - உருகிக்கண் விட்டாடும்பொன். மேனியென்னாது தோற்றம் என்றமையால், பொன்னைத் திருமேனிக்கும், மின்னை வீழ்சடைக்கும் உவமையாகக்கொள்க. "பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனிபோலிந்திலங்கு, மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை" என்றார் சேரமான்பெருமாளுநாயனாரும். (௨)

செழிகின்றதீப்புகுவிட்டிலிற்சின்மொழியாரிற்பன்னாள்
விழுகின்றவென்னைவிடுதிகண்டாய்வெறிவாயறுகா
லுழுகின்றபூமுடியுத்தரகோசமங்கைக்கரசே
வழிநின்றுநின்னருளாரமுதூட்டமறுத்தனனே.

(ப - ரை.) செழிகின்ற - விர்த்தியடையாநிற்கிற, தீ - நெருப்பில், புகு - விழுகின்ற, விட்டிலின் - விட்டிற் பறவையைப்போல, சில்மொழியாரில் - சின்மொழியாராகிய மாதர்மயக்கத்தில், பல்நாள் - பலதினமும், விழுகின்ற - விழாநின்ற, என்னை - அடியேனை, விடுதி - விட்டுவிடுகிறாயோ, வெறி வாய் - மணம் பொருந்திய, அறுகால் - வண்டுகள், உழுகின்ற - உழாநின்ற, பூ - மலரையணிந்த, முடி - திருமுடி

னையுடைய, உத்தரகோச மங்கைக்கு - திருவுத்தரகோச மங்கைக்கு, அரசே - அரசனே. வழி நின்று - வழியில் நின்று, நின் அருள் - உன்னருளாகிய, ஆர் அமுது - அரிய அமிர்தத்தை, ஊட்ட - நீ யுண்பிக்க, மறுத்தனன் - யான்மறுத்தேன், ஏ-என்தீவினை வலியிருந்தவாறென்ன வியப்பு, எ - று.

(க - ரை.) தீயில்வீழ்ந்தழிகின்ற விட்டில்போல மாதர்மயக்கில் வீழ்ந்தழிகின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) செழித்தல் - வளர்தல். விட்டில் - விளக்கில்வந்து விழும் ஓர் பறவை விசேடம், இது உருவத்தால் நகிப்பது. கின்மொழி - நிரம்பாமொழி. வெறி - மணம், கள் எனினுமாம். வண்டு ஆறுகாலுடையதாதலால் அதனை அறுகாலென்றார். பூ எனப்பொதுப்படக் கூறினாரேனும் இறைவற்குக் கொன்றைமலர் விருப்பமாதலால் அதனையேகொள்க. "வில்வமுடன் கொன்றைமலர் சங்கரற்கு நேயம்" என்பதுபுட்பவிதி. வெறிவாய்பூ அறுகாலுழுகின்றபூ எனவியைக்க. வழி - கெடப்புகும்வழி. அமுதூட்டமறுப்பாருண்டோ, அங்ஙனமாக,நான் மறுத்தது என் தீவினைவலியானன்றேயென்பார், "நின்னருளாரமுதூட்ட மறுத்தனனே" என்றார், ஏ - வியப்பின் கண்வந்தது. மறுத்தல் - தடுத்தல். (ரு)

மறுத்தனன்யானுன்னருளறியாமையிலென்மணியே
வெறுத்தெனைநீவிட்டிடுதிகண்டாய்வினையின்றொகுதி
யொறுத்தெனையாண்டுகொளுத்தரகோசமங்கைக்கரசே
பொறுப்பரன்றேபெரியோர்சிறுநாய்கடம்பொய்யினையே.

(ப - ரை.) யான் - நான், உன் அருள் - உன்திருவருளை, அறியாமையில் - அறியாமையால் மறுத்தனன் - மறுத்தேன், என் மணியே - என் மாணிக்கமே, நீஎன்னை வெறுத்து - நீ அடியேனை வெறுத்து, விட்டிடுதி - விட்டுவிடுகிறாயோ, வினையின் தொகுதி ஒறுத்து - வினைத்திரளை அழித்து,என்னை ஆண்டு கொள் - என்னையாண்டுகொண்டருளவேண்டும், உத்தரகோச மங்கைக்கு - திருவுத்தரகோச மங்கைக்கு, அரசே - அரசனே, பெரியோர்-மேலோர், சிறுநாய்கள் பொய்யினை — சிறிய நாய்போல் பவர்களது குற்றத்தை, பொறுப்பர் - பொறுத்துக்கொள்வர், எ - று.

(க - ரை.) எனது அறியாமையால் உன்னருளமுதத்தைத் தடுத்தேனாயினும் என்னைக்கைவிடுதல் உனக்குத்தகுதி யன்று, சிறியோர் செய்யுங் குற்றங்களைப் பெரியோர் பொறுத்துக்கொள்ளுதல் தகுதியென்பது.

(வி - ரை.) அறியாமை - அஞ்ஞானம். வெறுத்தல் - கோபித்தல். என்வினைக்கோரவதியின்றென்பார் "வினையின்றொகுதி" என்றார். பொய் யென்றது இவ்விடத்துக் குற்றத்துக்காயிற்று. அன்று, ஏ இரண்டும் அசைகள். அன்றே - அல்லவா எனினும் பொருந்தும்.

பொய்யவனேனைப்பொருளெனவாண்டொன்றுபொத்திக்கொண்ட
மெய்யவனேவிட்டிடுதிகண்டாய்விடமுண்மிடற்று
மையவனேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
செய்யவனேசிவனேசிறியேன்பவந்தீர்ப்பவனே.

(ப - ரை) பொய்யவனேனை - பொய்யனாகிய என்னை, பொருள் என ஆண்டு - ஒருபொருளாகக் கருதியாண்டருளி, ஒன்று பொத்திக்கொண்ட - ஒருபொருளை மறைத்துக் கொண்ட, மெய்யவனே - மெய்யனே, விட்டிடுதி - விட்டு விடுகிறாயோ, விடம் உண் மிடற்று - நஞ்சுண்ட கண்டத்தில், மையவனே - கருமையையுடையவனே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோசமங்கைக்கு - திருவுத்தரகோசமங்கைக்கு, அரசே - அரசனே, செய்யவனே - செம்மையையுடையவனே, சிவனே - சிவபெருமானே, சிறியேன் பவம் தீர்ப்பவனே - சிறியேனது பாவங்களை நீக்குவோனே, எ - று.

(க - ரை.) பொய்யனாகிய என்னையோர் பொருளாக்கி யாட்கொண்ட மெய்யனே, என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) ஒன்று என்றது முத்தியை. மிடறு - கழுத்து. மை - கருமை. பவம் - பிறவியெனினுமாம். (எ)

தீர்க்கின்றவாறென்பிழையைநின்சீருளென்கொலென்று
வேர்க்கின்றவென்னைவிடுதிகண்டாய்விரவார்வெருவ
வார்க்கின்றதார்விடையுத்தரகோசமங்கைக்கரசே
யீர்க்கின்றவஞ்சொடச்சம்வினையேனையிருதலையே.

(ப - ரை.) என் பிழையை - என்குற்றங்களை, நின் சீர் அருள்- உன் பேரருளானது, தீர்க்கின்ற ஆறு என் என்று - நீக்கும் வகையாதென்று, வேர்க்கின்ற என்னை - மனம் புழுங்குகின்ற என்னை, விடுதி - விட்டு விடுகின்றாயோ, விரவார் வெருவ - பகைவர் அஞ்சும்படி, ஆர்க்கின்ற - ஒலிக்கின்ற,தார் - கிண்கிணிமாலையைத் தரித்த, விடை - இடபவாகனத்தையுடைய, உத்தரகோசமங்கைக்கு - திருவுத்தரகோசமங்கைக்கு, அரசே - அரசனே, அஞ்சொடு அச்சம் - ஐம்புலவாசைகளோடு அச்சமும், வினையேனை - தீவினையையுடையேனை, இருதலை-இரண்டு பக்கத்திலும், ஈர்க்கின்ற - இழுக்கின்றன, எ - று.

(க - ரை.) எம்மிறைவனே, என் குற்றங்களை உன் திருவருள் நீக்குவதெவ்வாறென்று வேர்க்கின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று, ஐம்புலவாசையும் அச்சமும் என்னை யிரண்டு பக்கத்திலும் இழுக்கின்றன என்பது.

(வி - ரை.) வேர்த்தல் - மனம் புழுங்கல், வெயர்த்தல் எனினுமாம். விரவார் - கலவாதவர். (பகைவர்), வெருவுதல் - அஞ்சுதல். ஆர்த்தல் - ஆரவாரித்தல். தார் - கிண்கிணிமாலை. இது இடபத்துக்குச் சிறந்த பூணாதலால் "தார்விடை" என்றார். தார்விடை அரசே என வியைக்க. அஞ்சு - ஐந்து, (ஐம்புலவாசை). அஞ்சொடச்சம் இருதலையும் இழுத்தற்குக் காரணம் என் வினை யென்பார், "ஈர்க்கின்ற வஞ்சொடச்சம் வினையேனை யிருதலையே" என்றார்.

இருதலைக்கொள்ளியினுள்ளெறும்பொத்துநினைப்பிரிந்த
விரிதலையேனைவிடுதிகண்டாய்வியன்மூவுலகுக்
கொருதலைவாமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
பொருதலைமூவிலைவேல்வலனேந்திப்பொலிபவனே.

(ப - ரை.) இருதலைக் கொள்ளியினுள் - இருதலைக்கொள்ளியினுள் அகப்பட்ட,எறும்பு ஒத்து - எறும்பை நிகர்த்து, நின்னை பிரிந்த - உன்னை நீங்கின,விரி தலையேனை - விரிதலையேனாகிய என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், வியன் - பெருமையமைந்த, மூன்று உலகுக்கு - மூன்று லோகங்களுக்கும், ஒருதலைவா - ஒப்பற்ற முதல்வனே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோசமங்கைக்கு - திருவுத்தரகோசமங்கைக்கு, அரசே - அரசனே, பொரு - பொருகின்ற,

தலை - நுனியையும், மூன்று இலை - மூன்றிலைகளையும் உடைய, வேல் - வேற்படையை, வலன் ஏந்தி - வலக்கையில் தாங்கி, பொலி பவனே - விளங்குவோனே, எ - று.

(க - ரை.) இறைவனே, இருதலைக்கொள்ளிக்குள்ளே அகப்பட்டு வருந்துகின்ற எறும்புபோல, உன்னைப்பிரிந்து வருந்துகின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) இருதலைக்கொள்ளி - இரண்டுபக்கத்திலும் எரிகின்ற கொள்ளி. விரிதலையேனை என்றது அலங்கோலப்பட்டவனாகிய என்னை யென்றபடி. பொருதல் - போர்செய்தல். வலன் என்றது வலக்கையை, ஏந்துதற்குரிய தது வாகலான். (கூ)

பொலிகின்றநின்றாள்புகுதப்பெற்றாக்கையைப்போக்கப்பெற்று
மெலிகின்றவென்னைவிடுதிகண்டாயளிதேர்விளரி
யொலிநின்றபூம்பொழிலுத்தரகோசமங்கைக்கரசே
வலிநின்றதிண்சிலையாலெரித்தாய்புரமாறுபட்டே.

(ப - ரை.) பொலிகின்ற - விளங்குகின்ற, நின்தாள் - உன் திருவடியில், புகுத பெற்று - சரணடையப்பெற்று, ஆக்கையை போக்க பெற்று - உடம்பைப் போக்கப்பெற்று, மெலிகின்ற என்னை - இளைக்கின்ற என்னை, விடுதி - விட்டுவிடுகிறாயோ, அளி - வண்டுகள், தேர் - தேர்ந்து பாடுகின்ற, விளரி ஒலி நின்ற - விளரிப்பண்ணின் ஒலி நிலைபெற்ற, பூம்பொழில் - பூஞ்சோலை சூழ்ந்த, உத்தரகோச மங்கைக்கு - திருவுத்தரகோச மங்கைக்கு, அரசே - அரசனே, வலி நின்ற - வலிநிலைபெற்ற, திண்சிலையால் - வலிதாகிய வில்லினால், புரம் - முப்புரங்களை, மாறுபட்டு - பகைத்து, எரித்தாய் - நீறு செய்தவனே, எ - று.

(க - ரை.) இறைவனே, உன் திருவடியை யடைந்தும், இவ்வுடம்பெடுத்ததனு லடைதற்பாலதாய பயனைப் பெறாது, வீணிற் காலங்கழியா நின்று மெலிகின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) ஆக்கையைப் போக்கப் பெறுதலாவது - உடம்பின் பயனடையாது வீணிலே காலங்கழித்தல். அளி - வண்டு. விளரி - ஓர் பண். ஏழிசையினொன்று என்றலுமாம். அது நெஞ்சிற் பிறப்பது. மேருமலையே வில்லாதலால் "வலிநின்றதிண்சிலை" என்றார். (கய)

மாறுபட்டஞ்சென்னைவஞ்சிப்பயானுன்மணிமலர்த்தாள்
வேறுபட்டேனைவிடுதிகண்டாய்வினையேன்மனத்தே
யூறுமட்டேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
நீறுபட்டேயொளிகாட்டும்பொன்மேனிநெடுந்தகையே.

(ப - ரை.) அஞ்சு - பஞ்சேந்திரியங்கள், மாறுபட்டு - பகைத்து, என்னைவஞ்சிப்ப - என்னை வஞ்சித்தலால், உன் - உனது, மணி - அழகாகிய, மலர் தாள் - தாமரைமலர்போலுந் திருவடிகளுக்கு, வேறுபட்டேனை - வேறுபட்ட என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், வினையேன் மனத்து - தீவினையை யுடையேனாகிய என் மனத்தில், ஊறும் - சுரக்கின்ற, மட்டே - தேனே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோசமங்கைக்கு - திரு வுத்தரகோசமங்கைக்கு, அரசே - அரசனே, நீறுபட்டு - திருவெண்ணீறு அணியப்பெற்று, ஒளிகாட்டும் - ஒளியைச்செய்கிற, பொன் மேனி - பொன்போலுந் திருமேனியையுடைய, நெடுந்தகையே - பெருந்தகையே, எ - று.

(க - ரை.) இறைவனே, பஞ்சேந்திரியங்கள் என்னை வஞ்சித்தலால் உன் திருவடிகளைப் பிரிந்தேன், ஆயினும் என்னைக்கைவிடுதல் உனக்குத்தகுதி யன்றென்பது.

(வி - ரை.) வஞ்சித்தலாவது - இன்பஞ்செய்வதுபோல விடயங்களை நுகர்வித்துப் பிறவித்துன்பத்துக் காளாக்குதல். வேறுபடுதல் - பிரிதல். நெடுந்தகை - அன்மொழித்தொகை, பெருங்குணத்தினன் என்பது பொருள். (கக)

நெடுந்தகைநீயென்னையாட்கொள்ளயானைம்புலன்கள்கொண்டு
விடுந்தகையேனைவிடுதிகண்டாய்விரவார்வெருவ
வடுந்தகைவேல்வல்லவுத்தரகோசமங்கைக்கரசே
கடுந்தகையேனுண்ணுந்தெண்ணீரமுதப்பெருங்கடலே.

(ப - ரை.) நெடுந்தகை நீ - பெருந்தகையாகிய நீ, என்னை ஆட்கொள்ள - என்னை அடிமைகொள்ள, ஐம்புலன்கள் கொண்டு - ஐம்புலன்களால், விடும் - உன்னை விட்டு நீங்குகின்ற, தகையேனை - தன்மையையுடையேனை, விடுதி - விட்டு விடப்போகிறாய், விரவார் வெருவ - பகைவர் அஞ்ச, அடும் - அவர்களைக்கொல்லுகின்ற, தகை - பெருமையையுடைய, வேல் வல்ல - வேற்போரில் வல்ல, உத்தர

கோசமங்கைக்கு அரசே - திருவுத்தரகோசமங்கைக்கு அரசனே, கடுந் தகையேன் - கடுங்குணத்தினேன், உண்ணும் - உண்ணுகின்ற, தெள் நீர் - தெளிவாகிய நீர்மை யடைந்த, பெரு - பெரிய, அமுதக்கடலே - அமிர்தசாகரமே, எ - று.

(க - ரை.) இறைவனே, நீ யென்னைத் தடுத்தாட்கொள்ளவும், யான் ஐம்புலவாசையால் உன்னை விட்டு நீங்கு மியல்பினேன் ஆயினும், என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) ஐம்புலன்கள் என்றது ஐம்புலவாசைகளை. தகை - தன்மை (குணம்). விரவார் - பகைவர். அடுதல் - கொல்லுதல். கடுந் தகை - தீக்குணம். (௬௨)

கடலினுணாய்நக்கியாங்குன்கருணைக்கடலினுள்ளம்
விடலரியேனைவிடுதிகண்டாய்விடலில்லடியா
ருடலிலமேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
மடலின்மட்டேமணியேயமுதேயென்மதுவெள்ளமே.

(ப - ரை.) கடலினுள் - கடலில், நாய் நக்கியாங்கு - நாய் நக்கின அத்தன்மைபோல, உன் கருணைக்கடலின் - உன் கருணைக் கடலில், உள்ளம் - மனம், விடல் அரியேனை - விடுதலரிதாகிய என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விடல் இல் அடியார் - விடுதலில்லாத அடியாரது, உடல் - உடம்பாகிய, இல்லமே - வீட்டின் கண்ணே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோசமங்கைக்கு அரசே - திருவுத்தரகோசமங்கைக்கு அரசனே, மடலில் மட்டே - பூவிதழ்த் தேனே, மணியே - மாணிக்கமே, அமுதே - அமிர்தமே, என் மது வெள்ளமே - என் மதுப்பெருக்கே, எ - று.

(க - ரை.) இறைவனே! கடலில் நாய் நக்குவதுபோல, உன் கருணைக்கடலில் மனம் அழுந்தாத என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) நக்கியாங்கு - நக்கிய ஆங்கு என்றதில் அகரம் தொகுத்தல். விடலரியேன் - விடுதலில்லாதேன். உடல் - இங்கு மனத்தைக் குறித்தது. மன்னும் அரசேயென வியையும், தம்மைப் பித்தேற்றலால் மதுவெள்ளமே என்றார். மது - கள். (௬௩)

வெள்ளத்துள்நாவற்றியாங்குன்னருள்பெற்றுத்துன்பத்தின்றும்
விள்ளக்கிலேனைவிடுதிகண்டாய்விரும்புமடியா
ருள்ளத்துள்ளாய்மன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
கள்ளத்துளேற்கருளாய்களியாதகளியினையே.

(ப - ரை.) வெள்ளத்துள் - நீர்ப்பெருக்கில் நின்று, நா வற்றியாங்கு - நாவறண்டாற்போல, உன் அருள் பெற்று - உன் திருவருளைப்பெற்றும், துன்பத்து - துன்பத்தினின்றும், இன்றும் விள்ளக்கிலேனை - இப்போதும் நீங்காத என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விரும்பும் அடியார் - விரும்புகிற அடியாரது, உள்ளத்து உள்ளாய் - மனத்திலுள்ளவனே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோசமங்கைக்கு அரசே - திருவுத்தரகோச மங்கைக்கு அரசனே, கள்ளத்து உள்ளேற்கு - கள்ளவழியிலிருப்பவனாகிய எனக்கு, களியாத களியினை - என்றுங் கண்டறியாத பெருங்களிப்பை, அருளாய் - அருள் செய்வாய், எ - று.

(க - ரை.) நீர்ப்பெருக்கில்நின்றும்நாவறண்டவன்போல, உன்னருளைப்பெற்றிருந்தும், துன்பத்தினின்றுநீங்காத என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று, எஞ்ஞான்றும் நான் கண்டறியாத பெருங்களிப்பைத் தந்தருளவேண்டுமென்பது.

(வி - ரை.) நாவற்றியாங்கு - நாவற்றிய ஆங்கு, இதில் அகரம் தொகுத்தல். கள்ளத்துளேற்கு, என்பதற்கு கள்ளமனத்தையுடையேனுக்கு என்றலும் பொருந்தும். (கச)

களிவந்தசிந்தையொடுன்கழல்கண்டுங்கலந்தறவே
வெளிவந்திலேனைவிடுதிகண்டாய்மெய்ச்சுடருக்கெல்லா
மொளிவந்தபூங்கழலுத்தரகோசமங்கைக்கரசே
யெளிவந்தவெந்தைபிரானென்னையாளுடையென்னப்பனே.

(ப - ரை.) களிவந்த சிந்தையொடு - களிப்புப் பொருந்திய மனத்தோடு, உன் கழல் கண்டும் - உன் திருவடியைக் கண்டும், கலந்து அற - கலக்க, வெளி வந்திலேனை - வெளிப்பட்டு வாராதவனாகிய என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், மெய் சுடருக்கு எல்லாம் - உண்மையாகிய ஒளிப்பொருள்களெல்லாவற்றினும், ஒளி வந்த - ஒளி

பொருந்திய, பூ கழல் - பொலிவாகிய திருவடியையுடைய, உத்தர கோசமங்கைக்கு - திருவுத்தரகோசமங்கைக்கு, அரசே - அரசனே, எளி வந்த - எளிதாயெழுந்தருளின, எந்தை பிரான் - எந்தை பிரானே, என்னை ஆள் உடை - என்னை அடிமையாகவுடைய, என் அப்பனே - என் தந்தையே, எ - று.

(க - ரை.) உன் திருவடியைக் கண்டிருந்தும் அதனையடைய வெளிவந்திலாத என்னைக் கைவிடுதல் தகுதியன்று என்பது.

(வி - ரை.) மெய்ச்சுடர் என்றது சோமசூரியாக்கினிகளை. பூங் கழல் என்பதற்குத் தாமரைமலர்போன்ற திருவடியெனினுமாம்.

என்னையப்பாவஞ்சலென்பவரின்றிநின்றெய்த்தலைந்தேன்
மின்னையொப்பாய்விட்டிடுதிகண்டாயுவமிக்கின்மெய்யே
யுன்னையொப்பாய்மன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
யன்னையொப்பாயெனக்கத்தனொப்பாயென்னரும்பொருளே.

(ப - ரை.) என்னை - அடியேனை, அப்பா அஞ்சல் என்பவர் இன்றி நின்று - அப்பா அஞ்சற்க என்று சொல்லுவாரில்லாது நின்று, எய்த்து அலைந்தேன் - மெலிந்தலைந்தேன், மின்னை ஒப்பாய் - மின்னை நிகர்த்தவனே, விட்டிடுதி - விட்டுவிடப்போகிறாய், உவமிக் கின் - உவமித்தால், மெய்யே - உண்மையாகவே, உன்னை ஒப்பாய் - உன்னையே நிகர்த்தவனே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோசமங் கைக்கு - திருவுத்தரகோசமங்கைக்கு, அரசே - அரசனே, எனக்கு - அடியேனுக்கு, அன்னை ஒப்பாய் - தாயை நிகர்ப்பவனே, அத்தன் ஒப்பாய் - தந்தையை நிகர்ப்பவனே, என் அரும் பொருளே - என் அருமைப் பொருளே, எ - று.

(க - ரை.) இறைவனே, என்னை அஞ்சலென்பவரின்றி யினைத் தலைந்தேன் ஆதலால் என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன் றென்பது.

(வி - ரை.) உவமிக்கின் - உவமித்துச் சொல்லின். உன்னை யொப்பாய் என்றது உன்னை நீயே நிகர்த்தி யென்றபடி. ஆன்மாக் களுக்கு அழியாத் தந்தை தாயாவான் இறைவனாதலால் "அன்னை யொப்பாயெனக் கத்தனொப்பாய்" என்றார். (கக)

பொருளேதமியேன்புகலிடமேநின்புகழிகழ்வார்
வெருளேயெனைவிட்டிடுதிகண்டாய்மெய்ம்மையார்விழுங்கு
மருளேயணிபொழிலுத்தரகோசமங்கைக்கரசே
யிருளேவெளியேயிகபரமாகியிருந்தவனே.

(ப - ரை.) பொருளே - பொருளே, தமியேன் புகல் இடமே - தமியேன் சரண்புகுதற்குரிய இடமே, நின் புகழ் இகழ்வார் - உன் புகழை யிகழ்பவர்க்கு, வெருளே - அச்சவடிவா யிருப்பவனே, என்னைவிட்டிடுதி - என்னைவிட்டுவிடப்போகிறாய், மெய்ம்மையார்விழுங்கும் - மெய்யன்பரை விழுங்குகிற, அருளே - அருளுருவமே, அணிபொழில் - அழகிய சோலைசூழ்ந்த, உத்தரகோச மங்கைக்கு - திருவுத்தரகோச மங்கைக்கு, அரசே - அரசனே, இருளே - இருட்டே, வெளியே - ஒளியே, இகம் பரம் ஆகி இருப்பவனே - இம்மை மறுமைகளாகி யிருப்பவனே, எ - று.

(க - ரை.) எனக்கு உண்மைப் பொருளாயும் புகலிடமாயும் இருக்கின்ற இறைவனே, என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) பொருள் - மெய். அப்பர்முதலாயினாரை விழுங்குதல் பற்றி "மெய்ம்மையார் விழுங்குமருளே" என்றார். அறியாதார்க்கிருளாயும் அறிந்தவர்க்கொளியாயும் இருத்தலால் "இருளேவெளியே" என்றார். வெளி - ஒளி. இகம் - இம்மை. பரம் - மறுமை. (௧௭)

இருந்தென்னையாண்டுகொள்விற்றுக்கொளொற்றிவையென்னினல்
விருந்தினனேனைவிடுதிகண்டாய்மிக்கநஞ்சமுதா [லால்
வருந்தினனேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
மருந்தினனேபிறவிப்பிணிப்பட்டுமடங்கினர்க்கே.

(ப - ரை.) இருந்து - எழுந்தருளியிருந்து, என்னை - அடியேனை, ஆண்டுகொள் - ஆண்டுகொள்வாய், விற்றுக்கொள் - விற்றுக்கொள்வாய், ஒற்றி வை - ஒற்றிவைத்துக்கொள்வாய், என்னின் அல்லால் - என்று சொல்வதல்லது வேறு என்செய்கேன், விருந்தினனேனை - உனக் கயலானாகிய என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், மிக்க நஞ்சு - மிகுதியாகிய நஞ்சை, அமுது ஆ - அமிர்தமாக, அருந்தினனே - உண்டவனே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோச

மங்கைக்கு - திருவுத்தரகோச மங்கைக்கு, அரசே - அரசனே, பிறவிப்பிணிபட்டு மடங்கினர்க்கு - பிறவியாகிய நோயிற்சிக்கி முடங்கிக் கிடந்தவர்க்கு, மருந்தினனே - மருந்தாயிருப்பவனே, எ - று.

(க - ரை.) இறைவனே! என்னை யாண்டருள், விற்றுக்கொள், ஒற்றிவை, என்பேனன்றி வேறு யாதுசெய்யக்கடவேன். இத்தன்மையேனைக் கைவிடுதல் தகுதியன்றென்பது.

(வி - ரை.) ஒற்றி வைத்தல் - அடைமானம் வைத்தல். விருந்தினன் - புதியன் (அயலான்.) (கஅ)

மடங்கவென்வல்வினைக்காட்டைநின்மன்னருட்டீக்கொளுவும்
விடங்கவென்றன்னைவிடுதிகண்டாயென்பிறவியைவே
ரொடுங்களைந்தாண்டுகொளுத்தரகோசமங்கைக்கரசே
கொடுங்கரிக்குன்றுரித்தஞ்சுவித்தாய்வஞ்சிக்கொம்பினையே.

(ப - ரை.) மடங்க - மடியும்படி, என் வல்வினைக்காட்டை - என் வலியவினையாகிய காட்டை, நின் மன் அருள் - உனது நிலைபெற்ற அருளாகிய, தீகொளுவும் - நெருப்பினுலெரிக்கின்ற, விடங்க - அழகனே, என்றன்னை விடுதி - என்னை விட்டுவிடப்போகிறாய், என் பிறவியை - என் பிறவிக்காட்டை, வேரொடும் களைந்து - வேரோடுங்களைந்து, ஆண்டு கொள் - ஆண்டு கொள்வாயாக, உத்தரகோசமங்கைக்கு அரசே - திருவுத்தரகோசமங்கைக்கு அரசனே, கொடும் கரி குன்று உரித்து - கொடுமையாகிய யானையென்கிற குன்றினை உரித்து, வஞ்சி கொம்பினை - வஞ்சிக் கொம்புபோன்ற உமாதேவியை, அஞ்சுவித்தாய் - வெருவச் செய்தவனே, எ - று.

(க - ரை.) என் வலிய வினையாகிய காட்டை உன்னருளாகிய தீயினுலெரித்தவனே, என்னைக் கைவிடுதல் தகுதியன்றென்பது.

(வி - ரை.) விடங்கம் - அழகு, விடங்கன் - அழகன். கரிக்குன்று - மலைபோலும் யானை, (கஜாசுரன்). கொலை முதலியன கண்டால் அஞ்சுதல் மாதர்க்கியல் பாதலால், "கொடுங்கரிக்குன்றுரித்தஞ்சுவித்தாய் வஞ்சிக்கொம்பினையே" என்றார்.

கொம்பரில்லாக்கொடிபோலலமந்தனன்கோமளமே
வெம்புகின்றேனைவிடுதிகண்டாய்விண்ணவர்நண்ணுகில்லா
வும்பருள்ளாய்மன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
யம்பரமேநிலனேயனல்காலொடப்பானவனே.

(ப - ரை.) கொம்பர் இல்லா - கொள் கொம்பில்லாத, கொடி போல் - கொடியைப்போல, அலமந்தனன் - சுழன்றேன், கோமளமே - கோமளரூபியே, வெம்புகின்றேனை - வெதும்புகின்றவனாகிய என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விண்ணோர் - விண்ணுலகத்தாராகிய தேவரும், நண்ணுகில்லா - அடையப் பெறாத, உம்பர் உள்ளாய் - மேலுலகத்திலுள்ளவனே, மன்னும் - நிலைபெற்ற, உத்தரகோசமங்கைக்கு அரசே - திருவுத்தரகோசமங்கைக்கு அரசனே, அம்பரமே - ஆகாயமே, நிலனே - நிலமே, அனல் காலொடு - நெருப்பு காற்று என்பவைகளோடு, அப்பு ஆனவனே - நீரும் ஆனவனே, எ - று.

(க - ரை.) கொள் கொம்பில்லாத கொடிபோலச் சுழன்றேன், இறைவனே, நீயென்னைக் கைவிடுதல் தகுதியன்றென்பது.

(வி - ரை.) கொம்பு - கொம்பர் எனப்போலியாயிற்று. அலமந்தனன் என்பதற்குப் பகுதி, அலமா. கோமளம் - இளமைச் செவ்வி; இங்கு அதனையுடையவனுக் காயிற்று. உம்பர் - என்றது முத்தியுலகை. (உ0)

ஆனைவெம்போரிற்குறுந்தூறெனப்புலனாலலைப்புண்
டேனையெந்தாய்விட்டிடுதிகண்டாய்வினையேன்மனத்துத்
தேனையும்பாலையுங்கன்னலையும்மமுதத்தையுமொத்
தூனையுமென்பினையும்முருக்காநின்றவொண்மையனே.

(ப - ரை.) ஆனை வெம் போரில் - யானையின் கொடிய போரினிடையே யகப்பட்ட, குறும் தூறு என - சிறுதூறுபோல, புலனால் - புலன்களால், அலைப்பு உண்டேனை - அலைப்புண்டவனாகிய என்னை, எந்தாய் - எந்தையே, விட்டிடுதி - விட்டுவிடப் போகிறாய், வினையேன் மனத்து - வினையினேனது மனத்தில், தேனையும் பாலையும் கன்னலையும் அமுதத்தையும் ஒத்து - தேனினையும் பாலினையும் சருக்கரையையும் அமிர்தத்தையும் நிகர்த்து, ஊனையும் என்பினையும் உருக்காநின்ற - உடலினையும் எலும்பினையும் உருகச்செய்கிற, ஒண்மையனே - ஒட்பத்தையுடையானே, எ - று.

(க - ரை.) யானையின் கொடிய போரில் சிறுதூறுபோல, ஐம்புலவாசையால் வருந்தின என்னைக் கைவிடுதல் தகுதியன்றென்பது.

(வி - ரை.) குறுந்தூறு - சிறுசெடி. அலைப்புண்ணல் - வருந்துதல். ஊன், தசையெனினுமாம். (உக)

ஒண்மையனே திருநீற்றை யுத்தூளித்தொளிமிளிரும்
வெண்மையனே விட்டிடுதி கண்டாய் மெய்யடியவர்கட்
கண்மையனே யென்றுஞ் சேயாய்பிறர்க்கறிதற்கரிதாம்
பெண்மையனே தொன்மையாண்மையனே யலிப்பெற்றியனே.

(ப - ரை.) ஒண்மையனே - ஒட்பமுடையவனே, திருநீற்றை உத்தூளித்து - திருவெண்ணீற்றைப் பூசி, ஒளிமிளிரும் - ஒளிவிளங்குகின்ற, வெண்மையனே - வெண்மையையுடையானே, விட்டிடுதி - விட்டுவிடப்போகிறாய், அடியவர்கட்கு - மெய்யடியார்க்கு, அண்மையனே - சமீபமாயிருப்பவனே, பிறர்க்கு - மற்றையோர்க்கு, என்றும் சேயாய் - எக்காலத்தும் தூரமாயிருப்பவனே, அறிதற்கு அரிது ஆம் பெண்மையனே - ஒருவராலும் அறிதற்கரிதாகிய பெண்மையை யுடையானே, தொன்மை ஆண்மையனே - பழமையாகிய ஆண்மையை யுடையானே, அலி பெற்றியனே - அலித்தன்மையை யுடையானே, எ - று.

(க - ரை.) ஒட்பம் முதலியவற்றை யுடையவனே, என்னைக் கைவிடுதல் தகுதியன்றென்பது.

(வி - ரை.) செம்மையாகிய திருமேனியை யுடையான் என்பது தோன்ற "திருநீற்றை யுத்தூளித் தொளிமிளிரும் வெண்மையனே" என்றார். சேய்மை - தூரம். (௨௨)

பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்குமன்பின்
வெற்றடியேனை விடுதி கண்டாய் விடிலோ கெடுவேன்
மற்றடியேன் றன்னைத் தாங்குநரில்லை யென்வாழ்முதலே
யுற்றடியேன் மிகத் தேறிநின்றேன் எனக்குள்ளவனே.

(ப - ரை.) பெற்றது கொண்டு - பெற்றதையேபற்றி, பிழையே பெருக்கி - குற்றத்தையே பெருகச்செய்து, சுருக்கும் அன்பின் - சுருக்கப்பட்ட அன்பினையுடைய, வெற்றடியேனை - வெறுமையாகிய அடியேனை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விடிலோ - விட்டுவிட்டாலோ, கெடுவேன் - அழிவேன், அடியேன்றன்னை - அடியேனை, தாங்குநர் - தாங்குவோர், மற்று இல்லை - வேறில்லை, என்வாழ்முதலே - என்வாழ்க்கைக்கு முதற்காரணமே, எனக்கு உள்ளவனே - எனக்குள்ளிருப்பவனே, உற்று - உன்னையடைந்து, மிகத் தேறிநின்றேன் - மிகவும் தெளிந்து நின்றேன், எ - று.

(க - ரை.) இறைவனே, பெற்றதைக்கொண்டு பிழைபெருக்கி அன்பிலியாய்த் திரிகின்றேன் ஆயினும் என்னைத் தாங்குவோர் வேறொருவரின்மையால் நீ யென்னைக் கைவிடுதல் தகுதியன்றெ ன்பது.

(வி - ரை.) பெற்றது - பெறப்பட்டதாகிய உடம்பு. பிழை - பாவம். அடிமைத்தனமில்லேன் என்பார் வெற்றடியேன் என்றார். மற்று பிறிதென்னும் பொருளில் வந்தது, வாழ் - முதனிலைத்தொ ழிற்பெயர். (உரு)

உள்ளனவேநிற்கவில்லனவேசெய்யுமையற்றுழனி
வெள்ளனலேனைவிடுதிகண்டாய்வியன்மாத்தடக்கைப்
பொள்ளனல்வேழத்துரியாய்புலனின்கட்போதலொட்டா
மெள்ளனவேமொய்க்குநெய்க்குடந்தன்னையெறும்பெனவே.

(ப - ரை.) உள்ளனவே நிற்க - மெய்யாயினவே நிற்க, இல்லனவே செய்யும் - பொய்யாயினவற்றையே செய்கின்ற, மையல் - மயக்கமாகிய, துழனிவெள்ளன் - ஒலியையுடைய பெருக்கில் வீழ்ந்தவனாகி, அல்லேனை - உனக்குரியனல்லாத என்னை, விடுதி - விட்டு விடப்போகிறாய், வியன் - பெரிய, மா - அழகிய, தடக்கை - நீண்டதுதிக்கையில், பொள்ளல் - தொளையையுடைய, நல்வேழத்து - சிறந்தயானையின், உரியாய் - தோலையுடையவனே, புலன் - ஐம்புலன்கள், நின் கண் போதல் ஒட்டா - உன்னிடத்துச் செல்லுதற்கிணங்காமல், நெய் குடம் தன்னை எறும்பு என - நெய்க்குடத்தை யெறும்பு மொய்த்தல்போல, மெள்ளனமொய்க்கும் - (என்னைப்) பையமொய்க்கும், எ - று.

(க - ரை.) மெய்யிருக்கப் பொய்யைச்செய்கின்ற அறிவிலியாகிய என்னைக்கைவிடுதல் உனக்குத்தகுதியன்றென்பது.

(வி - ரை.) என்றும் அழியாமையால் மெய்யை உள்ளன என்றும், அழிவேயுருவாதலால் பொய்யை இல்லன என்றும் கூறினார். வெள்ளத்துக்குத் துழனிசாதியடை. அல் - இருள். ஆதலால், அல்லேனை என்பதற்கு அஞ்ஞானவிருளையுடையேனை என்றுரைத்தலும்பொருந்தும். உரிக்கப்படுவதனை உரியென்றது முதனிலைத் தொழிலாகு பெயர். (உசா)

எறும்பிடைநாங்கூழெனப்புலனாலரிப்புண்டலந்த
வெறுந்தமியேனை விடுதிகண்டாய்வெய்யகூற்றொடுங்க
வுறுங்கடிப்போதவையேயுணர்வுற்றவரும்பரும்பர்
பெறும்பதமேயடியார்பெயராதபெருமையனே.

(ப - ரை) பெயராத பெருமையனே - நிலைபெயராத பெருமையையுடையவனே, எறும்பு இடை - எறும்பினிடையே யகப்பட்ட, நாங்கூழ் என - நாகப்பூச்சி அரிப்புண்ணல்போல, புலனால் - ஐம்புலன்களால், அரிப்புண்டு - அரிக்கப்பட்டு, அலந்த - வருந்தின, வெறுந்தமியேனை - வெறுமையாகிய தமியேனை, விடுதி - விட்டு விடப்போகிறாய், வெய்ய கூற்று ஒடுங்க - கொடிய யமன் ஒடுங்கும்படி, உறும் - அவன்மேற் சென்ற, கடிப்போது அவையே - மணம் பொருந்திய தாமரைமலர்களாகிய அவற்றையே, உணர்வுற்றவர் - அறியலுற்றவர், உம்பர் உம்பர் பெறும் பதம் எய் - தேவர்க்கும் மேலாகப்பெற்ற பதத்தை யடைந்த, அடியார் - அடியவரோ, எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னை யறிந்துயர்ந்த பதம்பெற்றவர் உன்னடியவரோ, அங்ஙனம் அறியும் அறிவில்லாத நான் ஐம்புலன்களினிடையே யகப்பட்டு, எறும்பினிடையே யகப்பட்டு வருந்துகின்ற நாகப்பூச்சிபோல வருந்தினேன், என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) நாங்கூழ் - நாகப்பூச்சி, இதனைப் பூநாகம் என்பதுமுண்டு. அரிப்புண்ணல் - அரிக்கப்படுதல். அலத்தல் - வருந்துதல். "வெய்யகூற்றொடுங்க வுறுங்கடிப்போது" என்றது திருவடியை. கடி - மணம், போது - மலர். "வெய்யகூற்றொடுங்க வுறும்" என்ற குறிப்பால் கடிப்போது திருவடிக்காயிற்று. (உரு)

பெருநீரறச்சிறுமீன்றுவண்டாங்குநினைப்பிரிந்த
வெருநீர்மையேனை விடுதிகண்டாய்வியன்கங்கைபொங்கி
வருநீர்மடுவுண்மலைச்சிறுதோணிவடிவின்வெள்ளைக்
குருநீர்மதிபொதியுஞ்சடைவானக்கொழுமணியே.

(ப - ரை.) பெரு நீர் அற - மிகுந்த நீரானது வற்றிப்போக, சிறுமீன் துவண்டாங்கு - சிறுமீன்கள் வாடினாற்போல; நின்னை

பிரிந்த - உன்னைவிட்டு நீங்கின, வெரு நீர்மை யேனை - அஞ்சுதலாகிய குணத்தையுடையவனாகிய என்னை, விடுதி - விட்டுவிடப் போகிறாய், வியன் - பெரிதாகிய, கங்கை - கங்கையில், வருநீர் மடுவுள் - பெருகுகின்ற நீரையுடைய மடுவின்கண், மலை - தடுமாறுதலையுடைய, சிறு தோணி வடிவின் - சிறிய மரக்கலத்தின் உருவம் போல, வெள்ளை குரு நீர் - வெண்ணிறமாகிய நீர்மை யமைந்த, மதி - பிறைச்சந்திரன், பொதியும் - தவழ்கின்ற, சடை - சடாபாரத்தையுடைய, வானம் - பரமாகாயத்திலுள்ள, கொழுமணியே - செழுமையாகிய மாணிக்கமே, எ - று.

(க - ரை) இறைவனே! மிகுந்த நீரைப்பிரிந்த மீன்வாடுதல் போல, உன்னைப் பிரிந்த நான் வாடாநின்றேன், என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) ஆவண்ட ஆங்கு ஆவண்டாங்கு என நின்றது. வெருவும் நீர்மை வெரு நீர்மையெனத் தொகுத்தது. மலை - முதனிலைத் தொழிற்பெயர். வடிவின் என்பதில் இன் ஐந்தனுருபு. இது ஒப்புப்பொருளது. (உகூ)

கொழுமணியேர்நகையார்கொங்கைக்குன்றிடைச்சென்றுகுன்றி
விழுமடியேனைவிடுதிகண்டாய்மெய்முழுதுங்கம்பித்
தழுமடியாரிடையார்த்துவைத்தாட்கொண்டருளியென்னைக்
கழுமணியேயின்னுங்காட்டுகண்டாய்நின்புலன்கழலே.

(ப - ரை.) கொழுமணி - செழுமையாகிய முத்துப்போன்ற, ஏர் - அழகாகிய, நகையார் - பல்லினை யுடையவராகிய மாதரது, கொங்கை குன்றிடை - தனங்களாகிய இரண்டு குன்றுகளின் நடுவில், சென்று - போய், குன்றிவிழும் - மெலிந்து விழுகின்ற, மடியேனை - சோம்பலையுடைய என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், மெய்முழுதும் - உடல் முழுதும், கம்பித்து - நடுங்கப் பெற்று, அழும் - அழுகின்ற, அடியார் இடை - அடியார் நடுவே, என்னை ஆர்த்துவைத்து - என்னைப் பொருத்திவைத்து, ஆட்கொண்டருளி - அடிமைகொண்டருளி, கழுமணியே - கழுவின மாணிக்கமே, இன்னும் - இன்னமும், உன்புலன்கழல் - உனது ஞான சாதனமாகிய திருவடியை, காட்டு - காட்டுவாயாக, எ - று.

(க - ரை.) இறைவனே! மாதா மயக்கத்திற் சிக்கி வருந்து கின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று. உன் அடியார் நடுவில் என்னைச் சேர்த்து உன் திருவடியைக் காட்டல் வேண்டும் என்பது.

(வி - ரை.) நகைக் குவமையாகப் புணர்க்கப்பட்டமையால் மணியென்பது முத்தையுணர்த்திற்று. கம்பித்தல் - நடுங்கல். ஞானத்தைத் தருதலால் திருவடியைப் புலன்கழல் என்றார். புலன் - ஞானம். (உஎ)

புலன்கடிகைப்பிக்கயானுந்திகைத்திங்கொர்பொய்ந்நெறிக்கே
விலங்குகின்றேனைவிடுதிகண்டாய்விண்ணுமண்ணுமெல்லாங்
கலங்கமுந்நீர்நஞ்சமுதுசெய்தாய்கருணாகரனே
துலங்குகின்றேனடியேனுடையாயென்றொழுகுலமே.

(ப - ரை.) புலன்கள் - ஐம்புலன்களும், திகைப்பிக்க - திகைக்கச்செய்ய, யானும் திகைத்து - நானுந்திகைத்து, இங்கு - இவ்விடத்தில், ஓர் - ஒப்பற்ற, பொய் நெறிக்கே - பொய்வழியிலே, விலங்குகின்றேனை - உன்னைவிட்டு விலகித்திரிகின்ற என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விண்ணும் மண்ணும் எல்லாம் - விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் ஆகிய எல்லாரும், கலங்க - கலங்கிநிற்க, (அவர்களுக்கு இரங்கி) முந்நீர் - பாற்கடலிற் பிறந்த, நஞ்சு - நஞ்சினை, அமுதுசெய்தாய் - அமுது செய்தருளினவனே, கருணாகரனே - கருணைக்கு ஆகரமாயிருப்பவனே, அடியேன் துலங்குகின்றேன் - அடியேன் கலங்குகின்றேன், உடையாய் - எம்மையுடையவனே, என் தொழுகுலமே - என் வேதியனே, எ - று.

(க - ரை.) இறைவனே! ஐம்புலன்களால் திகைத்துக் கலங்காநின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று என்பது.

(வி - ரை.) திகைப்பித்தல் - பிரமிக்கப்பண்ணுதல். விலங்கல் - விலகல். முந்நீர் - மூன்றுநீர். அவை ஆற்று நீர் வேற்று நீர் ஊற்று நீர் என்பன. இவற்றை யுடைத்தாதலால் கடல் முந்நீர் எனப்படும். முன்னீர் எனப்பாட மோதி முற்பட்ட நீர் எனக் கூறலுமுண்டு. துளங்கல் துலங்கல் என வந்தது எதுகை யின்பப் பொருட்டு. (உஅ)

குலங்களைந்தாய்களைந்தாயென்னைக்குற்றங்கொற்றச்சிலையாம்
விலங்கலெந்தாய்விட்டிடுதிகண்டாய்பொன்னின்மின்னுகொன்றை
யலங்கலந்தாமரைமேனியப்பாவொப்பிலாதவனே
மலங்களைந்தாற்சுழல்வன்றயிரிற்பொருமத்துறவே.

(ப - ரை.) குலம்களைந்தாய் - இனமில்லாதவனே, என்னை குற்றங் களைந்தாய் - என்னைக் குற்றத்தினின்று நீக்கினவனே, விலங்கல்-மேருமலையானது, கொற்றம் - வெற்றியையுடைய, சிலையாம் - வில்லாகப்பெற்ற, எந்தாய் - எந்தையே, விட்டிடுதி - விட்டுவிடப்போகிறாய், பொன்னின் மின்னு - பொன்போலமின்னுகின்ற, கொன்றை அலங்கல் - கொன்றைமலர் மாலைதரித்த, அம் - அழகாகிய, தாமரை - செந்தாமரை மலர்போன்ற, மேனி - திருமேனியையுடைய, அப்பா – அப்பனே, ஒப்பு இல்லாதவனே - ஒப்பற்றவனே, பொரு மத்து உறு - கலக்குகிற மத்துப்படுதலால், தயிரின் - (கலங்குகின்ற) தயிர்போல, மலங்கள் ஐந்தால் - பஞ்சமலங்களால், சுழல்வன் - கலங்கிச் சுழல்வேன், எ – று.

(க - ரை.) இறைவனே! பஞ்சமலங்களால் மத்திட்ட தயிர்போலக் கலங்காநின்றேன், என்னைக் கைவிடுதல் உனக்குத்தகுதியன்றென்பது.

(வி - ரை.) விலங்கல் - மலை. அது கொற்றச்சிலையாம் விலங்கல் என்றமையால் மேருமலையைக்குறித்தது. மேனியென்றமையால் தாமரையென்றது செந்தாமரைமலரைக் குறித்தது. மலங்கள் ஐந்தாவன, ஆணவம், கன்மம், மாயை - வையிந்தவ்வியம் திரோதாயி என்பன. (உக)

மத்துறுதண்டயிரிற்புலன்றீக்கதுவக்கலங்கி
வித்துறுவேனைவிடுதிகண்டாய்வெண்டலைமிலைச்சிக்
கொத்துறுபோதுமிலைந்துகுடர்நெடுமாலைசுற்றித்
தத்துறுநீறுடனாரச்செஞ்சாந்தணிசச்சையனே.

(ப - ரை.) மத்து உறு - மத்துப்பட்ட, தண் தயிரின் - குளிர்ந்ததயிர்போல, புலன் தீ கதுவ - புலன்களாகிய நெருப்புப்பற்ற, கலங்கி - கலக்கமடைந்து, வித்து உறுவேனை - (கலக்கத்துக்கு) விதையாயிருக்கிற என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், வெள்த

லைமிலைச்சி - வெள்ளியதலைமாலையைத் தரித்த, கொத்து உறுபோது மிலைந்து - கொத்தாகிய கொன்றைமலரை யணிந்து, நெடு குடர் மாலைசுற்றி - நீண்டகுடர்மாலையைச்சுற்றி, தத்து உறு நீறுடன் - பரவிய திருவெண்ணீற்ரேடு, ஆர - பொருந்த, செஞ்சாந்து அணி - செஞ்சந்தநமணிந்த, சச்சையனே - சாரபூதனே, எ - று.

(க - ரை.) இறைவனே! மத்திட்ட தயிர்போலப் புலனுகிய தீப்பற்றக் கலங்காநின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன் றென்பது.

(வி - ரை.) தழுவல் — பற்றல். சத்தை - சாரம், அது வித்தை விச்சை யெனநின்ருற் போலச்சச்சை யென நின்றது. சாந்து - சந்தனம். (௬௦)

சச்சையனேமிக்கதண்புனல்விண்காணிலநெருப்பாம்
விச்சையனேவிட்டிடுதிகண்டாய்வெளியாய்கரியாய்
பச்சையனேசெய்யமேனியனேயொண்படவரவக்
கச்சையனேகடந்தாய்தடந்தாளவடற்கரியே.

(ப - ரை.) சச்சையனே - சத்தையாயிருப்பவனே, மிக்க - மிகுந்த, தண் புனல் - குளிர்ந்த நீரும், விண் - ஆகாயமும், கால் - காற்றும், நிலம் - பூமியும், நெருப்பு - தீயும், ஆம் - ஆகிய, விச்சையனே - வித்தையையுடையவனே, விட்டிடுதி - விட்டுவிடப்போகிருய், வெளியாய் - வெண்மையனே, கரியாய் - கரியவனே, பச்சையனே - பசியவனே, செய்ய மேனியனே - செம்மையாகிய திருமேனியை யுடையவனே, ஒள் படம் அரவம் - ஒட்பமாகிய படத்தை யுடைய பாம்பாகிய, கச்சையனே - கச்சையையுடையவனே, தடம் தாள் - பெரிய கால்களையுடைய, அடல் கரி - வலியுள்ள யானையை, கடந்தாய் - வென்றவனே, எ - று.

(க - ரை.) வலிய தாள்களையுடைய யானையை வென்ற இறைவனே, என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) சச்சை - நன்மையெனினும் பொருந்தும். பஞ்சபூதங்களாதலும் வெளியனுதலும் கரியனுதலும் பசியனுதலும் செம்மையனுதலும் வியப்புக்குக் காரணமாதலால் இஃதோர் வித்தையாமென்பார் விச்சையனே யென்ருர். (௬௧)

அடற்கரிபோலைம்புலன்களுக்கஞ்சியழிந்தவென்னை
விடற்கரியாய்விட்டிடுதிகண்டாய்விழுத்தொண்டர்க்கல்லாற்
றொடற்கரியாய்சுடர்மாமணியேசுடுதீச்சுழலக்
கடற்கரிதாயெழுநஞ்சமுதாக்குங்கறைக்கண்டனே.

(ப - ரை.) அடல் கரிபோல் - வலிபொருந்திய யானையை நிகர்க்கின்ற, ஐம்புலன்களுக்கு அஞ்சி - ஐம்புலன்களுக்குப்பயந்து, அழிந்த என்னை - நசித்த என்னை, விடற்கு அரியாய் - விடுதற்கரியவனே, விட்டிடுதி - விட்டுவிடப்போகிறாய், விழு - மேலாகிய, தொண்டர்க்கு அல்லால் - தொழும்பர்க்கல்லாது, தொடற்கு அரியாய் (மற்றையர்க்குத் தீண்டுதற்கும் அருமையானவனே, சுடர் மாமணியே - ஒளியாற் பெரிய மாணிக்கமே, சுடுதீ சுழல - சுடுகின்ற நெருப்பானது சுழலாநிற்ப, கடற்கு - கடலின்கண், அரிதாய் எழும் - அருமையாயுண்டாகிய, நஞ்சு - நஞ்சை, அமுது ஆக்கும் - அமுதாக்கிய, கறைக்கண்டனே - விஷகண்டனே, எ - று.

(க - ரை.) இறைவனே! வலிய யானைபோன்ற ஐம்புலன்களுக்கஞ்சி யழியாநின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) போல் ஐம்புலன்கள் வினைத்தொகை நிலைத் தொடர். அழிதல் - மனங்குன்றுதல். தொண்டர்க்கல்லால் என்றமையால் தொடற்கரிதாதல் மற்றையர்க் கென்பது பெறப்பட்டது. சுடுதீ என்றது வடவைத்தீயை. கடற்கு என்னும் நான்காவது ஏழாவதன் பொருளில் வந்தது. அரிதாதல் - இறைவனன்றி ஏனையர் அணுகுதற்கும் ஒண்ணாமை. கறை - விடம், கருநிறம் எனினுமாம்.

கண்டதுசெய்துகருணைமட்டுப்பருகிக்களித்து
மிண்டுகின்றேனைவிடுதிகண்டாய்நின்விரைமலர்த்தாள்
பண்டுதந்தாற்போற்பணித்துப்பணிசெயக்கூவித்தென்னைக்
கொண்டெனெந்தாய்களையாய்களையாயகுதுகுதுப்பே.

(ப - ரை.) கண்டது செய்து - கண்டதைச் செய்து, கருணை மட்டு - உன் கருணையாகிய தேனை, பருகிகளித்து - பருகிக்களிப்படைந்து, மிண்டுகின்றேனை - மதத்துத் திரிகின்ற என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், நின் - உனது, விரை - மணமமைந்த, மலர் -

தாமரைமலர் போன்ற, தாள் - திருவடியை, பண்டு - முன்னே, தந்தாற்போல் - கொடுத்தருளினாற் போல, பணித்து - கொடுத்தருளி, பணிசெய்ய - உன் குற்றேவல் செய்ய, கூவித்து - கூவுவித்து, என்னை கொண்டு - என்னை யேற்றுக்கொண்டு, என் எந்தாய் - என் எந்தையே, களை ஆய - அயர்வாகிய, குதுகுதுப்பு - வெதுவெதுப்பை, களையாய் - களைவாயாக, எ - று.

(க - ரை.) இறைவனே! கண்டதைச்செய்து உன் கருணையாகிய தேனைப் பருகி மதத்துத் திரிகின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று, முன்னே உன் திருவடியைத் தந்தாற்போல இன்றும் தந்தருளி, உன் குற்றேவலுக் காளாக்கிக்கொள்ளல்வேண்டும் என்பது.

(வி - ரை.) கண்டது செய்து என்றது மனம்போன வாறே செய்து என்றபடி. மிண்டுதல் - மதத்தல். கூவித்து என்பது கூவித்து என நின்றது. களை - விடாய் எனினுமாம். (௯௯)

குதுகுதுப்பின்றிநின்றென்குறிப்பேசெய்துநின்குறிப்பில்
விதுவிதுப்பேனைவிடுதிகண்டாய்விரையார்ந்தினிய
மதுமதுப்போன்றென்னைவாழைப்பழத்தின்மனங்கனிவித்
தெதிர்வதெப்போதுபயில்விக்கயிலைப்பரம்பரனே.

(ப - ரை.) குதுகுதுப்பு இன்றி நின்று - வெதுவெதுப்பில்லாமல் நின்று, என்குறிப்பே செய்து - என் எண்ணத்தையே செய்து, நின்குறிப்பில் - உன் எண்ணத்திற்கு, விதுவிதுப்பேனை - ஆசைப்படுகின்ற என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விரை ஆர்ந்து - மணம்பொருந்தி, இனிய - இனிமையாகிய, மது மதுபோன்று - மிக்க தேன்போன்று, என்னை - அடியேனை, வாழைப்பழத்தின் - வாழைக் கனிபோல, மனம் கனிவித்து - மனதைக் குழைத்து, எதிர்வது - சந்திப்பது, எப்போது - எக்காலம், பயில் - சொல்வாயாக, வி - அறிவுருவமாகிய, கயிலை - திருக்கயிலாயத்தி லெழுந்தருளிய, பரம்பரனே - கடவுளே, எ - று.

(க - ரை.) திருக்கயிலாயத் திறைவனே! அஞ்சாமல் என் எண்ணத்தையே செய்து உன் எண்ணத்திற்கு ஆசைப்படுகிற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று, அடியேன் மனதைக் குழைத்து நீ வந்து எதிர்ப்படுவது எக்காலமோ என்பது.

(வி - ரை.) குறிப்பு - நினைப்பு. விருப்பு - விருப்பம். மது மது என்ற அடுக்கு மிகுதியாகிய தேன் என்றபடி. வாழைப்பழத்தின் - வாழைப்பழத்தினும் எனினுமாம். எதிர்தல் - சந்தித்தல்.

பரம்பரனேநின்பழவடியாரொடுமென்படிறு
விரும்பரனேவிட்டிடுதிகண்டாய்மென்முயற்கறையி
னரும்பரநேர்வைத்தணிந்தாய்பிறவியைவாயரவம்
பொரும்பெருமான்வினையேன்மனமஞ்சிப்பொதும்புறவே.

(ப - ரை.) பரம்பரனே - கடவுளே, நின் பழ அடியாரொடும் - உன் பழைய அடியார்களோடும், என் படிறு - என் பொய்யொழுக்கத்தையும், விரும்பு - விரும்புகின்ற, அரனே - ஹரனே, விட்டிடுதி - விட்டுவிடப்போகிறாய், மெல் - மென்மையாகிய, முயற்கறையின் அரும்பு - மதிக்கொழுந்தையும், அர - பாம்பையும், நேர் வைத்து அணிந்தாய் - சரியாகவைத்துத் தரித்தவனே, பெருமான் - பெருமானே, வினையேன் - தீவினையையுடையேனது, மனம் - மனமானது, அஞ்சி - பயந்து, பொதும்பு உற - பொந்தையடையும் வண்ணம், பிறவி - பிறவியாகிய, ஐவாய் அரவம் - ஐந்தலைப்பாம்பு, பொரும் - (என்னுடன்) போர்செய்யாநின்றது, எ - று.

(க - ரை.) கடவுளே, பிறவியாகிய ஐவாயரவம் நானஞ்சும் வண்ணம் சீறாநின்றது, என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) படிறு - வஞ்சம் எனினுமாம். முயற்கறையின் அரும்பு - பிறைச்சந்திரன். அரா - பாம்பு. இது அர எனக் குறுகிற்று. ஐவாய் அரவம், ஐந்தலைநாகம். பொதும்பு - பொந்து. (௩௫)

பொதும்புறுதீப்போற்புகைந்தெரியப்புலன்றீக்கதுவ
வெதும்புறுவேனைவிடுதிகண்டாய்விரையார்நறவந்
ததும்புமந்தாரத்திற்றாம்பயின்றுமந்தம்முரல்வண்
டதும்புங்கொழுந்தேனவிர்சடைவானத்தடலரைசே.

(ப - ரை.) பொதும்பு உறு - பொந்தினையடைந்த, தீபோல் - நெருப்புப்போல, புகைந்து எரி - புகைந்தெரிகின்ற, அ - அந்த, புலன் தீ கதுவ - புலன்களாகிய நெருப்புப் பற்றுதலால், வெதும்

புறவேனை - வெப்பமடைகின்ற என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விரை ஆர் - மணம் நிறைந்த, நறவம் ததும்பு - தேன் ததும்புகின்ற, மந்தாரத்தில் - மந்தார விருக்கத்தில், தாரம்பயின்று - வல்லிசைபழகி, மந்தம் முரல் - மந்தமாகச் சத்திக்கிற, வண்டு - வண்டுகள், அதும்பும் - அழுந்துகின்ற, கொழுதேன் - செழுமையாகிய தேனோடுகூடி, அவிர் - பிரகாசிக்கிற, சடை - சடாபாரத்தையுடைய, வானத்து - பரமாகாயத்திலுள்ள, அடல் அரைசே - வலிமைமிக்க அரசனே, எ - று.

(க - ரை.) சிதாகாயத்திலுள்ள இறைவனே, புலன்களாகிய தீப்பற்றுதலால் வெதும்புகின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று என்பது.

(வி - ரை.) பொதும்பு - மரப்பொந்து. புலன் - ஐம்புலன். நறவம் - தேன். மந்தாரம் - தேவதரு ஐந்தனுள் ஒன்று. தாரம் - வல்லிசை. முரலுதல் - சத்தித்தல். அதும்பல் - அழுந்தல். (நசு)

அரைசேயறியாச்சிறியேன்பிழைக்கஞ்சலென்னினல்லால்
விரைசேர்முடியாய்விடுதிகண்டாய்வெண்ணகைக்கருங்கட்
டிரைசேர்மடந்தைமணந்ததிருப்பொற்பதப்புயங்கா
வரைசேர்ந்தடர்ந்தென்னவல்வினைதாம்வந்தடர்வனவே.

(ப - ரை.) அரைசே - அரசனே, அறியா - (செய்தல்தவிர்தல்) அறியாத, சிறியேன் - சிறியேனது, பிழைக்கு - குற்றங்களுக்கு, அஞ்சல் என்னின் அல்லால் - அஞ்சற்க என்று நீ சொல்லினல்லது, (வேறு கதியில்லை) விரைசேர் - மணம் பொருந்திய, முடியாய் - முடியையுடையவனே, விடுதி - விட்டுவிடப்போகிறாய், வெண்நகை - வெள்ளிய நகையினையும், கருங்கண் - கரியகண்களையு முடைய, திரைசேர் மடந்தை - கங்காதேவி, மணந்த - தழுவின, திரு பொன் பதம் - அழகிய பொன்போலும் திருமேனி யழகையுடைய, புயங்கா - புயங்கனே, வரைசேர்ந்து அடர்ந்தென்ன - (இரண்டு) மலைகள்கூடி வருத்தினாற் போல, வல்வினை வந்து அடர்வன - வலிய இருவினைகள் வந்து என்னை வருத்துகின்றன, எ - று.

(க - ரை.) இறைவனே, வலிய வினைகள் மலைகள்போல வந்தடராநின்றன; என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) நகையென்றது பல்லை. திரை - அலை. திரைதலையுடையது. இது முதனிலைத்தொழி லாகுபெயர். மடந்தை - மடப்பத்தையுடையவள். மணத்தல் - கலத்தல். வரை - மலை. தாம் - அசை.

அடர்புலனானிற்பிரிந்தஞ்சியஞ்சொனல்லாரவர்தம்
விடர்விடலேனைவிடுதிகண்டாய்விரிந்தேயெரியுஞ்
சுடரனையாய்சுடுகாட்டரசேதொழும்பர்க்கமுதே
தொடர்வரியாய்தமியேன்றனிநீக்குந்தனித்துணையே.

(ப - ரை.) அடர்புலனால் - வருத்துகின்ற புலன்களாலே, நிற்பிரிந்து - உன்னைப்பிரிந்து, அஞ்சி - பயந்து, அம்சொல்நல்லார் - அழகிய சொல்லினையுடைய மாதராகிய, அவர் - அவரது, விடர் - பிளப்பை, விடலேனை - விடுதலில்லாத என்னை, விடுதி - விட்டு விடப்போகிறாய், விரிந்து எரியும் - விரிந்தெரியாநின்ற, சுடர் அனையாய் - நெருப்பை நிகர்ப்பவனே, சுடுகாட்டு அரசே - மயானவேந்தனே, தொழும்பர்க்கு அமுதே - தொண்டர்க்கு அமிர்தமே, தொடர்வு அரியாய் - தொடர்தற்கு அரியவனே, தமியேன் தனிநீக்கும் - தமியேனது தனிமையை நீக்குகின்ற, தனித்துணையே - ஒப்பற்ற துணையே, எ - று.

(க - ரை.) இறைவனே; புலன்களுக்கஞ்சி உன்னைப் பிரிந்து மாதர்மயக்கி லழுந்தி வருந்தாநின்ற என்னைக் கைவிடுதல் தகுதியன்றென்பது.

(வி - ரை.) அடர்தல் - நெருக்குதல் எனினுமாம். விடர் - பிளப்பு. இது பெண்குறியைக்குறிக்கும். விடர் - காடு எனக்கொண்டு மாதர் கூட்டமாகிய காட்டை விடுதலிலேன் எனினுமாம். (நஅ)

தனித்துணைநீநிற்கயான்றருக்கித்தலையானடந்த
வினைத்துணையேனைவிடுதிகண்டாய்வினையேனுடைய
மனத்துணையேயென்றன்வாழ்முதலேயெனக்கெய்ப்பில்வைப்பே
தினைத்துணையேனும்பொறேனென்றுயராக்கையின்றிண்வலையே

(ப - ரை.) தனித்துணை நீ நிற்க - ஒப்பற்றதுணையாகிய நீயிருக்க, யான் - நான், தருக்கி - செருக்கடைந்து, தலையால் நடந்த - தலையாலே நடந்த, வினைத்துணையேனை - வினையாகிய துணையை

யுடையவனுகிய என்னை, விடுதி - விட்டுவிடப்போகிருய், வினையே னுடைய - வினையேனது, மனத்துணையே - மனத்துக்குத்துணையே, என் வாழ்முதலே - என்வாழ்வுக்குக் காரணமே, எனக்கு எய்ப்பில் வைப்பே - எனக்கு இளைத்தகாலத்தில் நிதியாயிருப்பவனே, துயர் - துன்பங்களுக்கு ஆதாரமாகிய, ஆக்கையின் - உடம்பாகிய, திண்வலை- திண்ணியவலைப் பிணிப்பை, இனைத்துணையேனும் பொறேன் - இனையளவாயினும் ஆற்றேன், எ - று.

(க - ரை.) துன்பங்களுக்கேதுவாகிய இவ்வுடம்பைப் பொறுத் தலாற்றேன், என்னைக்கைவிடுதல் உனக்குத்தகுதி யன்றென்பது.

(வி - ரை) தருக்குதல் - செருக்குதல். தலையாணடந்த என் றது தலைகீழாக நடந்த என்றபடி. மனத்துணை - உட்டுணை. வினைத் துணையேன் என்றது வினையையே துணையாகவுடையேன் என்றபடி. ஆக்கையின்றிண்வலை என்பதில் இன் அல்வழிச்சாரியை. "புணர்ப் போனிலனும்விசும்பும்பொருப்புந்தன்பூங்கழலின், றுணர்ப்போதெ னக்கணியாக்குந்தொல்லோன்" என்னுந்திருக்கோவையார் - கஎ-வது செய்யுளில், "பூங்கழலின்றுணர்ப்போது" என்பதற்கு வரைந்திருக் குமுறையினுங்காண்க. (நக)

வலைத்தலைமானன்னநோக்கியர்நோக்கின்வலையிற்பட்டு
மிலைத்தலைந்தேனைவிடுதிகண்டாய்வெண்மதியினொற்றைக்
கலைத்தலையாய்கருணாகரனேகயிலாயமென்னு
மலைத்தலைவாமலையாண்மணவாளவென்வாழ்முதலே.

(ப - ரை.) வலைத்தலை - வலையினிடத் தகப்பட்ட, மான் அ ன்ன - மான்போன்ற, நோக்கியர் - கண்களையுடையவராகிய மாத ரது, நோக்கின் - பார்வையாகிய, வலையில் பட்டு - வலையிற்சிக்கி, மிலைத்து அலைந்தேனை - பிரமித்து அலைந்த என்னை, விடுதி - விட்டு விடப்போகிருய், வெண்மதியின் - வெள்ளியசந்திரனது, ஒற்றைக் கலை - ஒற்றைக்கலையைத்தரித்த, தலையாய் - சிரத்தையுடையவனே, கருணாகரனே - கருணைக்குப் பிறப்பிடமாயிருப்பவனே, கயிலாயம் என்னும் - கயிலாயமென்கிற, மலைத்தலைவா - மலைக்குத்தலைவனே, மலையாள் மணவாள - மலைமகளாகிய உமாதேவிக்கு மணாளனே, என் வாழ்முதலே - என்வாழ்வுக்குமூலமே, எ - று.

(க - ரை.) இறைவனே, வலையிற்பட்ட மான்போன்ற பார்வையையுடைய மாதர் வேட்கையால் வருந்தாநின்ற என்னைக்கைவிடுதல் உனக்குத்தகுதி யன்றென்பது.

(வி - ரை.) வலைத்தலை என்பதில் தலை ஏழனுருபு. நோக்கின் என்பதில் இன்மேற்செய்யுளிற்போல அல்வழிச்சாரியை. மிலைத்தல் - பிரமித்தல். கருணாகரன் என்பதை கருணா ஆகரன் எனப்பிரிக்க. ஆகரம் - பிறப்பிடம். (௪0)

முதலைச்செவ்வாய்ச்சியர்வேட்கைவெந்நீரிற்கடிப்பமூழ்கி
விதலைச்செய்வேனைவிடுதிகண்டாய்விடக்கூன்மிடைந்த
சிதலைச்செய்காயம்பொறேன்சிவனேமுறையோமுறையோ
திதலைச்செய்பூண்முலைமங்கைபங்காவென்சிவகதியே.

(ப - ரை.) செவ்வாய்ச்சியர் - செவந்த அதரத்தையுடையராகிய மாதரென்கிற, முதலை - முதலையானது, வேட்கை - அவர்மீதுண்டாகிற விருப்பமென்கிற, வெந்நீரில் - வெம்மையாகிய நீரின்கண்ணின்று, கடிப்ப - கவ்வுதலால், மூழ்கி - முழுகி, விதலை செய்வேனை - நடுக்கஞ்செய்கிற என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விடக்கு ஊன் மிடைந்த - தசையும் நிணமும் நெருங்கிய, சிதலைச்செய்காயம் - நோய்களுண்டாதற்கிடமாகிய உடம்பை, பொறேன் - பொறுக்கமாட்டேன், சிவனே - சிவபெருமானே, முறையோ முறையோ - (உனக்கு) முறையோ முறையோ, திதலைசெய் - தேமல்படர்ந்த, பூண் முலை - ஆபரணமணிந்த தனங்களையுடைய, மங்கை - மங்கையாகிய உமாதேவியின், பங்கா - பாகனே, என் சிவகதியே - எனது நற்கதியே, எ - று.

(க - ரை.) இறைவனே, நோய்க்கிடமாகிய இவ்வுடம்பைச் சுமத்தலாற்றேன், மாதர் மயக்கத்திற்சிக்கி நடுங்காநின்ற என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) வெந்நீர் - கொடுமையாகிய குணம் எனினுமாம். விதலை - நடுக்கம். விதலைச் செய்தல் - நடுங்குதல் என ஒரு சொல்லாகக்கொள்க. சிதலை - நோய். திதலை - தேமல். திதலைச்செய் என்பதில் செய்தல் படர்தல் என்னும் பொருளது. செவ்வாய்ச்சியர் வேட்கை முதலை வெந்நீரிற் கடிப்ப என நிறுத்திமாதர் வேட்கையாகிய முதலை கோரவத்தோடு கடிப்ப என்றுரைத்தலுமாம். மூழ்கி என்றது கும்பமாகிய மடுவில் அழுந்தியென்றபடி. (௪க)

கதியடியேற்குன்கழறந்தருளவுமூன்கழியா
விதியடியேனைவிடுதிகண்டாய்வெண்டலைமுழையிற்
பதியுடைவாளரப்பார்த்திறைபைத்துச்சுருங்கவஞ்சி
மதிநெடுநீரிற்குளித்தொளிக்குஞ்சடைமன்னவனே.

(ப - ரை.) அடியேற்கு கதி - அடியேனுக்குப் புகலிடமாகிய, உன் கழல் தந்தருளவும் - உன் திருவடியைத் தந்தருள்செய்யவும், ஊன் கழியா விதி - உடம்பு ஒழியாமையாகிய விதியையுடைய, அடியேனை - அடியனேனை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், வெள் தலை முழையில் - வெள்ளிய தலையாகிய வளையில், பதி உடை - பொருந்துதலையுடைய, வாள் அர - ஒளியையுடைய பாம்பானது, பார்த்து - நோக்கி, இறை பைத்து சுருங்க - சிறிது படம்விரித்துச் சுருங்கிவிட, மதி - பிறைச்சந்திரன், அஞ்சி - பயந்து, நெடுநீரில் குளித்து ஒளிக்கும் - பெருநீரில் முழுகி ஒளித்தற்கிடமாகிய, சடை - சடாபாரத்தையுடைய, மன்னவனே - வேந்தனே, எ - று.

(க - ரை.) இறைவனே, உன் திருவடியாகிய புகலிடம் எனக்குண்டாயிருந்தும் இவ்வுடம்பின் தொடர்பு என்னைவிட்டு நீங்கவில்லை, ஆதலால் என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) கதி - ஆதரவு எனினுமாம். விதி - ஊழ். சந்திரன் பாம்பைக் கண்டஞ்சுதல் இயல்பாதலால், "வெண்டலை முழையிற் பதியுடை வாளரப்பார்த்திறைபைத்துச் சுருங்கவஞ்சி மதிநெடுநீரிற்குளித் தொளிக்குஞ் சடைமன்னவனே" என்றார். பாம்பு - இறைவனணிந்திருக்கும் பாம்பு. அரா என்னும் குறியதன் கீழா அர எனக்குறுகி நின்றது. இக்குறுக்கத்தோடு உகரமேற்று அரவு எனவும் வரும். பைத்து - பை என்னும் பெயரடியாகப் பிறந்த வினையெச்சம். இது சுருங்கவென்னும் வினைகொண்டது. அஞ்சுதல் - விழுங்குமென்றஞ்சுதல். பைத்துச்சுருங்குதல் எற்றுக்கெனின் இறைவற்கஞ்சி யென்க. (சஉ)

மன்னவனேயொன்றுமாறறியாச்சிறியேன்மகிழ்ச்சி
மின்னவனேவிட்டிடுதிகண்டாய்மிக்கவேதமெய்ந்நூல்
சொன்னவனேசொற்கழிந்தவனேகழியாத்தொழும்பர்
முன்னவனேபின்னுமானவனேயிம்முழுதையுமே.

(ப - ரை.) மன்னவனே - வேந்தனே, ஒன்றும் - சிறிதும், மாறு அறியா - கைம்மாறு செய்ய அறியாத, சிறியேன் - சிறியனேனது, மகிழ்ச்சி - சந்தோடவடிவாகிய, மின்னவனே - மின்கொடி போன்ற உமாதேவியை யுடையவனே, விட்டிடுதி - விட்டுவிடப் போகிறாய், மிக்க - மிகுந்த, வேதம்மெய்நூல் - வேதமாகியமெய்நூலினாலே, சொன்னவனே - சொல்லப்பட்டவனே, சொல்கழிந்தவனே, சொல்லைக்கடந்தவனே, கழியாதொழும்பர் - நீங்காததொண்டருக்கு முன்னவனே - எதிர் நிற்பவனே, பின்னும் - மேலும், இம்முழுதையும் ஆனவனே - இந்தமுழுதும் ஆயினவனே எ - று.

(க - ரை.) வேதங்களால் பிரதிபாதிக்கப்பட்ட இறைவனே, நீ செய்த நன்றிக்குக் கைம்மாறு செய்ய அறியாத என்னைக்கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) ஒன்றும் ஆறு அறியா எனப்பிரித்து உன்னை யடையும் வழியறியாத என்றுரைத்தலும் பொருந்தும். மகிழ்ச்சிமின் என்றது ஆநந்தரூபியென்றபடி. வேதமெய்நூல் என்பதற்கு வேதங்களும் உண்மை நூல்களும் எனினுமாம். சொன்னவன் - சொல்லப்பட்டவன். அன்றிவேதமெய்நூலைச் சொன்னவன் என்றலும் பொருந்தும். (௬௫)

முழுதயில்வேற்கண்ணியரென்னுமூரித் தழன்முழுகும்
விழுதனையேனைவிடுதிகண்டாய்நின்வெறிமலர்த்தா
டொழுதுசெல்வானத்தொழும்பரிற்கூட்டிடுசோத்தெம்பிரான்
பழுதுசெய்வேனைவிடேலுடையாயுன்னைப்பாடுவனே.

(ப - ரை.) முழுது அயில்வேல் - முழுக்கூர்மையையுடைய வேற்படைபோன்ற, கண்ணியர் என்னும் - கண்களையுடைய மாதர் என்கிற, மூரிதழல் முழுகும் - பெருநெருப்பில் முழுகுகின்ற, விழுது அனையேனை - வெண்ணெய்போல்வேனை, விடுதி - விட்டு விடப்போகிறாய், நின் - உனது, வெறி - மணம்பொருந்திய, மலர் - தாமரை மலர்போன்ற, தாள் - திருவடியை, தொழுது செல்வான் - (நான்) வணங்கிச் செல்லும்பொருட்டு, நல் தொழும்பரில் கூட்டிடு - நல்ல தொண்டரோடு (என்னைச்) சேர்த்து விடுவாயாக, எம்பிரான் - எம்பிரானே, சோத்து - (உனக்கு) அஞ்சலிசெய்கிறேன், பழுதுசெய்வேனை - குற்றம் செய்கிறவனாகிய என்னை, விடேல் - விடுதல் செய்

யற்க, உடையாய் - உடையவனே, உன்னைப்பாடுவேன் - உன்னைப் பாடுவேன், எ - று.

(க - ரை.) இறைவனே, உன் திருவடியைத் தொழும்பொருட்டு உன் தொண்டரோடு கூட்டவேண்டும், உனக்கு நமஸ்காரம், என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று, என்பது.

(வி - ரை.) அயில் - கூர்மை. முழுது அயில் - மிகு கூர்மை. மகளிரைக்காணின் ஆடவர் உருகுதல் இயற்கை யாதலால் மாதரைத் தழலாக்கியும் தம்மை வெண்ணெ யாக்கியும் கூறினர், சோத்தம் - இழிந்தார் செய்யும் அஞ்சலி, அது சோத்து எனக் கடைக்குறைந்து நின்றது. (உஉ)

பாடிற்றிலேன்பணியேன்மணிநீயொளித்தாய்க்குப்பச்சூன்
வீடிற்றிலேனைவிடுதிகண்டாய்வியந்தாங்கலறித்
தேடிற்றிலேன்சிவனெவ்விடத்தானெவர்கண்டனரென்
றோடிற்றிலேன்கிடந்துள்ளுருகேனின்றுழைத்தனனே.

(ப - ரை.) மணி நீ ஒளித்தாய்க்கு - மணிபோன்று மறைந்தவுன்பொருட்டு, பாடிற்றிலேன் - பாடுகிலேன, பணியேன் - வணங்கேன், பச்சூன் வீடிற்றிலேனை - பச்சைத்தசை யுருவாகிய உடம்பை விட்டு நீங்காத என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், வியந்து - வியப்படைந்து, ஆங்கு - அவ்விடத்தே, அலறி தேடிற்றிலேன் - அலறித் தேடுகிலேன், சிவன் - சிவபெருமான், எவ்விடத்தான் - எவ்விடத்திலுள்ளான், எவர் கண்டனர் - யாவர் பார்த்தவர், என்று - என்று வினவா நின்று, ஓடிற்றிலேன் - ஓடுகிலேன், கிடந்து - விழுந்து, உள் உருகேன் - மனமுருகேன், நின்று உழைத்தனன் - நின்று வருந்தினேன், எ - று,

(க - ரை.) இறைவனே, உன்னைத் தேடுதல் முதலாயின செய்யாது நின்று வருந்தா நின்றேன், உன்னைப் பாடுதல் பணிதல் முதலியவுஞ் செய்கிலேன், ஆயினும் என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) மணி நீ யொளித்தாய்க்கு என்றது இறைவன் திருப்பெருந்துறையில் தம்மைவிட்டு மறைந்ததைக் குறித்தது.

உழைதருநோக்கியர்கொங்கைப்பலாப்பழத்தீயினொப்பாய்
விழைதருவேனைவிடுதிகண்டாய்விடின்வேலைநஞ்சுண்
மழைதருகண்டன்குணமிலிமானிடன்றேய்மதியன்
பழைதருமாபரனென்றென்றறைவன்பழிப்பினையே.

(ப - ரை.) உழைதரு நோக்கியர் - மான்போலும் பார்வையை யுடையவராகிய மாதரது, கொங்கை - தனங்களாகிய, பலாப்பழத்து - பலாக்கனியில், ஈயின் ஒப்பாய் - ஈக்கு நிகராகி, விழைதருவேனை - இச்சிக்கிற என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விடின் - விடு வையாயின், வேலை நஞ்சு உண் - கடல் விடமுண்ட, மழைதரு கண் டன் - மழைதரு கண்டத்தை யுடையவன், குணம் இலி - குணமில் லாதவன், மானிடன் - மானிடன், தேய்மதியன் - குறைமதியன், பழைதரு மாபரன் - பழமையாகிய மாபரன், என்று என்று - என்று என்று, பழிப்பினை - உன் பழிப்புக்களை, அறைவன் - எடுத்துச் சொல்லுவேன், எ - று.

(க - ரை.) மாதரது கொங்கையாகிய பலாப்பழத்தி லொட்டிக் கொண்ட ஈயை நிகர்த்து வருந்தாநின்ற என்னைக் கைவிடுதல் உனக் குத் தகுதியன்று, கைவிடின், உன்னைப் பழிப்பேன் என்பது.

(வி - ரை.) உழை - மான். தரு - உவமைக்கண் வந்தது. விழைதரு ஒரு சொல். பகுதி விழைதா. வேலை - கடல், மழைதரு கண்டன் - நீல மேகம்போலுங் கண்டத்தையுடையவன். குணம் இலி - நற்குணமில்லாதவன், நிர்க்குணன். மானிடன் - மனிதன், மானையிடப்பக்கத்தி லுடையவன். தேய்மதியன் - குறைந்த அறி வையுடையவன், தேய்ந்த பிறைமதியைத் தரித்தவன். பழைதரு மாபரன் - பழமையாகிய உமாதேவியின் பக்ஷத்தான், பழமையாகிய பெரிய மேலோன். (சுசு)

பழிப்பினின்பாதப்பழந்தொழும்பெய்திவிழப்பழித்து
விழித்திருந்தேனைவிடுதிகண்டாய்வெண்மணிப்பணிலங்
கொழித்துமந்தாரமந்தாகினிநுந்தும்பந்தப்பெருமை
தழிச்சிறைநீரிற்பிறைக்கலஞ்சேர்தருதாரவனே.

(ப - ரை.) பழிப்பு இல் - பழிப்பற்ற, நின்பாதம் - உன் திரு வடியின், பழந்தொழும்பு எய்தி - பழந்தொண்டினையடைந்து, விழ

ப்பழித்து - மிகநிந்தித்து, விழித்திருந்தேனை - விழித்திருந்தவனாகிய என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், வெண்மணி - முத்தைத்தருகிற, பணிலம் - சங்குகளை, கொழித்து - ஒதுக்கி, மந்தாரம் - மந்தாரமலர்களை, மந்தாகினி - ஆகாயகங்கையானது, நுந்தும் - தள்ளுகின்ற, பந்தப்பெருமைதழி - அழகின்பெருமையைக்கொண்ட, சிறைநீரில் - தடுக்கப்பட்ட நீரில், பிறைக்கலம் சேர்தரு - பிறையாகிய தோணிசேர்தற் கிடமாகிய, தாரவனே - கொன்றைமாலையையுடையவனே, எ - று.

(க - ரை.) இறைவனே, குற்றமற்ற உன் திருவடித்தொண்டைநிந்தித்து விழித்திருந்தவனாகிய என்னைக்கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) விழித்திருத்தல் - வெருண்டு நோக்குதல். வெண்மணிபணிலம் - வெண்மணியையும் சங்கையும் எனினுமாம். பந்தம் - அழகு. சிறைநீர் - தடுக்கப்பட்டநீர். (௬௭)

தாரகைபோலுந்தலைத்தலைமாலைத்தழலரப்பூண்
வீரவென்றன்னைவிடுதிகண்டாய்விடிலென்னைமிக்கா
ராரடியானென்னினுத்தரகோசமங்கைக்கரசின்
சீரடியாரடியானென்றுநின்னைச்சிரிப்பிப்பனே.

(ப - ரை.) தாரகைபோலும் - உடுக்கள்போலும், தலை - தலையில், தலைமாலை - சிரமாலையோடு, தழல் அரபூண் - நெருப்புமிழ்கின்ற பாம்பையும் அணிகின்ற, வீர - வீரனே, என்றன்னை - என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், விடில் - விட்டால், மிக்கார் - மேலோர், என்னை - என்னைநோக்கி, ஆர் அடியான்என்னின் - யாருடைய அடியான் என்றுகேட்டால், உத்தரகோசமங்கைக்கு அரசின் - திருவுத்தரகோசமங்கைக்கு வேந்தனாகிய சிவபிரானது, சீர் அடியார் - சிறப்பையுடைய அடியாருக்கு, அடியான் என்று - அடியவனென்றுசொல்லி, நின்னை சிரிப்பிப்பன் - உன்னை நகைப்பிப்பேன், எ - று.

(க - ரை.) இறைவனே, என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்று, கைவிடின், என்னை நோக்கி, நீ யாருடைய அடியவனென்று கேட்போர்க்கு, திருவுத்தரகோச மங்கைக் கரசனது அடியானென்று விடை தந்து, உன்னைச் சிரிக்கப்பண்ணுவன் என்பது.

(வி - ரை.) தாரகை - நக்ஷத்திரம். தழல் என்பதை வினைத் தொகையாக்கித் தழல்கின்ற என்றலுமாம். (சஅ)

சிரிப்பிப்பன்சீறும்பிழைப்பைத்தொழும்பையுமீசற்கென்று
விரிப்பிப்பனென்னைவிடுதிகண்டாய்விடின்வெங்கரியி
னுரிப்பிச்சன்றோலுடைப்பிச்சனஞ்சூண்பிச்சனூர்ச்சுடுகாட்
டெரிப்பிச்சனென்னையுமாளுடைப்பிச்சனென்றேசுவனே.

(ப - ரை.) சீறும் பிழைப்பை - வெறுக்கின்ற பிழைப்பை, சிரிப்பிப்பன் - நகைப்பிப்பேன், தொழும்பையும் - என் தொண்டினையும், ஈசற்கு என்று விரிப்பிப்பன் - ஈசனுக்கென்றே விரிப்பிப்பேன், என்னை விடுதி - என்னை விட்டுவிடப்போகிறாய், விடின் - விட்டால், வெங்கரியின் உரிப்பிச்சன் - கொடிய யானைத்தோலையுடைய பித்தன், தோல்உடைப் பிச்சன் - தோலாடையையுடைய பித்தன், நஞ்சு ஊண் பிச்சன் - நஞ்சாகிய உணவையுடைய பித்தன், ஊர் சுடுகாட்டு எரிப்பிச்சன் - ஊர்ச்சுடுகாட்டு நெருப்போடாடுகின்ற பித்தன், என்னையும் ஆள்உடை பிச்சன் - என்னையும் அடிமையாகவுடைய பித்தன், என்று ஏசுவன் - என்று வைவேன், எ - று.

(க - ரை.) இறைவனே, வெறுத்தற்குரிய இவ்வாழ்க்கையை யிகழ்ந்து உன் தொண்டை விருத்திசெய்வேன், என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) சீறுதல் - கோவித்தல் எனினுமாம். தொழும்பு - தொண்டு, கரி - யானை, உடை - ஆடை, என்னையும் என்றவும்மை இழிவு சிறப்பு,இறந்தது தழீஇயது எனினுமாம். ஏசுதல் - வைதல்.

ஏசினும்யானுன்னையேத்தினுமென்பிழைக்கேகுழைந்து
வேசறுவேனைவிடுதிகண்டாய்செம்பவளவெற்பிற்
றேசுடையாயென்னையாளுடையாய்சிற்றுயிர்க்கிரங்கிக்
காய்சினவாலமுண்டாயமுதுண்ணக்கடையவனே.

(ப - ரை.) யான் - நான், உன்னை ஏசினும் - உன்னை வைதாலும், ஏத்தினும் - துதித்தாலும், என் பிழைக்கே - என் குற்றத்தின் பொருட்டே, குழைந்து - மனங்குழைந்து, வேசறுவேனை - துக்கிக்கின்ற என்னை, விடுதி - விட்டுவிடப்போகிறாய், செம்பவள வெற்

பின் - செம்பவள மலைபோல, தேசு உடையாய் - ஒளியையுடைய வனே, என்னை ஆள் உடையாய் - என்னை ஆளாகவுடையவனே, கடையவன் - கடைந்தவன், அமுது உண்ண - அமிர்தத்தையுண்ண, சிறு உயிர்க்கு இரங்கி - சிற்றுயிர்களுக்கிரங்கி, காய்சினம் - சுடுகின்ற சினத்தையுடைய, ஆலம் உண்டாய் - நஞ்சைப் பருகினவனே, எ - று.

(க - ரை.) இறைவனே, நான் உன்னைப் புகழினும் இகழினும் என் குற்றத்தின் பொருட்டே யிரங்கித் துன்புறுகின்றேன் என்னைக் கைவிடுதல் உனக்குத் தகுதியன்றென்பது.

(வி - ரை.) வேசறுதல் - துக்கித்தல். கடையவன் - கடைந்தவன், (திருமால்.) சிற்றுயிர் என்றது மற்றைத் தேவாசுரர்களை, சினவாலம் இலக்கணை. ஆலம் - நஞ்சு, தேசு - ஒளி, வெற்பு - மலை.

திருச்சிற்றம்பலம்.

## திருவெம்பாவைக்கருத்துவருமாறு.

திருச்சிற்றம்பலம்.

ஆடிமாதமுதல் மார்கழிமாதம்வரைக்கும் இரவும், தைமாதமுதல் ஆனிமாதம்வரைக்கும் பகலுமாகத் தேவர்களுக் கொருநாளாகும். சங்காரகாலத்துக்கும் சிருட்டிகாலத்துக்கும் பிரமாணமாக இந்த ஆறுமாதமும் பிரிந்துநடக்கும். மார்கழிமாதம் உதயகாலமாய்ச் சிருட்டிக்கேதுவாயிருக்கும்.

பிரபஞ்சசிருட்டியைத் திருவுளத்தடைத்து வயிந்தவசத்தியைச் சிருட்டிக்கத் தொடங்கும் அவசரம் திருப்பள்ளியெழுச்சி யென வழங்கும்.

இனி அந்தச்சுத்தமாயை நாதவிந்துக்களாகவும், சாதாக்கியமாகவும், மகேசுரமாகவும், சுத்தவித்தையாகவும, அஞ்சுதலமாயிருக்கும், நாதவிந்துக்களாகிய தலங்களிலேபரமும், பரையும், அதிட்டிக்குஞ் சாதாக்கியமாகிய தலத்திலே சதாசிவமூர்த்தி யெழுந்தருளியிருப்பர். போகாங்கங்களாகிய அணுசதாசிவர் சேவிக்கவும், இதின் கீழே

ஈசுரற்கதிட்டானமாகிய மகேசுரதலத்திலே அநந்தாதி அட்டவித்தியேசுரர் சேவிக்கவும், இதின்கீழே உருத்திரர்க்கதிட்டானமாகிய சுத்த வித்தியாதலத்திலே மந்திரேசுரர் சேவிக்கவும், இப்படி பிரபஞ்ச அநுக்கிரககாரியமாகப் பராசத்தியிற்றோன்றிய ஞானக்கிரியைகள் ஒத்த இச்சையே திருமேனியான சதாசிவமூர்த்தி திருவருளால் அந்த மகேசுவர தத்துவத்திலே சத்திமண்டலத்திலிருந்த மனோன்மணி சத்தியைப் பிரேரிக்க, அந்தச்சத்தி சர்வபூததமனியைச் சிருட்டிக்க, அந்தச்சர்வபூததமனிபெலப் பிரமதனியைப் பிரேரிக்க, அந்தச்சத்தி பெலவிகரணியைப் பிரேரிக்க, அந்தச்சத்திகாளியைப் பிரேரிக்க, அந்தச்சத்தி இரவுத்திரியைப் பிரேரிக்க, அந்தச்சத்திசேட்டையைப் பிரேரிக்க, அந்தச்சத்திவாமையைப் பிரேரிக்க, இப்படி பிரேரியாநிற்க நவசத்திகள் பிரேரகத்தினால் மாயையை அதிட்டித்திருக்கிற அநந்த தேவராலே அசுத்தமாயை காரியப்பட்டுப் பிருதுவி முடிவான பிரபஞ்சகாரியம் நடவாநிற்கும்.

திருச்சிற்றம்பலம்.

# திருவெம்பாவை.

## சத்தியைவியந்தது.

சத்திகளாவார் :—அம்பிகை, கணம்பிகை, கௌரி, கங்கை, உமை, பராசத்தி, ஆதிசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, என ஒன்பதின்மர்.

திருவண்ணாமலையில் அருளிச்செய்யப்பட்டது.

வெண்டளையான் வந்த இயற்றரவிணைக் கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

ஆதியுமந்தமுமில்லாவரும்பெருஞ்
சோதியையாம்பாடக்கேட்டேயும்வாட்டடங்கண்
மாதேவளருதியோவன்செவியோநின்செவிதான்
மாதேவன்வார்கழல்கள்வாழ்த்தியவாழ்த்தொலிபோய்
வீதிவாய்க்கேட்டலுமேவிம்மிவிம்மிமெய்ம்மறந்து
போதாரமளியின்மேனின்றும்புரண்டிங்ங
னேதேனுமாகாள்கிடந்தாளென்னேயென்னே
யீதேயெந்தோழிபரிசேலோரெம்பாவாய்.

(ப - ரை.) மாதே - பெண்ணே, ஆதியும் அந்தமும் இல்லா - முதலும் இறுதியும் இல்லாத, அரும்பெருஞ்சோதியை - அருமையாகிய பெருஞ்சுடரை, யாம்பாடக்கேட்டேயும் - யாம்பாடக்கேட்டும், வாள் - வாள்போன்ற, தடம் - பெரிய, கண்வளருதியோ - கண்வளர்கின்றனையோ, நின்செவி - உன்செவி, வன்செவியோ - வலியசெவியோ, மாதேவன் - மகாதேவனது, வார்கழல்கள் - நீண்ட வீரக்கழலை யணிந்த திருவடியை, வாழ்த்திய வாழ்த்து - துதித்த துதியின், ஒலி - ஓசையானது, போய் - சென்று, வீதிவாய் கேட்டலும் - தெருக்களில் கேட்டலும், விம்மி விம்மி - அழுதழுது, மெய்மறந்து -

உடல் மறந்து, போது ஆர் - மலர்கள் நிறைந்த, அமளியின்மேல் நின்றும் - படுக்கையின்மேல் நின்றும், புரண்டு - உருண்டு, இங்ஙன் - இப்படி, ஏதேனும் ஆகாள் கிடந்தாள் - யாதொருபொருளாயினு மாகாமற் கிடந்தனள், என்னே என்னே - என்னை என்னை, எம் தோழி பரிசுஈதே - எம் தோழியது தன்மை இதுவோ, எ - று.

(க - ரை.) இது மனோன்மணி யென்னுஞ் சத்தியின் திரு ...க்காய்ச் சர்வபூத தமனியை யுணர்த்துகின்றது.

(வி - ரை.) இறைவன் தோற்றக்கேடில்லாத பேரொளியுரு வினனாதலால் "ஆதியு மந்தமு மில்லாவரும் பெருஞ்சோதி" என்றார். வாள் ஒளி யெனினு மமையும். கண்வளர்தல் - நித்திரை செய்தல். வன்செவியென்றது செவிட்டுச்செவி யென்றபடி. போதா ரமளி - பூம்பள்ளி, (புஷ்பசயநம்). போது - புஷ்பம். அமளி - சயநம். ஏ...ரம்பாவாய் - பாத பூர்த்தி (அடிநிறை.) (க)

பாசம்பரஞ்சோதிக்கன்பாயிராப்பகனும்
பேசும்போதெப்போதிப்போதாரமளிக்கே
நேசமும்வைத்தனையோநேரிழையாய்நேரிழையீர்
சீசியிவையுஞ்சிலவோவிளையாடி
யேசுமிடமீதோவிண்ணோர்களேத்துதற்குக்
கூசுமலர்ப்பாதந்தந்தருளவந்தருளுந்
தேசன்சிவலோகன்றில்லைச்சிற்றம்பலத்து
ளீசனுர்க்கன்பார்யாமாரேலோரெம்பாவாய்.

(ப - ரை.) நேரிழையாய் - பெண்ணே, பரஞ்சோதிக்கு - பரஞ்சுடராகிய சிவபெரும...க்கு, பாசம் அன்பு ஆய் - ஆசை யன்புகளை யுடை...கி, இராபகல் - இரவும் பகலும், நாம் பேசும் போது - நாம் புகழுங்காலம், எப்போது - எக்காலம், இ - இந்த, போது ஆர் அமளிக்கே - மலர்ப்பள்ளிக்கே, நேசமும் வைத்தனை யோ - விருப்பத்தையும் வைத்தாயோ, நேரிழையீர் - பெண்களே, சீ சீ - சை சை, இவையும் சிலவோ - இவையும் கொஞ்சமோ, விளை யாடி ஏசும் இடம் ஈதோ - விளையாடிவையுமிடம் இதுதானோ, விண் ணோர்கள் - தேவர்களும், ஏத்துதற்கு கூசும் - (துதிப்பதற்குக்) கூசு கிற, மலர்பாதம் - தாமரை மலர்போலுந் திருவடியை, தந்தருள -

(எமக்குக்) கொடுத்தருள, வந்தருளும் - எழுந்தருளிய, தேசன் - ஒளியுருவனும், சிவலோகன் - சிவபுரத்தானும் ஆகிய, தில்லைச்சிற்றம்பலத்துள் ஈசனுக்கு - தில்லைச் சிற்றம்பலத்திலுள்ள சிவபெருமானுக்கு, அன்பு ஆர் - அன்பு பொருந்திய, யாம் ஆர் - நாம் யாவர், (நீர் அறியீர்) எ - று.

(க - ரை.) இது சர்வபூததமனியென்னுஞ் சத்தியின் திருவாக்காய்ப் பெலப்பிரமதனியென்னுஞ் சத்தியை யுணர்த்துகின்றது.

(வி - ரை.) பாசம் அன்பு என்றது மிக்க அன்பென்றபடி. அமனிக்கே நேசமும் வைத்தனையோ என்றதனால் அமனி யொழிந்த வினையவற்றில் நேசம் வைத்திலை யென்றதாயிற்று. நேரிழை - செப்பமாகிய ஆபரணத்தை யணிந்தவள். இது அன்மொழித்தொகை. நேரிழையீர் என்றது அயலிலுள்ள பெண்களை. விண்ணோர்கள் ஏத்துதற்குக் கூசு மலர்ப்பாதம் என்றமையால் திருவடியின் பெருமை குறிக்கப்படுகின்றது. தேசு - ஒளி. பரஞ்சோதிக்கென்பாய் என்றும் பாடம். என்பாய் என்பதற்கு எலும்புருவாகி யென்பது பொருள். நேரிழையாய் என்றது பெலப்பிரமதனியை. நேரிழையீர் என்றது அவள் திருவாக்காய் சர்வபூததமனியென்னுஞ் சத்தியையும் அவளோடு வந்தாரையும் குறித்தது. (உ)

முத்தன்னவெண்ணகையாய்முன்வந்தெதிரெழுந்தென்
னத்தனானந்தனமுதனென்றள்ளூறித்
தித்திக்கப்பேசுவாய்வந்துன்கடைதிறவாய்
பத்துடையீரீசன்பழவடியீர்பாங்குடையீர்
புத்தடியோம்புன்மைதீர்த்தாட்கொண்டாற்பொல்லாதோ
வெத்தோநின்னன்புடைமையெல்லோமறியோமோ
சித்தமழகியார்பாடாரோநஞ்சிவனை
யித்தனையும்வேண்டுமெமக்கேலோரெம்பாவாய்.

(ப - ரை.) முத்து அன்ன - முத்துப்போன்ற, வெண்நகையாய் - வெள்ளிய நகையினை யுடையவளே, முன்வந்து எதிர் எழுந்து - முன்னேவந்து எதிரே எழுந்துநின்று, என் அத்தன் - என் தந்தை, ஆநந்தன் - இன்பவடிவன், அமுதன் - அமிர்தம் போல்பவன், என்று - என்று துதித்து, அள்ளூறி - வாயூறி, தித்

இக்கப்பேசுவாய் - இனிக்கப் பேசவாய், வந்துஉன் கடை திறவாய் - வந்து உன் கதவைத்திறவாய், பத்து உடையீர் - பத்தியையுடை யீர், ஈசன் பழவடியீர் - ஈசனுக்குப் பழமையாகிய அடியீர், பாங்கு உடையீர் - உரிமை யுடையீர், புத்தடியோம் - புதிய அடியேமு டைய, புன்மை தீர்த்து - இழிவை நீக்கி, ஆட்கொண்டால் - அடிமை கொண்டால், பொல்லாதோ - தீமையோ, எத்தோ - யாதோ, நின் அன்புடைமை - உன் அன்புடைமையை, எல்லோம் அறியோமோ - பாங்கள் எல்லாரும் அறியோமோ, சித்தம் அழகியார் - மனச் செம் மையையுடையார், நம் சிவனை பாடாரோ - நமது சிவபிரானைப் பாடாரோ, எமக்கு - நமக்கு, இத்தனையும் வேண்டும் - இவ்வளவும் வேண்டும், எ - று.

(க - ரை.) இது பெலப்பிரமதனி யென்னும் சத்தியின் திரு வாக்காய் பெலவிகரணி யென்னும் சத்தியை உணர்த்துகின்றது.

(வி - ரை.) நகை - பல். கடை - கதவு. பத்து - பற்று. புதுமை அடியோம் - புத்தடியோம் என நின்றது. எத்தோ - எற்றோ. (எத்தன்மையதோ). கடைதிறவாய் என்றது பெலவிகர ணியை நோக்கிப் பெலப்பிரமதனி யென்னும் சத்தி கூறியது. பத்துடையீர், பழவடியீர், பாங்குடையீர், என்பன அவள் திருவாக் காய் பெலவிகரணி யென்னுஞ் சத்தியையும் அவளோடு வந்தாரை யும் நோக்கிக் கூறியது.

(௪)

ஒண்ணித்திலநகையாயின்னம்புலர்ந்தின்றோ
வண்ணக்கிளிமொழியாரெல்லாரும்வந்தாரோ
வெண்ணிக்கொடுள்ளவாசொல்லுகோமவ்வளவுங்
கண்ணைத்துயின்றவமேகாலத்தைப்போக்காதே
விண்ணுக்கொருமருந்தைவேதவிழுப்பொருளைக்
கண்ணுக்கினியானைப்பாடிக்கசிந்துள்ள
முண்ணெக்குநின்றுருகயாமாட்டோநீயேவந்
தெண்ணிக்குறையிற்றுயிலேலோரெம்பாவாய்.

(ப - ரை.) ஒள் - ஒட்பமாகிய, நித்திலம் - முத்துப்போன்ற, நகையாய் - நகையினையுடையாளே, இன்னம் - இன்னமும், புலர்ந் தின்றோ - விடிந்ததில்லையோ... வண்ணம் - அழகிய, கிளிமொழியா

ரெல்லாரும் - இனிமொழியையுடைய பெண்கள் எல்லாரும், வந்தாரோ - வந்தனரோ, எண்ணிக்கொடு - எண்ணிக்கொண்டு, உள்ள ஆறு - உள்ளபடி, செல்லுகோம் - செல்லுவோம், அவ்வளவும் - அது வரையும், கண்ணைத்துயின்று - கண்ணுறங்கி, அவமே - வீணே, காலத்தைப்போக்காதே - காலங்கழிக்காதே, விண்ணுக்கு - தேவர்களுக்கு, ஒரு மருந்தை - ஒப்பற்ற அமிர்தம்போல்பவனை, வேதம் - வேதத்தில் சொல்லப்படுகிற, விழுப்பொருளை - மேலானபொருளை, கண்ணுக்கு இனியானை - கண்களுக்கு இனிமையா யிருப்பவனை, பாடி - தோத்திரம்பண்ணி, உள்ளம்கசிந்து - மனம்குழைந்து, உள் நெக்கு - உள்ளேநெகிழ்ந்து, நின்று உருக - நின்றுருகுதற்கு, யாம் மாட்டோம் - யாம் வல்லேமல்லோம், நீயேவந்து - நீயேவந்திருந்து, எண்ணி - தொகைசெய்து, குறையில் - குறைந்தால், துயில் - கண்ணுறங்கு, எ - று.

(க - ரை.) இது பெலவிகரணி யென்னும் சத்தியின் திருவாக்காய் காளியென்னும் சத்தியை-யுணர்த்துகின்றது.

(வி - ரை.) இன்னம் புலர்ந்தின்றோ என்பது பெலவிகரணி யென்னுஞ் சத்தியின் திருவாக்கு. எல்லாரும் வந்தாரோ என்பது காளியென்னுஞ் சத்தியின் திருவாக்கு. எண்ணிக்கொடு என்பது முதல்குறையிற்றுயில் என்னுமளவும் பெலவிகரணியென்னுஞ் சத்தியின் திருவாக்கு. புலர்தல் - விடிதல். வண்ணம் - நிறமெனினுமாம். குறையிற்றுயில் என்றமையால் குறையாமையால் நீ எழுந்திருப்பாயாக என்றதாயிற்று. (௪)

மாலறியாநான்முகனுங்காணாமலையினைநாம்
போலறிவோமென்றுள்ளபொக்கங்களேபேசும்
பாலூறுதேன்வாய்ப்படிறீகடைதிறவாய்
ஞாலமேவிண்ணேபிறவேயறிவரியான்
கோலமுநம்மையாட்கொண்டருளிக்கோதாட்டுஞ்
சீலமும்பாடிச்சிவனேசிவனேயென்
றோலமிடினுமுணராயுணராய்கா
ணேலக்குழலிபரிசேலோரெம்பாவாய்.

(ப - ரை.) மால் அறியாநான்முகனும் காணாமலையினை - திருமாலும் நான்முகனும் காணவொண்ணாத மலையினை, நாம் அறிவோம்

என்று - யாம் அறிவோ மென்று, உள்ள போக்கங்களே பேசும் - உள்ள பொய்களையே பேசுகிற, பால் ஊறு - பால் சுரக்கிற, தேன் வாய் - தேன்போலும் வாயினையுடைய, படிறீ - வஞ்சகியே, கடை திறவாய் - கதவைத்திறவாய், ஞாலமே - பூமியும், விண்ணே - ஆகாயமும், பிறவே - மற்றுள்ளனவும், அறிவு அரியான் - அறிதற் கருமையானவனது, கோலமும் - திருக்கோலத்தையும், நம்மை - எம்மை, ஆட்கொண்டருளி - அடிமைகொண்டருளி, கோதாட்டும் - சீராட்டுகின்ற, சிலமும் - பெருங்குணத்தையும், பாடி - புகழ்ந்து பாடி, சிவனே சிவனே என்று - சிவனே சிவனே யென்று, ஓலமிடினும் - முறையிட்டாலும், உணராய் உணராய் - தெளியாய் தெளியாய், ஏலம் - மயிர்ச்சாந்தணிந்த, குழலி - கூந்தலை யுடையாய், பரிசு - உன் தன்மை யிருந்தவா றிதுவோ, எ - று.

(க - ரை.) இதுகாளியென்னுஞ் சத்தியின் திருவாக்காய் இராவுத்திரி யென்னுஞ் சத்தியை யுணர்த்துகின்றது.

(வி - ரை.) மாலறியாமலை - நான்முகனும் காணுமலை என இயைக்க. இது பிரமன் மாலறியாப் பெற்றித்தாய நெருப்புப் பொருப்பாய் நிமிர்ந்த வரலாற்றைக் குறித்தது. படிறு - வஞ்சனை. கோலமும் சிலமும் பாடி என்றியைக்க. (ரு)

மானேநீநென்னலைநாளைவந்துங்களை
நானேயெழுப்புவனென்றலுநாணுமே
போனதிசைபகராயின்னம்புலர்ந்தின்றோ
வானேநிலனேபிறவேயறிவரியான்
றானேவந்தெம்மைத்தலையளித்தாட்கொண்டருளும்
வான்வார்கழல்பாடிவந்தோர்க்குன்வாய்திறவா
யூனேயுருகாயுனக்கேயுறுமெமக்கு
மேனோர்க்குந்தங்கோனைப்பாடேலோரெம்பாவாய்.

(ப - ரை.) மானே - பெண்ணே, நீ - நீ, நென்னல்வந்து - நேற்றுவந்து, நாளை உங்களை நானே எழுப்புவன் - நாளை உங்களை நானே துயிலுணர்த்துவேன், என்றலும் - என்றவுடன், நாணுமே - நாணமல், போனதிசை பகராய் - போன திசையைச் சொல்லாய், இன்னம் புலர்ந்தின்றோ - இன்னமும் விடிந்ததில்லையோ, வானே -

ஆகாயமும், நிலனே - பூமியும், பிறவே - மற்றுள்ளனவும், அறிவு அரியான் - அறிதற்கருமையானவன், தானேவந்து - தானே வலிய வந்து, எம்மை - எங்களை, தலையளித்து - கிருபை செய்து, ஆட்கொண்டருளும் - அடிமைகொண்டருள்கின்ற, வான் - மேன்மையுள்ள, வார்கழல் - நீண்டவீரக்கழலை யணிந்த திருவடியை, பாடி - புகழ்ந்துபாடி, வந்தோர்க்கு - வந்தவர்க்கு, உன்வாய் திறவாய் - உன்வாய் திறவாதிருக்கிறாய், ஊன் உருகாய் - உடலுருகாதிருக்கிறாய், உனக்கே உறும் - (இது) உனக்கே தகும், எமக்கும் ஏனோர்க்கும் தங்கோனை - எமக்கும் மற்றையோர்க்கும் தலைவனாயிருப்பவனை, பாடு - பாடுவாயாக, எ - று.

(க - ரை.) இது இரவுத்திரியென்னுஞ் சத்தியின் திருவாக்காய் சேட்டையென்னுஞ் சத்தியை யுணர்த்துகின்றது.

(வி - ரை.) மானே என்றது மானினது நோக்கம்போலும் நோக்கத்தை யுடையாளே என்றபடி. நென்னல் - முன்னைநாள். இது நென்னலையென ஐகாரச்சாரியை பெற்று நின்றது. உனக்கே உறும் என்றமையால் எமக்குத்தகாது என்றதாயிற்று. (௬)

அன்னேயிவையுஞ்சிலவோபலவமர
ருன்னற்கரியானொருவனிருஞ்சீரான்
சின்னங்கள்கேட்பச்சிவனென்றேவாய்திறப்பாய்
தென்னாவென்னாமுன்னந்தீசேர்மெழுகொப்பா
யென்னானையென்னரையனின்னமுதென்றெல்லாமுஞ்
சொன்னோங்கேள்வெவ்வேறாயின்னந்துயிலுதியோ
வன்னெஞ்சப்பேதையர்போல்வாளாகிடத்தியா
லென்னேதுயிலின்பரிசேலோரெம்பாவாய்.

(ப - ரை.) அன்னே - தாயே, இவையும் சிலவோ - இவையும் சிலவாமோ, பல அமரர் - அநேக தேவர்கள், உன்னற்கு அரியான் - நினைத்தற்கும் அரியவன், ஒருவன் - ஒப்பற்றவன், இருசீரான் - பெருஞ் சிறப்புடைமைத்தவன், (அவனது) சின்னங்கள் கேட்ப - திருச்சின்னங்கள் கேட்க, சிவனென்றே வாய்திறப்பாய் - சிவபிரானே யென்று வாய்திறப்பாய், தென்னா என்னா முன்னம் - தென்னனே என்னா முன்னே, தீசேர் மெழுகு ஒப்பாய் - நெருப்

பைச்சேர்ந்த மெழுகுபோல்வாய், என் ஆனை - என் யானை, என் அரையன் - என் அரசன், இன் அமுது - இனிய அமிர்தம், என்று - என்று, எல்லோமும் - யாம் எல்லோமும், வெவ்வேறாய் சொன்னோம் - தனித்தனியே சொல்லினோம், கேள் - கேட்பாயாக, இன்னம் துயிலுதியோ - (கேட்டு) இன்னமும் உறங்குகின்றனையோ, வல்நெஞ்சம் - வலிய மனத்தையுடைய, பேதையர்போல் - அறிவில்லாதார்போல், வாளாகிடத்தி - சும்மாகிடக்கின்றனை, ஆல் - ஆச்சரியம், துயிலின் பரிசு என்னே - தூக்கத்தின் தன்மை இருந்தபடியாதோ, எ - று.

(க - ரை.) இது சேட்டையென்னுஞ் சத்தியின் திருவாக்காய் வாமையென்னுஞ் சத்தியை யுணர்த்துகின்றது.

(வி - ரை.) உன்னற்கு என்பதனீற்றில் இறந்தது தழீஇய எச்சவும்மை தொகுத்தல். சின்னங்கள் கேட்பச் சிவனென்று வாய் திறத்தலும், தென்னா வென்னா முன்னம் தீசேர் மெழுகொத்தலும் ஆகிய குணங்களை உடைய உனக்கு யாமெல்லாரும் என்னானை என்னரையன் இன்னமுது என்று தனித்தனி சொல்லக்கேட்டும் கண்ணுறங்குதல் தகாதென்றதாயிற்று. (எ)

கோழிசிலம்பச்சிலம்புங்குருகெங்கு
மேழிலியம்பவியம்பும்வெண்சங்கெங்குங்
கேழில்பரஞ்சோதிகேழில்பரங்கருணை
கேழில்விழுப்பொருள்கள்பாடினோம்கேட்டிலையோ
வாழியீதென்னவுறக்கமோவாய்திறவா
யாழியானன்புடைமையாமாறுமிவ்வாறோ
வூழிமுதல்வனாய்நின்றவொருவனை
யேழைபங்காளனையேபாடேலோரெம்பாவாய்.

(ப - ரை.) கோழி சிலம்ப - சேவல்கள்கூவ, சிலம்பும் - சத்திக்கிற, குருகு - பறவைகள், எங்கும் - எவ்விடத்தும், ஏழில் - ஏழிசைபோல, இயம்ப - சத்திக்க, வெள்சங்கு - வெள்ளியசங்கங்கள், எங்கும் - எவ்விடத்தும், இயம்பும் - சத்திக்கும், கேழ்இல் - ஒப்பில்லாத, பரஞ்சோதி - பேரொளியாகிய சிவபெருமானது, கேழ் இல் பரங்கருணை - ஒப்பற்றபெருங்கருணையாகிய, கேழ் இல் விழுப்பொரு

ங்கள் - உவமையில்லாதமேலான பொருள்களைக்குறித்து, பாடினோம்- பாடுதல்செய்தோம், கேட்டிலையோ - நீ கேட்டாயில்லையோ, வாழி- நீ வாழ்வாயாக, ஈது என்ன உறக்கமோ - இது என்ன தூக்கமோ, வாய் திறவாய் - வாய்திறக்கின்றிலை, ஆழியான் - சக்கரத்தையுடைய திருமாலினது, அன்புடைமை ஆமாறும் - அன்புடைத்தாதலும், இவ்வாறோ - இப்படிதானோ, ஊழிமுதல்வனாய்நின்ற ஒருவனை - பிரபஞ்சத்துக்குத் தலைவனாய்நின்ற ஒப்பற்றவனை, ஏழைபங்காளனை - ஏழைகள் பங்கிலிருப்பவனை, பாடு - பாடுவாயாக, எ - று,

(க - ரை.) இது வாமையென்னும் சத்தியின் திருவாக்காய்ச் சுத்தமாயையைப் பிரேரிக்கிற அனந்த தேவரை ஆசரித்து அப்பால் பிரகிருதியில் விகுர்தியான ஆன்மதத்துவம் நடத்தற்பொருட்டு விட்டுணுவினிடத்தில் அதிட்டிக்கிற சிவசத்தியைநோக்கி "ஆழியானன் புடைமையாமாறு மிவ்வாறோ" என்று பிரேரித்ததாகக் கருதியது. ஆக இப்படிநவசத்திகள்கூடி விசுவகாரியம் பண்ணுகிறதே பாட்டாகப்பாடியபடி.

(வி - ரை) கோழியென்னும் பொதுப்பெயர் இவ்விடத்து சேவலையுணர்த்திற்று. ஏழில் என்பதில் இல் ஒப்புப்பொருட்டாகிய ஐந்தனுருபு. ஊழி - பிரபஞ்சம்.　　(அ)

முன்னைப்பழம்பொருட்குமுன்னைப்பழம்பொருளே
　　பின்னைப்புதுமைக்கும்பேர்த்துமப்பெற்றியனே
யுன்னைப்பிரானாகப்பெற்றவுன்சீரடியோ
　　முன்னடியார்தாள்பணிவோமாங்கவர்க்கேபாங்காவோ
மன்னவரேயெங்கணவராவாரவருகந்து
　　சொன்னபரிசேதொழும்பாய்ப்பணிசெய்வோ
மின்னவகையேயெமக்கெங்கோனல்குதியே
　　லென்னகுறையுமிலோமேலோரெம்பாவாய்.

(ப - ரை.) முன்னை பழம்பொருட்கும் - அநாதியா யுள்ளவர்களுக்கும், முன்னைப் பழம்பொருளே - அநாதியாயிருக்கும் பொருளே, பின்னை புதுமைக்கும் - பின்புள்ள அநுபவிகளுக்கும், பேர்த்தும் அப்பெற்றியனே - மீட்டும் அத்தன்மையை யுடையவனே, உன்னை பிரானாகப்பெற்ற - உன்னைத் தலைவனாகப் பெற்ற, உன்சீர் அடியோம் - உன் சிறப்புள்ள அடியோம், உன் அடியார்

தான் பணிவோம் - உன் தொண்டர் திருவடிகளை வணங்குவோம், அவர்க்கே பாங்கு ஆவோம் - அவர்களுக்கே உரியராவோம், அன்னவரே எம் கணவராவார் - அவர்களே எமக்கு கொழுநராவார், அவர் உகந்துசொன்னபரிசே - அவர் விரும்பிச்சொன்ன வண்ணமே, தொழும்பு ஆய் பணிசெய்வோம் - தொண்டராகி ஏவல் செய்வோம், எங்கோன் - எம்மிறைவனே, எமக்கு - எங்களுக்கு, இன்னவகை நல்குதியேல் - இவ்விதமாகக் கிருபைசெய்வையாயின், என்னகுறையுமிலோம் - யாதொருகுறைபாடும் உடையோமல்லோம், எ - று.

(க - ரை.) இது அநாதியா யுள்ளவர்களுக்கெல்லாம் அநாதியாயுள்ளவனுமாய், அனுபவிப்பவர்களுக்கு மேன்மேலும் புதுமைகொடுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்போனுமா யிருக்கிற உன்னடியார் அடிபணிதலும், அவர்களை ஆசரித்தலும், அவர்களே பர்த்தாவாக அங்கீகரித்தலும், அவரேவற்பணிசெய்தலும், யாங்களுரிமையா யிந்த முறைமை ஒழியாவண்ணம் பிரசாதித்தருளில் ஒரு குறைபாடுமிலோமென்று நவசத்திகளுந் தம்மிற்சொல்லியது. உன்னடியார் என்றது விஞ்ஞானகலரில் மலபக்குவராய் அணுசதாசிவரென்னும் பேர்பெற்றிருப்பார் ஒருவகையும், அதிகாரமலத்துடனே கூடிய அனந்தாதி யட்டவித்தியேசுரரென்னும் பேர்பெற்றிருப்பார் ஒருவகையும், ஆணவமலசகிதராய்ச் சத்தகோடி மகாமந்திரேசுரரென்று பேர்பெற்றிருப்பார் ஒருவகையும் ஆக விஞ்ஞானகலர் மூன்றுவகையும். இனி நிரைநிரையாக அணு சதாசிவர் தாள்பணிவோம், அட்டவித்தியேசுரர்க்கும் பாங்காவோம், சத்தகோடி மகாமந்திரேசுரரெங்களுக்குப் பர்த்தாக்களாவார்கள். "சொன்னபரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்," என்பது அவர்களேவலால் அசுத்தமாயையைப் பிரேரியா நிற்போம், எ - று.

(வி - ரை.) பெற்றி - தன்மை. உன்னடியார் தாள்பணிதல் முதலியவற்றை எமக்குக் கிருபைசெய்வையாயின் எமக்கு யாதொரு குறைவுமில்லை என்றமையால் கிருபைசெய்யாயாயின் குறைவுடையோம் என்றதாயிற்று. (க)

பாதாளமேழினுங்கீழ்சொற்கழிவுபாதமலர்
போதார்புனைமுடியுமெல்லாப்பொருண்முடிவே
பேதையொருபாற்றிருமேனியொன்றல்லன்
வேதமுதல்விண்ணோருமண்ணுந்துதித்தாலு

மோதவுலவாவொருதோழன்றொண்டருளன்
கோதில்குலத்தரன்றன்கோயிற்பிணாப்பிள்ளைகா
ளேதவனூரேதவன்பேராருற்றாராரயலா
ரேதவனைப்பாடும்பரிசேலோரெம்பாவாய்.

(ப - ரை.) பாதமலர் - திருவடித்தாமரைமலர், பாதாளம் ஏழினுங்கீழ் - பாதலம் எழினுக்கும் கீழாய், சொல்கழிவு - சொல்லுக்கு அளவுபடாததாய் இருக்கும், போது ஆர் புனைமுடியும் - மலரார்ந்த அலங்கரிக்கப்பட்ட திருமுடியும், எல்லாப்பொருள் முடிவு - மேலான பொருள்கள் எல்லாவற்றிற்கும் மேலாய முடிவிடமாயிருக்கும், திருமேனியொருபால்பேதை - திருமேனியின் ஒருபக்கத்தில் உமாதேவி வீற்றிருப்பள், ஒன்று அல்லன் - தானே ஒருவடிவா யிருப்பவனுமல்லன், வேதமுதல் - வேதமுதலாக, விண்ணோரும் மண்ணும் - விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும், துதித்தாலும் - தோத்திரஞ்செய்தாலும், ஓத உலவா - சொல்லமுடியாத, ஒரு தோழன் - ஒப்பற்ற நண்பன், தொண்டர் உளன் - அடியவர் உள்ளத்திலிருப்பவன், கோது இல்குலத்து - குற்றமில்லாத மேன்மையினையுடைய, அரன்தன் - சிவபெருமானது, கோயில் - ஆலயத்திலுள்ள, பிணாப்பிள்ளைகாள் - பெண்பிள்ளைகாள், அவன் ஊர் எது - அவன் திருப்பதி யாது, அவன் பேர் எது - அவன் திருநாமம் யாது, உற்றார் ஆர் - அவனுக்கு உறவினர் யாவர், அயலார் ஆர் - அவனுக்கு அன்னியர் யாவர், அவனைப் பாடும் பரிசு எது - அவனைப் பாடும்விதம் யாது எ - று.

(க - ரை.) "பாதாளமேழினுங் கீழ்சொற்கழிவுபாதமலர்" என்பது, எண்பது நூறாயிரம் யோசனையான பூமியின் கனத்துக்கும் சிவஞானமன்றியே தவசுபண்ணுகிறவர்கள் சென்றிருக்கும் இடமாகிய கனிட்ட பாதாளத்துக்கும் அதின் கீழே உண்டாகிய அசுரகண்டம், சர்ப்பகண்டம், இராக்கதகண்டம் இப்படி ஒவ்வொன்று மும்மூன்று கண்டமாய் ஆடகேசுரர்க்குப் புவனமுமாயிருக்கிற எழுபாதாளத்துக்கும், அதின்கீழாகரவுரவம் கும்பீபாகம் அவிசிகம் என்று சொல்லப்பட்ட மயிராசநரக மூன்றும் இவையுட்படப் பதின்மூன்று நரகம் ஒரு அடுக்காகவும், பத்து நரகம் ஒரு அடுக்காகவும், ஒன்பது நரகம் ஒரு அடுக்காகவும், ஆக முப்பத்திரண்டு நரகமும் இவர்களைச் சூழ்ந்து சேவித்திருக்கிற நூற்றெட்டு நரகமுமாக நூற்றுநாற்பது நரகமும்

கூர்மாண்ட தேவரென்னும் உருத்திரர்க்குப் புவனமா யிருக்கப்பட்ட நரக புவனங்களுக்கும் கீழ்க்காலாக்கினி உருத்திரர்புவனம் பதினேழுகோடியோசனையாய் அண்டகடாகமுடைப்பட்ட புவனமாயிருக்கும், இப்படி சொல்லப்பட்ட பிரமாண்டமுதலாக அண்டங்களைத் தாக்கும் ஆதாரபூதமாய்ச் சிவசத்தியான ஆதாரசத்திக்கும் அப்பாற் சிவனுடைய பூரணத்துக்குள் எல்லைப்படுத்தி இன்னமட்டென்று சொல்லுதற்கு முடியாதாதலால் சொற்கழிவாயிருக்கப்பட்டது மலர் போன்ற சீபாதமாகையாலும்,

''போதார் புனைமுடியுமெல்லாப் பொருண்முடிவே'' என்பது, இனிப்பிருதிவி யண்டமுன் சொன்ன அண்டகடாகமுதல் ஐம்பது கோடி யோசனையுட்பட மேற்புவலோகமுதல் சிவலோகமளவாக ஏழுலோகமுமேல் அண்டகடாகமுட்பட ஐம்பதுகோடி யோசனையுமாகப் பிரமாண்டம் நூறுகோடியோசனை, அதற்குமேல் அதிற்பதின் மடங்கு அப்பு அண்டம், அதற்குமேல் அதிற்பதின் மடங்கு தேயு அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு வாயு அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு ஆகாச அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு மன அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு புத்தி அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு ஆங்கார அண்டம், அதற்குமேல் பதின்மடங்கு குண அண்டம், அதின்மேல் நூறுமடங்கு அராகவண்டம், அதின்மேல் நூறுமடங்கு வித்தை அண்டம், அதின்மேல் நூறுமடங்கு கலையண்டம், அதின்மேல் நூறுமடங்கு நியதி அண்டம், அதின்மேல் நூறுமடங்கு கால அண்டம், அதின்மேல் ஆயிரமடங்கு அசுத்தமாயை, அதின்மேல் பதினாயிர மடங்கு சுத்தமாயையிற் சுத்தவித்தை, அதற்குமேல் பதினாயிரமடங்கு மகேசுவரம், அதற்குமேல் சாதாக்கியம், அதற்குமேல் பரவிந்து, அதற்குமேல் பரநாதம், அப்பால் சிவனுடைய பூரணம் அளவு எல்லைப்படாதாதலால், எல்லாப் பொருளுக்கு முடிவுமாயிருப்பது திருமுடியாதலால், சிவபாதமுந் திருமுடியுமொருவர்க்கும் அளவுபடுத்த முடியாதாதலாலும்,

''பேதையொருபாற் றிருமேனியொன்றல்லன்'' என்பது, முன் சொல்லப்பட்ட லோகங்களிடத்தும் அதற்குமேலுங் கீழுஞ் சத்தி சிவான்மகபூரணமாக விருக்கையாலே ஒருவடிவாய் ஏகதேசியுமாயிரான் ஆதலாலும்; ''வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலு மோதவுலவாவொருதோழன் றொண்டருளன்'' என்பது, சதுர்வேதங்களும் பிரம விட்டுணுக்களாகிய தேவர்களும் பூமியிலுள்ளவர்

களும் அளவற்றதோத்திரம் பண்ணினாலும் அந்தத் தோத்திரத்தினு லின்னமட்டென்று அளவுபடுத்த முடியாமல் முன்சொன்ன தேவர் கள் திரட்சியாகிய வீட்டங்கள் தோன்றலுன் சாத்திரங்களைக் கிளறிக் கிளறிப் பலபடப்பண்ணியுந் தெரியாதவஸ்துவை, "கோதில்குலத்த ரன்றன்கோயிற் பிணாப்பிள்ளைகாள்" என்பது, உபாதிசூனியனாய் நிர்மலனாய் அரனென்னுந் திருநாமத்தையுடையவனுமா யிருக்கிற சிவனுக்கு ஆலயமான சுத்தமாயையிற் சுத்தவித்தையிலிருந்து தம் பிரானார் பணிவிடையாகப் பிரபஞ்சகாரியத்தைப் பண்ணுமவர் வாமைமுதலாகிய சிவசத்திகள்.

"ஏதவனூரேதவன்பே ராருற்றாரார்யலாரேதவனைப்பாடும் பரி சேலோரெம்பாவாய்" என்பது, இப்படியே யுணர்ந்தார்க்கும் உணர் வரியோனாகிய சிவபெருமானுக்கு ஊர் ஏது, பேர் ஏது, உறவார், அடு த்தோரார், இவைகளொன்று மில்லாமையாலிந்த முறைமையுடைய சிவபெருமானைப்பாடும்வண்ணம் எவ்வண்ணமோ தோழியென்றவாறு.

(வி - ரை.) வேதமுதல் - வேதமுதல்வன் எனினுமாம். உலத் தல் - கெடுதல். தொண்டருளன் - தொண்டரையுடையவன் எனி னுமாம். (கo)

மொய்யார்தடம்பொய்கைபுக்குமுகேரென்னக்
கையாற்குடைந்துகுடைந்துன்கழல்பாடி
யையாவழியடியோம்வாழ்ந்தோங்காணாரழல்போற்
செய்யாவெண்ணீறாடிசெல்வாசிறுமருங்குன்
மையார்தடங்கண்மடந்தைமணவாளா
வையாநீயாட்கொண்டருளும்விளையாட்டி
னுய்வார்களுய்யும்வகையெல்லாமுய்ந்தொழிந்தோ
மெய்யாமற்காப்பாயெமையேலோரெம்பாவாய்.

(ப - ரை.) மொய் ஆர் - வண்டுகள் நிறைந்த, தடம்பொய்கை புக்கு - பெரிய பொய்கையிற் புகுந்து, முகேர் என்ன - முகேரென் னும்படி, கையால் குடைந்து குடைந்து - கையால் நீரை முகந்து முகந்து, உன்கழல்பாடி - உன் திருவடியைப் புகழ்ந்துபாடி, ஐயா - ஐயனே, வழி அடியோம் - பரம்பரையாகிய அடியோம், வாழ்ந் தோம் - வாழ்ந்தனம், ஆர் அழல்போல் - நிறைந்த நெருப்புப்போல,

செய்யா - செந்நிற முடையானே, வெள் நீறு ஆடி - திருவெண்ணீற் றிற் குளிப்பவனே, செல்வா - ஈசனே, சிறுமருங்குல் - சிற்றிடையை யும், மைஆர் தடம்கண் - அஞ்சனம் பொருந்திய பெரிய கண்களையும் உடைய, மடந்தை - உமாதேவியார்க்கு, மணவாளா - நாயகனே, ஐயா - அழகனே, நீ ஆட்கொண்டருளும் - நீ யடிமைகொண்டருளு கின்ற, விளையாட்டின் - திருவிளையாட்டினால், உய்வார்கள் - உய் புவர்களாகிய அடியார், உய்யும்வகையெல்லாம் - உய்யும்விதமெல்லா வற்றாலும், உய்ந்தொழிந்தோம் - உய்ந்துவிட்டோம், எய்யாமல் - இளைக்காதபடி, எம்மை காப்பாய் - எங்களைக் காத்தருள்வாயாக எ - று.

(க - ரை.) கடவுளே, பெரிய பொய்கையில் மூழ்கி, உன், திருவடியைத் துதித்து உய்ந்தோம், எங்களைக் காத்தருளல்வேண்டு மென்பது.

(வி - ரை) ஐயா இரண்டனுள் முன்னையதில் ஐதலைமை, பின்னையதில் ஐ அழகு. மூகேர் - ஒலிக்குறிப்பு. செய்யா என்பதில் செம்மை பகுதி. மடந்தை - மடப்பத்தை யுடையவள். எய்த்தல் - இளைத்தல். (கக)

ஆர்த்தபிறவித்துயர்கெடநாமார்த்தாடுந்
தீர்த்தனற்றில்லைச்சிற்றம்பலத்தேதீயாடுங்
கூத்தனிவ்வானுங்குவலயமுமெல்லோமுங்
காத்தும்படைத்துங்கரந்தும்விளையாடி
வார்த்தையும்பேசிவளைசிலம்பவார்கலைக
ளார்ப்பரவஞ்செய்யவணிகுழன்மேல்வண்டார்ப்பப்
பூத்திகழும்பொய்கைகுடைந்துடையான்பொற்பாத
மேத்தியிருஞ்சுனைநீராடேலோரெம்பாவாய்.

(ப - ரை.) ஆர்த்த - நம்மைப் பிணித்த, பிறவித்துயர்கெட - பிறவித்துன்பம் அழியும்படி, நாம் ஆர்த்து ஆடும் - யாம் ஆரவாரித் தாடுகின்ற, தீர்த்தன் - பரிசுத்தன், நல் - அழகாகிய, தில்லைச்சிற் றம்பலத்தே - தில்லைச் சிற்றம்பலத்தில், தீ ஆடும் - அழலோடாடு கின்ற, கூத்தன் - கூத்தினையுடையவன், இ - இந்த, வானும் - விண்ணுலகத்தாரும், குவலயமும் - மண்ணுலகத்தாருமாகிய, எல்லோ மும் - நம்மெல்லாரையும், காத்தும் - காத்தருளியும், படைத்தும் -

(வி - ரை.) முழுமுதல், வித்து, மருந்து, வைப்பு, என்பன இறைவன் முதற்காரணனென்பதை விளக்க வெழுந்தன. (கக)

குலம்பாடிக்கொக்கிறகும்பாடிக்கோல்வளையா
ணலம்பாடிநஞ்சுண்டவாபாடிநாடோறு
மலம்பார்புனற்றில்லையம்பலத்தேயாடுகின்ற
சிலம்பாடல்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

(ப - ரை.) குலம்பாடி - மேன்மையைப்பாடி, கொக்கு இறகும்பாடி - கொக்கிறகையும்பாடி, கோல் வளையாள்-அழகியவளையையுடையவளாகிய இறைவியின், நலம் பாடி-நன்மையைப்பாடி, நஞ்சு உண்ட ஆறு பாடி-நஞ்சுண்டவிதத்தைப்பாடி, நாள்தோறும்-தினந்தோறும், அலம்பு ஆர் புனல் - ஒலித்தலையும் நிறைவையுமுடைய நீர் சூழ்ந்த, தில்லை அம்பலத்தே ஆடுகின்ற-தில்லையம்பலத்தின் கண்ணே நடிக்கின்ற, சிலம்பு ஆடல்பாடி - சிலம்பாடலைப்பாடி,நாம் தெள்ளேணம் கொட்டாமோ - யாம்தெள்ளேணம் அயர்துமோ, எ - று.

(க - ரை.) இறைவனது மேன்மை முதலானவற்றைப் பாடி நாம் தெள்ளேணம் அயர்துமோ என்பது.

(வி - ரை.) அலம்பு - முதனிலைத்தொழிற்பெயர். (உ0)

திருச்சிற்றம்பலம்.

---

# திருச்சாழல்.

சிவனுடையகாருணியம்.

நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பூசுவதும்வெண்ணீறுபூண்பதுவும்பொங்கரவம்
பேசுவதுந்திருவாயான்மறைபோலுங்காணேடீ
பூசுவதும்பேசுவதும்பூண்பதுவுங்கொண்டென்னை
யீசனவனெவ்வுயிர்க்குமியல்பானான்சாழலோ.

(ப - ரை.) பூசுவதும் வெண்ணீறு - பூசுவதும் திருவெண்ணீறு, பூண்பதுவும் - அணிவதும், பொங்கு அரவம் - சீறுகின்றபாம்பு, திரு வாயால் பேசுவதும் - திருவாயினால் பேசுவதும், மறை போலும் - வேதம்போலும், காணேடீ - பாரேடீ.

பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டு - பூசுவதையும்பேசுவதையும் பூண்பதையும் கொண்டதனால், என்னை - பயன் யாது, ஈசன் அவன் - ஈசனாகிய அவன், எவ்வுயிர்க்கும் - எவ்வகைப்பட்ட உயிர்களுக்கும், இயல்பு ஆனான் - இயல்பாகவே இதஞ்செய்பவனாயிருக்கிறான், சாழலோ. எ - று.

(வி - ரை.) சாழல் - மகளிர் விளையாட்டினொன்று. இது ஈழதேசத்தரசனது ஊமைப் புதல்வியைப் பேசுவித்தபோது சொல்லியது. காணேடீ என்பது புத்தன்வினா. சாழலோ என்பது ஊமைப் பெண்விடை. (க)

என்னப்பனெம்பிரானெல்லார்க்குந்தானீசன்
றுன்னம்பெய்கோவணமாக்கொள்ளுமதுவென்னேடீ
மன்னுகலைதுன்னுபொருண்மறைநான்கேவான்சரடாத்
தன்னையேகோவணமாச்சாத்தினன்காண்சாழலோ.

(ப - ரை.) என் அப்பன் - என் தந்தை, எம்பிரான் - எம்பிரான், எல்லார்க்கும் தான் ஈசன் - யாவருக்கும் தானே யீசனாயிருப்பவன், (அத்தன்மையன்) துன்னம்-தைத்ததுணியை, பெய் கோவணம் ஆ - அணியத்தக்க கோவணமாக, கொள்ளுமது - கொள்ளுகின்ற அத்தன்மை, என்னேடீ - யாதேடி,

மன்னு கலை - நிலைபெற்ற கலைகளும், துன்னு பொருள் - செறிந்த பலபொருளடங்கின, மறை நான்கு - நான்கு வேதங்களும், வான் சரடு ஆ - மேன்மை பொருந்திய சரடாக, தன்னையே - அதுதன்னையே, கோவணம் ஆ சாத்தினன் - கோவணமாகச் சாத்தியருளினன், சாழலோ. எ - று.

(வி - ரை.) துன்னம் - தைத்தல். (உ)

கோயில்சுடுகாடுகொல்புலித்தோனல்லாடை
தாயுமிலிதந்தையிலிதான்றனியன்காணேடீ
தாயுமிலிதந்தையிலிதான்றனியனாயிடினுங்
காயினுலகனைத்துங்கற்பொடிகாண்சாழலோ.

(ப - ரை.) கோயில் - (இறைவனுக்கு) கோயிலாயிருப்பது, சுடுகாடு - மயானம், நல் ஆடை - நல்ல ஆடையாயிருப்பது, கொல் புலிதோல் - கொல்லுகின்ற புலியினது தோல், தாயும் இலி தந்தை இலி - தாயும் தந்தையும் இல்லாதவன், தான் தனியன் - தான் தனிமையாயிருப்பவன், காணேடீ - பாரேடீ.

தாயும் தந்தையும் இலி - தாயுந்தந்தையு மில்லாதவனாய், தான் தனியன் ஆயிடினும் - தான் தனியனே யாயினும், காயின் - (அவன்) கோபித்தால், உலகு அனைத்தும் - எல்லாவுலகங்களும், கற்பொடி - கற்றூளாய்விடும், சாழலோ. எ - று.

(வி - ரை.) தாயும் என்றவும்மை தந்தை யென்பதனோடும் கூட்டப்பட்டது. (௩)

அயனையநங்கனையந்தகனைச்சந்திரனை
வயனங்கண்மாயாவடுச்செய்தான்காணேடீ
நயனங்கண்மூன்றுடையநாயகனேதண்டித்தாற்
சயமன்றோவானவர்க்குத்தாழ்குழலாய்சாழலோ.

(ப-ரை.) அயனை - பிரமனையும், அநங்கனை - மன்மதனையும், அந்தகனை - யமனையும், சந்திரனை - சந்திரனையும், வயனங்கள் மாயா - வகைகள் கெடாத, வடுச்செய்தான் - வடுவுண்டாக்கினான், காணேடீ.

நயனங்கள் மூன்று உடைய - மூன்றுகண்களை யுடைய, நாயகனே - தலைவனே, தண்டித்தால் - ஒறுத்தால், வானவர்க்கு - தேவர்களுக்கு, சயம் அன்றோ - வெற்றியல்லவோ, தாழ்குழலாய் சாழலோ. எ - று.

(வி - ரை.) வயனம் - வகை, வடு - தழும்பு. (௪)

தக்கனையுமெச்சனையுந்தலையறுத்துத்தேவர்கணந்
தொக்கனவந்தவர்தம்மைத்தொலைத்ததுதானென்னேடீ
தொக்கனவந்தவர்தம்மைத்தொலைத்தருளியருள்கொடுத்தங்
கெச்சனுக்குமிகைத்தலைமற்றருளினன்காண்சாழலோ.

(ப - ரை.) தக்கனையும் - தக்ஷனையும், எச்சனையும் - யாககர்த்தாவையும், தலை அறுத்து - தலை யரிந்து, தொக்கன - கூடின, தேவர்கணம் வந்தவர் தம்மை - தேவர் கூட்டங்களாய் வந்தவர்களை, தொலைத்தது-அழித்தது, என்னேடீ - யாதேடீ.

தொக்கன வந்தவர் தம்மை - கூடி வந்தவர்களை, தொலைத்து அருளி-அழித்தருளி, அருள்கொடுத்து-கிருபையைச்செய்து, அங்கு-அவ்விடத்தில், எச்சனுக்கு - யாககர்த்தாவுக்கு, மிகைத்தலை அருளினன் - மிகுதியாகிய தலையை அருள்செய்தான், சாழலோ. எ - று.

(வி - ரை.) தக்கன் - தக்ஷன் என்னும் வடமொழித்திரிபு. தொலைத்தல் - அழித்தல், மிகைத்தலை யென்றது ஆட்டின் தலையை.

அலரவனுமாலவனுமறியாமேயழலுருவாய்
நிலமுதற்கீழண்டமுறநின்றதுதானென்னேடீ
நிலமுதற்கீழண்டமுறநின்றிலனேலிருவருந்தஞ்
சலமுகத்தாலாங்காரந்தவிரார்காண்சாழலோ.

(ப - ரை.) அலரவனும் - பிரமனும், மாலவனும் - திருமாலும், அறியாமே - அறியாமல் திகைக்க, அழல் உரு ஆய்-நெருப்புருவாகி, கீழ் நிலமுதல் - கீழே நிலமுதலாக, அண்டம் உற - ஆகாயத்தைப் பொருந்தும்படி, நின்றது என்னேடி - நின்றதற்குக்காரணம் என்னேடீ.

கீழ் நிலமுதல் - கீழே நிலமுதலாக, அண்டம் உற - ஆகாயத்தைத் தொடும்படி, நின்றிலனேல் - நின்றிலனாயின், இருவரும்-மேற்சொன்ன இருவரும், தம் சல முகத்தால் - தமது கோபமாகிய வாயிலால், ஆங்காரம் தவிரார் - ஆங்காரத்தைவிடார், சாழலோ. எ-று.

(வி - ரை.) அலர் - மலர். அலரவன் - தாமரை மலரை யிடமாக வுடையவன். சலம் - கோவம். முகம் - வாயில் (காரணம்.)(௯)

மலைமகளையொருபாகம்வைத்தலுமேமற்றொருத்தி
சலமுகத்தாலவன்சடையிற்பாயுமதுவென்னேடீ
சலமுகத்தாலவன்சடையிற்பாய்ந்திலனேற்றரணியெல்லாம்
பிலமுகத்தேபுகப்பாய்ந்துபெருங்கேடாஞ்சாழலோ.

(ப - ரை.) மலைமகளை - பார்வதியை, ஒருபாகம் வைத்தலும் - ஒருபங்கில் அமைத்தலும், மற்றொருத்தி-மற்றொருத்தியாகியகங்கை, சலமுகத்தால் - நீருருவத்தோடு, அவன் சடையில் - அவன் சடாபாரத்தில், பாயுமது - பாய்வது, என்னேடீ - யாதுகாரணம்.

சல முகத்தால் - நீருருவத்தோடு, அவன் சடையில் பாய்ந்திலளேல் - அவன் சடாபாரத்தில் பாய்ந்திலளாயின், தரணியெல்லாம் - பூமியெல்லாம், பிலமுகத்தே புகப்பாய்ந்து - பாதாளத்தினிடத்தில் புகும்படி பாய்ந்து, பெருங்கேடு ஆம் - பெரியகெடுதி யுண்டாகும், சாழலோ. எ - று.

(வி - ரை.) சலம் - நீர். முகம் - இங்கு உருவுக்காயிற்று. அவன் சடையிற்பாயும் என்ற குறிப்பால் மற்றொருத்தி யென்றது கங்கையைக்குறித்தது. பிலம் - பாதாளம். (எ)

கோலாலமாகிக்குரைகடல்வாயன்றெழுந்த
வாலாலமுண்டானவன்சதுர்தானென்னேடீ
யாலாலமுண்டிலனேலன்றயன்மாலுள்ளிட்ட
மேலாயதேவரெல்லாம்வீடுவர்காண்சாழலோ.

(ப - ரை.) கோலாலம் ஆகி - கோலாகலம் ஆகி, குரைகடல் வாய் - ஒலிக்கின்ற கடலினிடத்தில், அன்று எழுந்த - அந்நாளி லுண்டாகிய, ஆலாலம் - ஆலாகலவிஷத்தை, உண்டான் - உண்டருளினன், அவன் சதுர் - அவனது சதுரப்பாடு, என்னேடீ-யாதேடி.

ஆலாலம் உண்டிலனேல் - ஆலாகலவிஷத்தை யுண்டிலனாயின், அன்று-அந்நாளில், அயன் மால் உள்ளிட்ட - பிரம விட்டுணுக்களை யுள்ளிட்ட, மேலாய தேவர் எல்லாம் - மேன்மையாகிய தேவர்கள் யாவரும், வீடுவர் - மடிவார்கள், சாழலோ, எ - று.

(வி - ரை.) கோலாகலம் - கோலாலம் எனத் தொகுத்தது. இதற்குப் பேரொலியென்பது பொருள். குளைத்தல் - ஒலித்தல். ஆலாகலம் ஆலாலம் எனத் தொகுத்தது. வீடுதல் - மடிதல். (அ)

தென்பாலுகந்தாடுந்தில்லைச்சிற்றம்பலவன்
பெண்பாலுகந்தான்பெரும்பித்தன்காணேடீ
பெண்பாலுகந்திலனேற்பேதாயிருநிலத்தோர்
விண்பாலியோகெய்திவீடுவர்காண்சாழலோ.

(ப - ரை.) தென்பால் - தென்றிசையில், உகந்து - விரும்பி, ஆடும் - நடனம் பண்ணுகிற, தில்லைச் சிற்றம்பலவன் - தில்லைச் சிற்றம்பலத்தான், பெண்பால் உகந்தான் - பெண்பாகத்தை விரும்பினான், பெரும்பித்தன் - இவன் பெரும்பித்தனவன், காணேடீ - பாரேடி.

பெண்பால் உகந்திலனேல் - பெண்பாகத்தை விரும்பிலனாயின், இரு நிலத்தோர் - இரு நிலத்தோர்கள், பேது ஆய் - பேதமை யுடையராகி, இயோகு எய்தி - யோகத்தை யடைந்து, விண்பால் வீடுவர் - மேலுலகத்தை யடையப்பெறுவர், சாழலோ. எ - று.

(வி - ரை.) பால்-இடம். இது திசைக்காயிற்று. பேதாய் என்பதை விளியாக்கி அறிவிலானேயெனப் பொருளுரைப்பினுமாம். ()

தானந்தமில்லான்றனையடைந்தநாயேனை
யானந்தவெள்ளத்தழுத்துவித்தான்காணேடீ
யானந்தவெள்ளத்தழுத்துவித்ததிருவடிகள்
வானுந்துதேவர்கட்கோர்வான்பொருள்காண்சாழலோ.

(ப - ரை.) தான் அந்தம் இல்லான்-தான் முடிவில்லாதவன், தன்னை அடைந்த நாயேனை - தன்னையடைந்த நாயினேனை, ஆனந்த வெள்ளத்து - இன்பக்கடலில், அழுந்துவித்தான் - அழுந்தச்செய்தான், காணேடீ.

ஆனந்த வெள்ளத்து - இன்பக்கடலில், அழுந்துவித்த திருவடிகள் - அழுந்தச்செய்த திருவடிகள், வான் உந்து தேவர்கட்கு - விண்ணுலகத்தில் வாழ்கின்ற தேவர்களுக்கு, ஓர் வான்பொருள் - ஒரு மேலான பொருளாகும், சாழலோ. எ - று.

(வி - ரை.) வெள்ளம் - நீர்ப்பெருக்கு. அது இங்குகடலுக் காயிற்று. (௧௦)

நங்காயிதென்னதவநரம்போடெலும்பணிந்து
கங்காளந்தோண்மேலேகாதலித்தான்காணேடீ
கங்காளமாமாகேள்காலாந்தரத்திருவர்
தங்காலஞ்செய்யத்தரித்தனன்காண்சாழலோ.

(ப - ரை.) நங்காய் - பெண்ணே, நரம்போடு எலும்பு அணிந்து - நரம்போடு எலும்பையுந் தரித்து, தோள்மேலே - புயத்தின் மேலே, கங்காளம் - கங்காளத்தை, காதலித்தான் - விரும்பினான், இது என்னதவம் - இது என்னதவமோ, காணேடி.

கங்காளம் ஆம் ஆறு கேள் - கங்காளம் வந்தவிதத்தைக்கேள், காலாந்தரத்து - காலபேதத்தால், இருவர் - இருவரும், தம் காலம் செய்ய - தமது காலத்தை முற்றுவிக்க, தரித்தனன் - அணிந்தான், சாழலோ, எ - று.

(வி - ரை.) நங்கை யென்னும் உயர்திணைப் பெண்பாற் பெயர் ஈறு திரிந்து விளியாயிற்று. கங்காளம்-தசையொழிந்த உடலின் முழுவெலும்பு. இருவர் என்றது பிரம விட்டுணுக்களை. (௧௧)

கானார்புலித்தோலுடைதலையூண்காடுபதி
யானாலவனுக்கிங்காட்படுவாராரேடீ
யானாலுங்கேளாயயனுந்திருமாலும்
வானாடர்கோவும்வழியடியர்சாழலோ.

(ப-ரை.) கான் ஆர்-காட்டில் வாழ்கின்ற, புலி தோல் உடை-புலித்தோலே ஆடையும், தலை ஊண் - தலையோடே உண்கலமும், காடு பதி-மயானமே இடமும், ஆனால் - ஆயின், அவனுக்கு - அத்தன்மையனுக்கு, இங்கு - இவ்விடத்தில், ஆட்படுவார் ஆர்-அடிமைப் படுவோர்யாவர்,

ஆனாலும் கேளாய் - ஆனாலுங்கேட்பாயாக, அயனும் - பிரமனும், திருமாலும் - விட்டுணுவும், வான்நாடர் கோவும் - விண்ணாட்டா

ர்க்கு அரசனுகிய இந்திரனும், வழி அடியார்-வழித்தொண்டர் ஆவர், சாழலோ, எ - று.

(வி - ரை.) கான் - காடு. உடை - ஆடை. ஊண் - உணவு. அது இங்கு உண்கலத்துக்காயிற்று. பதி - இடம். இடுகாடு சுடுகாடு என்னுமிரண்டு மடங்கக்காடு என்றார். (கஉ)

மலையரையன்பொற்பாவைவாணுதலாள்பெண்டிருவை
யுலகறியத்தீவேட்டானென்னுமதுவென்னேடீ
யுலகறியத்தீவேளாதொழிந்தனனேலுலகனைத்துங்
கலைநவின்றபொருள்களெல்லாங்கலங்கிடுங்காண்சாழலோ.

(ப - ரை.) மலை அரையன் - மலையரசனது, பொற்பாவை - பொற்பாவைபோல் வாரும், வாணுதலாள் - ஒளிபொருந்திய நெற்றியையுடையவளும் ஆகிய, பெண்திருவை - பெண்ணிற் சிறந்தவளாகிய உமாதேவியை, உலகு அறிய - உலக முணரும்படி, தீவேட்டான் என்னுமது - தீ முன்னர் வேட்டனன் என்பது, என்னேடீ - யாதேடி.

உலகு அறிய-உலகமுணரும்படி, தீ வேளாது ஒழிந்தனன் எல்-தீமுன்னர் வேளாதொழிந்தனனாயின், உலகு அனைத்தும் - உலக முழுதும், கலைநவின்ற பொருள்கள் எல்லாம்-சாத்திரஞ்சொன்ன அர்த்தங்களெல்லாம், கலங்கிடும் - கலங்கிப்போம், சாழலோ, எ - று.

(வி - ரை.) அரையன் - அரசன். திரு - இங்குச் சிறந்தவளென்னும் பொருளது, வேட்டல் - மணஞ்செய்தல். பகுதிவேள். (கங)

தேன்புக்கதண்பணைசூழ்தில்லைச்சிற்றம்பலவன்
றான்புக்குநட்டம்பயிலுமதுவென்னேடீ
தான்புக்குநட்டம்பயின்றிலனேற்றரணியெல்லா
மூன்புக்கவேற்காளிக்கூட்டாங்காண்சாழலோ.

(ப - ரை.) தேன் புக்க-தேன்பாய்கிற, தண் பணை சூழ்-குளிர்ச்சியாகிய வயல்கள் சூழ்ந்த, தில்லைசிற்றம்பலவன் - தில்லைச்சிற்றம்பலத்தான், தான்புக்கு - தான்புகுந்து, நட்டம் பயிலுமது - நடனஞ்செய்வது, என்னேடீ-யாதேடி.

தான்புக்குநட்டம்பயின்றிலனேல் - தான் புகுந்து நடனஞ்செய்யாராயின், தரணியெல்லாம் - பூமிமுழுதும், ஊன்புக்கவேல் காளிக்கு - ஊன்பொருந்திய வேற்படையையுடைய காளிக்கு, ஊட்டு ஆம் - உண்பொருளாகும், சாழலோ, எ - று.

(வி - ரை.) புகுதல் - இங்கு பாய்தல் என்னும் பொருளது. நடம் என்பது நட்டம் எனவிரித்தல் பெற்றது. ஊன் - தசை. (௧௪)

கடகரியும்பரிமாவுந்தேருமுகந்தேறாதே
யிடபமுகந்தேறியவாறெனக்கறியவியம்பேடீ
தடமதில்களவைமூன்றுந்தழலெரித்தவந்நாளி
லிடபமதாய்த்தாங்கினான்றிருமால்காண்சாழலோ.

(ப - ரை.) கடம்கரியும்-மதயானையையும், பரி மாவும் - குதிரையையும், உவந்து - விரும்பி, ஏறாதே - அவற்றின்மே லேறாமல், இடபம் - இடபத்தை, உவந்து ஏறிய ஆறு - விரும்பி யேறினவிதத்தை, அறிய - அறியும்படி, எனக்கு இயம்பேடீ - எனக்குச் சொல்லேடீ.

தடம் மதில்கள் - பெரிய மதில்களாகிய, அவை மூன்றும் - அவை மூன்றனையும், தழல் எரித்த அந்நாளில் - நெருப்பினால் நீறாக்கின அந்நாளில், திருமால்-திருமாலானவன்,இடபம் அது ஆய்-இடபமாகி, தாங்கினான் - சுமந்தான், சாழலோ, எ - று.

(வி - ரை.) கடம் - மதம். கரி - யானை. பரிமா இருபெயரொட்டு. (௧௫)

நன்றாகநால்வர்க்குநான்மறையினுட்பொருளை
யன்றாலின்கீழிருந்தங்கறமுரைத்தான் காணேடீ
யன்றாலின்கீழிருந்தங்கறமுரைத்தானாயிடினுங்
கொன்றான்காண்புரமூன்றுங்கூட்டோடேசாழலோ.

(ப - ரை.) நன்று ஆக-நன்மையுண்டாக, நால்வர்க்கும் - நால்வருக்கும், நால்மறையின் உட்பொருளை - நான்குவேதத்தின் அந்தரார்த்தத்தை, அன்று - அந்நாளில், ஆலின் கீழ் இருந்து - வடவிருக்ஷத்தின் அடியிலிருந்து, அங்கு - அவ்விடத்தில், அறம் உரைத்

தான் - பரமதர்மமாகிய முத்திநெறியாகச் சொல்லி யருளினான், காணேடீ.

அன்று ஆலின்கீழிருந்து-அந்நாளில் ஆல மரத்தின் கீழிருந்து அங்கு அறம் உரைத்தான் ஆயிடினும் - அவ்விடத்தில் தர்மோபதேசஞ்செய்தருளினானாயினும், புரம் மூன்றும் - முப்புரங்களையும், கூட்டோடே கொன்றான் - வேரோடழித்தான், சாழலோ, எ - று.

(வி - ரை.) நால்வர் - சநகாதியர். கூடு - வேர். கொல்லல் - அழித்தல். (கசு)

அம்பலத்தேகூத்தாடியமுதுசெயப்பலிதிரியு
நம்பனையுந்தேவனென்றுநண்ணுமதுவென்னேடீ
நம்பனையுமாமாகேணான்மறைகடாமறியா
வெம்பெருமானீசாவென்றேத்தினகாண்சாழலோ.

(ப - ரை.) அம்பலத்தே கூத்தாடி - அம்பலத்தில் கூத்தாடி, அமுதுசெய்ய - அமுதுசெய்தற்கு, பலிதிரியும் - பலிக்கு உழலாநின்ற, நம்பனையும் - சிவபெருமானையும், தேவன் என்று - தேவனென்று, நண்ணுமது - அவனையடைவது, என்னேடீ,

ஆம் ஆறுகேள் - ஆகும் விதத்தைக் கேட்பாயாக, நம்பனையும்- சிவபெருமானையும், நான்மறைகள் அறியா - நான்கு வேதங்களும் அறியாதனவாகி, எம்பெருமான் - எம்பெருமானே, ஈசா - ஈசனே, என்று ஏத்தின - என்று துதித்தன, சாழலோ, எ - று.

(வி - ரை.) அம்பலம் - பொது. அமுதுசெய்தல் - உண்ணுதல். பலி - பிச்சை. (கஎ)

சலமுடையசலந்தரன்றனுடறடிந்தநல்லாழி
நலமுடையநாரணற்கன்றருளியவாறென்னேடீ
நலமுடையநாரணன்றனயனமிடந்தரனடிக்கீ
ழலராகவிடவாழியருளினன்காண்சாழலோ.

(ப - ரை.) சலம் உடைய - கோபத்தையுடைய, சலந்தரன் - சலந்தரனுடைய, உடல் தடிந்த - உடம்பைச் சேதித்த, நல் ஆழி - நல்ல சக்கரப்படையை, நலம் உடைய நாரணற்கு - நன்மையை

யுடைய திருமாலுக்கு, அன்று அருளிய ஆறு - அந்நாளில் அருள்செய்தவிதம், என்னேடீ.

நலம் உடைய நாரணன் - நன்மையையுடைய நாரணன், தன் நயநம் இடந்து - தன் கண்ணைத்தோண்டி, அரன் அடி கீழ் - சிவபெருமானது திருவடியில், அலர் ஆக இட - மலராக இட, ஆழி - சக்கரப்படையை, அருளினன் - அருள்செய்தான், சாழலோ, எ-று.

(வி - ரை.) சலந்தரன் - ஓர் அசுரன். தடிதல் - வெட்டுதல். இடத்தல் - தோண்டுதல். (கஅ)

அம்பரமாம்புள்ளித்தோலாலாலமாரமுத
மெம்பெருமானுண்டசதுரெனக்கறியவியம்பேடீ
யெம்பெருமானேதுடுத்தங்கேதமுதுசெய்திடினுந்
தம்பெருமைதானறியாத்தன்மையன்காண்சாழலோ.

(ப - ரை.) புள்ளிதோல் - புள்ளித்தோலானது, அம்பரம்ஆம் - ஆடையாகும், ஆலாலம் - ஆலாகல விடத்தை, எம்பெருமான் - எம்பெருமானானவன், ஆர் அமுதம் உண்ட சதுர் - அரிய அமிர்தமாகவுண்ட சதுரப்பாட்டை, எனக்கு அறிய இயம்பேடீ - எனக்குத் தெரியச் சொல்லேடீ.

எம்பெருமான் - எம்பெருமானானவன், எது உடுத்து - எதனையுடுத்து, எது அமுதுசெய்திடினும் - எதனை அமுது செய்தாலும், தன் பெருமை தான் அறியா தன்மையன் - தன் பெருமையைத் தான் அறியாத தன்மையையுடையவன், சாழலோ, எ - று.

(வி - ரை.) புள்ளி - பொறி. புள்ளித்தோல் என்றது புலித்தோலை. மான்தோல் எனினுமாம். அமுதம் - இங்கு உணவுக்காயிற்று. (க௯)

அருந்தவருக்காலின்கீழறமுதலாநான்கனையு
மிருந்தவருக்கருளுமதுவெனக்கறியவியம்பேடீ
யருந்தவருக்கறமுரைத்தோன்கன்றருளிச்செய்திலனேற்
றிருந்தவருக்குலகியற்கைதெரியாகாண்சாழலோ.

(ப - ரை.) அருந்தவருக்கு - அருமையான தவத்தினையுடையராகிய சனகாதியர்பொருட்டு, ஆலின்கீழ் இருந்து - ஆலமரத்தடியில் இருந்து, அறம் முதல் ஆம் நான்கினையும் - தருமமுதலாகிய நாற்பொருள்களையும், அவருக்கு அருளுமது - அவர்களுக்கு அருளின அவ்வரலாற்றை, எனக்கு அறிய - எனக்குத் தெரியும்படி, இயம்பேடீ - சொல்லேடீ,

அருந்தவருக்கு - அரிய தவத்தினையுடையார்க்கு, அறம் முதல் நான்கு - தருமமுதலாகிய நாற்பொருள்களையும், அன்று அருளிச்செய்திலனேல் - அந்நாளில் அருளிச்செய்திலனாயின், திருந்து - திருந்திய, அவருக்கு - அந்தச் சநகாதியர்க்கு, உலகு இயற்கை - உலக வியற்கைகள், தெரியா - புலப்படமாட்டா, சாழலோ, எ-று.

(வி - ரை.) தவர் - தவத்தினையுடையவர். அறமுதலா நான்கு - அறம், பொருள், இன்பம், வீடு என்பன. உலகியற்கை - லோகாசாரம். (௨௦)

திருச்சிற்றம்பலம்.

# திருப்பூவல்லி.

## மாயாவிசயநீக்குதல்.

நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

இணையார்திருவடியென்றலைமேல்வைத்தலுமே
துணையானசுற்றங்களத்தனையுந்துறந்தொழிந்தே
னணையார்புனற்றில்லையம்பலத்தேயாடுகின்ற
புணையாளன்சீர்பாடிப்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) இணை ஆர் திருவடி - தனக்குத்தானே நிகராயிருக்கிற திருவடியை, என் தலைமேல் வைத்தலும் - என் சிரமீது வைத்தலும், துணை ஆன - உதவியாகிய, சுற்றங்கள் அத்தனையும் - உறவின

ரெல்லாரையும், துறந்து ஒழிந்தேன் - விட்டு நீங்கினேன், அணை ஆர்புனல் - அணைபொருந்திய நீர் சூழ்ந்த, தில்லை அம்பலத்தே ஆடுகின்ற - தில்லையம்பலத்தில் நடிக்கின்ற, புணையாளன் சீர்பாடி - (பிறவிக்கடலைக்) கடத்தற்கு மரக்கலம் போல்பவனது சிறப்பைப்பாடி, பூவல்லி கொய்யாமோ - அல்லிப்பூவைக் கொய்துமோ, எ - று.

(க - ரை.) சிவபெருமான் தன் திருவடிகளை யென் சிரமீது வைத்தலும் யான் பற்றற்றவனுனேன் ஆதலால் அவனது சிறப்பைப் பாடிப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) இது அல்லிமலர் கொய்யாநின்ற பெண்களைநோக்கிச் சொல்லியது. இணை ஆர் திருவடி - இரண்டு திருவடியெனினுமமையும். புணை - மரக்கலம். (க)

எந்தையெந்தாய்சுற்றமற்றுமெல்லாமென்னுடைய
பந்தமறுத்தென்னையாண்டுகொண்டபாண்டிப்பிரா
னந்தவிடைமருதிலானந்தத்தேனிருந்த
பொந்தைப்பரவிநாம்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) எந்தை - எமது தந்தை, எம் தாய் - எமது தாய், சுற்றம் - எமது உறவினர், மற்றம் எல்லாம் - மற்றுமுள்ள எல்லாமும், என்னுடைய பந்தம் அறுத்து - என் பிறவித்தளையைச் சேதித்து, என்னை ஆண்டுகொண்ட - என்னை ஆண்டருளின, பாண்டிப்பிரான் - பாண்டிப்பிரானே, அந்தம் - அழகாகிய, இடைமருதில் - திருவிடைமருதூரில், ஆனந்தத்தேன் இருந்த - இன்பத்தேனிருந்த, பொந்தை - பொந்துபோல்பவனாகிய சிவபெருமானை, பரவி - துதித்து, நாம் - யாம், பூவல்லி கொய்யாமோ - அல்லிப்பூவைக் கொய்துமோ, எ - று.

(க - ரை.) எமக்குத் தாய்தந்தை முதலிய எல்லாம், என் பிறவித்தளையயறுத்த பாண்டிப்பிரானே யாதலால், திருவிடைமருதூரிற் சென்று அவனைத் துதித்துப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) எந்தை - என் தந்தையென்பதன் மரூஉ. எந்தாய் என்பதும் அதுபோல என்தாய் என்பதன் மரூஉ. (உ)

நாயிற்கடைப்பட்டநம்மையுமோர்பொருட்படுத்துத்
தாயிற்பெரிதுந்தயாவுடையதம்பெருமான்
மாயப்பிறப்பறுத்தாண்டானென்வல்வினையின்
வாயிற்பொடியட்டிப்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) நாயின் கடைப்பட்ட - நாயினுங் கடையான, நம்மையும் - எம்மையும், ஓர் பொருள்படுத்து - ஒருபொருளாக்கி, தாயின்சிறந்த - தாயினுஞ்சிறந்த, தயாவுடைய-தயையுடைய, தம்பெருமான் - தம்பிரான், மாயப்பிறப்பு அறுத்து - மாயப்பிறவித் தளையைச்சேதித்து, ஆண்டான் - ஆண்டருளினான், (ஆதலால்) என் வல்வினையின் வாயில் - என் வலிய வினையினது வாயில், பொடிஅட்டி- புழுதியைக்கொட்டி, பூவல்லி கொய்யாமோ - அல்லிப்பூவைக் கொய்துமோ, எ - று.

(க - ரை.) நாயினுங் கடையேமாகிய நம்மையும் ஓர் பொருளாக்கித் தாயினுங் கருணைசெய்த சிவபெருமான், எமது பிறவியையொழித்தனன் ஆதலால் என் வல்வினையின் வாயின் மண்போட்டுப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) தயா என்னும் வடமொழி திரியாதுநின்றது.(௩)

பண்பட்டதில்லைப்பதிக்கரசைப்பரவாதே
யெண்பட்டதக்கனருக்கனெச்சனிந்துவனல்
விண்பட்டபூதப்படைவீரபத்திரராற்
புண்பட்டவாபாடிப்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) பண்பட்ட - சீர்பொருந்திய, தில்லைப்பதிக்கு அரசை - தில்லைப்பதிக்கு வேந்தனாகிய சிவபெருமானை, பரவாதே-துதியாமல், எண்பட்ட-மதிப்பமைந்த, தக்கன் - தக்கனும், அருக்கன் - சூரியனும், எச்சன் - யாககர்த்தாவும், இந்து - சந்திரனும், அனல் - அக்கினிதேவனும், விண்பட்ட - ஆகாயத்தை யளாவிய, பூதப்படை - பூதப்படையையுடைய, வீரபத்திரரால் - வீரபத்திரரால், புண்பட்ட ஆறு பாடி - காயப்பட்டவிதத்தைப்பாடி, பூவல்லி கொய்யாமோ - அல்லிப்பூவைக் கொய்துமோ, எ - று.

(க - ரை.) சிவபெருமானைத் துதியாமல் தக்கன் முதலானோர் வீரபத்திரரால் புண்பட்ட வரலாற்றைப்பாடிப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) எண் - மதிப்பு. (௪)

தேனாடுகொன்றைசடைக்கணிந்தசிவபெருமா
னூனாடிநாடிவந்துள்புகுந்தானுலகர்முன்னே
நானாடியாடிநின்றோலமிடநடம்பயிலும்
வானாடர்கோவுக்கேபூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) தேன் ஆடு - தேன் ததும்புகின்ற, கொன்றை - கொன்றைமலரை, சடைக்கு அணிந்த - சடையிலணிந்த, சிவபெருமான் - சிவபெருமானானவன், ஊன் நாடி நாடிவந்து - மானுடவுடம்பைப் பெற்றுப் பெற்று வந்து, உலகர்முன்னே - உலகத்தாருக்கெதிரில், உள் புகுந்தான் - என் மனத்திற் புகுந்தான், நான் நாடி ஆடி - நான் தேடி ஆடி, நின்று ஓலம் இட - நின்று முறையிட, நடம் பயிலும் - நடனஞ் செய்கின்ற, வான் நாடர் கோவுக்கே - விண்ணுலகத்தார்க்குத் தலைவனாகிய சிவபெருமான் பொருட்டாகவே, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) சிவபெருமான் இவ்வுலகத்தார்க் கெதிரே மானுடவுருக்கொண்டுவந்து என்மனத்திற் புகுந்தான், அவன் பொருட்டாகவே பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) கொன்றை முதலாகுபெயர். ஊன் - உடம்பு. பயிலல் - செய்தல். (௫)

எரிமூன்றுதேவர்க்கிரங்கியருள்செய்தருளிச்
சிரமூன்றறத்தன்றிருப்புருவநெரித்தருளி
யுருமூன்றுமாகியுணர்வரிதாமொருவனுமே
புரமூன்றெரித்தவாபூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) எரி - எரிகின்ற, மூன்று தேவர்க்கு-மூன்று தேவர்களுக்கும், இரங்கி அருள் செய்தருளி - இரங்கியருள்செய்து, மூன்று சிரம் அற - மூன்று தலைகளும் அற்றுவிழும்படி, தன் திருப்புரு

வம் தெரித்தருளி - தன் திருப்புருவத்தை தெரித்தருளி, உரு மூன்றும் ஆகி - அந்த மூன்று வடிவமும் தானேயாகி, உணர்வு அரிது ஆம் ஒருவனுமே - அறிதற்கரிதாகிய ஒருவனே, புரம் மூன்று எரித்த ஆறு - முப்புரங்களையும் நீறு செய்த விதத்தைப்பாடி, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) முச்சுடர்களுக்கு மிரங்கி, முத்தலைகளு மற்றுவிழத் திருப்புருவம் தெரித்து, மூன்றுருவாகி, ஒருவருமறியாவண்ணம் நிற்குஞ் சிவபிரான் முப்புரத்தை யெரித்த வரலாற்றைப்பாடிப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) (சு)

வணங்கத்தலைவைத்துவார்கழல்வாய்வாழ்த்தவைத்
திணங்கத்தன்சீரடியார்கூட்டமும்வைத்தெம்பெருமா
னணங்கொடணிதில்லையம்பலத்தேயாடுகின்ற
குணங்கூரப்பாடிநாம்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) வார்கழல் - நீண்ட திருவடியை, வணங்க - வணங்குதற்கு, தலைவைத்து - சிரத்தையமைத்து, வாழ்த்த - வாழ்த்துதற்கு, வாய் வைத்து - வாயை அமைத்து, இணங்க - சேர்தற்கு, தன் சீர் அடியார் கூட்டமும் வைத்து - தன் சிறந்த அடியார் கூட்டத்தையும் அமைத்து, எம்பெருமான் - எம்பெருமானனவன், அணங்கொடு - தெய்வத்தன்மையோடு, அணி தில்லை அம்பலத்தே ஆடுகின்ற - அலங்கரிக்கப்பட்ட தில்லையம்பலத்தில் நடனஞ்செய்கிற, குணம் - பெருங்குணத்தை, கூரப்பாடி - மிகப்பாடி, நாம் - யாம், பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) தன்னை வணங்கத் தலையையும், வாழ்த்த வாயையும், சேரத் தன் அடியார்கூட்டத்தையும் எனக்கமைத்து, அம்பலத்திலாடுகின்ற சிவபெருமானது பெருங்குணத்தை மிகப் புகழ்ந்து நாம் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) அணங்கு - அழகு எனினுமாம். அணிதல் - அலங்கரித்தல். கூர்தல் - மிகுதல். (எ)

நெறிசெய்தருளித்தன்சீரடியார்பொன்னடிக்கே
குறிசெய்துகொண்டென்னையாண்டபிரான்குணம்பரவி
முறிசெய்துநம்மைமுழுதுடற்றும்பழவினையைக்
கிறிசெய்தவாபாடிப்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) நெறிசெய்தருளி - நன்னெறியை யுண்டாக்கி, தன் - தனது, சீர்-சிறப்புப்பொருந்திய, அடியார் - அடியார்களுடைய, பொன் அடிக்கே - பொன்போலுந் திருவடிக்கே, குறிசெய்துகொண்டு - இலக்காக்கிக்கொண்டு, என்னை ஆண்ட - என்னை ஆண்டருளின, பிரான்-பிரானது, குணம் - பெருங்குணத்தை, பரவி - துதித்து, நம்மை - எம்மை, முறிசெய்து - அடிமையாக்கி, முழுது உடற்றும் - முற்றும் வருத்துகின்ற, பழவினையை - பழமையாகிய வினையை, கிறிசெய்த ஆறுபாடி-இல்லையாக்கின விதத்தைப்பாடி, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) நன்னெறிக்கட் செலுத்தித் தன்னடியார் திருவடிக்கென்னை யாட்படுத்தி யாண்டருளின எம் பெருமானது குணத்தைப் புகழ்ந்து, என்பழவினையை யொழித்த விதத்தைப்பாடிப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) நெறி - இங்கு நன்னெறிக்காயிற்று. குணம் - தயாகுணம். முறி-அடிமை. உடற்றல் - வருத்தல், கிறி-பொய். (அ)

பன்னாட்பரவிப்பணிசெய்யப்பாதமல
ரென்னாகந்துன்னவைத்தபெரியோனெழிற்சுடராய்க்
கன்னாருரித்தென்னையாண்டுகொண்டான்கழலிணைகள்
பொன்னானவாபாடிப்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) பல்நாள் - பலநாளும், பரவி - துதித்து, பணிசெய்ய - பணிவிடைசெய்ய, பாதம் மலர் - தன் திருவடியாகிய தாமரைமலரை, என் ஆகம் - என்மனத்தில், துன்னவைத்த - பொருந்தவைத்தருளின, பெரியோன்-பெருமையை யுடையோன், எழில் சுடர் ஆய் - அழகையுடைய சோதியுருவாகி, கல்நார் உரித்து - கல்லில் நாருரித்து, என்னை ஆண்டுகொண்டான் - என்னை யாண்டுகொண்டருளினவனது, கழல் இணைகள் - திருவடியிணைகள், பொன் ஆன

ஆறுபாடி - பொன்போல அருமையான விதத்தைப்பாடி, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) எப்பொழுதும் துதித்துப் பணிசெய்யத் தன்திருவடியை யென்மனத்திற் பொருந்தவைத்து என்கல் மனத்தைக்கரைத்து என்னை யாண்டருளின சிவபெருமானது திருவடி பொன்னுறு வாற்றைப்பாடிப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) ஆகம் - மார்பு. அது இடவாகுபெயராய் மனத்தை யுணர்த்திற்று. ஆனவாறு என்பது ஆனவா என ஈறு தொகுத்தது. (கூ)

பேராசையாமிந்தப்பிண்டமறப்பெருந்துறையான்
சீரார்திருவடியென்றலைமேல்வைத்தபிரான்
காரார்கடனஞ்சையுண்டுகந்தகாபாலி
போரார்புரம்பாடிப்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) பெருந்துறையான் - திருப்பெருந்துறையையுடையவன், பேராசை ஆம் - பெருங்காதலுண்டாதற் கிடமாகிய, இந்த பிண்டம் அற - இந்த உடம்போடு கூடி வாழும் வாழ்வு அற்றொழியும் வண்ணம், சீர் ஆர் திருவடி - சிறப்புப்பொருந்திய தன் திருவடியை, என் தலைமேல் வைத்த - என் சிரமீது வைத்த, பிரான் - உபகார குணமுள்ளவன், கார் ஆர் - கருமைபொருந்திய, கடல் நஞ்சை - கடல் விடத்தை, உண்டு உகந்த - உண்டு களித்த, காபாலி - சிவபெருமான், (அவனது) போர் ஆர் - போர்க்கிலக்காயிருந்த, புரம் - மும்மதில்களின் வரலாற்றை, பாடி-பாடி, பூவல்லி கொய்யாமோ, எ-று.

(க - ரை.) இந்தப் பிறவி யொழியும்வண்ணம் என் சிரத்தில் தன் திருவடியை வைத்தருளின உபகாரகனாகிய சிவபெருமான் திரிபுர தகனஞ்செய்த வரலாற்றைப்பாடிப் பூவல்லிகொய்துமோஎன்பது.

(வி - ரை) காரார் என்னும் விசேடணம் நஞ்சுக்குக் கொள்க. காபாலி - கபாலத்தையுடையவன். (கO)

பாலுமமுதமுந்தேனுடனும்பராபரமாய்க்
கோலங்குளிர்ந்துள்ளங்கொண்டபிரான்குரைகழல்கண்
ஞாலம்பரவுவார்நன்னெறியாமந்நெறியே
போலும்புகழ்பாடிப்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) தேனுடன் - தேனுடன், பாலும் அமுதமும் ஆம்- பாலும் அமிர்தமும்போல்கின்ற, பராபரமாய் - பராபரமாகி, கோலம் குளிர்ந்து - திருக்கோலங் குளிர்ந்து, உள்ளம் கொண்ட - என் மனத்தைக் கவர்ந்த, பிரான் - உபகாரகுணமுள்ளவனாகிய சிவபெருமானது, குரை கழல்கள் - ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த திருவடிகளை, ஞாலம் பரவுவார் - உலகத்தில் துதிப்பவர்களுடைய, நல்நெறி ஆம்- நன்னெறியாகிய, அந்நெறியே போலும் - அந்த நெறியையே போல்கின்ற, புகழ்பாடி - புகழைப்பாடி, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) பால் முதலியவைபோல மதுரித்து என் மனத்தைக் கவர்ந்த சிவபெருமானது புகழைப் பாடிப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) குரைத்தல் - சத்தித்தல். கோலங்குளிர்ந்து என்றது கட்கினியனாதலைக் குறித்தது. (கச)

வானவன்மாலயன்மற்றுமுள்ளதேவர்கட்கும்
கோனவனாய்நின்றுகூடலிலாக்குணக்குறியோ
னானநெடுங்கடலாலாலமமுதுசெய்யப்
போனகமானவாபூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) வானவன் - விண்ணுலகத்துக் கிறைவனாகிய இந்திரன், மால் அயன் - திருமால் பிரமன், மற்றும் உள்ள தேவர்கட்கும் - மற்றுமுள்ள தேவர்களுக்கும், கோனவனாய் நின்று - தலைவனாகி நின்று, கூடல் இல்லா - கூடுதலில்லாத, குணக்குறியோன் - குணக்குறிகளை யுடையவன், நெடுங்கடல் ஆன - நெடிய கடலிலுண்டான, ஆலாலம் - ஆலாகல நஞ்சை, அமுது செய்ய - பருக, (அது) போனகம் ஆன ஆறு - உணவான விதத்தைக் குறித்து, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) இந்திராதியர்களுக் கிறைவனாகிய சிவபெருமான் நஞ்சுண்ட வரலாற்றைப் புகழ்ந்து பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை) கோ என்பது னகரச்சாரியை பெற்றுக் கோன் என நின்றது. போனகம் - உணவு. (கஉ)

அன்றாலநீழற்கீழருமறைகடானருளி
நன்றாகவானவர்மாமுனிவர்நாடோறு
நின்றாரவேத்துநிறைகழலோன்புனைகொன்றைப்
பொன்றாதுபாடிநாம்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) அன்று - அந்நாளில், ஆலநீழற்கீழ் - ஆலமர நிழலில், அருமறைகள் அருளி - அருமையாகிய வேதப்பொருள்களை அருளிச்செய்து, நன்றாக - நன்மையாக, வானவர் - தேவர்களும், மாமுனிவர் - பெரிய முனிவரும், நாடோறும் நின்று - தினந்தோறும் நின்று, ஆர ஏத்தும்-நிரம்பத் துதிக்கின்ற, நிறைகழலோன் - (ஏத்துதற்குரிய குணங்கள்) நிறைந்த திருவடியை யுடையவனாகிய சிவபெருமான், புனை - தரிக்கின்ற, கொன்றை - கொன்றை மலரை, பொன்றாதுபாடி - குறையாமற்பாடி, நாம் - யாம், பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) அன்று ஆலின்கீழிருந்து நால்வர்க்கும் அற முரைத்து முனிவர் முதலியோரால் புகழப்பட்ட திருவடியையுடைய சிவபெருமானது கொன்றை மலரைப் புகழ்ந்து பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) பொன்தாது எனப் பிரித்துப் பொன்போலும் மகரந்தம் என்றுரைத்தலுமாம். (௧௩)

படமாகவென்னுள்ளேதன்னிணைப்போதவையளித்திங்
கிடமாகக்கொண்டிருந்தேகம்பமேயபிரான்
றடமார்மதிற்றில்லையம்பலமேதானிடமா
நடமாடுமாபாடிப்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) என் உள்ளே - என் மனத்திலே, படம் ஆக - படம் போல, தன் - தனது, இணைப்போது அவை - இரண்டு தாமரைமலர்கள்போன்ற அந்தத் திருவடிகளை, அளித்து - கிருபை செய்து, இங்கு - இவ்விடத்தையே, இடம் ஆகக்கொண்டு இருந்து - இடமாகக்கொண்டு வீற்றிருந்து, ஏகம்பம் மேய - திருவேகம்பத்திலும் உறைகின்ற, பிரான் - பிரான், தடம் ஆர் மதில் - பெருமையமைந்த மதில் சூழ்ந்த, தில்லை அம்பலமே - தில்லையம்பலத்

தையே, இடம் ஆ - இடமாகக்கொண்டு, நடம் ஆடும் ஆறு - நடனமாடும் விதத்தை, பாடி - பாடி, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) என் மனத்தில் தன் திருவடிகளைப் படம்போலமைத்து இடங்கொண்டு, ஏகம்பத்தில் வாழும் பெருமான், தில்லையம்பலத்தை யிடமாகக்கொண்டு நடமாடும் விதத்தைப் பாடிப் பூவல்லிகொய்துமோ என்பது.

(வி - ரை.) படம் - சித்திரம். ஏகம்பம் - ஓர் திருப்பதி. (கச)

அங்கியருக்கனிராவணனந்தகன்கூற்றன்
செங்கணரியயனிந்திரனுஞ்சந்திரனும்
பங்கமிறக்கனுமெச்சனுந்தம்பரிசழியப்
பொங்கியசீர்பாடிநாம்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) அங்கி - அக்கினி தேவனும், அருக்கன் - சூரியனும், இராவணன் - இராவணனும், அந்தகன் கூற்றன் - உடம்புகளை அழிப்பவனாகிய யமனும், செங்கண் அரி - செந்தாமரைக்கண்களையுடைய திருமாலும், அயன் - பிரமனும், இந்திரனும் - இந்திரனும், சந்திரனும் - சந்திரனும், பங்கம் இல் தக்கனும் - பங்கமில்லாத தக்கனும், எச்சனும் - எச்சனும், தம் பரிசு அழிய-தமது குணங் கெடும் வண்ணம், பொங்கிய - கோபித்த, சீர் - சிறப்பை, பாடி - பாடி, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) அக்கினிதேவன் முதலியோர் தம்பெருமை கெடும் வண்ணம் கோபித்த சிறப்பைப் பாடிப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) அங்கி அக்நி என்னும் வடமொழிச்சிதைவு. கூற்றன் - உடலுயிர்களைப் பிரிப்பவன். (கரு)

திண்போர்விடையான்சிவபுரத்தார்போரேறு
மண்பான்மதுரையிற்பிட்டமுதுசெய்தருளித்
தண்டாலேபாண்டியன்றன்னைப்பணிகொண்ட
புண்பாடல்பாடிநாம்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) திண் - திண்ணிய, போர் - போர்த்தொழிலையுடைய, விடையான்-இடபத்தையுடையவன், சிவபுரத்தார் போரேறு-சிவபுரத்தார்க்குச் சிங்கம்போலத் தலைமைபெற்றிருப்பவனாகிய சிவபெருமான், மண்பால் - மண்ணுலகத்தில், மதுரையில் - மதுரைப்பதியில், பிட்டு - பிட்டினை, அமுது செய்தருளி - அமுது செய்தருளி, தண்டாலே-பிரம்பாலே, பாண்டியன்-பாண்டியனானவன், தன்னைப் பணிகொண்ட-தன்னை வேலைகொண்ட, புண்பாடல் பாடி-புண்ணைக் குறித்த பாடலைப்பாடி, நாம் - யாம், பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) இடபவாகனனாகிய சிவபெருமான் மதுரையில் மண்சுமக்க வந்து பிட்டமுது செய்து, பாண்டியன் பிரம்படியேற்ற வரலாற்றைப் பாடிப் பூவல்லி கொய்யாமோ என்பது.

(வி - ரை.) ஏறு - சிறந்தவன் என்னும் பொருளது. தண்டு இங்கு பிரம்புக்காயிற்று. (கசு)

முன்னாயமாலயனும்வானவருந்தானவரும்
பொன்னார்திருவடிதாமறியார்போற்றுவதே
யென்னாகமுள்புகுந்தாண்டுகொண்டானிலங்கணியாம்
பன்னாகம்பாடிநாம்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) முன் ஆய - முதன்மையாகிய, மால் அயனும் - திருமாலும் பிரமனும், வானவரும் - தேவர்களும், தானவரும் - அசுரர்களும், பொன் ஆர் திருவடி - பொன்போலும் அருமைத்திருவடியை, தாம் அறியார் - தாமறியாதவராய், போற்றுவதே - வணங்குவதே (அவர்கள் செய்கை அங்ஙனமாக) என் ஆகம் உள் புகுந்து, என் மனத்திற் புகுந்து, ஆண்டுகொண்டான் - ஆண்டுகொண்டவனாகிய சிவபெருமானது, இலங்கு அணி ஆம் - விளங்குகின்ற ஆபரணமாகிய, பல் நாகம் - பல நாகங்களையும், பாடி - பாடி, நாம் - யாம், பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) மாலயன் முதலியோர் அறியாத திருவடியையுடையவன் என் மனத்திற் புகுந்து என்னை யாண்டுகொண்டருளினான், அந்தச் சிவபெருமானது நாகாபரணத்தைப் புகழ்ந்து பூவல்லி கொய்யாமோ என்பது.

(வி - ரை.) முன் - முன்னாந்தன்மை. (முதன்மை). (கஎ)

சீரார்திருவடித்திண்சிலம்புசிலம்பொலிக்கே
யாராதவாசையதாயடியேனகமகிழத்
தேரார்ந்தவீதிப்பெருந்துறையான்றிருநடஞ்செய்
பேரானந்தம்பாடிப்பூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) சீர் ஆர் - சிறப்பமைந்த, திருவடி - திருவடியில் அணியப்பெற்ற, திண் சிலம்பு - திண்ணிய சிலம்புகள், சிலம்பு - சத்திக்கிற, ஒலிக்கே - சத்தத்திற்கே, ஆராத ஆசையதாய் - வெறுக்காத விருப்பங்கொண்டு, அடியேன் அகம்மகிழ - அடியேன் மனமகிழ, தேர் ஆர்ந்த வீதி - தேர்கள் நிறைந்த தெருக்களோடுகூடிய, பெருந்துறையான் - திருப்பெருந்துறையை யுடையவன், திருநடம் செய் - திருநடநத்தைச் செய்கிறதாலுண்டாகிய, பேரானந்தம்பாடி - பேரின்பத்தைப்பாடி, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) சிவபிரான் தன் திருவடிச் சிலம்பொலிக்கே அடியேன் மனங்களிக்கும் வண்ணம் திருநடஞ் செய்கின்ற பேரின்ப வரலாற்றைப் புகழ்ந்து பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) சிலம்புதல் - ஒலித்தல். ஆர்தல் - வெறுத்தல்.

அத்தியுரித்ததுபோர்த்தருளும்பெருந்துறையான்
பித்தவடிவுகொண்டிவ்வுலகிற்பிள்ளையுமா
முத்திமுழுமுதலுத்தரகோசமங்கைவள்ளல்
புத்திபுகுந்தவாபூவல்லிகொய்யாமோ.

(ப - ரை.) அத்தி உரித்து - யானையை உரித்து, அது போர்த்தருளும் - அத்தத்தோலைப் போர்த்தருளின, பெருந்துறையான் - திருப்பெருந்துறையை யுடையவன், பித்த வடிவுகொண்டு - பித்தவுருக்கொண்டு, இவ்வுலகில் பிள்ளையும் ஆம் - இந்தவுலகத்தில் பிள்ளையும் ஆகிய, முத்தி முழுமுதல் - முத்திக்கு முழுமுதல்வன், உத்தரகோசமங்கை வள்ளல் - திருவுத்தரகோச மங்கையி லெழுந்தருளியவள்ளல், (அவன்) புத்தி புகுந்த ஆறு - என் புத்தியில் நுழைந்த விதத்தைப்பற்றி, பூவல்லி கொய்யாமோ, எ - று.

(க - ரை.) யானைத்தோலை யுரித்துப் போர்த்துப் பித்தவேடங் கொண்ட உத்தரகோசமங்கை வள்ளலாகிய சிவபெருமான் என் மனத்திற் புகுந்த விதத்தைப்பாடிப் பூவல்லி கொய்துமோ என்பது.

(வி - ரை.) அத்திஹஸ்தி என்னும் வடமொழித்திரிபு. "இவ்வுலகிற் பிள்ளையுமாம்" என்றது வரங்கிடந்தார் சிலர்க்குப் புதல்வன் போல நடித்தமையைக் குறித்தது. (கக)

திருச்சிற்றம்பலம்.

# திருவுந்தியார்.

## ஞானவெற்றி.

### கலித்தாழிசை.

திருச்சிற்றம்பலம்.

வளைந்தது வில்லு விளைந்தது பூச
லுளைந்தன முப்புர முந்தீபற
வொருங்குடன் வெந்தவா றுந்தீபற.

(ப - ரை.) வில் வளைந்தது - வில் வளைந்தது, பூசல் விளைந்தது - போர்விளைந்தது, முப்புரம் உளைந்தன - திரிபுரங்கள் வருந்தின, உந்தீபற, ஒருங்கு உடன் வெந்த ஆறு - ஒரு சேர உடனே வெந்த விதத்தைக்குறித்து, உந்தீபற, எ - று.

(க - ரை.) இறைவனது வில் வளைந்தது, போர்விளைந்தது, முப்புரங்கள் வருந்தின, ஒருமிக்க வெந்ததைக்குறித்து உந்தீபற என்பது.

(வி - ரை.) உந்தி பறத்தல் - மகளிர் விளையாட்டிலொன்று. வில் வளைந்தது என்றதனால் வளைதலின்றுமை தோன்றிற்று, என்னை; மலைவில்லாதலாலெனக். (க)

ஈரம்புகண்டிலமேகம்பர்தங்கையி
லோரம்பேமுப்புரமுந்தீபற
வொன்றும்பெருமிகையுந்தீபற.

(ப - ரை.) ஏகம்பர் கையில் - திருவேகம்பர் கையில், ஈரம்பு கண்டிலம் - இரண்டம்பைக் கண்டிலேம், ஓர் அம்பே - (அவர் கையில் காணப்பட்டது) ஓரம்பேயாம், (அங்ஙனமாகவும்) முப்புரம் - முப்புரங்களுள், ஒன்றும் - ஒன்றழியாதிருப்பினும், பெருமிகை - (அது) பெருங்குற்றமாம், உந்தீபற, எ - று.

(க - ரை.) இறைவர் கையில் இருந்தது ஒரு பாணமேயன்றி இரண்டு பாணமன்று, அங்ஙனமாகவும் முப்புரங்களுள் ஒன்றாயினும் எஞ்சி நின்றனவல்ல, உந்திபற என்பது.

(வி - ரை.) ஒன்றும் - ஒரு பாணமும் எனினு மமையும். மிகை - குற்றம். (உ)

தச்சுவிடுத்தலுந்தாமடியிட்டலு
மச்சுமுறிந்ததென்றுந்தீபற
வழிந்தனமுப்புரமுந்தீபற.

(ப - ரை.) தாம் அடியிட்டலும் - தாம் பாதம் வைத்தேறுதலும், தச்சு விடுத்தலும் - தச்சுத்தொழில் விடுதலும், அச்சு முறிந்தது என்று - அச்சொடிந்ததென்று, உந்தீபற, முப்புரம் அழிந்தன - திரிபுரங்கள் நசித்தன, உந்தீபற, எ - று.

(க - ரை.) இறைவர் திருவடிவைத்தேறுதலும், தேரின் தச்சுத்தொழில் நெகிழ்ந்து அச்சு முறிந்ததென்றும் முப்புரங்கள் அழிந்தனவென்றும் உந்திபற என்பது.

(வி - ரை.) அடியிடல் என்பது - அடியிட்டல் என வந்தது. தச்சு - தச்சன் தொழில். அச்சு - பண்டியுள்ளிரும்பு. (௩)

உய்யவல்லாரொருமூவரைக்காவல்கொண்
டெய்யவல்லானுக்கேயுந்தீபற
விளமுலைபங்கனென்றுந்தீபற.

(ப - ரை.) உய்யவல்லார் - பிழைக்க வல்லவராகிய, ஒரு மூவரை - ஒரு மூவரையும், காவல்கொண்டு - காவல் செய்து, எய்ய

வல்லானுக்கே-அம்பெய்ய வல்லவனுக்கே, உந்தீபற, இளமுலை பங்கன் என்று - இளமுலையாள் பாகனென்று, உந்தீபற, எ - று.

(க - ரை.) பிழைக்க வல்லவராகிய மூவரையும் காவற்படுத்தி அம்பெய்ய வல்லவனாகிய சிவபெருமானைக் குறித்து உந்திபற என்பது.

(வி - ரை.) உய்தல் - பிழைத்தல். ஒரு மூவர் என்றது முப்புர மெரிந்தகாலத்தில் இறவாமல் ஓடிப்போன மூன்றசுரரை. (ச)

சாடியவேள்விசரிந்திடத்தேவர்க
ளோடியவாபாடியுந்தீபற
வுருத்திரநாதனுக்குந்தீபற.

(ப - ரை.) சாடிய - சாடின, வேள்விசரிந்திட - யாகம் அழியவே, தேவர்கள் ஓடிய ஆறுபாடி-தேவர்கள் ஓடினவிதத்தைப்பாடி, உந்தீபற, உருத்திரநாதனுக்கு - உருத்திரர்களுக்குத் தலைவனாயிருப்பவனுக்கு, உந்தீபற, எ - று.

(க - ரை.) அடிக்கப்பட்டயாகம் அழிதலும், தேவர்கள் அஞ்சியோடின வரலாற்றைக் குறித்தும், உருத்திரநாதனைக் குறித்தும் உந்திபற என்பது.

(வி - ரை.) சாடுதல் - அடித்தல். சரிதல் - குலைதல். உருத்திர நாதன் - உருத்திரர்களுக்குத் தலைவன். (ரு)

ஆவாதிருமாலவிப்பாகங்கொண்டன்று
சாவாதிருந்தானென்றுந்தீபற
சதுர்முகன்றாதையென்றுந்தீபற.

(ப - ரை.) ஆவா - அந்தோ, திருமால் - திருமால், அவிபாகம் கொண்டு - அவிசில் பங்கு ஏற்றுக்கொண்டு, அன்று - அந்நாளில், சாவாது இருந்தான் என்று - இறவாமலிருந்தானென்று, உந்தீபற, சதுர்முகன் தாதையென்று - நான்முகனுக்குத் தந்தையென்று, உந்தீபற, எ - று.

(க - ரை.) திருமால் அவிர்ப்பாகம் ஏற்றும் இறவாதிருந்ததைக்குறித்து உந்திபற என்பது.

(வி - ரை.) ஆவா - இரக்கக்குறிப்பு. அவி - தேவருணவு. பாகம் — பங்கு. அவிர்ப்பாகம் - தேவருணவின்கூறு. சதுர்முகன் - பிரமன். (௬)

வெய்யவனங்கிவிழுங்கத்திரட்டிய
கையைத்தறித்தானென்றுந்தீபற
கலங்கிற்றுவேள்வியென்றுந்தீபற.

(ப - ரை.) வெய்யவன் அங்கி - கொடியவனாகிய அக்கினிதேவன், விழுங்க - விழுங்கும்படி, திரட்டிய - சேர்த்த, கையை - கைகளை, தறித்தான் என்று-வெட்டினானென்று, உந்தீபற, வேள்வி-யாகம், கலங்கிற்று என்று - நிலை குலைந்ததென்று, உந்தீபற எ - று.

(க - ரை.) அக்கினிதேவன் விழுங்கத்திரட்டின கைகளை வெட்டினானென்றும், வெட்டுதலும் யாகம் கலங்கியது என்றும் உந்திபற என்பது.

(வி - ரை.) வெய்யவன் என்பதற்கு வெம்மை பகுதி. உட்டினம் என்பது பொருள். விழுங்க - அவியுண்ண. (௭)

பார்ப்பதியைப்பகைசாற்றியதக்கனைப்
பார்ப்பதென்னேயேடியுந்தீபற
பணைமுலைபாகனுக்குந்தீபற.

(ப - ரை.) பார்ப்பதியை - பார்வதியை, பகைசாற்றிய தக்கனை - விரோதமாகப் பேசின தக்கனை, பார்ப்பது என்னேயேடி - கண்ணோட்டஞ் செய்வதென்னேடீ, உந்தீபற, பணைமுலை பாகனுக்கு - பருத்த தனங்களையுடைய உமாதேவி பங்கனுக்கு, உந்தீபற எ - று.

(க - ரை.) பார்வதி தேவியை விரோதித்துப்பேசின தக்கனைக் கண்ணோட்டஞ்செய்வது சிவபெருமானுக்கு அடுத்த காரியமல்ல என்பது.

(வி - ரை.) பர்வதம் - மலை. பார்வதி - மலைமகள்; இது பார்ப்பதியெனத் திரிந்தது. பகைசாற்றுதலாவது - நிந்தித்தல். (௮)

புரந்தரனாரொருபூங்குயிலாகி
மரந்தனிலேறினாருந்தீபற
வானவர்கோனென்றேயுந்தீபற.

(ப - ரை.) புரந்தரனார் - தேவேந்திரனார், ஒரு பூ குயில் ஆகி - ஒரு பொலிவாகிய குயிலுருவாகி, மரந்தனில் ஏறினார் - மரத்தில் ஏறினார், உந்தீபற, வானவர்கோன் என்றே - தேவர்பிரான் என்றே, உந்தீபற, எ - று.

(க - ரை.) தேவேந்திரன் ஒரு குயில் வடிவாய் மரத்தி லேறினன் என்று உந்திபற என்பது.

(வி - ரை.) பூங்குயில் - அழகிய குயில் எனினுமாம். பூ - அழகு. வானவர் - விண்ணுலகத்துள்ளார். (௯)

வெஞ்சினவேள்வியாத்திரனார்தலை
துஞ்சினவாபாடியுந்தீபற
தொடர்ந்தபிறப்பறவுந்தீபற.

(ப - ரை.) வெஞ்சினம்-வெவ்விய சினத் வியாத்திரனார் - யாககுருவானவருடைய, தலை துஞ்சின ஆறுபாடி - தலையற்ற விதத்தைப்பாடி, உந்தீபற, தொடர்ந்த பிறப்பு அற - தொடர்ந்த பிறவிகள் அற்றொழிய, உந்தீபற, எ - று.

(க - ரை.) கொடிய கோவத்தையுடைய யாககுருவின் தலை யற்றுவிழுந்த செய்தியை, நமது பிறவித்தொடர்பு அற்றொழியும்படி பாடி உந்திபற என்பது.

(வி - ரை.) வேள்வி வியாத்திரனார் - யாககுரு. துஞ்சுதல் - அழிதல். தொடர்தல் - பற்றுதல். (௰)

ஆட்டின்றலையைவிதிக்குத்தலையாகக்
கூட்டியவாபாடியுந்தீபற
கொங்கைகுலுங்கநின்றுந்தீபற.

(ப - ரை.) ஆட்டின் தலையை - ஆட்டின் சிரத்தை, விதிக்கு தலையாக - தக்கனுக்குச் சிரமாக, கூட்டிய ஆறுபாடி - சேர்த்தவிதத்

தைப்பாடி, உந்தீபற, கொங்கை குலுங்க, நின்று - தனங்கள் குலுங்கும்படி நின்று, உந்தீபற எ - று.

(க - ரை.) தலையிழந்த தக்கனுக்கு ஆட்டின் தலையைப்பொருத்தின விதத்தைப்பாடி உந்திபற என்பது.

(வி - ரை.) பிரமனுக்குப் புதல்வனாதலால் தக்கனைவிதி யென்றார், சிறுவிதியென்றுங் கூறுவர். இவன் தலையற்று வீழ்தலும் அதனை யொரு பூதம் விழுங்கிவிட்டதனால் ஆட்டின் தலையைக் கூட்டலாயிற்று. (௪க)

உண்ணப்புகுந்தபகனொளித்தோடாமே
கண்ணைப்பறித்தவாறுந்தீபற
கருக்கெடநாமெலாமுந்தீபற.

(ப - ரை.) உண்ணப்புகுந்த - அவியுண்ணவந்த, பகன் - பகனானவன், ஒளித்து ஓடாமே - மறைந்து ஓடாவகை, கண்ணைப்பறித்த ஆறு - (அவனது) கண்ணைப் பிடுங்கின விதத்தைக் குறித்து, உந்தீபற, நாம் எல்லாம் - நாமெல்லோரும், கருகெட - பிறவியொழிய, உந்தீப்பற, எ - று.

(க - ரை.) அவியுண்ணவந்த பகன்மறைந்து ஓடாதவகை அவனது கண்ணைப்பிடுங்கின விதத்தைக்குறித்தும், நமது பிறவியற்றொழியும் பொருட்டும் உந்திபற என்பது.

(வி - ரை.) பகன் - பன்னிரண்டு சூரியருள் ஒருவன். கரு - பிறவி. (௪உ)

நாமகணாசிசிரம்பிரமன்படச்
சோமன்முகனெரித்துந்தீபற
தொல்லைவினைகெடவுந்தீபற.

(ப - ரை.) நாமகள் - சரசுவதி, நாசிபட - நாசியறுபட, பிரமன் சிரம்பட - பிரமன் சிரம் அறுபட, சோமன் முகன் நெரித்து - சந்திரன் முகத்தைத் தேய்த்து, உந்தீபற, தொல்லை வினைகெட - பழவினையொழிய, உந்தீபற, எ - று.

(க - ரை.) சரசுவதியின் மூக்கும், பிரமனது சிரமும் அறு பட்ட செய்தியையும், சந்திரனது முகம் தேய்க்கப்பட்ட செய்தியை யும் குறித்து, நமது பழவினை கெடும்படி உந்திபற என்பது.

(வி - ரை.) நாசி - மூக்கு. சிரம் - தலை. நெரித்தல் - தேய்த்தல். (கங)

நான்மறையோனுமகத்தியமான்படப்
போம்வழிதேடுமோறுந்திபற
புரந்தரன்வேள்வியிலுந்திபற.

(ப - ரை.) நான்மறையோனும் - நான்கு வேதங்களையுடைய பிரமனும், அகத்து இயமான்பட - உள்ளிருக்குமுயிர் அழியவே, வேள்வியில் - (அந்த) யாகத்தில், புரந்தரன் - இந்திரன், போம்வழி தேடுமாறு - போகும்வழி தேடும் விதத்தைக் குறித்து, உந்திபற எ - று.

(க - ரை.) பிரமன் உயிரழியவே, அந்த யாகத்தில் வந்திருந்த இந்திரன் தப்பியோடும் வழியைத்தேடின செய்தியைக்குறித்து உந்திபற என்பது.

(வி - ரை.) நான்மறையோனும் என்ற வும்மை உயர்வு சிறப்பு. இயமான் - உயிர். படுதல் - அழிதல். (கச)

சூரியனார்தொண்டைவாயினிற்பற்களை
வாரிநெரித்தவாறுந்திபற
மயங்கிற்றுவேள்வியென்றுந்திபற.

(ப - ரை.) சூரியனார் - சூரியதேவனாருடைய, தொண்டை வாயினில் - கோவைக்கனிபோலும் வாயிலுள்ள, பற்களை - தந்தங்களை, வாரி நெரித்த ஆறு - வாரி நெரித்த விதத்தைக் குறித்து, உந்தி பற, வேள்வி மயங்கிற்று என்று - யாகம் கலங்கிற்றென்று, உந்தி பற, எ - று.

(க - ரை.) சூரியனுடைய பற்கள் தகர்த்தெறியப்பட்ட விதத்தைக்குறித்தும், யாகம் கலங்கினதைக் குறித்தும், உந்திபற என்பது.

(வி - ரை.) சூரியனார் என்பதில் ஆர் விகுதி இழித்தற்கண் வந்தது. நெரித்தல் - தகர்த்தல். (கரு)

தக்கனூரன்றே தலையிழந்தார் தக்கன்
மக்களைச்சூழநின்றுந்தீபற
மடிந்ததுவேள்வியென்றுந்தீபற.

(ப - ரை.) தக்கனூர் - தக்கனுனவர், அன்றே தலையிழந்தார் - அந்நாளிலே சிரமிழந்தார், தக்கன் மக்களைச் சூழநின்று - தக்கன் மக்களால் சூழப்பெற்று நின்றும், உந்தீபற, வேள்வி மடிந்தது என்று - யாகம் அழிந்ததென்று, உந்தீபற, எ - று.

(க - ரை.) தக்கன் தன் மக்களால் சூழப்பட்டிருந்தும் தலையிழந்தான், வேள்வியும் அழிந்தது என்று உந்திபற என்பது.

(வி - ரை.) தக்கனூர் என்பதில் ஆர் விகுதி இழிவை யுணர்த்தியது. தக்கன் தலையிழந்ததும் வேள்வி மடிந்ததும் நோக்குமிடத்து மக்கள் தக்கனையும் வேள்வியையும் காக்கும் வலியிலர் என்பது தோன்றுகின்றது. (கசு)

பாலகனூர்க்கன்றுபாற்கடலீந்திட்ட
கோலச்சடையற்கேயுந்தீபற
குமரன்றன்றாதைக்கேயுந்தீபற.

(ப - ரை.) பாலகனூர்க்கு - பாலகனுக்கு, அன்று - அந்நாளில், பாற்கடல் ஈந்திட்ட - பாற்கடலைக் கொடுத்த, கோலம் - அழகாகிய சடையற்கே - சடையையுடையவன் பொருட்டே, உந்தீபற, குமரன் றன் தாதைக்கே - முருகன் தந்தையின்பொருட்டே, உந்தீபற, எ-று.

(க - ரை.) ஒரு பாலகனுக்கு முற்காலத்தில் பாற்கடலைத் தந்தருளினவனாகிய சிவபெருமானைக்குறித்து உந்திபற என்பது.

(வி - ரை.) பாலகன் - சிறுவன். இவன் கௌதமமுனி புத்ரன். பாற்கடல் ஈந்திட்ட என்றது, அவன் பசியினால் வருந்தியழுதபோது சிவபிரான் பாற்கடலை அவன் பசிதணிக்க ஈவியதைக் குறித்தது. (கஎ)

நல்லமலரின்மேனூன்முகனூர்தலை
யொல்லையரிந்ததென்றுந்தீபற
வுகிராலரிந்ததென்றுந்தீபற.

(ப - ரை.) நல்ல மலரின்மேல் - நல்ல தாமரை மலரின்மேலுள்ள, நான்முகனார் தலை - பிரமனது தலையானது, ஒல்லை-விரைவில், அரிந்தது என்று - அறுக்கப்பட்டது என்று, உந்தீபற, உகிரால் - நகத்தால், அரிந்தது என்று-அரியப்பட்டதென்று, உந்தீபற எ-று.

(க - ரை.) பிரமன் தலை விரைவில் நகத்தால் அரியப்பட்டதென்று உந்திபற என்பது.

(வி - ரை.) மலர்களிற் சிறந்திருத்தலால் தாமரைமலரை நல்ல மலர் என்றார். ஒல்லை - விரைவு. அரிதல் - அறுத்தல். உகிர்-நகம்.

தேரைநிறுத்திமலையெடுத்தான்சிர
மீரைந்துமிற்றவாறுந்தீபற
விருபதுமிற்றதென்றுந்தீபற.

(ப - ரை.) தேரை நிறுத்தி - இரதத்தை நிறுத்தி, மலையெடுத்தான் - மலையைத் தூக்கினவனாகிய ராவணனது, சிரம் ஈரைந்தும்-தலை பத்தும், இற்ற ஆறு - நெரிந்த விதத்தைக்குறித்து, உந்தீபற, இருபதும் - தோள்களிருபதும், இற்ற ஆறு - நெரிந்தவிதத்தைக்குறித்து, உந்தீபற எ - று.

(க - ரை.) செல்லுகின்ற தேரைநிறுத்தி மலையைத் தூக்கினவனாகிய ராவணனது பத்துத்தலைகளும் இருபதுதோள்களும் நெரிந்தவிதத்தைக் குறித்து உந்திபற என்பது.

(வி - ரை.) மலையென்றது கைலாயமலையை, எடுத்தல்-தூக்குதல், தேரை நிறுத்தி மலையெடுத்தான் என்றது ராவணனை. சிரம் ஈரைந்து என்றமையால் அதற்கேற்க இருபதும் என்றது தோள்களையெனக்கொள்க. (கசு)

திருச்சிற்றம்பலம்.

# திருத்தோணோக்கம்.

## பிரபஞ்சசுத்தி.

நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பூத்தாரும்பொய்கைப்புனலிதுவேயெனக்கருதிப்
பேய்த்தேர்முகக்குறும்பேதைகுணமாகாமே
தீர்த்தாய்திகழ்தில்லையம்பலத்தேதிருநடஞ்செய்
கூத்தாவுன்சேவடிகூடும்வண்ணந்தோணோக்கம்.

(ப - ரை.) பூத்து ஆரும் - பல மலர்களைப்பூத்து நிரம்பியிருக்கிற, பொய்கைப்புனல் இதுவே - தடாகநீர் இதுவே, எனக்கருதி - என்று நினைத்து, பேய்த்தேர் - கானல் நீரை, முகக்குறும் - மொள்ளத் தொடங்குகின்ற, பேதைகுணம் ஆகாமே - அறிவீனனது குணம் எனக்குண்டாகாமல், தீர்த்தாய் - (அறியாமையை) நீக்கினாய், திகழ் - விளங்குகின்ற, தில்லை அம்பலத்தே - தில்லையம்பலத்தின் கண்ணே, திருநடம்செய் - திருநடனஞ் செய்கின்ற, கூத்தா - கூத்தப்பிரானே, உன்சேவடி - உன் திருவடியை, கூடும் வண்ணம் - அடையும்வண்ணம், தோணோக்கம், எ - று.

(க - ரை.) கானல் நீரைப் பொய்கைநீரெனக் கருதி, அதனை முகக்க நினைக்கிறபேதையர் போலாகாமல் என்பேதைமையை நீக்கினையாதலால், தில்லையம்பலத்தில் நடிக்கின்ற கடவுளே, உன் திருவடியை யடையும் வண்ணம் யாம் தோணோக்கமாடுவோம் என்பது.

(வி - ரை.) பொய்கை - தடாகம். பேய்த்தேர் - கானல் நீர், தோணோக்கம் - மகளிர் விளையாட்டிலொன்று. (௧)

என்றும்பிறந்திறந்தாழாமேயாண்டுகொண்டான்
கன்றால்விளவெறிந்தான்பிரமன்காண்பரிய
குன்றாதசீர்த்தில்லையம்பலவன்குணம்பரவித்
துன்றார்குழலினீர்தோணோக்கமாடாமோ.

(ப - ரை.) என்றும்-எந்நாளும், பிறந்து இறந்து - பிறந்தும் இறந்தும், ஆழாமே - பிறவிக்கடலில் அழுந்தாமல், ஆண்டுகொண்டான் - என்னை யாண்டுகொண்டவனும், கன்றால் விளவு எறிந்தான் பிரமன் காண்பு அரிய-கன்றைக்கொண்டு விளாங்கனியை யெறிந்த திருமால் பிரமன் என்பவர்கள் காணுதல் அருமையாகிய, குன்றாத சீர் - குறையாத சிறப்பு வாய்ந்த, தில்லையம்பலவன் - தில்லையம்பலத்தானும் ஆகிய சிவபெருமானது, குணம்பரவி - பெருங் குணத்தைத் துதித்து, துன்று ஆர் குழலினீர் - நெருக்கம் பொருந்திய கூந்தலையுடையீர், தோணோக்கம் ஆடாமோ, எ - று.

(க - ரை.) எந்நாளும் பிறவிக்கடலில் அழுந்தாமல் எம்மை யாண்டுகொண்டவனும், அரிபிரமர்கள் காணவொண்ணாதவனுமாகிய தில்லையம்பலவனது மங்கள குணங்களைப் புகழ்ந்து தோணோக்க மாடுவோம் என்பது.

வி - ரை.) பிறந்திறந்தாழாமே என்றமையால பிறப்பினை யொருகடலும், இறப்பினை யொருகடலுமாகக் கொள்க. திருமால் கன்றால் விளவெறிந்தது கிருஷ்ணாவதாரத்தில். (௨)

பொருட்பற்றிச்செய்கின்றபூசனைகள்போல்விளங்கச்
செருப்புற்றசீரடிவாய்க்கலசவூனமுதம்
விருப்புற்றுவேடனார்சேடறியமெய்குளிர்ந்தங்
கருட்பெற்றுநின்றவாதோணோக்கமாடாமோ.

(ப - ரை.) பொருள்பற்றி செய்கின்ற - பொருளைக்கொண்டு செய்கிற, பூசனைகள்போல் விளங்க - பூசைகள்போல விளங்கவும், செருப்பு உற்ற - செருப்பை யணிந்த, சீர் அடி - சிறப்பாகிய பாதத்தையும், வாய்க்கலசம் - வாயாகிய கலசத்தையும், ஊன் அமுதம் - மாமிசமாகிய அமிர்தத்தையும், விருப்பு உற்று - விரும்பி, வேடனார்-வேடனாகிய திருக்கண்ணப்ப தேவரது, சேடு - பெருமையை, அறிய - யாவரும் அறியும்படியாகவும், மெய்குளிர்ந்து - உடல் குளிர்ந்து, அங்கு - அப்பொழுது, அருள்பெற்று நின்ற ஆறு - கருணையோடு ஏற்று நின்ற விதத்தைக் குறித்து, தோணோக்கம் ஆடாமோ, எ - று.

(க - ரை.) பூசைக்குரிய பலபொருள்களைக் கொண்டு செய்கிற பூசைபோலப் பிரகாசிக்கும்படி கண்ணப்பநாயனார் வாய்நீர் முதலியவற்றை அபிஷேக தீர்த்த முதலியவைகளாகக் கொண்டு செய்து இறைவனது திருவருளைப் பெற்று விளங்கின வரலாற்றைக் குறித்துத் தோணோக்க மாடுவோம் என்பது.

(வி - ரை.) கலசம் - குடம். பொருள் - பூசைக்குரிய பொருள்கள். வேடனார் என்பதில் ஆர் விகுதி திண்ணனாரது உயர்வைக் குறித்தது. (௫)

கற்போலுநெஞ்சங்கசிந்துருகக்கருணையினா
னிற்பானைப்போலவென்னெஞ்சினுள்ளேபுகுந்தருளி
நற்பாற்படுத்தென்னைநாடறியத்தானிங்ஙன்
சொற்பாலதானவாதோணோக்கமாடாமோ.

(ப - ரை.) கல்போலும் நெஞ்சம் - கல்லை நிகர்த்த மனமானது, கசிந்து உருக - கசிந்துருகும்படி, கருணையினால் - கிருபையால், நிற்போனைப்போல - நிற்பவனைப்போல, என் நெஞ்சினுள்ளே புகுந்தருளி - என் மனத்திற் புகுந்தருளி, நற்பால்படுத்து - நல்ல பகுதியி லகப்படுத்தி, என்னை - அடியேனை, நாடு அறிய - நாட்டார் அறியும்படி, தான் - தான், இங்ஙன் - இப்படி, சொற்பாலது ஆன ஆறு - சொல்லின்பாற்பட்டதான விதத்தைக்குறித்து, தோணோக்க மாடாமோ, எ - று.

(க - ரை.) இறைவன் கல்லை நிகர்த்த மனமானது கசிந்துருகும்படி என்னுட்புகுந்து, என்னை நல்வழியிற்செலுத்தி, நாட்டாறியத் தான் புகழ்பெற்ற வரலாற்றைக்குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பது.

(வி - ரை.) பால் - பகுதி. நாடு என்றது நாட்டிலுள்ளாரை. சொல் - புகழ். (௬)

நிலநீர்நெருப்புயிர்நீள்விசும்புநிலாப்பகலோன்
புலனாயமைந்தனோடெண்வகையாய்ப்புணர்ந்துநின்
றுலகேழெனத்திசைபத்தெனத்தானொருவனுமே
பலவாகிநின்றவாதோணோக்கமாடாமோ.

(ப - ரை.) நிலம் - மண், நீர் - நீர், நெருப்பு-அக்கினி, உயிர்-காற்று, நீள்விசும்பு - நீண்ட ஆகாயம், நிலா - சந்திரன், பகலோன்-சூரியன், புலன் ஆயமைந்தனோடு - அறிவுருவாகிய புருடனோடு, எண்வகையாய் - எட்டு வகையாய், புணர்ந்து நின்றான்-கலந்துநின்றான், உலகு ஏழ் என - எழுலகமென்று சொல்லவும், திசை பத்து என - பத்துத் திக்கென்று சொல்லவும், தான் ஒருவனுமே - தானொருவனே, பல ஆகி நின்ற ஆறு - பலவாகி நின்ற விதத்தைக்குறித்து, தோணோக்கமாடாமோ, எ - று.

(க - ரை.) மண்முதலாகிய அட்டமூர்த்தமாகவும் எழுலகங்களாகவும் வேறு பல பொருள்களாகவும் இறைவனொருவனே வியாபித்து நின்ற செய்தியைக்குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பது.

(வி - ரை.) பகலையுண்டாக்குவோனாதலால் சூரியனைப் பகலோன் என்றார். மைந்தன் - புருடன் (ஆன்மா) (௫)

புத்தன்முதலாயபுல்லறிவிற்பல்சமயந்
தத்தமதங்களிற்றட்டுளுப்புப்பட்டுநிற்கச்
சித்தஞ்சிவமாக்கிச்செய்தனவேதவமாக்கு
மத்தன்கருணையினாற்றோணோக்கமாடாமோ.

(ப - ரை.) புத்தன் முதல் ஆய - புத்தன் முதலாகிய, புல் அறிவின் - அற்ப அறிவினையுடைய, பல்சமயம் - பலசமயங்களும், தத்தம்மதங்களில் - தத்தமது மதங்களிலே, தட்டுளுப்புபட்டு நிற்க - தடுமாற்றமடைந்து நிற்க, சித்தம் சிவம் ஆக்கி - என்மனத்தைச் சிவமாக்கி, செய்தனவே தவம் ஆக்கும் - செய்தவற்றையே தவமாக்குகின்ற, அத்தன் கருணையினால் - கடவுளுடைய பெருங்கருணையால், தோணோக்கம் ஆடாமோ, எ - று.

(க - ரை.) புத்தன் முதலாகிய பல சமயவாதிகளும் தமது பேதைமையால் தத்தம்மதங்களில் தடுமாறிநிற்க, இறைவன் தன்கருணையால் என்மனத்தைச் சிவவுருவாக்கி, என் செய்தொழில்கள் யாவையும் தவத்தொழில்களாகத் திருவுளம் பற்றினதைக்குறித்துத் தோணோக்க மாடுவோம் என்பது.

(வி - ரை.) தட்டுளுப்பு - தடுமாற்றம்.

தீதில்லைமாணிசிவகருமஞ்சிதைத்தானைச்
சாதியும்வேதியன்றாதைதனைத்தாளிரண்டுஞ்
சேதிப்பவீசன்றிருவருளாற்றேவர்தொழப்
பாதகமேசோறுபற்றினவாதோணோக்கம்.

(ப - ரை.) தீது இல்லை - கெடுதியில்லை, மாணி - பிரமசாரியின், சிவகருமம் சிதைத்தானை - சிவகருமத்தை அழித்தவனை, சாதியும்வேதியன் - சாதியாலும் அந்தணன், தாதைதனை - தந்தையை, தாள் இரண்டும் சேதிப்ப - கால்களிரண்டையும் வெட்ட, ஈசன் திருவருளால் - சிவபெருமானது திருவருளினால், தேவர்தொழ - தேவர்கள் வணங்க, பாதகமே சோறுபற்றின ஆறு - பாவத்தையே புண்ணியமாகக் கொண்ட விதத்தைப்பற்றி, தோணோக்கம், எ - று.

(க - ரை.) பிரமசாரியாகிய சண்டியடிகள் தாம் செய்த சிவக்ருமத்தைக் கெடுக்கவந்த தந்தையின் கால்களிரண்டையும் வெட்ட, வெட்டின அந்தப் பாவத்தையே புண்ணியமாகக் கொண்டு அவர்க்குச் சிவகதியைத் தந்தருளினதைக் குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பது.

(வி - ரை.) சிவகருமம்-சிவபூசை முதலிய நற்கருமம். சோறு-இவ்விடத்துப் புண்ணியத்தைக் குறித்தது. (எ)

மானமழிந்தோமதிமறந்தோமங்கைநல்லீர்
வானந்தொழுந்தென்னன்வார்கழலேநினைந்தடியோ
மானந்தக்கூத்தனருள்பெறினாமவ்வணமே
யானந்தமாகிநின்றாடாமோதோணோக்கம்.

(ப - ரை.) மானம் அழிந்தோம் - மானங்கெட்டோம், மதிமறந்தோம் - அறிவு மறந்தோம், மங்கை நல்லீர் - பெண்களே, வானம் தொழும் - விண்ணுலகத்தார் வணங்குகின்ற, தென்னன் - தென்னனது, வார்கழலே - நீண்ட திருவடிகளையே, நினைந்து - நினைத்து, அடியோம் - அடியோங்கள், ஆனந்தக்கூத்தன் - ஆநந்தக்கூத்தனது, அருள்பெறின் - அருளைப்பெற்றால், நாம் - யாம், அவ்வண்ணமே - அவ்வண்ணமாகவே, ஆனந்தம் ஆகி நின்று - இன்பவடிவாகிநின்று, தோணோக்கம் ஆடாமோ, எ - று.

(க - ரை.) பெண்களே, தென்னனது திருவடியை நினைந்து மானமுதலியவற்றை யிழந்தோம். ஆனந்த நிருத்தஞ் செய்வோனாகிய இறைவனது திருவருளைப் பெற்றால் இன்பவுருவாய்நின்று தோணோக்கமாடுவோம் என்பது.

(வி - ரை.) மானம் - பெருமை, வெட்கம் எனினுமமையும்.

எண்ணுடைமூவரிராக்கதர்களெரிபிழைத்துக்
கண்ணுதலெந்தைகடைத்தலைமுன்னின்றதற்பி
னெண்ணிலியிந்திரரெத்தனையோபிரமர்களு
மண்மிசைமால்பலர்மாண்டனர்காண்டோணோக்கம்.

(ப - ரை.) என் உடை - மதியினையுடைய, மூவர் இராக்கதர்கள் - மூவர் அசுரர்கள், எரிபிழைத்து - தீயைத்தப்பி, கண்ணுதல் - நெற்றிக்கண்ணையுடைய, எந்தை - எந்தையாகிய சிவபிரானது, கடைத்தலைமுன் - கடைத்தலையில், நின்றதற்பின் - நின்றபிறகு, எண்இலி - அளவிலிகளாகிய, இந்திரர் - இந்திரரும், எத்தனையோ பிரமர்களும் - எத்தனையோ பிரமர்களும், மால்பலர் - திருமால்கள் பலரும், மண்மிசை - மண்ணின்மீது, மாண்டனர் - மடிந்தார்கள், தோணோக்கம், எ - று.

(க - ரை.) மூன்று அரக்கர் நெருப்புக்குத் தப்பியோடிச் சிவபிரானது வாயிற்படியில் நின்றபிறகு அளவற்ற இந்திரன் முதலாயினோர் மடிந்தார்கள் என்னும் செய்தியைக்குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பது.

(வி - ரை.) எண் - மதிப்பு. எரி - நெருப்பு. கடைத்தலை - முதல்வாயில். (௯)

பங்கயமாயிரம்பூவினிலோர்பூக்குறையத்
தங்கணிடந்தரன்சேவடிமேற்சாத்தலுமே
சங்கரனெம்பிரான்சக்கரமாற்கருளியவா
றெங்கும்பரவிநாந்தோணோக்கமாடாமோ.

(ப - ரை.) ஆயிரம் பங்கயம் பூவில் - ஆயிரந்தாமரை மலர்களில், ஓர் பூ குறைய - ஒருமலர் குறைதலும், தம் கண் இடந்து

தமது கண்ணைத்தோண்டி, அரன் சேவடிமேல் சாத்தலும் - சிவ பெருமானது திருவடிமேல் சூட்டுதலும், சங்கரன் எம்பிரான் - சங்கரனாகிய எம்பிரான், மாற்கு - திருமாலுக்கு, சக்கரம் அருளிய ஆறு - சக்கரப்படையை அருள் செய்த வரலாற்றை, நாம் எங்கும் பரவி - நாம் எவ்விடத்தும் துதித்து, தோணோக்கமாடாமோ, எ - று.

(க - ரை.) திருமால் ஆயிரம் தாமரை மலரைக்கொண்டு இறைவனை யருச்சிக்கும்போது ஒரு மலர் குறையக்கண்டு தன் கண்ணைப் பறித்து அருச்சித்தலும், இறைவன் மகிழ்ந்து அவர்க்குச் சக்கரப் படையை யருளின வரலாற்றைப் புகழ்ந்து தோணோக்க மாடுவோம் என்பது.

(வி - ரை.) பங்கயம் - சேற்றில் முளைப்பது. பங்கம் - சேறு. ஜம் - பிறப்பது. என்னும் வடமொழியில் ஜகரம் யகரமாகத் திரிந்தது. இடத்தல் - தோண்டுதல். பரவியென்பதற்கு பரவச் செய்து என்றலுமாம். (௧0)

காமனுடலுயிர்காலன்பற்காய்கதிரோ
னாமகணாசிசிரம்பிரமன்கரமெரியைச்
சோமன்கலைதலைதக்கனையுமெச்சனையுந்
தூய்மைகள்செய்தவாதோணோக்கமாடாமோ.

(ப - ரை.) காமன் உடல் - மன்மதனது உடலையும், காலன் உயிர் - யமனது உயிரையும், காய் கதிரோன் பல் - சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியனது பல்லையும், நாமகள் நாசி - சரசுவதியின் நாசியையும், பிரமன் சிரம் - பிரமனது தலையையும், எரியை கரம் - அக்கினி தேவனது கையையும், சோமன் கலை - சந்திரனது கலையையும், தக்கனையும் எச்சனையும் தலை - தக்கன் எச்சன் என்பவருடைய தலையையும், தூய்மைகள் செய்த ஆறு - பரிசுத்தமாக்கின வரலாற்றை நினைத்து, தோணோக்கமாடாமோ, எ - று.

(க - ரை.) மன்மதன் சரீரத்தையும், யமனுயிரையும், சூரியன் பல்லையும், சரசுவதி மூக்கையும், பிரமன் தலையையும், அக்கினி தேவன் கையையும், சந்திரன் கலையையும், தக்கன் எச்சன் இருவருடைய தலைகளையும் பரிசுத்தமாக்கின விதத்தைப்பற்றித் தோணோக்கமாடுவோம் என்பது.

(வி - ரை.) காமன் - காமதேவன். காய்தல் - சுடுதல். கலை - கண்டம், (கூறு). தூய்மை செய்தல் - இல்லை யாக்குதல். (கக)

பிரமனரியென் றிருவருந்தம்பேதைமையாற்
பரமமியாம்பரமமென் றவர்கள்பதைப்பொடுங்க
வரனாரழலுருவாயங்கேயளவிறந்து
பரமாகிநின் றவாதோணோக்கமாடாமோ.

(ப - ரை.) பிரமன் அரிஎன்ற - பிரமன் திருமால் என்று சொல்லப்பட்ட, இருவரும் - இருவரும், தம்பேதைமையால் - தமது அறியாமையால், யாம்பரமம் யாம்பரமம் — யாம்பரமம் யாம்பரமம், என்றவர்கள் - என்று சண்டைசெய்தவர்களுடைய, பதைப்பு ஒடுங்க - பதற்றம் அடங்கும் வண்ணம், அரனார் - சிவபெருமானார், அழல் உரு ஆய் - நெருப்புருவமாகி, அங்கே - அவ்விடத்தே, அளவு இறந்து - அளவு கடந்து, பரம் ஆகி நின்ற ஆறு - பரம்பொருளாகி நின்ற வரலாற்றைச் சொல்லி, தோணோக்கமாடாமோ, எ - று.

(க - ரை.) பிரமவிட்டுணுக்கள் யாம் பெரியம் யாம் பெரிய மென்று வாதிட்டபோது அவ்விருவர்க்கிடையே நெருப்புருவாய் நிமிர்ந்துநின்ற சிவபிரானது வரலாற்றைக்குறித்துத் தோணோக்கமா டுவோம் என்பது.

(வி - ரை.) பரமம் - மேலான பொருள். பதைப்பு - துடிப்பு.

ஏழைத்தொழும்பனேனெத்தனையோகாலமெல்லாம்
பாழுக்கிறைத்தேன்பரம்பரனைப்பணியாதே
யூழிமுதற்சிந்தாதநன்மணிவந்தென்பிறவித்
தாழைப்பறித்தவாதோணோக்கமாடாமோ.

(ப - ரை) ஏழைத்தொழும்பனேன் - ஏழைத்தொண்டனேன், எத்தனையோகாலம் எல்லாம் - எத்தனையோகால முழுதும், பரம்பர னைப்பணியாதே — அறப்பெரியோனை வணங்காமல், பாழுக்கு இறை த்தேன் - பாழுக்கிறைத்துவிட்டேன், ஊழிமுதல் - ஊழிமுதலான காலத்தும், சிந்தாத - அழியாத, நல்மணி - சிறந்த மாணிக்கம்போல் பவனாகிய சிவபெருமான், வந்து - எழுந்தருளி, என்பிறவி-என்பிற

ப்பின், தாழை - கிழங்கை, பறித்த ஆறு - பிடுங்கின வரலாற்றைச் சொல்லி, தோணோக்கமாடாமோ, எ - று.

(க - ரை.) ஏழைத்தொண்டனாகிய நான் நெடுங்காலம் சிவபிரானை வணங்காமல் கெட்டேன். ஆயினும் அவ்விறைவன் தானே யெழுந்தருளி என் பிறவிவேரைப் பறித்த விதத்தைக்குறித்துத் தோணோக்கமாடுவோம் என்பது.

(வி - ரை.) பாழுக்கிறைத்தல்-பாழ்நிலத்துக்கிறைத்தல், அது இங்கு வீணுக்குழைத்தல் என்னும் பொருள் குறித்து வந்தது. பரம்பரன் - மேலோரின்மேலோன் தனக்கு மேலொரு கடவுளில்லாதவனென்பது கருத்து. ஊழி - ஊழிகாலம், (யுகமுடிவுக்காலம்) தாழ் - தாள். (அடி) வேர் என்பது பொருள். (௧௩)

உரைமாண்டவுள்ளொளியுத்தமன் வந்துளம்புகலுங்
கரைமாண்டகாமப்பெருங்கடலைக்கடத்தலுமே
யிரைமாண்டவிந்திரியப்பறவையிரிந்தோடத்
துரைமாண்டவாபாடித்தோணோக்கமாடாமோ.

(ப - ரை.) உரைமாண்ட - சொல்லிறந்த, உள் ஒளி - உள்ளொளியாகிய, உத்தமன் - உத்தமனாகிய சிவபெருமான், வந்து - எழுந்தருளி, உள்ளம் புகலும் - என்மனத்திற் புகுதலும் - கரைமாண்ட - கரையற்ற, பெரு-பெரிய, காமக்கடலை - காமமாகிய கடலை, கடத்தலும் - தாண்டுதலும், இரைமாண்ட - இரையற்ற, இந்திரியப் பறவை - இந்திரியங்களாகிய பறவைகள், இரிந்து ஓட - அஞ்சியோட, துரைமாண்ட ஆறுபாடி - இடமற்ற வரலாற்றைச் சொல்லி, தோணோக்க மாடாமோ, எ - று.

(க - ரை.) வாக்குக் கதீதனாகிய இறைவன் வந்து என் மனத்திற் புகுதலும், யான் காமக்கடலைக் கடந்தேன், கடத்தலும், இந்திரியப்பறவைகள் ஓட இடமற்ற விதத்தைப்பாடித் தோணோக்கமாடுவோம் என்பது.

(வி - ரை.) மாளல் நான்கும் அறுதல் என்னும் பொருளன. இந்திரியம் - பொறி. துரை - துறை. (இடம்) இரை யென்றது இங்கு புலன்களை (விடயங்களை.) விடையனுபவத்திற் றலைபட்டவென்பது பொருள். (௧௪)

திருச்சிற்றம்பலம்.

# திருப்பொன்னூசல்.

## அருட்சுத்தி.

ஒப்புமைப்பற்றிவந்தவாறடித்தரவுகொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

சீரார்பவளங்கான்முத்தங்கயிறாக
வேராரும்பொற்பலகையேறியினிதமர்ந்து
நாராயணனறியாநாண்மலர்த்தாணாயடியேற்
கூராகத்தந்தருளுமுத்தரகோசமங்கை
யாராவமுதினருட்டாளிணைபாடிப்
போரார்வேற்கண்மடவீர்பொன்னூசலாடாமோ.

(ப - ரை.) சீர் ஆர் - சிறப்புப் பொருந்திய, பவளம் - பவளமே, கால் ஆக - கால்களாகவும், முத்தம் - முத்தமாலையே, கயிறு ஆக - கயிறாகவுங்கொண்ட, ஏர் ஆரும் - அழகு நிறைந்த, பொன் பலகை ஏறி - பொன்னினாற் செய்யப்பட்ட பலகையின்மேல் ஏறி, இனிது அமர்ந்து - இனிதாக அமர்ந்திருந்து, நாயடியேற்கு - நாய் போன்ற அடியேனுக்கு, நாராயணன் அறியா - திருமாலும் அறிய வொண்ணாத, நாள்மலர்தாள் - புதிதாகிய தாமரை மலர்போலும் திருவடிகளை, ஊர் ஆக - நாடாக, தந்தருளும் - கொடுத்தருள்கின்ற, உத்தரகோச மங்கை - திருவுத்தரகோச மங்கையிலுள்ள, ஆரா அமுதின் - தெவிட்டாத அமிர்தம்போல்பவனாகிய சிவபெருமானது, அருள் தாள் இணைபாடி - அருளுருவாகிய திருவடி யிரண்டையும் புகழ்ந்து பாடி, போர் ஆர் - போர்த்தொழிலமைந்த, வேல்கண் - வேல்போலுங் கண்களையுடைய, மடவீர் - மாதர்களே, பொன்னூசல் ஆடாமோ, எ - று.

(க - ரை.) பவளக்கால் முதலாகிய வுறுப்புக்களைக்கொண்ட பொற்பலகையிலேறி யமர்ந்து, தன் திருவடியை யெமக்குத் தந்த

ருளினமையால் அத்திருவடியைப் புகழ்ந்து பாடிப் பொன்னூசலாடுவோம் யாம் என்பது.

(வி - ரை.) திருவடி அருள்வடிவாதலால் அருட்டாள் என்றார். இணை - இரண்டு. மடவீர் - மடமைப் பண்படியாகப்பிறந்த முன்னிலைப்பெயர்.

மூன்றங்கிலங்குநயனத்தன்மூவாத
வான்றங்குதேவர்களுங்காணாமலரடிக
டேன்றங்கித்தித்தித்தமுதூறித்தான்றெளிந்தங்
கூன்றங்கிநின்றுருக்குமுத்தரகோசமங்கைக்
கோன்றங்கிடைமருதுபாடிக்குலமஞ்ஞை
போன்றங்கனநடையீர்பொன்னூசலாடாமோ.

(ப - ரை.) மூன்று - மூன்றாய், அங்கு இலங்கு - அவ்விடத்து விளங்கா நின்ற, நயனத்தன் - கண்களை யுடையவனாகிய சிவபெருமானது, வான்தங்கு தேவர்களும் - விண்ணுலகத்தில் உறைகின்ற தேவர்களும், காணா - காணவொண்ணாத, மலர் அடிகள் - தாமரை மலர்போலுந் திருவடிகள், தேன் தங்கி - தேனின் சுவை தங்கி, தித்தித்து - மதுரித்து, அமுது ஊறி - அமிர்தம்போலூறி, தெளிந்து - தெளிவடைந்து, அங்கு - அவ்வாறே, ஊன் தங்கி நின்று - உடம்பில் தங்கி நின்று, உருக்கும் - உருக்குகின்ற, உத்தரகோச மங்கை கோன் - திருவுத்தரகோச மங்கைக்குத் தலைவன், தங்கு - தங்குகின்ற, இடை மருது பாடி - திருவிடைமருதூரைப்பாடி, குலம் மஞ்ஞைபோன்று - மேன்மையாகிய மயில்போன்று, அங்கு - அப்படியே, அன்ன நடையீர் - அன்னம்போன்ற நடையினையும் உடையமாதரீர், பொன்னூசல் ஆடாமோ, எ - று.

(க - ரை.) சோம சூர்யாக்கினிகளாகிய மூன்றுகண்களையுடையவனும், உத்தரகோசமங்கைக் கரசனும் ஆகிய சிவபெருமானது திருவிடைமருதூரைப் பாடிப் பொன்னூசலாடுவோம் யாம் என்பது.

(வி - ரை.) நயநம் - கண், வடமொழி. மூவாத என்னும் எதிர்மறைப்பெயரெச்சத்தில் பகுதி மூ. ஊன் - உடம்பு, அது இங்கு மனத்தைக் குறித்ததாகக் கொள்க. (உ)

முன்னீறுமாதியுமில்லான் முனிவர்குழாம்
பன்னூறுகோடியிமையோர்கடாநிற்பத்
தன்னீறெனக்கருளித் தன்கருணைவெள்ளத்து
மன்னூறமன்னுமணியுத்தரகோசமங்கை
மின்னேறுமாடவியன்மாளிகைபாடிப்
பொன்னேறுபூண்முலையீர்பொன்னூசலாடாமோ.

(ப - ரை.) முன் - நினைக்கின்ற, ஈறும் ஆதியும் இல்லான் - இறுதியும் முதலும் இல்லாதவனாகிய சிவபெருமான், பல் நூறு கோடி - பலநூறுகோடித் தொகையினராகிய, முனிவர் குழாம் - முனிவர் கூட்டங்களும், இமையோர்கள் - தேவர்களும், நிற்ப - நிற்க, தன் நீறு - தனது திருவெண்ணீற்றை, எனக்கு அருளி - எனக்கருள் செய்து, தன்கருணை வெள்ளத்து - தன் கருணைப்பெருக்கத்தோடு, மன்னூற மன்னும் - தன் பெருமை வளர நிலைபெற்ற, மணி - அழகாகிய, உத்தரகோசமங்கை - திருவுத்தரகோச மங்கையிலுள்ள, மின் ஏறும்மாடம் - ஒளி மிகுந்த மேன்மாடங்களையுடைய, வியன்மாளிகைபாடி - பெருமையமைந்த திருமாளிகையைப் பாடி, பொன் ஏறு - தேமல்படர்ந்த, பூண் - ஆபரணங்களை யணிந்த, முலையீர் - தனங்களை யுடையீர், பொன்னூசலாடாமோ, எ - று.

(க - ரை.) முடிவு முதல்களில்லாதவனாகிய சிவபெருமானது திருவுத்தரகோசமங்கையில் மாடமாளிகைகளைப் பாடிப் பொன்னூசலாடுவோம் யாம் என்பது.

(வி - ரை.) முன்னல் - நினைத்தல். பொன்னேறு பூண் என்பதற்கு பொன்னாபரணம் என்றுரைத்தலும் பொருந்தும். (௩.

நஞ்சமர்கண்டத்தனண்டத்தவர்நாதன்
மஞ்சுதோய்மாடமணியுத்தரகோசமங்கை
யஞ்சொலாடன்னோடுங்கூடியடியவர்க
ணெஞ்சுளேநின்றமுதமூறிக்கருணைசெய்து
துஞ்சல்பிறப்பறுப்பானாயபுகழ்பாடிப்
புஞ்சமார்வெள்வளையீர்பொன்னூசலாடாமோ.

(ப - ரை.) நஞ்சு அமர் கண்டத்தான் - விடமமர்ந்த கண்டத்தையுடையவன், அண்டத்தவர் நாதன் - தேவலோகத்தார்க்குத் தலைவன், மஞ்சுதோய் - மேகங்கள்படிகின்ற, மாடம் - மேல்மாடங்களையுடைய, மணி - அழகாகிய, உத்தரகோசமங்கை - திருவுத்தரகோசமங்கையில், அம்சொல்லாளோடுங்கூடி - இன்மொழியாளாகிய உமாதேவியோடுகூடி, அடியவர்கள் நெஞ்சுளே நின்று - அடியவரது மனத்துள்ளே நின்று, அமுதம் ஊறி - அமிர்தஞ் சுரந்து, கருணைசெய்து - கிருபைசெய்து, துஞ்சல் பிறப்பு அறுப்பான் - இறத்தல் பிறத்தல்களைச் சேதிப்பவன், (அவனது) தூயபுகழ்பாடி - பரிசுத்தமாகிய புகழைப்பாடி, புஞ்சம் ஆர்வெள்வளையீர் - தொகுதியாகப் பொருந்திய வெள்வளையையுடையீர், பொன்னூசலாடாமோ, எ - று.

(க - ரை.) விஷகண்டனும், தேவர்பிரானும், உத்தரகோசமங்கையில் பிராட்டியோடெழுந்தருளி அடியவர்கள் மனத்தில் நின்று அவர்களுடைய இறப்புப் பிறப்புகளை யொழிப்பவனுமாகிய சிவபெருமானது புகழைப்பாடிப் பொன்னூசலாடுவோம் யாம் என்பது.

(வி - ரை.) அமர்தல் - தங்குதல். அண்டம் - விண்ணுலகம். அம் - இவ்விடத்து இனிமையை யுணர்த்திற்று. வெள்வளை - சங்கவளையல். (௬

ஆணோவலியோவரிவையோவென்றிருவர்
காணக்கடவுள்கருணையினாற்றேவர்குழா
நாணாமேயுய்யவாட்கொண்டருளிநஞ்சுதனை
யூணாகவுண்டருளுமுத்தரகோசமங்கைக்
கோணார்பிறைச்சென்னிக்கூத்தன்குணம்பரவிப்
பூணார்வனமுலையீர்பொன்னூசலாடாமோ.

(ப - ரை.) ஆணோ - ஆண்தானோ, அலியோ - பேடுதானோ அரிவையோ - பெண்தானோ, என்று - என்றுகலங்கி, இருவர்காண - பிரமவிட்டுணுக்களாகிய இருவரும் காணவொண்ணாத, கடவுள் - கடவுளும், கருணையினால் - தன்பெருங்கருணையால், தேவர்குழாம் நாணாமே உய்ய - தேவர்கூட்டம் அஞ்சாமல் பிழைக்கும்படி, ஆட்கொண்டருளி, (அவர்களை) அடிமைகொண்டருளி, நஞ்சுதனை - நஞ்சை ஊண் ஆக - உணவாக, உண்டருளும் - உண்டருளின, உத்தரகோ.

மங்கை - திருவுத்தரகோச மங்கையிலுள்ள, கோண் ஆர்பிறை - வளைவுள்ள பிறையை யணிந்த, சென்னி - சடாபாரத்தையுடைய, கூத்தன் - கூத்தனும் ஆகிய சிவபெருமானது, குணம்பரவி - குணத்தைத் துதித்து, பூண் ஆர் - ஆபரணம் நிறைந்த, வனம் - அழகாகிய, முலையீர் - தனங்களையுடையீர், பொன்னூசலாடாமோ, எ - று.

(க - ரை.) ஆண்பெண் அலியெனத் துணிந்தறிய வொண்ணாதவனும், உத்தரகோசமங்கைக் கரசனுமாகிய சிவபெருமானது நற்குணங்களைப் புகழ்ந்து யாம் பொன்னூசலாடுவோம் என்பது.

(வி - ரை.) நாணுதல் - அஞ்சுதல் என்னும் பொருள் குறித்தது. ஊண் - உண்ணப்படுவது. கோண் - கோணல் (வளைவு.) (ரு)

மாதாடுபாகத்தனுத்தரகோசமங்கைத்
தாதாடுகொன்றைச்சடையானடியாருட்
கோதாட்டிநாயேனையாட்கொண்டென்றொல்பிறவித்
தீதோடாவண்ணந்திகழப்பிறப்பறுப்பான்
காதாடுகுண்டலங்கள்பாடிக்கசிந்தன்பாற்
போதாடுபூண்முலையீர்பொன்னூசலாடாமோ.

(ப - ரை.) மாது ஆடு பாகத்தன் - மங்கை தங்கு பங்கன், உத்தரகோச மங்கை - திருவுத்தரகோச மங்கையிலுள்ள, தாது ஆடு கொன்றை சடையான் - மகரந்தங்களையுடைய கொன்றைமலர் மாலையையணிந்த சடையையுடையவன், அடியார் உள் - தன்னடியார்களுள்ளே, நாயேனை - நாயினேனை, கோதாட்டி - சீராட்டி, ஆட்கொண்டு - அடிமைகொண்டு, என் தொல்பிறவித்தீது - என் பழைய பிறவித்துன்பங்கள், ஓடாவண்ணம் - நீட்டியாதவண்ணம், திகழ - நான் விளங்கும்படி, பிறப்பு அறுப்பான் - பிறவித்தளையைச் சேதிப்பவன், (அவனது) காது ஆடு குண்டலங்கள் பாடி - காதில் அசையாநின்ற குண்டலங்களைப்பாடி, அன்பால் கசிந்து - அன்பினாற் கசிந்து, போது ஆடு பூண் முலையீர் - தாமரைப் போதுகள்போல அசையாநின்ற ஆபரணங்களைத் தரித்த தனங்களையுடையீர், பொன்னூசலாடாமோ, எ - று.

(க - ரை.) உமாதேவி பங்கனும், திருவுத்தரகோச மங்கைக் கிறைவனும், நாயேனை யாட்கொண்டு என் பிறவித்தளையை யறுப்ப

வனும் ஆகிய சிவபெருமானது காதில் அசையாநின்ற குண்டலங்களைப் புகழ்ந்து பாடி நாம் பொன்னூசலாடுவோம் என்பது.

(வி - ரை.) மாது - பெண். அது இவ்விடத்தில் உமாதேவியாரைக் குறித்தது. ஓடுதல் - நீட்டித்தல். போது - பேரரும்பு. (சா)

உன்னற்கரியதிருவுத்தரகோசமங்கை
மன்னிப்பொலிந்திருந்தமாமறையோன்றன்புகழே
பன்னிப்பணிந்திறைஞ்சப்பாவங்கள்பற்றறுப்பா
னன்னத்தின்மேலேறியாடுமணிமயில்போ
லென்னத்தனென்னையுமாட்கொண்டானெழில்பாடிப்
பொன்னொத்தபூண்முலையீர்பொன்னூசலாடாமோ.

(ப - ரை.) உன்னற்கு அரிய - நினைத்தற்கரிய, திருவுத்தரகோச மங்கை - திருவுத்தரகோச மங்கையில், மன்னி - நிலைபெற்று, பொலிந்திருந்த - பொலிவுபெற்றிருந்த, மாமறையோன் - பெருமையுள்ள வேதியன், தன் புகழே - தனது புகழையே, பன்னி-சொல்லி, பணிந்து இறைஞ்ச - தாழ்ந்து வணங்க, பாவங்கள் - பாவங்களை, பற்று அறுப்பான் - பற்றறுப்பவன், அன்னத்தின்மேல் ஏறி ஆடும் - அன்னத்தின்மீதேறி யாடுகிற, அணி மயில்போல் - அழகையுடைய மயில்போல்கின்ற, என் அத்தன் - என் தந்தை, என்னையும் - (ஒன்றுக்கும் பற்றாத) சிறியேனையும், ஆட்கொண்டான் - அடிமைகொண்டவன், (அவனது) எழில் பாடி - அழகைப்பாடி, பொன் ஒத்த - திருமகளை நிகர்த்த, பூண் முலையீர் - ஆபரணமணிந்த தனங்களையுடையீர், பொன்னூசலாடாமோ, எ - று.

(க - ரை.) திருவுத்தரகோச மங்கையில் எழுந்தருளிய வேதியனும், தன் புகழைச் சொல்லி வணங்கப் பாவங்களைப் பற்றறுப்பவனும், என்னை யடிமைகொண்டவனும் ஆகிய சிவபெருமானது அழகைப் புகழ்ந்து பாடி, நாம் பொன்னூசலாடுவோம் என்பதாம்.

(வி - ரை.) பொலிதல் - விளங்குதல். பொன்னொத்த - தேமல்படர்ந்த எனினுமாம். (எ)

கோலவரைக்குடுமிவந்துகுவலயத்துச்
சாலவமுதுண்டுதாழ்கடலின்மீதெழுந்து
ஞாலமிகப்பரிமேற்கொண்டுநமையாண்டான்
சீலந்திகழுந்திருவுத்தரகோசமங்கை
மாலுக்கரியானைவாயாரநாம்பாடிப்
பூவித்தகங்குழைந்துபொன்னூசலாடாமோ.

(ப - ரை.) கோலம் - அழகாகிய, வரைக்குடுமிவந்து - மலையி னுச்சியினின்று வந்து, குவலயத்து - பூமண்டலத்தில், சால அமுது உண்டு - மிகவும் அமிர்தமுண்டு, தாழ்கடலின்மீது எழுந்து - ஆழ்ந்த கடலின்மேல் எழுந்து, ஞாலம்மிக - உலகத்தில் பரவ, பரிமேற் கொண்டு - குதிரையின்மேற் கொண்டு, நமை ஆண்டான் - நம்மை யாண்டருளினவனது, சீலம் திகழும் - குணம் விளங்குகின்ற, திரு வுத்தரகோசமங்கை - திருவுத்தரகோச மங்கையிலுள்ள, மாலுக்கு அரியானை - திருமாலுக்கும் அரியவனை, நாம் வாயாரபாடி - நாம் வாய்நிரம்பப்பாடி, பூவித்து - பூரித்து, அகம் குழைந்து - மனங்குழை ந்து, பொன்னூசலாடாமோ, எ - று.

(க - ரை.) மலைச்சிகரங்களில் பிறந்து, பூமியில் வந்து, மிகுதி யாக வுணவையுண்டு, கடல்மேலெழுந்து, உலகத்தில் பரவக் குதிரை யின்மேற் கொண்டு நம்மை யாண்டருளினவனாகிய திருவுத்தரகோச மங்கைக் இறைவனை வாயார நாம் பாடிப் பொன்னூசலாடுவோம் என்பது.

(வி - ரை.) அமுது - உணவு. கடலின் - கடல்போல எனி னுமாம். பூவித்தல் - பூரித்தல் (உடல் புளகித்தல்). (அ)

தெங்குலவுசோலைத்திருவுத்தரகோசமங்கை
தங்குலவுசோதித்தனியுருவம்வந்தருளி
யெங்கள்பிறப்பறுத்திட்டெந்தரமுமாட்கொள்வான்
பங்குலவுகோதையுந்தானும்பணிகொண்ட
கொங்குலவுகொன்றைச்சடையான்குணம்பரவிப்
பொங்குலவுபூண்முலையீர்பொன்னூசலாடாமோ.

(ப - ரை.) உலவு - விருத்தியடையாநின்ற, தெங்குசோலை - தென்னஞ்சோலைகள் சூழ்ந்த, திருவுத்தரகோச மங்கை - திருவுத்

தரகோச மங்கையில், தங்கு - தங்கிய, உலவு - விளங்குகிற, தனி - ஒப்பற்ற, சோதி உருவம் - ஒளியுருவமானது, எங்கள் பிறப்பு அறுத்திட்டு - எமது பிறவித்தளையைச் சேதித்து, எம் தரமும் - எங்களினத்தையும், ஆட்கொள்வான் - அடிமைகொள்ள, பங்கு உலவு கோதையும் - வாமபாகத்தில் விளங்குகின்ற உமாதேவியும், தானும் - தானுமாக, வந்தருளி - எழுந்தருளி, பணிகொண்ட - எம்மைத் தொண்டுகொண்ட, கொங்கு உலவு - மணந்தங்கிய, கொன்றை - கொன்றைமலர் மாலையையணிந்த, சடையான் - சடையையுடையவனாகிய சிவபெருமானது, குணம் - மங்களகுணங்களை, பரவி - புகழ்ந்து, பொங்கு உலவு - விளக்கம்பொருந்திய, பூண்முலையீர் - ஆபரணங்களைத்தரித்த தனங்களையுடையீர், பொன்னூசலாடாமோ, எ - று.

(க - ரை.) திருவுத்தரகோசமங்கையி லெழுந்தருளியிருக்கிற சோதியுருவன் வந்து எமது பிறவியை யொழித்து எம்மினத்தையும் ஆட்கொள்வானாயினன், ஆதலால் அவனது கலியாணகுணங்களைப் புகழ்ந்து நாம் பொன்னூசலாடுவோம் என்பது.

(வி - ரை.) கோதை - பூமாலையையணிந்த பெண். பங்குலவு கோதையென்றதனால் உமாதேவியென்றுரைக்கலாயிற்று. பொங்கு - முதனிலைத்தொழிற்பெயர். (௯)

திருச்சிற்றம்பலம்.

---

# அன்னைப் பத்து.

## ஆத்துமபூரணம்.

### கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வேதமொழியர்வெண்ணீற்றர்செம்மேனியர்
நாதப்பறையினரன்னேயென்னும்
நாதப்பறையினர்நான்முகன்மாலுக்கு
நாதரிந்நாதனாரன்னேயென்னும்.

(ப - ரை.) வேதமொழியர் - வேதங்களாகிய சொல்லையுடையவர், வெண்ணீற்றர் - திருவெண்ணீற்றையுடையவர், செம்மேனியர் - செம்மையாகிய திருமேனியை யுடையவர், நாதப்பறையினர் - நாதமாகிய பறையை யுடையவர், அன்னேயென்னும் - அன்னேயென்பள்,

நாதப்பறையினர் - நாதமாகிய பறையையுடையவர், நான்முகன் மாலுக்கும் - பிரமவிட்டுணுக்களுக்கும், நாதர் - தலைவராயிருப்பவர், இ நாதர் - இந்த இறைவரே, அன்னேயென்னும் - அன்னேயென்பள், எ - று.

(க - ரை.) வேதமொழியை யுடையவரும், திருவெண்ணீற்றையுடையவரும், செவ்விய திருமேனியை யுடையவரும், நாதப்பறையை யுடையவருமாயிருக்கின்ற இறைவர் பிரமவிட்டுணுக்களுக்குந் தலைவராயிருக்கின்றனர், அன்னே யென்பாள் என்பது.

(வி - ரை.) நாதம் - நாததத்துவம். இது ஒருபெண் தன் தாய்க்குச் சொல்லியதாகச் சொல்லியது. (க)

கண்ணஞ்சனத்தர் கருணைக்கடலின
ருண்ணின் றுருக்குவ ரன்னேயென் னு
முண்ணின் றுருக்கியு லப்பிலா வானந்தக்
கண்ணீர் தருவரா லன்னேயென் னும்.

(ப - ரை.) கண் அஞ்சனத்தர் - கண்ணில் அஞ்சனமுடையவர், கருணைக்கடலினர் - கருணைக்கடலா யிருப்பவர், உள்நின்று உருக்குவர் - மனத்தில் நின்று உருக்குவர், அன்னேயென்னும் - அன்னேயென்பள்.

உள்நின்று உருக்கி - மனத்தில்நின்று உருக்கி, உலப்பு இல்லா - அழிவில்லாத, ஆநந்தக்கண்ணீர் - இன்பக்கண்ணீரை, தருவர் - அருள்செய்வர், அன்னேயென்னும் - அன்னேயென்பள், எ - று.

(க - ரை.) அஞ்சனக்கண்ணரும், கருணைக்கடலா யிருப்பவருமாகிய இறைவர், என் மனத்தில் நிலைபெற்று அதனை யுருக்கி, அழிவற்ற ஆநந்தக்கண்ணீரைத் தருவர், அன்னேயென்பாள் என்பது.

(வி - ரை.) அஞ்சனம் - மை, கருமையுமாம். உள் - மனம். உலப்பு - உலத்தல் (கெடுதல்). (உ)

நித்தமணாளர்நிரம்பவழகியர்
சித்தத்திருப்பாரன்னேயென்னுஞ்
சித்தத்திருப்பவர்தென்னன்பெருந்துறை
யத்தரானந்தரானன்னேயென்னும்.

(ப - ரை.) நித்தம் - சாசுவதமாகிய, மணாளர் - மணவாளர், நிர ம்ப அழகியர் - பேரழகை யுடையவர், சித்தத்து இருப்பர் - மனத்தி லிருப்பார், அன்னேயென்னும் - அன்னேயென்பள்.

சித்தத்து இருப்பவர் - மனத்திலிருப்பவர், தென்னன்பெருந்து றை அத்தர் - தென்னன்பெருந்துறைக் கடவுளோ, ஆநந்தர் - (அவர்) இன்பவுருவாயிருப்பவர், அன்னேயென்னும் - அன்னேயென்பள்.

(க - ரை.) அழியாத மணவாளரும், பேரழகையுடையவருமா கிய இறைவர் என்மனத்திலிருப்பர், அவர் திருப்பெருந்துறைக் கட வுள், அன்றியும் இன்பவுருவினர், அன்னேயென்பாள் என்பது.

(வி - ரை.) நித்தம் - எப்பொழுது முண்டாயிருத்தல். (ரு)

ஆடரப்பூணுடைத்தோல்பொடிப்பூசிற்றோர்
வேடமிருந்தவாறன்னேயென்னும்
வேடமிருந்தவாகண்டுகண்டென்னுள்ளம்
வாடுமிதுவென்னேயன்னேயென்னும்.

(ப - ரை.) ஆடுஅரபூண் - ஆடுகின்றபாம்பு ஆபரணம், தோல் உடை - தோல்ஆடை, பூசிற்றுபொடி - பூசினது திருவெண்ணீறு, ஓர் வேடம் இருந்த ஆறு-(இவராது) ஒப்பற்ற வேடமிருந்தவாறு என் னே, அன்னே யென்னும் - அன்னேயென்பள்,

வேடம் இருந்த ஆறுகண்டு கண்டு - வேடமிருந்தபடியை நோ க்கி நோக்கி, என்உள்ளம்வாடும் - என்மனம்வாடுகின்றது, இது என் னே - இதுஎன்னே, அன்னேயென்னும் - அன்னேயென்பள், எ-று.

(க - ரை.) இறைவர்க்குப் பூணாயிருப்பது பாம்பு, உடையாயி ருப்பது தோல், பூசியது வெண்ணீறு, இவரது வேடமிருந்தவிதம் என், வேடமிருந்தவிதத்தைப்பார்த்துப் பார்த்து என்மனம் வாடும் இதுவென், அன்னேயென்பாள் என்பது.

(வி - ரை.) தோல் எனவாளா கூறினமையால் புலித்தோல் யானைத்தோல் என்னுமிரண்டுங் கொள்ளப்படும். (சு)

நீண்டகரத்தர்நெறிதருகுஞ்சியர்
பாண்டிநன்னாடாரன்னேயென்னும்
பாண்டிநன்னாடர்பரந்தெழுசிந்தையை
யாண்டன்புசெய்வாரன்னேயென்னும்.

(ப - ரை.) நீண்ட கரத்தர் - நீண்ட கையினையுடையவர், நெறிதரு குஞ்சியர் - நெறித்த சடையையுடையவர், நல் பாண்டிநாடர் - நல்ல பாண்டிநாட்டையுடையவர், அன்னே யென்னும் - அன்னே யென்பள்,

நல் பாண்டிநாடர் - நல்ல பாண்டிநாட்டையுடையவர், பரந்து எழு சிந்தையை - பரவியெழுந்த மனத்தை, ஆண்டு அன்பு செய்வர் - ஆண்டு அன்புசெய்வார், அன்னேயென்னும் - அன்னேயென்பாள், எ - று.

(க - ரை.) நீண்ட கையையுடையவரும், நெறித்த சிகையை யுடையவரும், பாண்டிநாட்டையுடையவருமாகிய இறைவர் விரிந்தெழுகின்ற என் மனத்தைத் தடுத்து ஆண்டு அன்புசெய்வார் அன்னேயென்பாள் என்பது.

(வி - ரை.) குஞ்சி - சடை, சிகையுமாம். பரந்து எழு சிந்தை - பரவி யெழுகின்ற மனம். ஆண்டு என்றது தடுத்து என்னும் பொருளது. அன்பு செய்தல் - கிருபை செய்தல். (௫)

உன்னற்கரியசீருத்தரமங்கையர்
மன்னுவதென்னெஞ்சிலன்னேயென்னு
மன்னுவதென்னெஞ்சின்மாலயன்காண்கிலா
ரென்னவதிசயமன்னேயென்னும்

(ப - ரை.) உன்னற்கு அரிய - நினைத்தற்கரிதாகிய, சீர் - சிறப்பமைந்த, உத்தரமங்கையர் - திருவுத்தரகோசமங்கையையுடையவர், மன்னுவது - நிலைபெறுவது, என் நெஞ்சில் - என் மனத்திலே, அன்னேயென்னும் - அன்னேயென்பள்,

மன்னுவது என் நெஞ்சில் - நிலைபெறுவது என் மனத்தில், மால் அயன் காண்கிலார் - திருமாலும் பிரமனும் காண்கிலர், என்ன அதிசயம் - இது என்ன அதிசயம், அன்னேயென்னும் - அன்னே யென்பள், எ - று.

(க - ரை.) உத்தரகோசமங்கைக் கிறைவராகிய சிவபெருமான் நிலைபெற்றிருப்பது என் மனத்தின்கண்ணே, இவரை அரிபிரமர் காணாதிருத்தல் என்ன அதிசயம், அன்னேயென்பாள் என்பது.

(வி - ரை.) உன்னல் - நினைத்தல். உத்தரகோசமங்கையர் என்பது உத்தரமங்கையர் எனக் குறைந்துவந்தது. மன்னுதல் - நிலைபெறுதல். (௯)

வெள்ளைக்கலிங்கத்தர்வெண்டிருமுண்டத்தர்
பள்ளிக்குப்பாயத்தரன்னேயென்னும்
பள்ளிக்குப்பாயத்தர்பாய்பரிமேல்கொண்டென்
னுள்ளங்கவர்வராலன்னேயென்னும்.

(ப - ரை.) வெள்ளை கலிங்கத்தர் - வெண்பட்டாடையையுடையவர், வெள் திரு முண்டத்தர் - அழகிய வெண்டலையை யுடையவர், பள்ளி குப்பாயத்தர் - (ஆநந்த) நித்திரையாகிய மேற்போர்வையை யுடையவர், அன்னே யென்னும் - அன்னே யென்பள்,

பள்ளி குப்பாயத்தர் - (ஆநந்த) நித்திரையாகிய மேற்போர்வையையுடையவர், பாய்பரி மேல்கொண்டு - பாய்ந்து செல்லும் குதிரைமேலேறிவந்து, என் உள்ளம் கவர்வர் - என் மனத்தைக் கவர்வர், அன்னே யென்னும் - அன்னே யென்பள், எ - று.

(க - ரை.) வெண்பட்டாடையை யுடையவரும், வெண்டலை யுடையவரும், ஆநந்த நித்திரையாகிய மேற்போர்வையை யுடையவருமாகிய இறைவர், குதிரைமேலேறி வந்து என் மனத்தைக் கவர்கின்றார், அன்னே யென்பாள் என்பது.

(வி - ரை.) கலிங்கம் - பட்டாடை. வெண்டிருமுண்டம் - நகுவெண்டலை. குப்பாயம் - மேற்போர்வை. (௭)

தாளியறுகினர்சந்தனச்சாந்தின
ராளெம்மையாள்வராலன்னேயென்னு
மாளெம்மையாளுமடிகளார்தங்கையிற்
றாளமிருந்தவா றன்னேயென்னும்.

(ப - ரை.) தாளி அறுகினர் - தாளியையும் அறுகையும் உடையவர், சந்தனச் சாந்தினர் - சந்தனக் கலவையையுடையவர், எம்மை -

எங்களை, ஆள் ஆள்வர் - அடிமையாளாக ஆளுவர், அன்னே யென்னும் - அன்னே யென்பள்,

எம்மை ஆள் ஆளும் - எங்களை அடிமையாளாக ஆளுகின்ற, அடிகளார் கையில் - அடிகள் கையில், தாளம் இருந்த ஆறு - தாளமிருந்த வரலாறென்னை, அன்னே யென்னும் - அன்னே யென்பள், எ - று.

(க - ரை.) தாளியையும் அறுகையுமுடையவரும், சந்தனக் கலவையையுடையவரும் ஆகிய இறைவர் எம்மை யடிமையாகக்கொண்டு ஆண்டருளுவர், அவர் கையில் தாளமிருந்தவாறென் அன்னே யென்பாள் என்பது.

(வி - ரை.) தாளி - ஓர்கொடி. அறுகு - புல்லின் வகையிலொன்று. (அ)

தையலோர்பங்கினர்தாபதவேடத்த
ரையம்புகுவராலன்னேயென்னு
மையம்புகுந்தவர்போதலுமென்னுள்ள
நையுமிதுவென்னேயன்னேயென்னும்.

(ப - ரை.) தையல் ஓர்பங்கினர் - உமாதேவியாரை ஒருபாகத்திலுடையவர், தாபதவேடத்தர் - தபோவேஷத்தை யுடையவர், ஐயம் புகுவர் - பிச்சையேற்பர், அன்னேயென்னும்-அன்னேயென்பள்,

ஐயம்புகுந்தவர் போதலும் - பிச்சைபுகுந்தவர் செல்லுதலும், என் உள்ளம் நையும் - என்மனம் மெலியாநின்றது, இது என்னே-இதுயாதோ, அன்னேயென்னும் - அன்னேயென்பள், எ - று.

(க - ரை.) பெண்பாகரும், தவவேடமுடையவருமாகிய இறைவர் ஐயம் புகுவார் ஆயினும் அவர் மறைந்துபோதலும் என்மனம் வருந்தும், இது என்ன அதிசயம், அன்னேயென்பாள் என்பது.

(வி - ரை.) தையல் - பெண். தாபதவேடம் - தவசிவேடம்.

கொன்றைமதியமுங்கூவிளமத்தமுந்
துன்றியசென்னியரன்னேயென்னுந்
துன்றியசென்னியின்மத்தமுன்மத்தமே
யின்றெனக்கானவாறன்னேயென்னும்.

(ப - ரை.) கொன்றை மதியமும்-கொன்றைமலரோடு பிறையும், கூவிளம்மத்தமும் - வில்வத்தோடு ஊமத்தமலரும், துன்றிய - பொருந்திய, சென்னியர் - சடாபாரத்தையுடையவர், அன்னேயென்னும் - அன்னேயென்பள்,

துன்றிய - பொருந்திய, சென்னியில்மத்தமே - சடையிலுள்ள ஊமத்தமலரே, இன்று - இப்பொழுது, எனக்கு - எனக்கு, உன்மத்தம் ஆன ஆறு — உன்மத்தத்துக்குக் காரணமானவா றென்னே, அன்னேயென்னும் - அன்னேயென்பள், எ - று.

(க - ரை.) கொன்றைமாலை, பிறை, வில்வம், மத்தம், இவை பொருந்திய சிரத்தை யுடையவராகிய இறைவரது மத்தம்பூ எனக்கு உன்மத்தத்தை யுண்டாக்குகின் றது, அன்னேயென்பாள் என்பது.

(வி- ரை.) மத்தம் - ஊமத்தம். உன்மத்தம் - மயக்கம். (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

# குயிற்பத்து.

## ஆத்துமவிரக்கம்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கீதமினியகுயிலேகேட்டியேலெங்கள்பெருமான்
பாதமிரண்டும்வினவிற்பாதாளமேழினுக்கப்பாற்
சோதிமணிமுடிசொல்லிற்சொல்லிறந்துநின்றதொன்மை
யாதிகுணமொன்றுமில்லானந்தமிலான்வரக்கூவாய்.

(ப - ரை.) கீதம் இனிய - கீதத்தால் இனிதான, குயிலே - கோகிலமே, கேட்டியேல் - கேட்பையாயின், எங்கள் பெருமான் - எம்பெருமானது, பாதம் இரண்டும் வினவின் - திருவடியிரண்டை

லோகங்கள் ஏழினுக்கும் அப்பாற்பட்டன, சோதிமணி முடிசொல்லின் - ஒளியையுடைய ரத்நமகுடத்தைச்சொன்னால், (அது) சொல் இறந்துநின்ற தொன்மை - சொல்லைக்கடந்துநின்ற பழமையாயிருக்கும், ஆதி குணம் ஒன்றும் இல்லான் - முதலும் குணமும் ஆகிய இவற்றின் ஒன்றும் இல்லாதவன், அந்தம் இல்லான் - இறுதியில்லாதவன், வர - வரும்படி, கூவாய் - அழைப்பாய், எ - று.

(க - ரை.) இனிதாகிய இசையைப்பாடுகின்ற குயிலே, பாதாளமேழுக்கும் அப்பாற்பட்ட திருவடியையும், சொல்லளவைக்கடந்துநின்ற திருமுடியையும் உடையவரும், பழமைமுதலிய குணங்களொன்றுமில்லாதவரும், முடிவில்லாதவரும் ஆகிய இறைவர் வரும் வண்ணம் நீ அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) தொன்மையாதிகுண மொன்றுமில்லான் என்பதற்கு பழமை முதலிய குணங்கள் சிறிதுமில்லாதவன் என்றுரைத்தலும் பொருந்தும். இந்தப் பத்துகுயிலைநோக்கிச் சொல்லியது. (க)

ஏர்தருமேழுலகேத்தவெவ்வுருவுந்தன்னுருவா
யார்கலிசூழ்தென்னிலங்கையழகமர்வண்டோதரிக்குப்
பேரருளின்பமளித்தபெருந்துறைமேயபிரானைச்
சீரியவாயாற்குயிலேதென்பாண்டிநாடனைக்கூவாய்.

(ப - ரை.) ஏர்தரும் - அழகைச்செய்கின்ற, ஏழுலகு ஏத்த - ஏழுலகத்தாரும் துதிக்க, எவ்வுருவு - எந்த வுருவும், தன் உரு ஆய் - தன்னுருவாகி, ஆர்கலிசூழ் - கடல்சூழ்ந்த, தென் இலங்கை - தென்னிலங்கையில், அழகு அமர் வண்டோதரிக்கு - அழகமைந்த வண்டோதரிக்கு, பேரருள் - தன் பெருங்கருணையால், இன்பம் அளித்த - இன்பத்தைக்கொடுத்த, பெருந்துறை மேயபிரானை - திருப்பெருந்துறையி லெழுந்தருளியிருக்கிற உபகாரகுணமுள்ளவனை, தென் பாண்டி நாடனை - தென்பாண்டிநாட்டையுடையவனை, குயிலே - கோகிலமே, சீரியவாயால் கூவாய் - சிறந்த உன்வாயினால் அழைப்பாய், எ - று.

(க - ரை.) குயிலே, ஏழுலகும் துதிக்கும்படி எவ்வுருவும் தன்னுருவேயாய், தென்னிலங்கையில் வண்டோதரிக்குத் தன் பெருங் கருணையால் இன்பங்கொடுத்த திருப்பெருந்துறைப்பெருமானை அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) ஆர்கலி - கடல். வண்டோதரி - இராவணன் மனைவி. (உ)

நீலவுருவிற்குயிலேநீண்மணிமாடநிலாவுங்
கோலவழகிற்றிகழுங்கொடிமங்கையுள்ளுறைகோயிற்
சீலம்பெரிதுமினியதிருவுத்தரகோசமங்கை
ஞாலம்விளங்கவிருந்தநாயகனைவரக்கூவாய்.

(ப - ரை.) நீல உருவின் - நீல நிறத்தையுடைய, குயிலே - கோகிலமே, நீள் - நீண்ட, மணி மாடம் நிலாவும் - ரத்நமயமான மாளிகைகள் விளங்குகின்ற, கோலம் அழகின் - பேரழகோடு, திகழும் - பிரகாசிக்கின்ற, கொடிமங்கை - பூங்கொடிபோலு மங்கையர், உள் உறை கோயில் - உள்ளே வாழ்கின்ற கோயிலின், சீலம் பெரிதும் இனிய - குணத்தால் மிகவும் இனிமையாகிய, திருவுத்தரகோசமங்கை - திருவுத்தரகோச மங்கையில், ஞாலம் விளங்க இருந்த - உலகம் விளங்கும்படி எழுந்தருளி யிருந்த, நாயகனை - தலைவனை, வர - வரும்படி, கூவாய் - அழைப்பாய், எ - று.

(க - ரை.) நீல நிறமுள்ள குயிலே, திருவுத்தரகோச மங்கையில் எழுந்தருளியிருக்கிற இறைவனை நீ அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) உரு - நிறம். சீலம் - குணம். கோலம், அழகு இவ்விரண்டும் கூடிப் பேரழகு என்னும் பொருள் பட்டன. கொடி மங்கை - திருமகள் எனினுமாம். (ங)

தேன்பழச்சோலைபயிலுஞ்சிறுகுயிலேயிதுகேணீ
வான்பழித்திம்மண்புகுந்துமனிதரையாட்கொண்டவள்ள
லூன்பழித்துள்ளம்புகுந்தென்னுணர்வதுவாயவொருத்தன்
மான்பழித்தாண்டமென்னோக்கிமணாளனைநீவரக்கூவாய்.

(ப - ரை.) தேன் பழம் சோலை பயிலும்-தேன்போலும் இனிமையாகிய பழங்களைத் தருகின்ற சோலைகளில் சஞ்சரிக்கிற, சிறு குயிலே - சிறிய குயிலே, இது - இதனை, நீ கேள் - நீ கேட்பாயாக, வான் பழித்து - விண்ணுலகத்தைப் பழித்து, இம்மண் புகுந்து - இந்த மண்ணுலகத்தி லெழுந்தருளி, மனிதரை ஆட்கொண்ட வள்ளல் - மனிதரை யடிமைகொண்ட வள்ளல், ஊன் பழித்து - உடம்

பைப் பழித்து: உள்ளம் புகுந்து - என்மனத்திற் புகுந்து, என் உண ர்வு ஆய - என் அறிவுருவாகிய, ஒருத்தன் - ஒப்பற்றவன், மான் பழி த்து - மானினது நோக்கத்தைப் பழித்து, ஆண்ட-அடிமைகொண்ட, மெல் நோக்கி - மென்மையாகிய நோக்கத்தை யுடையவளாகிய உமா தேவிக்கு, மணாளனை - மணவாளனை, வர - வரும்படி, நீ கூவாய் - நீ அழைப்பாய், எ - று.

(க - ரை.) தேன்பழச்சோலையில் வாழ்கின்ற குயிலே, விண் ணுலகை யிகழ்ந்து இந்த மண்ணுலகில் வந்து மனிதனை யாட்கொ ண்ட உதார சீலனும், என் மனத்திற் புகுந்து என் அறிவுருவமாகிய ஒப்பற்றவனும், உமாதேவிக்கு மணாளனுமாகிய சிவபெருமானை நீ அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) பயிலுதல் - சஞ்சரித்தல். வள்ளல் - உதாரகுண முள்ளவன். மான் என்றது, மானினது நோக்கத்தை. (சு)

சுந்தரத்தின்பக்குயிலேசூழ்சுடர்ஞாயிறுபோல
அந்தரத்தேநின்றிழிந்திங்கடியவராசையறுப்பான்
முந்துநடுவுமுடிவுமாகியமூவரறியாச்
சிந்துரச்சேவடியானைச்சேவகனைவரக்கூவாய்.

(ப - ரை.) சுந்தரத்து - அழகினால், இன்பம் - இன்பத்தை, தருகிற, குயிலே - கோகிலமே, சூழ் சுடர் - சூழ்ந்த கிரணங்களை யுடைய, ஞாயிறுபோல-சூரியனைப்போல, அந்தரத்தே நின்று இழிந்து பரமாகாயத்தினின்று மிறங்கி, இங்கு - இங்குள்ள, அடியவர் - அடி யார்களுடைய, ஆசை - குற்றத்தை, அறுப்பான் - அறுப்பவனாகிய முந்தும் - முதலும், நடுவும் - இடையும், முடிவும் - இறுதியும் ஆகிய-ஆன, மூவர் அறியா-மூவருமறியாத, சிந்துரம் சேவடியானை மிகவும் செம்மையாகிய திருவடியை யுடையவனை, சேவகனை - வீ ரனை, வர - வரும்படி, நீ கூவாய் - நீ அழைப்பாய், எ - று.

(க - ரை.) அழகுள்ள குயிலே, சூரியன்போல ஆகாயத்தே நின்று இங்கு இறங்கி அடியாரது குற்றத்தை யறுப்பவனும், முதல் நடு இறுதிகளாகிய மூவராலும் அறியவொண்ணாத செவந்த திருவடி யையுடையவனுமாகிய சிவபெருமானை நீ அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) ஞாயிறு - சூரியன். ஆசு - குற்றம். சிந்தூரம் - செவப்பு. (௫)

இன்பந்தருவன்குயிலேயேழுலகும்முழுதாளி
யன்பனமுதளித்தூறுமானந்தன்வான்வந்ததேவ
னன்பொன் மணிச்சுவடொத்தநற்பரிமேல்வருவானைக்
கொம்பின் மிழற்றுங்குயிலேகோகழிநாதனைக்கூவாய்.

(ப - ரை.) குயிலே - கோகிலமே, இன்பம்தருவன் - உனக்கு இன்பத்தைச் செய்வேன், ஏழ் உலகும் - ஏழுலகத்தையும், முழுது ஆளி - முற்றும் ஆள்வோன், அன்பன் - யாவரிடத்தும் அன்புடையவன், அமுது அளித்து ஊறும் - அமிர்தத்தை தந்தூறுகின்ற, ஆநந்தன் - இன்பவடிவினன், வான்வந்த தேவன் - விண்ணினின்றும் எழுந்தருளினதேவன், நன்பொன்மணி — நல்ல பொன்மணி என்பவற்றின், சுவடு ஒத்த - தழும்புபோன்ற புள்ளிகள் உள்ள, நல் பரிமேல்வருவானை-நல்ல குதிரையின்மீது வந்தவனை, கோகழிநாதனை-கோகழிக்குத் தலைவனை, கொம்பில் மிழற்றும் குயிலே - கொம்பிலிருந்து மிழற்றுகின்ற குயிலே, கூவாய் - அழைப்பாய், எ - று.

(க - ரை,) குயிலே, உனக்கு இன்பத்தை யுண்டாக்குவேன், குதிரைச்சேவகனாய்வந்த சிவபெருமானை நீ அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) ஆளி - ஆள்வோன். சுவடு - புள்ளிகளோ யுரைத்திற்று. மிழற்றுதல் - குழறிப்பேசுதல். (நிரம்பா மென்சொல்லைச் சொல்லுதல்.) கோகழிநாதன் - திருவாவடுதுறையிலெழுந்தருளியவிறைவன். (௬)

உன்னையுகப்பன்குயிலேயுன்றுணைத்தோழியுமாவன்
பொன்னையழித்தநன்மேனிப்புகழிற்றிகழுமழகன்
மன்னன்பரிமிசைவந்தவள்ளல்பெருந்துறைமேய
தென்னவன்சேரலன்சோழன்சீர்ப்புயங்கன்வரக்கூவாய்.

(ப - ரை.) உன்னை உகப்பன் - உன்னை விரும்புவேன், குயிலே - கோகிலமே, உன் துணைதோழியும் ஆவன் - உனக்குத்துணையாகிய தோழியுமாவேன்; பொன்னை அழித்த - பொன்னை வென்ற, நல்

மேனி - நல்ல திருமேனியினாலும், புகழின் - புகழினாலும், திகழும்-
விளங்குகின்ற, அழகன் - அழகன், மன்னன் - யாவர்க்கும் அர
சன், பரிமிசைவந்தவள்ளல் - குதிரையின் மீதேறிவந்தவள்ளல், பெ
ருந்துறைமேய - திருப்பெருந்துறையில் எழுந்தருளிய, தென்ன
வன் - பாண்டியன், சேரலன் - சேரன், சோழன் - சோழன், சீர் -
சிறப்பமைந்த, புயங்கன் - புயங்கன், வர - வருமாறு, கூவாய்-
அழைப்பாய்.

(க - ரை.) குயிலே, உன்னைவிரும்புவேன், உன்தோழியுமா
வேன், பொன்னை வென்றதிருமேனியையுடைய அழகனும், குதி
ரைமேலேறி வந்தவள்ளலும், திருப்பெருந்துறைப் பெருமானுமாகிய
இறைவனை நீ அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) பொன்னைப்பழித்த என்றது பொன்னினும் மிக்க
ஒளியுள்ள என்றபடி. புயங்கன் - புயங்கம் என்னும் கூத்தையுடைய
வன். (௭)

வாவிங்கேநீகுயிற்பிள்ளாய்மாலொடுநான்முகன்றேடி
யோவியவருன்னிநிற்பவொண்டழல்விண்பிளந்தோங்கி
மேவியன்றண்டங்கடந்துவிரிசுடராய்நின்றமெய்யன்
றாவிவரும்பரிப்பாகன்றாழ்சடையோன்வரக்கூவாய்.

(ப - ரை.) குயில் பிள்ளாய்-குயிற்பிள்ளையே, நீ இங்கேவா - நீ
இவ்விடத்துக்கு வருவாயாக, மாலொடு-திருமாலோடு, நான்முகன் -
பிரமனும், தேடி - முதலிற்றேடுதலைச்செய்தும் (காணப்பெறாமை
யின்) ஓவி - (அத்தேடுந்தொழிலினின்று) நீங்கி, அவர் - அவ்விரு
வரும், உன்னி நிற்ப - தியானித்துநிற்க, ஒண் தழல் - ஒட்பமாகிய
நெருப்பு, விண்பிளந்து ஓங்கி-ஆகாயத்தைப்பிளந்து உயர்ந்து, மேவி
பொருந்தி, அன்று - அந்நாளில், அண்டம்கடந்து - விண்ணுலகங்
ளெல்லாவற்றையும் தாண்டி, விரி சுடர் ஆய் நின்ற - விரிந்த சோதி
வடிவாய் நின்ற, மெய்யன் - திருமேனியையுடையவன், தாவிவ
ரும் - தாவிவருகின்ற, பரி - குதிரைகளுக்கு, பாகன் - பாகனாயிரு
ந்தவன், தாழ்சடையோன் - நீண்டசடாபாரத்தையுடையவன், வர -
வரும்படி, கூவாய் - அழைப்பாய், எ - று.

(க - ரை.) குயிற்பிள்ளாய், இங்கேவா, அரிபிரமர் தேடிக்காணவொண்ணாமையால் தேடுதலொழிந்து நிற்க, அவர்களுக்கிடையே நெருப்புருவமாகி நிமிர்ந்து நின்றவனும், குதிரைப்பாகனுமாகிய சிவபெருமானை நீ அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) குயிற்பிள்ளை - சிறு குயில். (குயிற்குஞ்சு) உன்னுதல் - ஆலோசித்தலுமாம். (அ)

காருடைப்பொன்றிகழ்மேனிக்கடிபொழில்வாழுங்குயிலே
சீருடைச்செங்கமலத்திற்றிகழுருவாகியசெல்வன்
பாரிடைப்பாதங்கள்காட்டிப்பாசமறுத்தெனையாண்ட
வாருடையம்பொனின்மேனியமுதினைநீவரக்கூவாய்.

(ப - ரை.) கார் உடை -கருநிறத்தையுடைய, பொன் திகழ் மேனி - பொன்போல விளங்கும் மேனியையும் உடைய, கடிபொழில் வாழும் - மணத்தையுடைய சோலையில் வாழ்கின்ற, குயிலே - கோகிலமே, சீர் உடை - சிறப்பினையுடைய, செம் கமலத்தின்-செந்தாமரைமலர்போல, திகழ் - விளங்குகின்ற, உரு ஆகிய - திருமேனியையுடைய, செல்வன் - ஐசுவரியவான், பாரிடை - நிலவுலகத்தில், பாதங்கள் காட்டி - தன் திருவடிகளைக்காட்டி, பாசம் அறுத்து - பாசபந்தத்தைச் சேதித்து, என்னை ஆண்ட - என்னையாண்டருளின, ஆர் உடை - ஆத்திமாலையையுடைய, அம்பொனின்மேனி - அழகிய பொன்போலுந் திருமேனியையுடைய, அமுதினை - அமிர்தம்போல்பவனை, வர - வரும்படி, நீ கூவாய் - நீ அழைப்பாய், எ - று.

(க - ரை.) கருநிறப்பொன்போல விளங்குகின்ற உடம்பையுடைய குயிலே, சிறந்த செந்தாமரை மலர்போல விளங்குகின்ற திருவுருவத்தையுடைய செல்வனும், இவ்வுலகத்தில் தன் திருவடியைக் காட்டி என்பாசத்தைச் சேதித்து என்னை யாண்டருளின பொன்மேனியனுமாகிய சிவபெருமானை நீ அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) காருடைப் பொன் - கருநிறத்தையுடைய பொன். கடி - விளக்கம் எனினுமமையும். ஆர் உடை என்பதற்கு அருமை [illegible]யுடைய என்றுரைத்தலுமாம். (கூ)

கொந்தணவும்பொழிற்சோலைக்கூங்குயிலேயிதுகேணீ
யந்தணனாகிவந்திங்கேயழகியசேவடிகாட்டி
யெந்தமராமிவனென்றிங்கென்னையுமாட்கொண்டருளுஞ்
செந்தழல்போற்றிருமேனித்தேவர்பிரான்வரக்கூவாய்.

(ப - ரை.) கொந்து அணவும் - பூங்கொத்துக்கள் பொருந்திய, பொழில் சோலை - பெருமையமைந்த சோலையில், கூவும் குயிலே - கூவாநின்ற குயிலே, நீ இதுகேள் - நீ யிதனைக்கேட்பாயாக, இங்கே அந்தணன் ஆகிவந்து-இவ்வுலகில் வேதியனாகிவந்து, அழகிய சேவடிகாட்டி-அழகிய செம்மையாகிய திருவடியைக் காட்டி, எம்தமர் ஆம் இவன் என்று - எமது அன்பரிலொருவனாகு மிவனென்று, இங்கு - இவ்விடத்தில், என்னையும் ஆட்கொண்டருளும்-என்னையும் அடிமை கொண்டருளின, செம் தழல் போல் திருமேனி - செந்தீயைநிகர்த்த திருமேனியையுடைய, தேவர்பிரான் - தேவர்பெருமான், வர - வரும்படி, கூவாய் - அழைப்பாய், எ - று.

(க - ரை.) பூங்கொத்துக்கள் நிறைந்த சோலையிலுள்ள குயிலே, இவ்வுலகத்தில் ஒரு அந்தணவுருவாய் வந்து தன் அழகிய திருவடியைக் காட்டி, என்னையு மாட்கொண்டருளிய செந்தழல்போலுந் திருமேனியையுடைய சிவபெருமானை நீ அழைப்பாயாக என்பது.

(வி - ரை.) கொந்து - கொத்து. அணவுதல் - பொருந்துதல். கூவும் என்பது இடையில் வகரவுகரம்கெட்டுக் கூம் எனவந்தது. என்னையும் என்றவும்மை இழிவுசிறப்பு. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# திருத்தசாங்கம்.

## அடிமைகொண்டமுறைமை.

நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

ஏராரிளங்கிளியேயெங்கள்பெருந்துறைக்கோன்
சீரார்திருநாமந்தேர்ந்துரையா—யாரூரன்
செம்பெருமான்வெண்மலரான்பாற்கடலான்செப்புவபோ
லெம்பெருமான்றேவர்பிரானென்று.

(ப - ரை.) ஏர் ஆர் - அழகுபொருந்திய, இளமைகிளியே-இளங்கிள்ளையே, எங்கள் - எம்முடைய, பெருந்துறைக்கோன் - திருப்பெருந்துறைக் கரசனாகிய சிவபெருமானது, சீர் ஆர் - சிறப்புப்பொருந்திய, திருநாமம் - திருநாமங்களை, தேர்ந்து உரைராய் - ஆராய்ந்து சொல்லுவாயாக, (அவனது திருநாமங்களை யென்னென்று தேர்ந்துரைப்பேனெனின்), ஆரூரன் - திருவாரூரனே, செம்பெருமான் - செம்மையாகிய திருமேனியையுடைய பெருமானே, வெண்மலரான் - வெள்ளியமலரை யாசனமாகவுடைய பிரமனும், பால்கடலான் - பாற்கடலையுடைய திருமாலும், செப்புவபோல் - சொல்லுவனபோல, எம்பெருமான் - எம்பெருமானே, தேவர் பிரான் - தேவர் பிரானே, என்று - என்று சொல்லி, எ - று.

(கு - ரை.) கிளியே, எமது பெருந்துறைப் பெருமானது திருநாமங்களை ஆராய்ந்து சொல்லுவாயாக, அவனது திருநாமங்கள் எவையெனின், ஆரூரன், செம்பெருமான், எம்பெருமான், தேவர் பிரான், என்பவைகளே என்பது.

(வி - ரை.) நாமம் பால்பகா அஃறிணைப்பெயர், (சாதி யொருமையுமாம்.) ஆரூரன், செம்பெருமான், எம்பெருமான், தேவர் பிரான் என்பன அண்மை விளிகளாதலால் இயல்பாயின. வெண்மலரான் - வெண்டாமரை மலரையுடையவன். (க)

ஏதமிலாவின்சொன் மரகதமேயேழ்பொழிற்கு
நாதனமையாளுடையானாடுரையாய்—காதலவர்க்
கன்பாண்டுமீளாவருள்புரிவானாடென்றுந்
தென்பாண்டிநாடேதெளி.

(ப - ரை.) ஏதம் இல்லா - குற்றமில்லாத, இன்சொல் - இன்சொல்லையுடைய, மரகதமே - மரகதம்போலுங் கிள்ளையே, ஏழ் பொழிற்கும் நாதன் - ஏழுலகத்துக்குந் தலைவன், நம்மை ஆள் உடையான் - நம்மை அடிமையாகவுடையவனாகிய சிவபெருமானது, நாடு உரையாய் - நாட்டைச் சொல்வாயாக, காதலவர்க்கு - அன்பர்க்கு, அன்பு ஆண்டு - கருணையால் ஆட்கொண்டு, மீளா - பிறவிக்கு மீண்டும் வாராதபடி, அருள்புரிவான் - அருள்செய்வோனது, நாடு - நாடானது, என்றும் - எப்பொழுதும், தென்பாண்டி நாடே - தென்பாண்டி நாடே யாம், தெளி - இதனைத் தெளிவாயாக, எ - று.

(க - ரை.) இன்சொல்லையுடைய கிளியே, ஏழுலகுக்கும் நாயகனும், நம்மை ஆளாகவுடையவனுமாகிய சிவபிரானது நாட்டைச் சொல்வாயாக. அவனது நாடு யாதெனின், தன் அன்பர்களுக்கு மீளாக்கதியைத் தந்தருளுகின்ற அவ்விறைவனது நாடாவது தென்பாண்டி நாடே யாம் என்பது.

(வி - ரை.) மரகதம் - பச்சை, அது பச்சைநிறத்தையுடைய கிளியை யுணர்த்தலால் ஆகுபெயர். இதனைப் பண்பாகு பெயராக வாயினும், உவமையாகு பெயராகவாயினும் கொள்க. (௧.)

தாதாடுபூஞ்சோலைத்தத்தாய்நமையாளு
மாதாடும்பாகத்தன்வாழ்பதியென்—கோதாட்டிப்
பத்தரெல்லாம்பார்மேற்சிவபுரம்போற்கொண்டாடு
முத்தரகோசமங்கையூர்.

(ப - ரை.) தாது ஆடு பூ - தாதுபொருந்திய மலர்களையுடைய, சோலை - சோலையிலுள்ள, தத்தாய் - கிள்ளையே, நம்மை ஆளும் - நம்மை யாண்டருள்கின்ற, மாது ஆடும் பாகத்தன் - உமாதேவியால் ஆளப்படுகின்ற பாகத்தையுடையவன், வாழ்பதி என் - வாழ்கின்றவூர் என்று சொல்வாயாக, (அவ்வூர் யாதென்னின்,) பத்தர் எல்லாம் -

பத்தரெல்லாரும், பார்மேல் - உலகத்திலுள்ள, சிவபுரம்போல் - சிவபுரம்போல, கோதாட்டிக் கொண்டாடும் — சீராட்டிக் கொண்டாடுகின்ற, உத்தரகோசமங்கை - திருவுத்தரகோசமங்கையே, ஊர் - அவனது ஊராம், எ- று.

(க - ரை.) பூஞ்சோலைக் கிளியே, சிவபெருமானது ஊரைச் சொல்வாயாக, அவனது ஊர் யாதெனின், பத்தரெல்லாரும் உலகத்திலுள்ள சிவபுரம்போலக் கொண்டாடுகின்ற திருவுத்தரகோசமங்கையேயாம் என்பது.

(வி - ரை.) தாது - மகரந்தம். தத்தை - கிளி. அது ஈறுதிரிந்து தத்தாய் என விளியாயிற்று. என் - என்று சொல். (௩.)

செய்யவாய்ப்பைஞ்சிறகிற்செல்வீநஞ்சிந்தைசே
ரையன்பெருந்துறையா றாறுரையாய்—தையலாய்
வான்வந்தசிந்தைமலங்கழுவவந்திழியு
மானந்தங்காணுடையா றாறு.

(ப - ரை.) செய்ய வாய்-சிவந்தவாயினையும், பைஞ்சிறகின்-பசுமையாகிய சிறகினையுமுடைய, செல்வீ - செல்வியே, நம் சிந்தைசேர் - நமது மனத்திற் சேர்ந்த, ஐயன் - எமது தந்தையாகிய, பெருந்துறையான் - திருப்பெருந்துறையை யுடையவனது, ஆறு உரையாய்-நதியைச் சொல்லுவாயாக, (அந்த நதியாதெனின்) தையலாய் - பெண்ணே, வான் வந்த சிந்தை - பெருமை யமைந்த மனத்தினது, மலங்கழுவ - மலத்தைச் சுத்திகரிக்க, வந்து இழியும் - வந்திறங்குகின்ற, ஆநந்தம் - ஆநந்தமே, உடையான் ஆறு - உடையவனது நதியாகும், எ - று.

(க - ரை.) செவ்வாயையும் பசுமையாகிய சிறகையுமுடைய கிளியே, பெருந்துறையனது ஆற்றைச்சொல்வாயாக, அவனது ஆறு யாதெனின், அன்பரது மனமாசையொழிக்க வந்திறங்கின ஆநந்தமே அவனது ஆறுவது என்பது.

(வி - ரை.) வாய் என்றது - மூக்கை. செல்வி - புதல்வி. தையலாய் என்றதனால் பெண்கிளியென்பது பெறப்பட்டது. (௪)

கிஞ்சுகவாயஞ்சுகமேகேடில்பெருந்துறைக்கோன்
மஞ்சன் மருவுமலைபகராய்—நெஞ்சத்
திருளகலவாள்வீசியின்பமருமுத்தி
யருளுமலையென்பதுகாணாய்ந்து.

(ப - ரை.) கிஞ்சுகம் வாய் - முருக்கம் பூப்போன்ற வாயையுடைய, அம் சுகமே - அழகிய கிள்ளையே, கேடு இல் - அழிவில்லாத, பெருந்துறைக்கோன் - திருப்பெருந்துறைக்குத் தலைவனாகிய, மஞ்சன் - அழகன், மருவும் - உறைகின்ற, மலைபகராய், மலையைச் சொல்வாயாக, (அம்மலை யாதெனின்) ஆய்ந்து - ஆராய்ந்து, நெஞ்சத்து இருள் அகல - மனத்தின் கண்ணதாகிய அஞ்ஞானம் நீங்க, வாள் வீசி - ஒளி வீசி, இன்பு அமரும் - இன்பமமைந்த, முத்தி - மோக்ஷத்தை, அருளும் மலையென்பது - அருளுகின்ற மலையென்று சொல்லப்படுவதே யாகும், எ - று.

(க - ரை.) முருக்கம் பூப்போன்ற வாயையுடைய கிள்ளையே, அழிவற்ற பெருந்துறைப் பெருமானது மலையைச் சொல்வாயாக, அவனது மலை யாதெனின், மனவிருளொழிய ஒளிவீசி முத்தியை யருள்கின்ற மலையே அவனது மலையாம் என்பது.

(வி - ரை.) சுகம் - கிளி. மஞ்ச - அழகு. பகர்தல் - சொல்லுதல். வாள் - ஒளி. (௫)

இப்பாடேவந்தியம்புகூடுபுகலென்கிளியே
யொப்பாடாச்சீருடையானூர்வதென்னே—யெப்போதுந்
தேன்புரையுஞ்சிந்தையராய்த்தெய்வப்பெண்ணேத்திசைப்ப
வான்புரவியூருமகிழ்ந்து.

(ப - ரை.) என் கிளியே - என் கிள்ளையே, கூடு புகல் - கூட்டிற்புகுதற்க, இப்பாடே வந்து இயம்பு - இவ்விடத்தே வந்து பேசுவாயாக, ஒப்பு ஆடா - உவமை நடையாடாத, சீர் உடையான் - சிறப்பையுடையவனாகிய சிவபெருமான், ஊர்வது என் - ஏறி நடத்துவது யாது அதனைச் சொல்வாயாக, (அஃது யாதெனின்) எப்போதும் - எப்பொழுதும், தேன்புரையும் - தேனையொக்கின்ற, சிந்தையராய் - மனத்தையுடையராய், தெய்வப்பெண் ஏத்து இசைப்ப - தெய்

வமரதர் வாழ்த்துச்சொல்ல, வான்புரவி - ஆகாயமாகிய புரவியை, மகிழ்ந்து ஊரும் - மகிழ்ந்து ஊருவர், எ - று.

(க - ரை.) என் கிளியே, கூடுபுகாமல் இவ்விடத்தே வந்து ஒப்பற்ற சிவபெருமானது ஊர்தியைச் சொல்வாயாக, அவனது ஊர்தி யாதெனின், ஆகாயமே அவனது ஊர்தியாம் என்பது.

(வி - ரை.) பாடு - இடம், பக்கம் எனினுமாம். ஊர்தல் - செலுத்துதல். புரைதல் - நிகர்த்தல். இசைத்தல் - சொல்லுதல். வான் - ஆகாயம், அது இவ்விடத்துச் சிதாகாயத்தை யுணர்த்திற்று.

கோற்றேன்மொழிக்கிள்ளாய்கோதில்பெருந்துறைக்கோன்
மாற்றாரைவெல்லும்படைபகரா—யேற்றா
ரழுக்கடையாநெஞ்சுருகமும்மலங்கள்பாயுங்
கழுக்கடைகாண்கைக்கொள்படை.

(பு - ரை.) கோல் தேன்மொழி - கொம்பிற் கட்டிய தேன் போலும் மொழியை யுடைய, கிள்ளாய் - கிள்ளையே, கோது இல் - குற்றமற்ற, பெருந்துறைக்கோன் - திருப்பெருந் துறைக்கு அரசனாகிய சிவபெருமான், மாற்றாரைவெல்லும் - பகைவரைவெல் லுகின்ற, படை - ஆயுதத்தை, பகராய் - சொல்வாயாக, (அப்படை யாதெனின்) ஏற்றார் - எதிர்ந்தவருடைய, அழுக்கு அடையா - மல மடையாத, நெஞ்சத்து-மனத்தில், மும்மலங்கள் பாயும் - மும்மலங்க ளைப் பாயாநின்ற, கழுக்கடை - சூலமே, கைக்கொள்படை-அவன் கைக்கொள்ளும் படையாம், எ - று.

(க-ரை.) இன்சொல்லையுடைய கிளியே, பெருந்துறைக்கோன் கைக்கொண்டிருக்கும் படையைச் சொல்வாயாக, அவனது படை யாதெனின், பரிசுத்தமான மனமுருகும்படி மும்மலங்களை யழிக்கி ன்ற சூலமே அவனது படையாம் என்பது.

(வி - ரை.) மாற்றார் - பகைவர். படை - ஆயுதம். மும்மலமா வது - ஆணவம், கன்மம், மாயை. பாயும் என்பதற்கு, அறவே நீக் குமென்பதுபொருள். கழுக்கடை - சூலம். (எ)

இன்பான்மொழிக்கிள்ளாயெங்கள்பெருந்துறைக்கோன்
முன்பான்முழங்குமுரசியம்பா—யன்பாற்
பிறவிப்பகைகலங்கப்பேரின்பத்தோங்கும்
பருமிக்கநாதப்பறை.

(ப - ரை.) இன் - இனிய, பால் - பால்போன்ற, மொழி - மொழியினையுடைய, கிள்ளாய் - கிள்ளையே, எங்கள் பெருந்துறைக் கோன் - எங்கள் திருப்பெருந்துறைக் கரசனாகிய சிவபெருமானது, முன்பால் - சந்நிதியில், முழங்கும் - சத்திக்கின்ற, முரசு இயம்பாய் - முரசைச் சொல்வாயாக, (அம்முரசுயாதெனின்) அன்பால் - அன்பினால், பிறவிப்பகை கலங்க - பிறவியாகிய பகைவன் கலங்கும்படி, பேரின்பத்து ஓங்கும் - பேரானந்தத்தோடுயர்ந்த, பருமிக்க - பெருமை மிகுந்த, நாதப்பறை - நாதமாகிய பறையேயாம், எ - று.

(க - ரை.) பால்போலும் இன்சொல்லையுடைய கிளியே, எங்கள் பெருந்துறைக்கோன் சந்நிதியில் ஒலிக்கின்ற முரசத்தைச்சொல்வாயாக, அவனது முரசுயாதெனின், அன்பாலு பிறவிப்பகை கலங்கும்படி ஒலிக்கின்ற நாதப்பறையே அவனது பறையாம் என்பது.

(வி - ரை.) முரசு - பேரிகை. நாதம் - நாதத்துவம்.

ஆயமொழிக்கிள்ளாயள்ளூறுமன்பர்பால்
மேயபெருந்துறையான்மெய்த்தாரென் — றீயவினை
நாளுமணுகாவண்ணநாயேனையாளுடையான்
றாளியறுகாமுவந்ததார்.

(ப - ரை.) ஆய மொழி - ஆராய்ந்த மொழியினையுடைய, கிள்ளாய் - கிள்ளையே, அள்ளூறும் அன்பர்பால் - அள்ளூறுகின்ற அன்பரிடத்து, மேய - பொருந்திய, பெருந்துறையான் - திருப்பெருந்துறையையுடையவனது, மெய்த்தார் என் - உண்மையாகிய மாலையென்னுதி, (அம்மாலையாதெனின்) தீயவினை - தீமையாகிய வினைகள், நாளும் அணுகாவண்ணம் - எந்நாளும் அடையாவண்ணம், என்னை ஆள் உடையான் - என்னையாளுதலுடைய சிவபெருமான், உவந்ததார் - விரும்பி யணிந்தமாலை, தாளி அறுகு ஆம் - தாளியறுகு என்பவைகளேயாம், எ - று.

(க - ரை.) ஆராய்ந்த மொழியையுடைய கிளியே, திருப்பெருந்துறையானது மாலையைச் சொல்வாயாக, அவனது மாலையாதெனின், தாளியும் அறுகுமேயாம் என்பது.

(வி - ரை.) ஆயமொழி - ஆராய்ந்த குற்றமற்றமொழி, அன்றியும், ஆயம் - கூட்டமெனினும் பொருந்தும் இதமாகிய மொழி எனினுமாம். அன்ருறுதல் - என்புருகுதல். தார் - மாலை. (௯)

சோலைப்பசுங்கிளியேதூநீர்ப்பெருந்துறைக்கோன்
கோலம்பொலியுங்கொடிகூறாய்—சாலவு
மேதிலார்துண்ணென்னமேல்விளங்கியேர்காட்டுங்
கோதிலாவேறுங்கொடி.

(ப - ரை.) சோலை - சோலையில்வாழ்கிற, பசுங்கிளியே - பசுங்கிள்ளையே, தூநீர் - பரிசுத்தமான குணங்களுள்ள, பெருந்துறைக்கோன் - திருப்பெருந்துறைக் கரசனாகிய சிவபெருமானது, கோலம்பொலியும் - அழகுமிகுந்த, கொடி - துவசத்தை, கூறாய் - சொலாய், (அக்கொடியாதெனின்) சாலவும் - மிகவும், ஏதிலார் - பகைவர், துண்ணென்ன - அஞ்சும்படி, மேல்விளங்கி - மேலாய்விளங்கி, ஏர்காட்டும் - அழகைச்செய்கின்ற, கோது இல்லா - குற்றமில்லாத, ஏறு - இடபமே, கொடி ஆம் - துவசமாம், எ - று.

(க - ரை.) சோலையில் வாழ்கின்ற பைங்கிளியே, திருப்பெருந்துறை யிறைவனது கொடியைச் சொல்வாயாக, அவனது கொடியாதெனின், பகைவர் அஞ்சும்படி உயர்த்தப்பட்டு அழகைச்செய்கிற இடபக்கொடியே அவனது கொடியாம் என்பது.

(வி - ரை.) நீர் - குணம். தூ நீர் - தூய்மையாகிய நீர் வளமிக்க வெனினும் பொருந்தும் துண்ணெனல் - அச்சக்குறிப்பு. ஏறு - இடபம். (௧0)

திருச்சிற்றம்பலம்.

# திருப்பள்ளியெழுச்சி.

## திரோதானசுத்தி.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

போற்றியென்வாழ்முதலாகியபொருளே
புலர்ந்ததுபூங்கழற்கிணைதுணைமலர்கொண்
டேற்றிநின்றிருமுகத்தெமக்கருண்மலரு
மெழினகைகொண்டுநின்றிருவடிதொழுகோஞ்
சேற்றிதழ்க்கமலங்கண்மலருந்தண்வயல்சூழ்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
யேற்றுயர்கொடியுடையாயெனையுடையா
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) போற்றி - நமஸ்காரம், என் வாழ்முதல் ஆகிய பொருளே - என் வாழ்வுக்கு முதற்காரணமாகிய பொருளே, புலர்ந்தது - விடிந்தது, இணை - இரண்டாகிய, பூங்கழற்கு - பொலிவாகிய திருவடிக்கு, துணை - உவமையான, மலர்கொண்டு - மலர்களைக்கொண்டு, ஏற்றி - துதித்து, நின் திருமுகத்து - உன் திருமுகத்தில், எமக்கு அருள் மலரும் - எமக்கு அருளோடு மலர்கின்ற, எழில் நகை கொண்டு - அழகிய முறுவலைப் பற்றுக்கொண்டு, நின் திருவடி தொழுகோம் - உன் திருவடியைத் தொழாநின்றேம், சேற்று - சேற்றின்கண், இதழ் - இதழ்களையுடைய, கமலங்கள் - தாமரைமலர்கள், மலரும் - விரிகின்ற, தண்வயல்சூழ் - தட்பமாகிய வயல்கள் சூழ்ந்த, திருப்பெருந்துறை உறை - திருப்பெருந்துறையில் வாழ்கின்ற, சிவபெருமானே - சிவபிரானே, உயர் - உயர்ந்த, ஏற்றுகொடி உடையாய் - இடபக்கொடியையுடையவனே, என்னை உடையாய் - என்னை உடையவனே, எம்பெருமான் - எம்பெருமானே, பள்ளி யெழுந்தருளாய் - திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, பொழுதுவி டிந்தது, மலர்களைக்கொண்டு உன் திருவடியை யர்ச்சித்து வணங்கா நின்றோம், நீ திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) புலர்தல் - பொழுதுவிடிதல், ஏத்தி என்பது ஏற்றியென்றாயிற்று. அன்றி ஏற்றியென்பதற்கு ஏறப்பண்ணியெனினுமாம். திருப்பள்ளி யெழுந்தருளலாவது-திருப்பள்ளியினின் றெழுந்திருத்தல். பள்ளி - சயநம். (௧)

அருணனிந்திரன் றிசையணுகின னிருள்போ
யகன்றதுவுதயநின் மலர்த்திருமுகத்தின்
கருணையின் சூரியனெழவெழநயனக்
கடிமலர்மலரமற் றண்ணலங்கண்ணாந்
திரணிரையறுபதமுரல்வன விவையோர்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
யருணிதிதரவருமானந்தமலையே
யலைகடலேபள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) அருணன் - சூரியன், இந்திரன் திசை அணுகினன் - கிழக்குத்திசையை யடைந்தான், இருள் போய் அகன்றது - இருட்டுப் பற்றற நீங்கிற்று, உதயம் - உதித்தலையுடைய, நின் மலர்த் திருமுகத்தின் சூரியன் கருணையின் எழ எழ - உன் தாமரைமலர் போன்ற திருமுகத்தில் கருணையாகிய சூரியன் முறையே உதித்தலும், நயநம் - கண்களாகிய, கடிமலர் மலர - மணமுள்ள மலர்கள் விரிய, மற்று - மேலும், அண்ணல் அம் கண் ஆம் - பெருமைபொருந்திய அழகிய (மாதராது) கண்போல்கின்ற, திரள் நிரை - தொகுதியாய் வரிசையாகிய, அறுபதம் - வண்டுகள், முரல்வன - சத்தியாநின்றன, இவை - இவற்றை, ஓர்-ஆராயக்கடவை, திருப்பெருந்துறை உறை-திருப்பெருந்துறையில் வாழ்கின்ற, சிவபெருமானே - சிவபிரானே, அருள் நிதி தர வரும் - அருட்செல்வத்தைக் கொடுக்க வருகின்ற, ஆநந்த மலையே - இன்பமாகிய மலையே, அலை கடலே - அசையாநின்ற (ஆநந்த) சாகரமே, பள்ளி எழுந்தருளாய்-திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, சூரியோதயமாதலும் இருள் நீங்கி தாமரைமலர்கள் விரிதல், வண்டொலித்தல்

முதலிய காரியங்கள் நிகழாநின்றன, ஆதலால் நீ திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) அண்ணல் - பெருமை. அறுபதம் - வண்டு. ஓர்தல் - ஆராய்தல், உணர்தலுமாம். (உ)

கூவினபூங்குயில்கூவினகோழி
குருகுகளியம்பினவியம்பினசங்க
மோவினதாரகையொளியொளியுதயத்
தொருப்படுகின்றதுவிருப்பொடுநமக்குத்
தேவநற்செறிகழற்றாளிணைகாட்டாய்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
யாவருமறிவரியாயெமக்கெளியா
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) பூங்குயில் - அழகிய குயில்கள், கூவின - கூவின, கோழி கூவின - கோழிகள் கூவின, குருகுகள் இயம்பின - பறவைகளும் ஒலித்தன, சங்கம் இயம்பின - சங்கங்கள் முழங்கின, தாரகை ஒளி ஓவின - உடுக்கள் ஒளி மழுங்கின, ஒளி - சூரியன், உதயத்து ஒருப்படுகின்றது - உதித்தலோடு ஒருப்படாநின்றது, தேவ - தேவனே, நமக்கு - எமக்கு, விருப்பொடு - விருப்பத்துடன், நல் - அழகிய, செறி - நெருங்கிய, கழல் - வீரக்கழலையணிந்த, தாள் இணை காட்டாய் - திருவடியிணையைக் காட்டுவாயாக, திருப்பெருந்துறை உறை - திருப்பெருந்துறையில் வாழ்கின்ற, சிவபெருமானே - சிவபிரானே, யாவரும் அறிவு அரியாய் - எல்லாரும் அறிதற்கரியவனே, எமக்கு எளியாய் - எமக்கு எளியவனே, எம்பெருமான் - எம்பெருமானே, பள்ளி எழுந்தருளாய் - திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, குயில், கோழி முதலாகிய பறவைகள் ஒலித்தன, சூரியனும் உதித்தான், எமக்கு உன் திருவடியைக் காட்டுதற்கு நீ திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) குருகு - பறவைப் பொது. (௩)

இன்னிசைவீணையரியாழினரொருபா
லிருக்கொடுதோத்திரமியம்பினரொருபாற்
றுன்னியபிணைமலர்க்கையினரொருபாற்
றொழுகையரழுகையர்துவள்கையரொருபாற்
சென்னியிலஞ்சலிகூப்பினரொருபாற்
றிருப்பெருந்துறையுறைசிவபெருமானே
யென்னையுமாண்டுகொண்டின்னருள்புரியு
மெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) இன் இசை - இனிய ஓசையையுடைய, வீணையர் யாழினர்-வீணையரும் யாழினரும், ஒருபால் - ஒருபாலார், இருக்கொடு தோத்திரம் இயம்பினர் - வேதங்களோடு வேறுபலதோத்திரங்களையும் சொல்லுவோர், ஒருபால் - ஒருபாலார், துன்னிய - நெருங்கிய, பிணை - தொடுக்கப்பட்ட, மலர் - மலர்களை யேந்தின, கையினர் - கையையுடையவர், ஒருபால் - ஒருபாலார், தொழுகையர் - வணங்குதலையுடையவரும், அழுகையர் - அழுகையையுடையவரும், துவள்கையர் - துவளுதலையுடையவரும், ஒருபால் - ஒருபாலார், சென்னியில் - சிரத்தில், அஞ்சலி கூப்பினர் ஒருபால் - அஞ்சலியாகக் கரங்குவித்தவர் ஒருபாலார், திருப்பெருந்துறை உறை - திருப்பெருந்துறையில் வாழ்கின்ற, சிவபெருமானே-சிவபிரானே, என்னையும்-அடியேனையும், ஆண்டுகொண்டு - ஆண்டுகொண்டு, இன் அருள் புரியும் - இனிய அருளைச்செய்கிற, எம்பெருமான் - எம்பெருமானே, பள்ளியெழுந்தருளாய் - திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக, எ - று,

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, வீணைவாத்தியக்காரர் முதலாக எல்லாரும் வந்து நிறைந்திருக்கிறார்கள், நீ திருப்பள்ளியெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) வீணையர் யாழினர் என்றது கந்தருவரை யெனினுமாம். துவள்கை - துவளல். (ரு)

பூதங்கடோறுநின்றாயெனினல்லாற்
போக்கிலன்வரவிலனெனநினைப்புலவோர்
கீதங்கள்பாடுதலாடுதலல்லாற்
கேட்டறியோமுனைக்கண்டறிவாரைச்

சீதங்கொள்வயற்றிருப்பெருந்துறைமன்னா
சிந்தனைக்குமரியாயெங்கண்முன்வந்
தேதங்களறுத்தெம்மையாண்டருள்புரியு
மெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) பூதங்கள் தோறும் - பூதங்களிலெல்லாம்; நின்றாய் எனின் அல்லால் - நின்றனை யென்று சொல்லினல்லது, போக்கு இலன் வரவு இலன் என - போக்கு இல்லாதவன் வருதல் இல்லாதவன் என்று, நின்னை - உன்னை, புலவோர் - புலவர், கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால் - கீதங்கள் பாடுதலும் ஆடுதலுமேயல்லாமல், உன்னைக் கண்டு அறிவாரை-உன்னைக்கண்டறிவார்களை, கேட்டு அறியோம் - கேட்டுமறியோம், சீதம் கொள் வயல் - குளிர்ச்சியைக்கொண்ட வயல்சூழ்ந்த, திருப்பெருந்துறை மன்னா-திருப்பெருந்துறைக்கரசனே, சிந்தனைக்கும் அரியாய் - நினைத்தற்கு மரிதானவனே, எம் கண்முன் வந்து - எங்கள் கண்ணுக் கெதிரேவந்து, ஏதங்கள் அறுத்து - குற்றங்களை யறுத்து, எம்மை ஆண்டு - எம்மை யாண்டருளி, அருள் புரியும் - அருள் செய்கின்ற, எம்பெருமான் - எம்பெருமானே, பள்ளி யெழுந்தருளாய்-திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, நீ யின்ன வண்ண மிருக்கிறாயென்று கண்டவரில்லை, ஆயினும் எம்மைக் கடைக்கணித்தாண்டருளுதற்கு நீ திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) போக்கு - போதல். வரவு - வருதல், புலவர் - அறிஞர். சீதம் - குளிர்ச்சி. எம்பெருமான் - அண்மை விளியாதலால் இயல்பாயிற்று. (௫)

பப்பறவீட்டிருந்துணருநின்னடியார்
பந்தனைவந்தறுத்தாரவர்பலரு
மைப்புறுகண்ணியர்மானுடத்தியல்பின்
வணங்குகின்றாரணங்கின்மணவாளா
செப்புறுகமலங்கண்மலருந்தண்வயல்சூழ்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
யிப்பிறப்பறுத்தெமையாண்டருள்புரியு
மெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) பப்பு அற - ஒப்பற, வீட்டு இருந்து - துறவிலிருந்து, உணரும் - உன் நிலையை யறிந்த, நின் அடியார் - உன்னடியவர், பந்தனை அறுத்தார் - பிறவித்தளையைச் சேதித்தவர் ஆகிய, அவர் பலரும் - அவர்கள் எல்லாரும், மானுடத்து இயல்பின் - மனசாது இயற்கையையுடைய, மைப்பு உறு கண்ணியர் - கருமை மிகுந்த - கண்களையுடைய மாதரும், வந்து வணங்குகின்றார்-வந்து வணங்கா நின்றனர், அணங்கின் மணவாளா - உமாதேவியார்க்கு மணவாளனே, செப்பு உறு கமலங்கள்-உயர்த்திச்சொல்லப்படுகிற தாமரை மலர்கள், மலரும் - விரியப்பெற்ற, தண் வயல் சூழ் - தண்ணிய கழனிகள் சூழ்ந்த, திருப்பெருந்துறை உறை - திருப்பெருந்துறையில் வாழ்கின்ற, சிவபெருமானே-சிவபிரானே, இபிறப்பு அறுத்து - இந்தப் பிறவியைச்சேதித்து, எம்மை ஆண்டு அருள் புரியும் - எங்களை ஆண்டருள் செய்கின்ற, எம்பெருமான் - எம்பெருமானே, பள்ளி யெழுந்தருளாய் - திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உன்னடியார் முதலிய எல்லாரும் வந்து வணங்கா நின்றனர், நீ திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) பப்பு - ஒப்பு. வீடு - துறவு. மைப்பு-மைத்தல் - கறுத்தல். (௯)

அதுப்பழச்சுவையெனவமுதெனவறிதற்
கரிதெனவெளிதெனவமரருமறியா
ரிதுவவன்றிருவுருவிவனவனெனவே
யெங்களையாண்டுகொண்டிங்கெழுந்தருளு
மதுவளர்பொழிற்றிருவுத்தரகோச
மங்கையுள்ளாய்திருப்பெருந்துறைமன்னா
வெதுவெமைப்பணிகொளுமாறதுகேட்போ
மெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) அது - அது, பழம்சுவையென - கனிகளின் சுவையெனவும், அமுது என - அமிர்தமெனவும், அறிதற்கு அரிது என - உணர்தற்கு அரிதெனவும், எளிது என - எளிதென்றும், அமரரும் அறியார் - தேவர்களும் அறியமாட்டார்கள், (அங்ஙனமாக) இதுஅவ

ன்திருவுரு-இதுவே அவனது திருவுருவம், இவன் அவன் - இவனே அவன், என - என்றுசொல்லும்படி, எங்களை - எம்மை, ஆண்டு கொண்டு - ஆண்டுகொண்டு, இங்கு எழுந்தருளும் - இவ்விடத்து எழுந்தருளிய, மதுவளர்பொழில் - தேன்பெருகுகின்ற சோலைசூழ்ந்த, திருவுத்தர கோசமங்கையுள்ளாய் - திருவுத்தர கோசமங்கையிலுள்ளவனே, திருப்பெருந்துறைமன்னா - திருப்பெருந்துறைக் கரசனே, எம்மைபணிகொள்ளும் ஆறு - எங்களைப்பணிகொள்ளும் விதம், எது - யாது, அதுகேட்போம் - அதனைக்கேட்போம், எம்பெருமான் - எமது பெருமானே, பள்ளியெழுந்தருளாய் - திருப்பள்ளியெழுந்தருள்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, தேவருமறியாத உன்னையாம் உள்ளபடி யறிந்துய்யும்படி யெம்மையாட்கொண்டு திருவுத்தர கோசமங்கையிலெழுந்தருளினவனே, எங்களைப்பணிகொள்ளும் வழியாது, அதனைக்கேட்போம், நீ திருப்பள்ளியெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை) சுவை - ரசம். (குறி) பணிகொள்ளல் - தொண்டு கொள்ளல். (௭)

முந்தியமுதனடுவிறுதியுமானாய்
மூவருமறிகிலரியாவர்மற்றறிவார்
பந்தணைவிரலியுநீயுநின்னடியார்
பழங்குடிதொறுமெழுந்தருளியபரனே
செந்தழல்புரைதிருமேனியுங்காட்டித்
திருப்பெருந்துறையுறைகோயிலுங்காட்டி
யந்தணனாவதுங்காட்டிவந்தாண்டா
யாரமுதேபள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) முந்திய - முற்பட்ட, முதல் நடு இறுதியும் ஆனாய் - ஆதியிடைகடைகளுமாயினை, மூவரும் அறிகிலர் - மூவரும் உணருமாற்றலிலர், அறிவார் மற்று யாவர் - அறிபவர் வேறுயாவர், பந்தணைவிரலியும் - உமாதேவியும், நீயும் - நீயுமாக, நின் அடியார்-நினது அடியவராது, பழங்குடில்தொறும்-பழங்குடில்கடோறும், எழுந்தருளிய - எழுந்தருளின, பரனே - பரனே, செந்தழல்புரை - செந்தீ [illegible] திருமேனியுங் காட்டி - திருமேனியையுங் காட்டி, திரு

ப்பெருந்துறை உறை - திருப்பெருந்துறையில் நீ வாழ்கின்ற, கோயிலும் காட்டி - திருக்கோயிலையும் காட்டி, அந்தணன் ஆவதும் காட்டி - வேதியனுவதையும் காட்டி, வந்து ஆண்டாய்-வந்து ஆண்டருளினாய், ஆர் அமுதே-அரிய அமிர்தமே, பள்ளியெழுந்தருளாய்-திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக.

(க - ரை.) முதல் நடு இறுதிகளானாய், மூவரும் அறியமாட்டார், வேறியாவர் உன்னை யறியவல்லார், பிராட்டியும் நீயுமாக அடியாரில்லங்கள்தோறும் எழுந்தருளினவனே, செவந்த நெருப்புப்போன்ற திருமேனியையும், திருப்பெருந்துறையிற் கோயிலையும், நீ வேதியனுவதையும் காட்டிவந்தாண்டருளினை, அரிய அமுதமே நீ திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) மூவர்-பிரமன், விஷ்ணு, உருத்திரர்கள். பந்தணை விரலி - விளையாடும் பந்துபொருந்திய விரலையுடையவள். (அ)

விண்ணகத்தேவருநண்ணவுமாட்டா
விழுப்பொருளேயுனதொழுப்படியோங்கள்
மண்ணகத்தேவந்துவாழச்செய்தானே
வண்டிருப்பெருந்துறையாய்வழியடியோங்
கண்ணகத்தேநின்றுகளிதருதேனே
கடலமுதேகரும்பேவிரும்படியா
ரெண்ணகத்தாயுலகுக்குயிரானு
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) விண் அகம் தேவரும் - விண்ணுலகத்தை யிடமாகக்கொண்ட தேவர்களும், நண்ணவும் மாட்டா - அடையவும் ஒண்ணுத, விழுப்பொருளே - மேலான பொருளே, உன தொழும்பு அடியோங்கள் - உன் திருத்தொண்டுக்குரிய அடியோங்கள், மண்ணகத்தே வந்து வாழச்செய்தானே - மண்ணுலகத்தில் வந்து வாழச்செய்தவனே, வண் - வளப்பம்பொருந்திய, திருப்பெருந்துறையாய்-திருப்பெருந்துறையை யுடையவனே, வழி அடியோம் - வழியடியாராகிய எம்முடைய, கண்ணகத்தே நின்று - கண்ணினிடத்தே நின்று, களி தரு தேனே - களிப்பைத் தருகிற தேனே, கடல் அமுதே - கடலிற் றோன்றிய அமிர்தமே, கரும்பே - கரும்பே, விரும்பு அடியார் - விரு

ம்புகின்ற அடியவர்களுடைய, என் அகத்தாய் - மனத்தின்கண்ணு னே, உலகுக்கு உலகு ஆனாய் - உலகத்துக்கு உலகமாயினே, எம்பெ ருமான்-எமது பெருமானே, பள்ளி யெழுந்தருளாய் - திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக, எ - று.

(க - ரை.) தேவரும் அணுகவொண்ணாத பொருளே, அடி யோங்கள் வாழும்படி மண்ணுலகில் எழுந்தருளினவனே, திருப்பெ ருந்துறையை யுடையவனே, எமது கண்களிக்க வருந்தேனே, அமு தமே, அடியவர் மனத்துள்ளவனே, உலகுக்குலகானவனே, எம்பெரு மானே, நீ திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) தொழும்பு-தொழுப்பு என வலித்தலாயிற்று. (௯)

புவனியிற்போய்ப்பிறவாமையினாளும்
போக்குகின்றோமவமேயிந்தப்பூமி
சிவனுய்யக்கொள்கின்றவாறென்றுநோக்கித்
திருப்பெருந்துறையுறைவாய்திருமாலா
மவன்விருப்பெய்தவுமலரவனாசைப்
படவுநின்னலர்ந்தமெய்க்கருணையுநீயு
ம்வனியிற்புகுந்தெமையாட்கொள்ளவல்லா
யாரமுதேபள்ளியெழுந்தருளாயே.

(ப - ரை.) புவனியில் - பூமியில், போய் பிறவாமையின் - சென்று பிறவாமையால், நாம் - யாம், அவமே - வீணாகவே, நாள் போக்குகின்றோம் - நாள் கழிக்கின்றோம், இந்தப்பூமி - இந்தப் பூமி யானது, சிவன் உய்யக் கொள்கின்ற ஆறு என்று - சிவபெருமான் நாம் உய்யும்படி அடிமை கொள்ளுகின்ற இடமென்று, நோக்கி - பார்த்து, திருப்பெருந்துறை உறைவாய் - திருப்பெருந்துறையில் வாழ்பவனே, திருமால் ஆம் அவன் - திருமாலாகிய அவன், விரு ப்பு எய்தவும் - விரும்பவும், மலரவன் - பிரமன், ஆசைப்படவும் - இச்சிக்கவும், நின் - உனது, அலர்ந்த - பரந்த, மெய்க்கருணையும் - உண்மையாகிய கருணையும், நீயும் - நீயுமாக, அவனியில் புகுந்து - பூமியில் எழுந்தருளி, எம்மை ஆட்கொள்ள வல்லாய் - அடிமைகொ ள்ள வல்லவனே, ஆர் அமுதே-அரிய அமிர்தமே, பள்ளி யெழுந்தரு ளாய் - திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக, எ - று,

(க - ரை.) பூமியிற்சென்று பிறவாமையால் நாம் வீணேகாலங் கழிக்கின்றோம், சிவபெருமானே நம்மை உய்ய வாட்கொள்ளுமிடம் இதுவாமென்று நோக்கி, திருமால் பிரமன் என்போர் ஆசைப்பட, இவ்வுலகில் எழுந்தருளி எம்மையாள வல்லோனே, நீ திருப்பள்ளி யெழுந்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) ஆறு - இடம். கருணையும் நீயும் என்றமையால் இறைவன் எப்பொழுதும் கருணையோடுகூடி யிருப்பன் என்றதாயிற்று. கருணையென்றது, திருவருட்சத்தியை. (கo)

திருச்சிற்றம்பலம்.

# கோயின்மூத்த திருப்பதிகம்.

அநாதியாகியசற்காரியம்.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உடையாளுன் றனடுவிருக்கு முடையாணடுவுணீயிருத்தி
யடியேனடுவுளிருவீருமிருப்பதானாலடியேனுன்
னடியார்நடுவுளிருக்கு மருளைப்புரியாய்பொன்னம்பலத்தெம்
முடியாமுதலேயென்கருத்துமுடியும்வண்ண முன்னின்றே.

(ப - ரை.) உடையாள் - உடையவள், உன்றன் நடு இருக்கும் - உன்னிடையே யிருப்பள், உடையாள் நடுவுள் - உடையவளிடையே, நீ இருத்தி - நீ யிருக்கின்றனை, அடியேன் நடுவுள் - அடியேனிடையே, இருவீரும் - நீவிருவீரும், இருப்பது ஆனால் - இருப்பதாயின், பொன் அம்பலத்து - பொன்னம்பலத்தில் வாழ்கின்ற, எம் முடியா முதலே - எமது முடிவுபெறாத முதற்பொருளே, என் கருத்து முடியும் வண்ணம் - என் எண்ணம் முடியும் வண்ணம், முன் நின்று - என்னெதிரில் நின்று, அடியேன் - அடியனேன், உன்

அடியார் நடுவுள் இருக்கும் - உனது அடியாரிடையேயிருத்தற்கேதுவாகிய, அருளை புரியாய் - திருவருளைச் செய்வாயாக, எ - று.

(க - ரை.) உடையவளிடை நீயும் உன்னிடை உடையவளுமாயிருப்பீர்கள், அடியேனிடை நீங்களிருவீருமிருப்பதாயின் என் கருத்து நிறைவேற அடியேன் உன்னடியார் நடுவே யிருக்க அருள்புரிவாயாக என்பது.

(வி - ரை.) உடையாள் - எல்லாவற்றையு முடையவள். (௧)

முன்னின்றாண்டாயெனைமுன்னமியானுமதுவேமுயல்வுற்றுப்
பின்னின்றேவல்செய்கின்றேன்பிற்பட்டொழிந்தேன்பெம்மானே
யென்னின்றருளிவரநின்றுபோந்திடென்னாவிடிலடியா
ருன்னின்றிவனாரென்னாரோபொன்னம்பலக்கூத்துகந்தானே.

(ப - ரை.) முன்னம் - முன்னே, என்னை - அடியேனை, முன் நின்று ஆண்டாய் - எதிரேநின்று ஆண்டருளினை, யானும் - நானும், அதுவே முயல்வுற்று - அதனையே முயன்று, பின் நின்று - பின்னே நின்று, ஏவல் செய்கின்றேன் - ஏவல் செய்யாநின்றேனாகி, பிற்பட்டு ஒழிந்தேன் - பிறகிட்டொழிந்தேன், பெம்மானே - பெருமானே, என் நின்று அருளிவர - என்னை நிலைபெற்று அருளிவர, நின்று - நின்று, போந்திடு என்னாவிடில் - வாவென்னாவிடின், அடியார் - அடியவர், உன் நின்று - உன்னை நோக்கி நின்று, இவன் ஆர் என்னாரோ - இவன் யாரென்று வினவாரோ, பொன்னம்பலக்கூத்து உகந்தானே - பொன்னம்பலக்கூத்தினை விரும்பினவனே, எ - று.

(க - ரை.) இறைவனே, என்னை நேரேவந்து ஆண்டருளினை, யானும் அதுபற்றி யேவல் செய்யாநின்றேன், அதிலும் பின்னிட்டொழிந்தேன், என்னை அருள்புரியும்படி வாவென்றழையாவிட்டால் அடியார் உன்னை நோக்கி நின்று இவன் யாரென்று கேளாரோ என்பது.

(வி - ரை.) முன்னின்று - கண்ணெதிர் நின்று. பிற்படல் - பிறகிடல். (௨)

உகந்தானேயன்புடையடிமைக்குருகாவுள்ளத் துணர்விலியேன்
சகந்தானறியமுறையிட்டாற்றக்கவாறன்றென்னாரோ
மகந்தான்செய்துவழிவந்தார்வாழவாழ்ந்தாயடியேற்குன்
முகந்தான்றாராவிடின்முடிவேன்பொன்னம்பலத்தெம்முழுமுதலே.

(ப - ரை.) அன்பு உடை அடிமைக்கு - அன்பையுடைய அடிமைத்திறத்துக்கு, உகந்தானே - உகந்தவனே, உருகா உள்ளத்து - உருகாத மனத்தையுடைய, உணர்வு இலியேன் - உணர்விலியாகிய நான், சகந்தான் அறிய - உலகமறிய, முறையிட்டால் - முறையிடின், தக்க ஆறு அன்று - தக்க வழியன்று, என்றோரோ - என்று சொல்லாரோ, மகந்தான் செய்து - யாகங்கள் செய்து, வழிவந்தார் - முறையே வந்தவர்கள், வாழ - வாழும்படி, வாழ்ந்தாய் - நீ வாழ்ந்திருந்தனை, முகந்தான் தாராவிடின் - முகங் கொடாவிடின், முடிவேன் - முடிவுறுவேன், பொன்னம்பலத்து - பொன்னம்பலத்தில் வாழ்கின்ற, எம் முழுமுதலே - எம் முழுமுதற்பொருளே, எ-று.

(க - ரை.) அன்போடு செய்யுந் தொண்டுக்கு மகிழ்ந்தவனே, மனமுருகாத அடியேன் உலகறிய முறையிட்டால் அது தகுந்தவழியன்றென்று சொல்லாரோ, யாகாதி நற்கருமங்களைச்செய்து வழிவழியாய் வந்தோர் வாழும்படி யெழுந்தருளியிருந்தனை, எனக்கு நீ முகந்தாராவிட்டால் யான் இறப்பேன் என்பது.

(வி - ரை.) உகத்தல் - மகிழ்தல். அடிமை - தொண்டு. முடிதல் - இறத்தல். முகந்தரலாவது - திருவருள்புரிதல். (௩)

முழுமுதலேயைம்புலனுக்குமூவர்க்குமென்றனக்கும்
வழிமுதலேநின்பழவடியார்திரள்வான்குழுமிக்
கெழுமுதலேயருடந்திருக்கவிரங்குங்கொல்லோவென்
றழுமதுவேயன்றிமற்றென்செய்கேன்பொன்னம்பலத்தரைசே.

(ப-ரை.) முழுமுதலே - முழுமுதற்பொருளே, ஐம்புலனுக்கும் - பஞ்சேந்திரியங்களுக்கும், மூவர்க்கும் - மூவருக்கும், என்றனக்கும் - எனக்கும், வழி முதலே - வழியாகிய முதல்வனே, நின் பழ அடியார் திரள் - உன் பழவடியார் கூட்டம், வான் குழுமி - விண்ணுலகத்தில் கூடி, கெழு முதலே - பொருந்திய முதல்வனே, அருள் தந்திருக்க - அருள் புரிந்திருக்க, இரங்குங்கொல்லோ என்று - இரங்குவனோவென்று, அழுமதுவே அன்றி - அழுவதுவேயன்றி, மற்று என்செய்கேன் - வேறென்ன செய்வேன், பொன்னம்பலத்தரைசே - பொன்னம்பலத்துக்கு வேந்தனே, எ - று.

(க-ரை.) முழுமுதற்பொருளே, ஐம்புலன் முதலானவைகட்கும் முதல்வனே, உன் பழவடியார் விண்ணுலகில் கூடி அநுபவியாநின்ற முதற்பொருளே, இறைவன் எமக்கு அருள்செய்ய எப்பொழுதிரங்குவானோவென்று அழுதலேயன்றி வேறென்செய்யக்கடவேன், என்பது.

(வி-ரை.) கெழுவுதல் - நிறைதல் எனினு மமையும். அருள்தரல் - அருள் செய்தல். (௪)

அரைசேபொன்னம்பலத்தாடுமமுதேயென்றுன்னருணோக்கி
யிரைதேர்கொக்கொத்திரவுபகலேசற்றிருந்தேவேசற்றேன்
கரைசேரடியார்களிசிறப்பக்காட்சிகொடுத்துனடியேன்பாற்
பிரைசேர்பாலினெய்போலப்பேசாதிருந்தாலேசாரோ.

(ப-ரை) அரைசே - அரசனே, பொன் அம்பலத்து ஆடும் - பொன்னம்பலத்தில் நடிக்கின்ற, அமுதே - அமிர்தமே, என்று - என்று, உன் அருள் நோக்கி-உன் அருளையேநோக்கி, இரைதேர் கொக்கு ஒத்து - இரைதேடுகின்ற கொக்கினை நிகர்த்து, இரவுபகல் - இரவினும் பகலினும், ஏசற்று இருந்து-தூக்கித்திருந்து, வேசற்றேன் - மெலிந்தேன், கரைசேர் அடியார் - முத்திக்கரையை யடைந்த அடியார், களிசிறப்ப - களிப்புமிக, காட்சி கொடுத்து - காட்சிதந்து, உன் அடியேன் பால்-உன்னடியேனிடத்து, பிரைசேர் பாலில் நெய் போல - பிரைகலந்தபாலில் நெய்மறைந்திருத்தல்போல, பேசாதிருந்தால் - பேசாமலிருந்தால், ஏசாரோ - வையாரோ, எ - று.

(க-ரை) இறைவனே, உன்னருளை யெதிர்பார்த்திருந்து மெலிந்தேன், அடியார் மகிழ்ந்திருக்க அவர்களுக்குக் காட்சிகொடுத்து, அடியேனிடத்தில் மறைந்திருந்தால் உன்னை யேசார்களோ என்பது.

(வி-ரை,) இரைதேர் கொக்கு ஒத்து என்றமையால், உன்னருள் வாய்க்கும்பொருட்டுப் பொறி புலன்கள் யாவு மொடுங்கி யிருந்தேன் என்றாயிற்று. (௫)

ஏசாநிற்பரென்னையுனக்கடியானென்றுபிறரெல்லாம்
பேசாநிற்பரியான்றானும்பேணாநிற்பேனின்னருளே
தேசாநேசர்சூழ்ந்திருக்குந்திருவோலக்கஞ்சேவிக்க
வீசாபொன்னம்பலத்தாடுமெந்தாயினித்தானிரங்காயே.

(ப - ரை.) ஏசா நிற்பர் - வையாநிற்பர், என்னை - என்னை, உனக்கு அடியான் என்று - உனக்கடியனென்று, பிறர் எல்லாம் பேசாநிற்பர் - ஏனையரெல்லாரும் சொல்லாநிற்பர், யான்தானும் - நானும், நின் அருளே - உன்னருளையே, பேணுநிற்பேன் - விரும்பாநிற்பேன், தேசா - ஒளியுருவனே, நேசர் சூழ்ந்திருக்கும் - அன்பர் சூழ்ந்திருக்கிற, திருவோலக்கம் - உன் திருவோலக்கத்தை, சேவிக்க - காணும்வண்ணம், ஈசா - ஈசனே, பொன்னம்பலத்து ஆடும் - பொன்னம்பலத்தில் நடிக்கின்ற, எந்தாய் - எந்தையே, இனித்தான் - இனியாயினும், இரங்காய் - இரங்கியருள்வாயாக, எ - று.

(க - ரை.) என்னை யேசுவார் சிலர், உன்னடியானென்று பேசுவார் சிலர், யான் உன்னருளை விரும்பாநிற்பேன், உன்னன்பர் சூழ்ந்திருக்கின்ற உன் திருவோலக்கத்தை அடியேன் சேவிக்க, இனியாயினும் நீ யிரங்கியருள்வாயாக என்பது.

(வி - ரை.) பேணுதல் - விரும்புதல், நேசர் - அன்பர். (௬)

இரங்குநமக்கம்பலக்கூத்தனென்றென்றேமாந்திருப்பேனை
யருங்கற்பனைகற்பித்தாண்டாயாள்வாரிலிமாடாவேனோ
நெருங்குமடியார்களுநீயுநின்றுநிலாவிவிளையாடு
மருங்கேசார்ந்துவரவெங்கள்வாழ்வேவாவென்றருளாயே.

(ப - ரை.) நமக்கு - எமக்கு, அம்பலக்கூத்தன் - அம்பலக்கூத்தன், இரங்க - இரங்குக, என்று என்று - என்று சொல்லி, ஏமாந்து இருப்பேனை - அலமந்திருப்பேனை, அரு கற்பனை கற்பித்து ஆண்டாய் - அருமையாகிய கற்பனையைக் கற்பித்து ஆண்டருளினை, ஆள்வார் இலி - ஆள்வோரை யுடையதல்லாத, மாடு ஆவேனோ - பசு ஆவேனோ, நெருங்கும் அடியார்களும் நீயும் - நெருங்குகின்ற அடியார்களும் நீயுமாக, நின்று நிலாவி - நின்று விளங்கி, விளையாடும் - விளையாடுகின்ற, மருங்கே சார்ந்து வர - பக்கத்தே சார்ந்து வரும்படி, எங்கள் வாழ்வே - எமது செல்வமே, வா என்று அருளாய் - வாவென்றருள்வாயாக, எ - று.

(க - ரை.) அம்பலக்கூத்தன் எமக் கிரங்கி யருள்கவென்று ஏமாந்திருக்கின்ற என்னை ஒரு புதிய முறைமையைக் கற்பித்து ஆண்டருளினை, அங்ஙனமாக ஆள்வாரில்லாத மாடாவேனோ, அடியாரும்

நீயும் நின்று விளையாடுமிடத்தின் பக்கத்தில் சார்ந்து வரும்படி, என்னை வாவென்றழைத்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) கற்பனை - இல்லாததை யுண்டெனக் கூறுதல். ஆன் வாரிவிமாடு - பட்டிமாடு. நிலாவல் - விளங்குதல். மருங்கு - பக்கம்.

அருளாதொழிந்தாலடியேனையஞ்சேலென்பாரார்இங்குப்
பொருளாவென்னைப்புகுந்தாண்டபொன்னேபொன்னம்பலக்கூத்தா
மருளார்மனத்தோடுனைப்பிரிந்துவருந்துவேனைவாவென்றுன்
றெருளார்கூட்டங்காட்டாயேற்செத்தேபோனாற்சிரியாரோ.

(ப - ரை.) அருளாது ஒழிந்தால் - அருள்செய்யா தொழிந்தால், அடியேனை - அடியனேனை, அஞ்சேல் என்பார் - அஞ்சற்க என்பவர், இங்கு ஆர் - இவ்வுலகத்தில் யாவர், என்னை பொருள் ஆ - என்னை யோர் பொருளாக, புகுந்து ஆண்ட - எழுந்தருளி யாண்டருளின, பொன்னே - சுவர்ணமே, பொன்னம்பலக் கூத்தா - பொன்னம்பலத்தில் நடிப்பவனே, மருள் ஆர் மனத்தோடு - மயக்கம் நிறைந்த மனத்துடனே, உன்னை பிரிந்து - உன்னை நீங்கி, வருந்துவேனை - வருந்தா நின்ற என்னை, வா என்று - வருகவென்று, உன் தெருள் ஆர் கூட்டம் - உனது தெளிவு நிறைந்த அடியார் கூட்டத்தை, காட்டா யேல் - காட்டாயாயின், செத்தே போனால் - நான் இறந்தே போனால், சிரியாரோ - நாட்டார் நகையாரோ, எ - று.

(க - ரை.) நீ அருள் செய்யாவிட்டால் அடியேனை அஞ்சாதே யென்று சொல்லுவோர் யார், என்னை யோர் பொருளாக்கி யாட்கொண்ட இறைவனே, மருள் நிறைந்த மனத்தோடு உன்னைப் பிரிந்து வருந்துகின்ற என்னை, வாவென்றழைத்து, உன் நல்லன்பர் கூட்டத்தைக் காட்டாவிடின், யானிறப்பேன், இறந்தால் நாட்டிலுள்ளார் நகையாரோ என்பது.

(வி - ரை.) மருள் - மயக்கம். தெருள் - தெளிவு. (அ)

சிரிப்பார்களிப்பார்தேனிப்பார்திரண்டுதிரண்டுன்றிருவார்த்தை
விரிப்பார்கேட்பார்மெச்சுவார்வெவ்வேறிருந்துன்றிருநாமந்
தரிப்பார்பொன்னம்பலத்தாடுந்தலைவாவென்பாரவர்முன்னே
நரிப்பாய்நாயேனிருப்பேனோநம்பியினித்தானல்காயே.

(ப - ரை.) சிரிப்பார் - சிரிப்பவரும், களிப்பார் - களிப்பவரும், தேனிப்பார் - தேனிப்பவரும், திரண்டு திரண்டு - கூடிக்கூடி, உன் திருவார்த்தை விரிப்பார் — உன் திருவார்த்தையை விரிப்பவரும், கேட்பார் - கேட்பவரும், மெச்சுவார் - மெச்சுவோரும், வெவ்வேறு இருந்து-தனித்தனியிருந்து, உன் திருநாமம் தரிப்பார்—உன் திருநாமத்தைத் தரிப்பவரும், பொன்னம்பலத்து ஆடும் - பொன்னம்பலத்தில் நடிக்கின்ற, தலைவா என்பார் - முதல்வனே யென்பவரும் ஆகிய, அவர் முன்னே-அவ்வடியார்களுக்கெதிரில், நகைப்பு ஆய்-இகழ்ச்சிக்கிடமாகி, நாயேன் இருப்பேனோ - நாயினேன் இருப்பேனோ, நம்பீ - நம்பியே, இனித்தான் - இனியாயினும், நல்காய் - கிருபைசெய்வாயாக, எ - று.

(க - ரை.) உன் அன்பர், சிரிப்பவரும், களிப்பவரும், தியானிப்பவரும், உன் திருவார்த்தையைப் பேசுவோரும், கேட்போரும், மெச்சுவாரும், உன் திருநாமத்தை யுச்சரிப்பவரும், பொன்னம்பலத்திலாடும் இறைவனே யென்பவருமாயிருப்பர். அவர்களுக்கெதிரே, இகழ்ச்சிக்கிடமாய் நானிருப்பேனோ இரேன். இனியாயினும் கிருபை செய்வாயாக என்பது.

(வி - ரை.) தேனித்தல் - தியானித்தல். விரித்தல் - வித்தரித்துப்பேசுதல். மெச்சுதல் - கொண்டாடுதல். தரித்தல் இவ்விடத்தில் உச்சரித்தல் என்னும் பொருளது. நகைப்பு - இகழ்ச்சி. ஆச்சரியமெனினுமாம். நம்பீ என்றது - நம்பியென்பது குறுகியது, அண்மைவிளியாதலின். (சு)

நல்காதொழியானமக்கென்றுன்னாமம்பிதற்றிநயனநீர்
மல்காவாழ்த்தாவாய்குழறாவணங்காமனத்தானினைந்துருகிப்
பல்காலுன்னைப்பாவித்துப்பரவிப்பொன்னம்பலமென்றே
யொல்காநிற்குமுயிர்க்கிரங்கியருளாயென்னையுடையானே.

(ப - ரை.) நமக்கு - எமக்கு, நல்காது ஒழியான் - கிருபைசெய்யாதொழியான், என்று - என்று, உன் நாமம் பிதற்றி - உன்திருநாமங்களைப் பலகாற் சொல்லி, நயநம் - கண்களில், நீர்மல்கா - நீர் நிரம்பி, வாழ்த்தா - வாழ்த்தி, வாய் குழறா — வாய் குழறி, வணங்கா-வணங்கி, மனத்தால் நினைந்து - மனத்தால் நினைத்து, உருகி-உருகி, பல்கால் உன்னை பாவித்து - பலகாலும் உன்னைப் பாவனைசெய்து

பரவி - துதித்து, பொன்னம்பலம் என்றே - பொன்னம்பலமென்றே நின்றே, ஒல்கா நிற்கும் - தளராநிற்கிற, உயிர்க்கு - என்னுயிருக்கு, இரங்கி அருளாய் - இரங்கி யருள்வாயாக, என்னை உடையானே - என்னை ஆளாகவுடையவனே; எ - று.

(க - ரை.) நமக்குக் கிருபைசெய்யாமலிரான் என்று உன் திருநாமங்களைப் பலகாற்சொல்லி, கண்ணீர் மல்குதல் முதலிய குறிகளைக்காட்டித்தளராநிற்கிற என்னுயிர்க்கிரங்கியருள்வாயாக என்பது.

(வி - ரை.) பாவித்தல் - சிந்தித்தல். ஒல்கல் - தளர்தல். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# கோயிற்றிருப்பதிகம்.

## அநுபோகவிலக்கணம்.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாறிநின்றென்னைமயக்கிடும்வஞ்சப்
புலனைந்தின்வழியடைத்தமுதே
யூறிநின்றென்னுளெழுபரஞ்சோதி
யுள்ளவாகாணவந்தருளாய்
தேறலின்றெளிவேசிவபெருமானே
திருப்பெருந்துறையுறைசிவனே
யீறிலாப்பதங்களியாவையுங்கடந்த
வின்பமேயென்னுடையன்பே.

(ப - ரை) மாறிநின்று - மாறுபட்டுநின்று, என்னை மயக்கிடும் - என்னை மயக்குகின்ற, வஞ்சம் - வஞ்சத்தையுடைய, புலன் ஐந்தின் வழி அடைத்து - ஐம்புலன்களின் வழியைத்தடுத்து, அமுதே ஊறி நின்று - அமுதத்தை சுரந்துநின்று, என்னுள் எழு - என்

மனத்திற் றோன்றுகின்ற, பரஞ்சோதி - பரஞ்சுடரே, உள்ள ஆறு காண - உன்னை உள்ளபடி காண, வந்தருளாய் - வந்தருள்புரியாய், தேறலின் தெளிவே - தேனின் தெளிவே, சிவபெருமானே - சிவ பிரானே, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையில் எழுந்தருளிய சிவனே, ஈறு இல்லா - முடிவில்லாத, பதங்கள் யாவையும் கடந்த - பதங்களெல்லாவற்றையுங் கடந்த, இன்பமே-ஆநந்தமே, என்னுடை அன்பே - என்னுடைய அன்புருவமே, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறையி லெழுந்தருளின இறைவனே, என்னைப்பகைத்து மயங்கச்செய்கின்ற ஐம்புலவழியைத் தடுத்து, என் மனத்துள்ளே அமுதூசுரந்து தோன்றுகின்ற பரஞ்சுடரே, உன்னை யான் உள்ளபடி காண எழுந்தருளவேண்டும் என்பது.

(வி - ரை.) மாறுதல் - பகைத்தல். வழி - வருவழி. தேறல் - தேன். பதங்கள் - பதவிகள். (க)

அன்பினாலடியேனாவியோடாக்கை
 யானந்தமாய்க்கசிந்துருக
வென்பரமல்லாவின்னருடந்தா
 யானிதற்கிலனோர்கைம்மாறு
முன்புமாய்ப்பின்புமுழுதுமாய்ப்பரந்த
 முத்தனேமுடிவிலாமுதலே
தென்பெருந்துறையாய்சிவபெருமானே
 சீருடைச்சிவபுரத்தரசே.

(ப - ரை.) அன்பினால் - அன்பினாலே, அடியேன் - அடியனேனது, ஆவியோடு ஆக்கை - உடம்போடுயிரும் ஆநந்தம் ஆய் - இன்பவுருவாகி, கசிந்து உருக - கசிந்துருகும்படி, என் பரம் அல்லா - என் பொறுப்பல்லாத, இன் அருள் தந்தாய் - இனிய அருளைக் கொடுத்தாய், இதற்கு - இந்த நன்றிக்கு, ஓர் கைம்மாறு - ஒரு கைம் மாற்றை, நான் இலன் - நான் உடையனல்லேன், முன்பும் ஆய் - முன்புமாகி, பின்பு முழுதும் ஆய் - பின்புள்ள முழுதுமாகி, பரந்த - வியாபித்த, முத்தனே - முத்தனே, முடிவு இல்லாத முதலே - முடிவில்லாத முதற்பொருளே, தென் பெருந்துறையாய் - தென்பெருந் துறையை யுடையவனே, சிவபெருமானே - சிவபிரானே, சீர் உடை-

சிறப்பையுடைய, சிவபுரத்து அரைசே - சிவபுரத்துக்கு வேந்தனே, எ - று.

(க - ரை.) தென்பெருந்துறைச் சிவபுரத்தரசே, உன் பெருங் கருணையால் அடியேனது உயிருடம்புகள் உருகும்படி நீ யருள்செய் தாய், நான் இதற்கு ஒரு கைம்மாறு செய்ய அறியேன் என்பது.

(வி - ரை.) பரம் - பாரம். இது தாங்கவொண்ணாமையைக் குறித்தது. கைம்மாறு - பிரதியுபகாரம். மூத்தன் - மலரகிதன். (௨)

அரைசனேயன்பர்க்கடியனேனுடைய
வப்பனேயாவியோடாக்கை
புரைபுரைகனியப்புகுந்துநின்றுருக்கிப்
பொய்யிருள்கடிந்தமெய்ச்சுடரே
திரைபொராமன்னுமமுதத்தெண்கடலே
திருப்பெருந்துறையுறைசிவனே
யுரையுணர்விறந்துநின்றுணர்வதோருணர்வே
யானுன்னையுரைக்குமாறுணர்த்தே.

(ப - ரை.) அன்பர்க்கு அரைசனே - அன்பர்க்கு வேந்தனே, அடியனேனுடைய அப்பனே - அடியேனுடைய அப்பனே, ஆவியொடு ஆக்கை - உயிரொடு உடம்பும், புரைபுரை கனிய - உட்டொளைதோறும் கனியும்படி, புகுந்து நின்று உருக்கி - புகுந்துநின்று உருகப்பண்ணி, பொய் இருள் கடிந்த - மித்தையாகிய இருட்டை நீக்கின, மெய்ச்சுடரே - உண்மையாகிய ஒளியே, திரை பொரா மன்னும் - அலையெறியா நின்று நிலைபெற்ற, தெள் அமுதக் கடலே - தெளிவாகிய அமிர்தசாகரமே, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந் துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, உரை உணர்வு இறந்து நின்று - சொல்லும் மனமுமற்று நின்று, உணர்வது - உணரப்படுவ தாகிய, ஓர் உணர்வே - ஒப்பற்ற அறிவுருவே, யான் - நான், உன்னை உரைக்கும் ஆறு - உன்னைத் துதிக்கும்வழியை, உணர்த்து - எனக்கு அறிவிப்பாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறையுறை சிவபெருமானே, உன்னைத் துதிக்கும் வழியை யெனக்கு அறிவிக்கவேண்டும் என்பது.

(வி - ரை.) புணை - தெப்பம். பொரா - செய்யாவென்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம். தெண்கடல் - தெளிந்தகடல்.

உணர்ந்தமாமுனிவரும்பரோடொழிந்தா
ருணர்வுக்குந்தெரிவரும்பொருளே
யிணங்கிலியெல்லாவுயிர்கட்குமுயிரே
யெனைப்பிறப்பறுக்குமெம்மருந்தே
திணிந்ததோரிருளிற்றெளிந்ததூவெளியே
திருப்பெருந்துறையுறைசிவனே
குணங்கடாமில்லாவின்பமேயுன்னைக்
குறுகினேற்கினியென்னகுறையே.

(ப - ரை.) உணர்ந்த - (எல்லா நூல்களையும்) ஐயந்திரிபற உணர்ந்த, மாமுனிவர் - பெரிய முனிவரும், உம்பரோடு - தேவர்களோடு, ஒழிந்தார் - மற்றையோரும் ஆகிய இவர்களுடைய, உணர்வுக்கும் - அறிவுக்கும், தெரிவு அரு பொருளே - தெரிதலருமையாகிய பொருளே, இணங்கு இலி - ஒப்பிலியே, எல்லா உயிர்கட்கும் உயிரே - எல்லா வுயிர்களுக்கும் உயிராயிருப்பவனே, என்னை - அடியேனது, பிறப்பு அறுக்கும் - பிறவியை நிர்மூலமாக்குகிற, எம்மருந்தே - எமது மருந்தே, திணிந்தது - செறிந்ததாகிய, ஓர் இருளின் - ஒப்பற்ற இருளினின்றும், தெளிந்த - தெளிவாகிய, தூவெளியே - தூய்மையாகிய ஆகாயமே, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானே, குணங்கள் இல்லா இன்பமே - குணங்களற்ற ஆநந்தமே, உன்னை குறுகினேற்கு - உன்னை யடைந்த எனக்கு, இனி என்னகுறை - இனியென்ன குறையுளது, எ - று.

(க - ரை.) முனிவர் முதலியோரது அறிவுக்கும் அறியவொண்ணாத பொருளே, ஒப்பில்லாதவனே, எல்லா உயிர்கட்கும் உயிராயிருப்பவனே, என்பிறவியை யொழிக்கின்ற மருந்தே, மிக்க இருளினின்றுந்தெளிந்த சிதாகாயமே, திருப்பெருந்துறையுறை சிவனே, குணமில்லாத ஆநந்தமே, உன்னையடைந்த எனக்கு இனியென்ன குறையுளது என்பது.

(வி - ரை.) இணங்கு - ஒப்பு. திணிதல் - நெருங்குதல், வெளி- ஒளியெனினுமாம். குறுகுதல் - கிட்டுதல். (எ)

குறைவிலாநிறைவேகோதிலாவமுதே
யீறிலாக்கொழுஞ்சுடர்க்குன்றே
மறையுமாய்மறையின்பொருளுமாய்வந்தென்
மனத்திடைமன்னியமன்னே
சிறைபெறுநீர்போற்சிந்தைவாய்ப்பாயுந்
திருப்பெருந்துறையுறைசிவனே
யிறைவனேநீயென்னுடலிடங்கொண்டா
யினியுன்னையென்னிரக்கேனே.

(ப - ரை.) குறைவு இல்லா நிறைவே - குறைவற்ற பூர்ணமே, கோது இல்லா அமுதே - குற்றமில்லாத அமிர்தமே, ஈறு இல்லா - முடிவற்ற, கொழு - செழுமையாகிய, சுடர் குன்றே - ஒளிமலையே, மறையும் ஆய் - வேதமுமாகி, மறையின் பொருளும் ஆய் - வேதத்தின் பொருளுமாகி, வந்து - வந்து, என் மனத்திடை - என் மனத்தின்கண், மன்னிய - நிலைபெற்ற, மன்னே - இறைவனே, சிறை பெறு நீர்போல் - கரைகோலப் பெற்ற வெள்ளத்தைப்போல, சிந்தை வாய் பாயும் - என்மனத்திற் பாயா நின்ற, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானே, இறைவனே - தலைவனே, நீ - நீ, என் உடல் இடம் கொண்டாய் - என்னுடம்பையே யிடமாகக் கொண்டனை, இனி - இனி, உன்னை - நின்னை, என் இரக்கேன் - எதைப்பற்றி யிரக்கக் கடவேன், எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யுறை சிவனே, நீ என் உடம்பையே யிடமாகக்கொண்டனை, இனி உன்பால் எந்தப்பொருளை யிரக்கக்கடவேன், இரக்கக்கடவது ஒன்றுமில்லையென்பது.

(வி - ரை.) மன் - இறைவன். சிறை - கரை. சிந்தைவாய் என்பதில், வாய் ஏழனுருபு. பெறு, ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். (௫)

இரந்திரந்துருகவென்மனத்துள்ளே
யெழுகின்றசோதியேயிமையோர்
சிரந்தனிற்பொலியுங்கமலச்சேவடியாய்
திருப்பெருந்துறையுறைசிவனே

நிரந்தவாகாயநீர்நிலந்திகா
லாயவையல்லையாயாங்கே
கரந்ததோருருவேகளித்தனனுன்னைக்
கண்ணுறக்கண்டுகொண்டின்றே.

(ப - ரை.) இரந்து இரந்து உருக - இரந்திரந்துருகும் வண்ணம், என் மனத்துள்ளே - என் மனத்தில், எழுகின்ற - தோற்றுகின்ற, சோதியே - ஒளியே, இமையோர் - தேவர்களுடைய, சிரந்தனில் பொலியும் - சிரங்களில் விளங்குகின்ற, சே கமலம் - செந்தாமரை மலர்போன்ற, அடியாய் - திருவடியையுடையவனே, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையிலெழுந்தருளியிருக்குஞ் சிவபெருமானே, நிரந்த ஆகாயம் நீர் நிலம் தீ கால் ஆய் - (எவ்விடத்தும்) நிறைந்த ஆகாயம் நீர் நிலம் தீ காற்று என்பவைகளாகி, அவை அல்லையாய் - அவைகள் அல்லாதனவாயுமாகி, ஆங்கே கரந்தது - அங்கு ஒளித்ததாகிய, ஓர் உருவே - ஒருவடிவமே, உன்னைக் கண் உறகண்டுகொண்டு-உன்னைக்கண்ணுறக் கண்டுகொண்டு, இன்று - இன்று, களித்தனன் - களித்தேன், எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறையுறை சிவனே, யான் இன்று உன்னைக்கண்டு களித்தேன் என்பது.

(வி - ரை.) இரந்து இரந்து என்னும் அடுக்கு, பலகாலும் என்னும் பொருளது. பொலிதல் - விளங்குதல். கரத்தல் - ஒளித்தல். நிறைந்த, என்பது ஈண்டு எதுகைநோக்கி நிரந்த வெனத்திரிந்து நின்றது. (௩)

இன்றெனக்கருளியிருள்கடிந்துள்ளத்
தெழுகின்றஞாயிறேபோன்று
நின்றநின்றன்மைநினைப்பறநினைந்தே
னீயலாற்பிறிது மற்றின்மை
சென்றுசென்றணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாந்
திருப்பெருந்துறையுறைசிவனே
யொன்றுநீயல்லையன்றியொன்றில்லை
யாருன்னையறியகிற்பாரே.

(ப - ரை.) இன்று - இன்று, எனக்கு அருளி - எனக்கருள் செய்து, இருள் கடிந்து - இருட்டை நீக்கி, உள்ளத்து எழுகின்ற - மனத்தில் தோன்றுகின்ற, ஞாயிறு ஏ போன்று நின்ற - சூரியனையே நிகர்த்துநின்ற, நின் தன்மை - உன் தன்மையை, நீ அல்லால் பிறிது இன்மை - நீயன்றிப் பிறிது பொருளில்லாமையால், நினைப்பு அற நினைந்தேன் - நினைப்பொழிய நினைந்தனன், சென்று சென்று - போய்ப்போய், அணு ஆய் தேய்ந்து தேய்ந்து - அணுவாகித் தேய்ந்து தேய்ந்து, ஒன்று ஆம் - ஒரு பொருளேயாகின்ற, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே, ஒன்றும் நீ அல்லை - ஒரு பொருளும் நீயல்லை, நீ அன்றி - நீயல்லது, ஒன்று இல்லை - ஒரு பொருளில்லை, (இங்ஙனமாயின்) உன்னை அறிய கிற்பார் - உன்னை யறியவல்லவர், யார் - யாவர், எ - று.

(க - ரை.) இன்றெனக் கருள்செய்து என் மனத் திருளைப் போக்கி யெழுகின்ற சூரியன்போன்று நின்ற வுன் தன்மையை நினையாமல் நினைந்தேன், அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து முடிவில் ஒரு பொருளாயிருக்கிற திருப்பெருந்துறையானே, ஒரு பொருளும் நீயல்லை, நீயன்றி ஒரு பொருளில்லையாதலால் உன்னை யறியவல்லார் யார் என்பது.

(வி - ரை.) இருள் என்றது, அஞ்ஞானத்திற் கேதுவாகிய ஆணவாதிய மலவிருளை. கடிதல் - நீக்குதல். அறியகிற்பார் என்பதில் கில் ஆற்றற்பொருண்மை விகுதி. நினைப்பற நினைதல் - என்று மறவாதிருத்தல். மற்று, அசைநிலை. (எ)

பார்பதமண்டமனைத்துமாய்முளைத்துப்
பரந்ததோர்படரொளிப்பரப்பே
நீருறுதீயேநினைவதேலரிய
நின்மலாநின்னருள்வெள்ளச்
சீருறுசிந்தையெழுந்ததோர்தேனே
திருப்பெருந்துறையுறைசிவனே
யாருறவெனக்கிங்காரயலுள்ளா
ரானந்தமாக்குமென்சோதி.

(ப - ரை.) பார் பதம் அண்டம் அனைத்தும் ஆய் முளைத்து - பூமியாகிய இடம் ஆகாயம் ஆகிய எல்லாமுமாகித் தோன்றி, பரந்தது - எங்கும் வியாபித்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, படர் ஒளி பரப்பே - பரந்த ஒளிப்பரப்பே, நீர் உறு தீயே - நீரும் மிகுந்த நெருப்புமாயிருப்பவனே, நினைவதேல் - நினைவதாயின், அரிய - அந்நினைப்புக்கும் அருமையாகிய, நின்மலா - நிர்மலனே, நின் அருள் வெள்ளம் சீர் உறு - உன் கருணைப்பெருக்கின் சீர் அமைந்த, சிந்தை - மெய்யன்பரது மனத்தில், எழுந்தது - உண்டானதாகிய, ஓர் தேனே - ஒப்பற்ற தேனே, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, இங்கு - இவ்விடத்து, எனக்கு - எனக்கு, உறவு யார் - உறவினர் யாவர், அயல் உள்ளார் யார் - அயலாராயுள்ளவர் யாவர், ஆனந்தம் ஆக்கும் - இன்பத்தை யுண்டாக்குகின்ற, என் சோதி - என் சுடரே, எ - று.

(க - ரை.) பூமி முதாலகிய எல்லாமாகித் தோன்றிப்பரந்த ஒளிப்பரப்பே, நீர் நெருப்புக்களாயிருப்பவனே, நிர்மலனே, உன்னருள்பெற்ற மெய்யடியார்களின் மனத்திலூறுகின்ற தேனே, திருப்பெருந்துறை யுறை சிவனே, இவ்விடத்தில் எனக்கு உறவினரும் அயலாரும் ஒருவருமில்லையென்பது.

(வி - ரை.) பதம் - பதவிகள் எனினுமாம்; அண்டம் - வானுலகம். படர்தல் - விரிதல். நின்மலன் - மலமற்றவன். (அ)

சோதியாய்த்தோன்றுமுருவமேயருவா
மொருவனேசொல்லுதற்கரிய
வாதியேநடுவேயந்தமேபந்த
மறுக்குமானந்தமாகடலே
தீதிலாநன்மைத்திருவருட்குன்றே
திருப்பெருந்துறையுறைசிவனே
யாதுநீபோவதோர்வகையெனக்கருளாய்
வந்துநின்னிணையடிதந்தே.

(ப - ரை.) சோதியாய்த் தோன்றும் உருவமே - ஒளியாய்த் தோன்றுகின்ற உருவமே, அரு ஆம் ஒருவனே - அருவமாகின்ற ஒரு

வனே, சொல்லுதற்கு அரிய - சொல்லுதற் கரிதாகிய, ஆதியே - முதலே, நடுவே - இடையே, அந்தமே - முடிவே, பந்தம் - பிறவிக் கட்டை, அறுக்கும் - சேதிக்கின்ற, மா-பெரிய, ஆனந்தம் கடலே- இன்பசாகரமே, தீது இல்லா - தீமையில்லாத, நன்மை-நன்மையை யுடைய, திரு அருள் குன்றே - திருவருண் மலையே, திருப்பெருந் துறை உறை சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவ பெருமானே, வந்து - வந்து, நின் இணை அடி தந்து - உன்னிரண்டு திருவடிகளையுந் தந்து, நீ போவது ஓர்வகையாது - நீ போவதாகிய ஒப்பற்றவகையாது; எனக்கு அருளாய் - எனக்கு அருள் செய்வா யாக, எ - று.

(க - ரை.) உருவே, அருவே, ஆதியே, நடுவே, முடிவே, பந்தத்தை அறுக்கும் ஆநந்தக்கடலே, அருட்குன்றே, திருப்பெருந் துறையுறை சிவனே, இங்குவந்து உன் திருவடியைத் தந்தருளி, நீ போவதற்கு ஒருவகையாது நீ சொல்வாயாக என்பது.

(வி - ரை.) உருவம் - வடிவம். அருவம் - வடிவமின்மை. பந்தம் - கட்டு - (பிறவித்தளை). அருட்குன்று - அருளாகியமலை. (௬)

தந்ததுன்றன்னைக்கொண்டதென்றன்னைச்
சங்கராவார்கொலோசதுர
ரந்தமொன்றில்லாவானந்தம்பெற்றே
னியாதுநீபெற்றதொன்றென்பாற்
சிந்தையேகோயில்கொண்டவெம்பெருமான்
றிருப்பெருந்துறையுறைசிவனே
யெந்தையேயீசாவுடலிடங்கொண்டா
யானிதற்கிலனொர்கைம்மாறே.

(ப - ரை.) தந்தது உன்றன்னை - கொடுத்தது உன்னை, கொண்டது என்றன்னை - கொண்டது என்னை, சங்கரா - சங்கரனே, சதுரர் ஆர் கொலோ - சதுரப்பாடுடையார் யாவரோ, (நீ சொல் வாயாக) அந்தம் ஒன்று இல்லா - முடிவென்ப தொன்றில்லாத, ஆந ந்தம் பெற்றேன் - இன்பமடைந்தேன், என்பால் - என்னிடத்து, நீ பெற்றது ஒன்று - நீ பெற்றதாகிய ஒரு பொருள், யாது - எது, சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்-என்மனத்தையே கோ

யிலாகக்கொண்ட எம்பெருமானே, திருப்பெருந்துறை உறைசிவனே-திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எந்தையே - எமது தந்தையே, ஈசா - ஈசனே, உடல் இடம் கொண்டாய் - உடம்பையே யிடமாகக்கொண்டருளினை, இதற்கு-இந்நன்றிக்கு, யான் ஓர் கைம்மாறு இலன் - நானொரு கைம்மாறுடையனல்லேன், எ - று.

(க - ரை.) உன்னைத்தந்து என்னைக்கொண்டாய், நம்மிருவரில் சதுரர்யார், சங்கரனே, ஆனால் உன்னிடத்தில் நான் முடிவிலாத இன்பத்தைப் பெற்றேன், என்னிடத்தில் நீ பெற்றது யாது, என் மனத்தையே யிடமாகக்கொண்ட பெருமானே, திருப்பெருந்துறையானே, என்தந்தையே, ஈசனே, என்னுடலிடங்கொண்ட வுனக்கு நான் செய்யுங்கைம்மாறொன்றுமிலேன் என்பது.

(வி - ரை.) சதுரர் - சாதுரியமுள்ளவர். அறப்பெரிய பொருளாகிய உன்னைத் தந்து அறச்சிறியபொருளாகிய என்னைக்கொண்டதனால் நீ சதுரனன்று நானே சதுரன் என்றவாறாயிற்று. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

# செத்திலாப்பத்து.

சிவானந்தமளவறுக்கொணமை.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்யனேனகநெகப்புகுந்தமுதூறும்
புதுமலர்க்கழலிணையடிபிரிந்துங்
கையனேனின்னுஞ்செத்திலேனந்தோ
விழித்திருந்துள்ளக்கருத்தினையிழந்தே
னையனேயரசேயருட்பெருங்கடலே
யத்தனேயயன்மாற்கறியொண்ணாச்
செய்யமேனியனேசெய்வகையறியேன்
றிருப்பெருந்துறைமேவியசிவனே.

(ப - ரை.) பொய்யனேன் - பொய்யனேனது, அகம் நெகப் புகுந்து - மனம் நெகிழும்படி புகுந்து, அமுது ஊறும் - அமிர்தம் சுரக்கின்ற, கழல் - வீரக்கழலணிந்த, புது மலர் - புதியதாமரைமலர் போன்ற, இணை அடி - இரண்டு திருவடிகளை, பிரிந்தும் - நீங்கியும், கையனேன்-சிறியனேன், இன்னும் செத்திலேன்-இன்னமும் இறந்திலேன், அந்தோ-ஐயோ, விழித்திருந்து - விழித்திருந்தும், உள்ளக்கருத்தினை இழந்தேன் - மனக்கருத்தை யிழந்தேன், ஐயனே-கடவுளே, அரசே - அரசனே, பெரு - பெரிய, அருட்கடலே - கருணைக்கடலே, அத்தனே - தந்தையே, அயன் மாற்கு - பிரமவிட்டுணுக்களுக்கும், அறியவொண்ணா - அறிய வொண்ணாத, செய்ய மேனியனே - செம்மையாகிய திருமேனியையுடையவனே, செய்வகை அறியேன்- செய்யும் விதத்தை அறிந்திலேன், திருப்பெருந்துறைமேவிய சிவனே - திருப்பெருந்துறையில் எழுந்தருளிய சிவபெருமானே, எ-று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, பொய்யனேனது மனம்நெகிழும்படிபுகுந்து அமுதம்போலச்சுரக்கின்ற உன்திருவடியைப்பிரிந்தும் சிறியனேன், இன்னும் இறந்திலேன், விழித்திருந்தும் மதிமயங்கினேன், இனிச்செய்யும் வகையின்னதென்றுணர்ந்திலேன் என்பது.

(வி - ரை.) கை - சிறுமை. கையன்-சிறுமையையுடையவன். அந்தோ - இரக்கக்குறிப்பு. செத்திலேன் என்பதில் - பகுதி, சா அகம் - அகனெனப்போலியாயிற்று. (௧)

புற்றுமாய்மரமாய்ப்புனல்காலே
யுண்டியாயண்டவாணரும்பிறரும்
மற்றியாருநின்மலரடிகாணா
மன்னவென்னையோர்வார்த்தையுட்படுத்துப்
பற்றினாய்பதையேன்மனமிகவுருகேன்
பரிகிலேன்பரியாவுடறன்னைச்
செற்றிலேனின்னுந்திரிதருகின்றேன்
றிருப்பெருந்துறைமேவியசிவனே.

(ப - ரை.) புற்றும் ஆய் - (தம்மீது) புற்றுகளும் உண்டாகி, மரம் ஆய் - மரமும் முளைத்து, புனல் காலே உண்டியாய் - நீருங்

நாற்றுமே உணவாகப்பெற்று, அண்டவாணரும் - விண்ணுலகத்தில் வாழ்பவராகிய தேவரும், பிறரும் - ஏனையரும், வற்றி - உடம்பிளைத்து, யாரும் - யாவரும், நின் மலர் அடி காணுர் - உன் தாமரைமலர் போலுந் திருவடியைக் காண்கிலார், (அங்ஙனமாக) மன்ன - தலைவனே, என்னை - அடியேனை, ஓர் வார்த்தை யுட்படுத்து - ஒரு சொல்லின லுட்படுத்தி, பற்றிஞய் - பற்றிக்கொண்டாய், (அந்நன்றியைக் குறித்து) பதையேன் - உடல் பதையேன், மனம் மிக உருகேன் - மனம் மிகவும் உருகமாட்டேன், பரிகிலேன் - வருந்துகிலேன், பரியா உடல் தன்னை - தாங்கவொண்ணுத உடம்பை, செற்றிலேன் - வருத்திலேன், இன்னும் திரிதருகின்றேன் - இன்னமும் திரியாநின்றேன், திருப்பெருந்துறை மேவிய சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, தேவர் முதலிய யாவரும் கடுந்தவம்புரிந்தும் உன் திருவடியைக் காண்கிலர், அங்ஙனமாக, என்னை ஒரு சொல்லின லகப்படுத்திச் சேர்த்துக்கொண்டாய், அதைக்குறித்து நான் பதைத்தல் முதலியவுஞ் செய்யாமல் இன்னும் திரியாநின்றேன் என்பது.

(வி - ரை.) கால் - காற்று. வற்றுதல் - உடம்பு மெலிதல். பற்றுதல் - வளைத்துக்கொள்ளுதல். பரித்தல் - தாங்குதல். செற்றல் - வருத்துதல். (உ)

புலையனேனையும்பொருளெனநினைந்துன்
னருள்புரிந்தனைபுரிதலுங்களித்துத்
தலையினுனடந்தேன்விடைப்பாகா
சங்கராவெண்ணில்வானவர்க்கெல்லா
நிலையனேயலைநீர்விடமுண்ட
நித்தனேயடையார்புரமெரித்த
சிலையனேயெனைச்செத்திடப்பணியாய்
திருப்பெருந்துறைமேவியசிவனே.

(ப - ரை.) புலையனேனையும் - புலையனாகிய என்னையும், பொருள் எனநினைந்து - ஒரு பொருளாக நினைத்து, உன் அருள் புரிந்தனை - உன்னருள் செய்தாய், புரிதலும் - செய்தலும், களித்து -

களிப்படைந்து, தலையினால் நடந்தேன் - தலையால் நடந்தேன், விடைப்பாகா - இடபவாகனனே, சங்கரா - சங்கரனே, எண் இல் - அளவில்லாத, வானவர்க்கு எல்லாம் - தேவர்களுக்கெல்லாம், நிலையனே - நிலையிடமா யிருப்பவனே, அலைநீர் - கடலிற் றோன்றிய, விடம் உண்ட - நஞ்சையுண்ட, நித்தனே - சாசுவதனே, அடையார் - பகைவருடைய, புரம் எரித்த - முப்புரத்தை யெரித்து நீறாக்கின, சிலையனே - வில்லையுடையவனே, செத்திட - இறக்க, என்னை பணியாய் - என்னை ஏவுவாயாக, திருப்பெருந்துறை மேவிய சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, புலையனாகிய என்னை ஒரு பொருளென நினைந்து உன்னருள்தந்தனை, தருதலும் அந்த அருள்பெற்ற களிப்பால் தலையால் நடந்தேன், நான் இறக்கும்படி கட்டளையிடுவாயாக என்பது.

(வி - ரை.) புலையன் - நீசன். தலையினால் நடத்தல் - தலைகீழாய் நடத்தல். (௩.)

அன்பராகிமற்றருந்தவமுயல்வா
ரயனுமாலுமற்றழலுறுமெழுகா
மென்பராய்நினைவாரெனைப்பலர்நிற்க
விங்கெனையெற்றினுக்காண்டாய்
வன்பராய்முருடொக்குமென்சிந்தை
மரக்கணென்செவியிரும்பினும்வலிது
தென்பராய்த்துறையாய்சிவலோகா
திருப்பெருந்துறைமேவியசிவனே.

(ப - ரை.) அன்பர் ஆகி - உனக்கன்புடையராகி, அரு தவம் முயல்வார் - அரியதவத்தை முயன்று செய்பவராகிய, அயனும் மாலும் - பிரமனும் விட்டுணுவும், அழல் உறும் மெழுகு ஆம் - நெருப்பைச்சேர்ந்த மெழுகுபோல் உருகாநின்ற, என்பர் ஆய் - என்பையுடையராகி, நினைவார் - உன்னையே தியானிப்பவராகிய, எனைப்பலர் - எனையர் பலரும், நிற்க - இருக்க, இங்கு - இவ்விடத்து, என்னை - அடியேனை, எற்றினுக்கு ஆண்டாய் - யாதுக்கு ஆண்டருளினை, என்

சிந்தை - என் மனம், வல் பராய் முருடு ஒக்கும் - வலிய பராய்க்கட்டையை நிகர்க்கும், கன்மரம் - கன்மரத்தை நிகர்க்கும், என்செவி இரும்பினும் வலிது - என்செவி இரும்பினும் வலியது, தென் - அழகிய, பராய்த்துறையாய் - திருப்பராய்த்துறையை யுடையவனே, சிவலோகா - சிவலோகனே, திருப்பெருந்துறைமேவிய சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, அன்பராய் அருந்தவஞ் செய்வாராகிய பிரமன் முதலாகிய யாவரும் வற்றிநிற்க, என்னை யாதுகாரணமாக ஆண்டருளினையோ அறிந்திலேன், என் மனம் வலிய பராய்க்கட்டையை நிகர்க்கும், கன்மரத்தை நிகர்க்கும், செவி இரும்பினும் வலிது, என்பது.

(வி - ரை.) என்பர் என்றது எனும்மையொழியத் தகைமுதலியவையிலர் என்றபடி. பராய் - பிராய் மரம். முருடு - கட்டை, பராய்த்துறை - ஓர் திருப்பதி. எனைப்பலர் என்றது - எனையென நின்றது குறுக்கல். (ரு)

ஆட்டுத்தேவர்தம்விதியொழித்தன்பா
லையனேயென்றுன்னருள்வழியிருப்பே
னாட்டுத்தேவருநாடரும்பொருளே
நாதனேயுனைப்பிரிவுறுவருளைக்
காட்டித்தேவநின்கழலிணைகாட்டிக்
காயமாயத்தைக்கழித்தருள்செய்யாய்
சேட்டைத்தேவர்தந்தேவர்பிரானே
திருப்பெருந்துறைமேவியசிவனே.

(ப - ரை.) ஆட்டுத்தேவர் தம் விதி ஒழித்து - விளையாட்டுத்தேவர்களுடைய நியமிப்பை யொழித்து, ஐயனே யென்று - கடவுளேயென்று, உன் அருள்வழி யிருப்பேன் - உன் திருவருளின் வழியாகவே நிற்பேன், நாட்டுத்தேவரும் - பூசுரரும்; நாடு அரு பொருளே - தேடுதற்கரிதாகிய பொருளே, நாதனே - இறைவனே, உன்னை பிரிவுறு - உன்னைப் பிரியாமைக்கேதுவாகிய, அருளை - கருணையை, காட்டி - காட்டி, தேவ - தேவனே, நின் கழல் இணை காட்டி - உன் திருவடியிணையைக் காட்டி, காயம் மாயத்தை கழித்து - உடம்பாகிய பொய்ப்பொருளைக் கழித்து, அருள் செய்யாய் - அருள் புரியக்கட

வாய், சேடு ஐந்தேவர் தம் தேவர் பிரானே - பெருமையும் அழகு முள்ள தேவதேவருக்கும் பெருமானே, திருப்பெருந்துறை மேவிய சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, பொய்த்தேவர்களுடைய சம்பந்தத்தை யொழித்து, ஐயனேயென்று உன் அருள் வழியிலிருப்பேன், உன்னைப் பிரியாமலிருக்கக் கிருபைசெய்து, உன் திருவடியைக்காட்டி, இவ்வுடம்பாகிய பொய்யை யொழித்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) விதி - கட்டளை. நாகு - பூமி. சேட்டை - தொழில் எனினுமாம். (௫)

அறுக்கிலேனுட றுணிபடத் தீப்புக்
கார்கிலேன் றிருவருள் வகையறியேன்
பொறுக்கிலேனுடல் போக்கிடங் காணேன்
போற்றிபோற்றியென் போர்விடைப்பாகா
இறக்கிலேனுனைப் பிரிந்தினி திருக்க
வென்செய்கேனிது செய்கவென் றருளாய்
சிறைக்கணே புனனிலவிய வயல்சூழ்
திருப்பெருந்துறை மேவியசிவனே.

(ப - ரை.) உடல் துணிபட - உடம்பு துண்டங்களாக, அறுக்கிலேன் - சேதிக்கிலேன், தீ புக்கு ஆர்கிலேன் - தீயிற் குளித்து அதனிடத்தே தங்கிலேன், திருவருள் வகை அறியேன் - உன் திருவருளைப் பெறும் விதத்தை அறிகிலேன், உடல் பொறுக்கிலேன் - உடம்பைத் தாங்கமாட்டேன், போக்கு இடம் காணேன் - சென்றடையுமிடத்தையும் காண்கிலேன், போற்றி போற்றி - உனக்கு வணக்கம் வணக்கம், என் - எனக்குத் தாரகனே, போர்விடைப் பாகா - போர்த்தொழிலிற் சிறந்த இடபத்தை வாகனமாகக்கொண்டு செலுத்துவோனே, இறக்கிலேன் - இறந்தாயினு மொழிகிலேன், உன்னைப்பிரிந்து இனிது இருக்க - உன்னை நீங்கி இனிதாயிருத்தற்கு, என் செய்கேன் - என்ன (உபாயம்) செய்வேன், இது செய்க

என்று அருளாய் - இதனைச் செய்கவென்று அருள்செய்யக்கடவாய், சிறைக்கணே - கரைகோலின இடங்களிலெல்லாம், புனல் நிலவிய - நீர் நிலைபெற்ற, சூழ் வயல் - வயல் சூழ்ந்த, திருப்பெருந்துறை மேவிய சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உடம்பு துண்டுகளாக அறுக்கிலேன், தீயில் வீழ்கிலேன், திருவருளைப் பெறும் வகையை யறிந்திலேன், உடம்பைத் தாங்ககில்லேன், வேறு போக்கிடமுங் காணேன், இறக்கவுமாட்டேன்,உன்னைப் பிரிந்திருத்தற்குபாயம் யாது செய்வேன், இதனைச் செய்கவென் றருள்வாயாக என்பது.

(வி - ரை.) துணி - துண்டு. சிறை - கரைகோலின இடம். (காவல்.) (௬)

மாயனேமறிகடல்விடமுண்ட
வானவாமணிகண்டத்தெம்மமுதே
நாயினேனுனைநினையவுமாட்டே
னமச்சிவாயவென்றுன்னடிபணியாப்
பேயனாகிலும்பெருநெறிகாட்டாய்
பிறைகுலாஞ்சடைப்பிஞ்ஞகனேயோ
சேயனாகிநின்றலறுவதழகோ
திருப்பெருந்துறைமேவியசிவனே.

(ப - ரை.) மாயனே - தந்திரமுள்ளவனே, மறி - அலைகள் மறிகின்ற, கடல் - கடலிலுண்டான, விடம் - நஞ்சை, உண்ட - அமுது செய்த, வானவா - பெருமையை யுடையோனே, மணி கண்டத்து - கருமையாகிய திருமிடற்றையுடைய, எம் அமுதே - எம் அமிர்தமே, நாயினேன் - நாயனையேன், உன்னை நினையவும்மாட்டேன் - உன்னை நினைக்கவுமாட்டேன், நமச்சிவாய என்று - நமச்சிவாயவென்று, உன் அடிபணியா - உன் திருவடியை வணங்காத, பேயன் ஆகிலும் - பேயினேனாயினும், பெரு நெறி காட்டாய் -

குகின்ற, சடை - சடையையுடைய, பிஞ்ஞகனே - பிஞ்ஞகனே, சேயன் ஆகி நின்று - தூரத்தனாகி நின்று, அலறுவது - யான் அலறு நிற்பது, அழகோ - அழகாகுமோ, திருப்பெருந்துறை மேவிய சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எ-று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, நாயேன் உன்னை நினைக்கவுமாட்டேன், நான் உன் திருவடியை வணங்காத பேயனாயினும் பெருநெறி காட்டுவாயாக, உன்னைப் பிரிந்தவனாய் நின்று அலறுவது அழகாமோ, ஆகாது என்பது.

(வி - ரை.) மணி - நீலமணி யெனினுமாம். பெருநெறி - முத்திநெறி. (எ)

போதுசேரயன்பொருகடற்கிடந்தோன்
புரந்தராதிகணிற்கமற்றென்னைக்
கோதுமாட்டிநின்குரைகழல்காட்டிக்
குறிக்கொள்கென்றுநின்றொண்டரிற்கூட்டா
யாதுசெய்வதென்றிருந்தனன்மருந்தே
யடியனேனிடர்ப்படுவதுமினிதோ
சீதவார்புனனிலவியவயல்சூழ்
திருப்பெருந்துறைமேவியசிவனே.

(ப - ரை.) போது சேர் அயன் - தாமரைமலரிற் றங்கிய பிரமனும், பொருகடல் கிடந்தோன் - அலைமோதுகின்ற கடலிற் றுயில் வோனாகிய திருமாலும், புரந்தராதிகள் - இந்திரன் முதலிய தேவர்களும், நிற்க - இருக்க, என்னை - ஒன்றுக்கும்பற்றாத சிறியேனை, கோதும் ஆட்டி - சீராட்டியும், நின் குரைகழல் காட்டி - உன் ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடியைக் காட்டியும், குறிக்கொள்கென்று - கடைப்பிடிப்பாயென்று, நின் தொண்டரின் கூட்டாய் - உன் தொண்டரோடு சேர்ப்பாயாக, யாது செய்வது என்று இருந்தனன் - யாது செய்வதென் றிருந்தேன், மருந்தே - அமிர்தமே, அடியனேன் - அடியேன், இடர்ப்படுவதும் - துன்பப்படுவதும், இனிதோ - உனக்கு இனிதாயிருக்கின்றதோ, சீதம் - குளிர்ச்சியை யுடைய, வார்புனல் நிலவிய - பெருநீர் நிலைபெற்ற, வயல் சூழ் - வயல் சூழ்ந்த, திருப்பெருந்துறை மேவிய சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எ-று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, பிரமன், திருமால், இந்திரன் முதலானோ ரிருக்க, என்னைச் சீராட்டி, எனக்கு உன் திருவடியைக்காட்டி, இதனை உறுதியாய்ப் பற்றென்று உன் தொண்டரோடு கூட்டுவாயாக, என்செய்யக் கடவதென்றிருந்தேன், அடியேன் துன்பப்படுவது உனக்கு இனிதாயிருக்கின்றதோ என்பது.

(வி - ரை.) போது - மலர். அது இவ்விடத்துத் தாமரை மலருக்காயிற்று. பொருதல் - மோதுதல். குறிக்கொள்ளல் - உறுதியாய்ப்பற்றல். (அ)

ஞாலமிந்திரனுன்முகன்வானவர்
நிற்கமற்றெனைநயந்தினிதாண்டாய்
காலனாருயிர்கொண்டபூங்கழலாய்
கங்கையாயங்கிதங்கியகையாய்
மாலுமோலமிட்டலறுமம்மலர்க்கே
மரக்கணேனையும்வந்திடப்பணியாய்
சேலுநீலமுநிலவியவயல்சூழ்
திருப்பெருந்துறைமேவியசிவனே.

(ப - ரை.) ஞாலம் - உலகத்தாரும், இந்திரன் - இந்திரனும், நான்முகன் - பிரமனும், வானவர் - மற்றைத்தேவர்களும், நிற்க - இருக்க, என்னை நயந்து - என்னை விரும்பி, இனிது ஆண்டாய் - இனிதாக ஆண்டருளினை, காலன் - இயமனது, ஆர் உயிர் - அரியவுயிரை, கொண்ட - கவர்ந்த, பூ கழலாய் - அழகிய திருவடியையுடையவனே, கங்கையாய் - கங்கையைச் (சடையிற்) கொண்டவனே, அங்கி தங்கிய கையாய் - நெருப்பு நிலைபெற்ற திருக்கரத்தையுடையோனே, மாலும் - திருமாலும், ஓலமிட்டு - முறையிட்டு, அலறும் - அலறுகின்ற, அ மலர்க்கே - அந்தத் திருவடிமலருக்கே, மரக்கணேனையும் - மரக்கண்ணனாகிய என்னையும், வந்திட - வந்தடையும்படி, பணியாய் - நியமித்தருள்வாயாக, சேலும் - கயல்களும், நீலமும் - நீலமலர்களும், நிலவிய - நிலைபெற்று விளங்குகின்ற, வயல் சூழ் - வயல் சூழ்ந்த, திருப்பெருந்துறைமேவிய சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, உலகத்தார், இந்திரன், பிரமன், மற்றைத் தேவர்கள், முதலியோரிருக்க, என்னை விரும்பியாண் டாண்டருளினை, காலகாலனே, கங்கைச்சடையனே, நெருப்புக்கையனே, திருமாலும் விரும்புகின்ற அந்தத் திருவடியை யே அடியேன் வந்து சேரும்படி நியமித்தருள்வாயாக என்பது.

(வி - ரை.) நயத்தல் - விரும்புதல், மரக்கண்ணன் - மரம்போ லும் வலியகண்ணன். அன்றி மரக்கணுவை யொப்பவனாகிய மூடன் எனினுமாம். சேல் - ஓர் வகை மீன். (க)

அளித்துவந்தெனக்காவவென்றருளி
யச்சந்தீர்த்தநின்னருட்பெருங்கடலிற்
றிளைத்துந்தேக்கியும்பருகியுமுருகேன்
றிருப்பெருந்துறைமேவியசிவனே
வளைக்கையானொடுமலரவனறியா
வானவாமலைமாதொருபாகா
களிப்பெலாமிகக்கலங்கிடுகின்றேன்
கயிலைமாமலைமேவியகடலே.

(ப - ரை.) அளித்து வந்து - கிருபைசெய்து வந்து, எனக்கு ஆவ என்று அருளி - எனக்கு ஐயோவென்றிரங்கி யருளி - அச்சம் தீர்த்த - அச்சத்தைத் தவிர்த்த, நின் அருள் பெரு கடலில் - உனது அருளாகிய பெருங்கடலில், திளைத்தும் - குளித்தும், தேக்கியும் - தேக்கெறிந்தும், பருகியும் - உண்டும், உருகேன் - உருகமாட்டேன், திருப்பெருந்துறை மேவிய சிவனே - திருப்பெருந்துறையி லெழுந் தருளிய சிவனே, வளை கையனொடு - சங்கத்தைத் தரித்த திருக்கை யினையுடையவனாகிய திருமாலோடு, மலரவன் அறியா - பிரமனும் அறியவொண்ணாத, வானவா - பெரியோனே, மலைமாது ஒருபாகா - உமாதேவியாராகிய ஒருபங்கையும் உடையானே, களிப்பு எல்லாம் - யான் கொண்ட களிப்பு முழுதும், மிகக் கலங்கிடுகின்றேன் - (துன் பமாய்) மிகவும் கலங்கப்பெற்றுளேன், கயிலை - கயிலையென்கிற, மாமலை மேவிய - பெரிய மலையிலுள்ள, கடலே - அருட்கடலே, எ-று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, கிருபைசெ ய்துவந்த எனக்கு இரங்கி, என் அச்சத்தையொழித்த உன்னருட்பெ

ருங் கடலில் குளித்தும் தேக்கெறிந்தும் உருகமாட்டேன், என் மகி ழ்ச்சிமுழுதும் கலங்கிவிட்டது, எனக்கு உன்னையன்றி வேறு புகலி டமில்லையென்பது.

(வி - ரை.) ஆவா ஆவ எனக்குறுகிற்று. அளித்தல் - கிருபை செய்தல். திளைத்தல் - குளித்தல். தேக்குதல் - தேக்கெறிதல், (எப்ப மிடுதல்) பருகுதல் - உண்டல். வளை - சங்கு. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

# அடைக்கலப்பத்து.

## பக்குவநிண்ணயம்.

### கலவைப்பாட்டு.

திருச்சிற்றம்பலம்.

செழுக்கமலத்திரளனநின்சேவடிசேர்ந்தமை—-
பழுத்தமனத்தடியருடன்போயினர்யான்பாவியேன்
புழுக்கணுடைப்புன்குரம்பைப்பொல்லாக்கல்விஞானமிலா
வழுக்குமனத்தடியேனுடையாயுன்னடைக்கலமே.

(ப - ரை.) செழு கமலம் திரள் அன்ன - செழுமையாகிய தாமரைமலர்த் திரள்போன்ற, நின் சேவடி சேர்ந்து-உன் திருவடியையடைந்து, அமைந்த - அமைவுபெற்ற, பழுத்த மனத்து அடியர் - கனிந்தமனத்தையுடைய அடியார், உடன் போயினர் - உன்னோடு சென்றனர், (அங்ஙனஞ் செல்லாத) யான் - நான், பாவியேன் - பாவத்தையுடையேன், (ஆயினும்) புழுக்கள் நுடை - புழுக்கள் நெளிதலையுடைய, புன் குரம்பை - இழிவாகிய உடம்பையும், பொல்லா கல்வி - தீமையாகிய கல்வியையும், ஞானம் இல்லா அழுக்கு மனத்து - அறிவில்லாத அழுக்கு மனத்தினையும் உடைய, அடியேன் - அடி

யேனும், உடையாய் - உடையவனே, உன் அடைக்கலமே - உனக்கு அடைக்கலப்பொருளே, எ - று.

(க - ரை.) உன் திருவடியையடைந்த அன்பர் உன்னோடு சென்றனர், பாவியும் புழுக்கூட்டை யுடையவனும், கல்விஞானங்களில்லாதவனும், அழுக்கு மனமுடையவனும் ஆகிய நானும் உன் அடைக்கலப்பொருளே என்பது.

(வி - ரை.) பழுத்த மனம் - கனிந்தமனம். குழைதல்-நெகிதல். குரம்பை - உடல். (க)

வெறுப்பனவேசெய்யுமென்சிறுமையைநின்பெருமையினாற்
பொறுப்பவனேயராப்பூண்பவனேபொங்குகங்கைசடைச்
செறுப்பவனேநின்றிருவருளாலென்பிறவியைவே
ரறுப்பவனேயுடையாயடியேனுன்னடைக்கலமே.

(ப - ரை.) வெறுப்பனவே செய்யும் - வெறுக்கத்தக்ககாரியங்களையே செய்கின்ற, என் சிறுமையை - என் இழிவை, நின் பெருமையினால் - உன் பெருமையால், பொறுப்பவனே - பொறுத்தருள்வோனே, அரா பூண்பவனே - பாம்பணிவோனே, பொங்கு கங்கை - பெருகிவந்த கங்கையாற்றை, சடை - சடாபாரத்தில், செறுப்பவனே - அடக்கினவனே, நின் திருவருளால் - உன் திருவருளாகியவாளாலே, என்பிறவியை - என் பிறவிக்காட்டை, வேர் அறுப்பவனே - வேரோடு சேதிப்பவனே, உடையாய் - உடையவனே, அடியேன் உன் அடைக்கலம் - அடியேனும் உன் அடைக்கலப் பொருளே, எ - று.

(க - ரை.) தீமைகளையே செய்கின்ற என் இழிவை உன்பெருங்குணத்தாற் பொறுப்பவனே, பாம்பணிவோனே, கங்கைச்சடையனே, உன் திருவருளால் என் பிறவியை வேரறுப்பவனே, அடியேனும் உன் அடைக்கலப் பொருளே, என்பது.

(வி - ரை.) வெறுப்பன என்றது - தீயவைகளை. பெருமை - பெருங்குணம். செறுத்தல் - அடக்குதல். (உ)

பெரும்பெருமானென்பிறவியைவேரறுத்துப்பெரும்பிச்சுத்
தரும்பெருமான்சதுரப்பெருமானென்மனத்தினுள்ளே
வரும்பெருமான்மலரோனெடுமாலறியாமனின்ற
வரும்பெருமானுடையாயடியேனுன்னடைக்கலமே.

(ப - ரை.) பெரும் பெருமான் - பெரிய பெருமானே, என் பிறவியை வேர் அறுத்து - என் பிறவிக்காட்டை வேரோடு களைந்து, பெரும் பிச்சு தரும் பெருமான் - பெரும்பித்தத்தைத் தருகின்ற பெருமானே, சதுரப் பெருமான் - சதுரப்பாட்டையுடைய பெருமானே, என்மனத்தினுள்ளே வரும் பெருமான் - என் மனத்தில் எழுந்தருளும் பெருமானே, மலரோன் - பிரமனும், நெடுமால் - திருமாலும், அறியாமல் நின்ற - அறியவொண்ணாமல் நின்ற, அரும் பெருமான் - அருமையாகிய பெருமானே, உடையாய் - உடையவனே, அடியேன் உன் அடைக்கலமே - அடியேனும் உன் அடைக்கலப்பொருளே, எ - று.

(க - ரை.) பெரிய பெருமானே, என் பிறவியை யறுத்து எனக்குப் பெரும்பித்தேற்றும் பெருமானே, சதுரப் பெருமானே, என் மனத்தில் எழுந்தருளும் பெருமானே, பிரம விட்டுணுக்கள் அறிய வொண்ணாமல் நின்ற அரும்பெருமானே, அடியேனும் உன் அடைக்கலப்பொருளே என்பது.

(வி - ரை.) பிச்சு - பித்து, சதுரம் - சாதுரியம் (சதுரப்பாடு.)

பொழிகின்றதுன்பப்புயல்வெள்ளத்தினின்கழற்புணைகொண்
டிழிகின்றவன்பர்களேறினர்வான்யானிடர்க்கடல்வாய்ச்
சுழிசென்றுமாதர்த்திரைபொரக்காமச்சுறவெறிய
வழிகின்றனனுடையாயடியேனுன்னடைக்கலமே.

(ப - ரை.) பொழிகின்ற - சொரிகின்ற, துன்பம் - துன்பமாகிய, புயல்வெள்ளத்தில் - நீர்ப்பெருக்கில், நின் கழல் புணை கொண்டு - உன் திருவடியாகிய மரக்கலத்தைத் துணையாகக்கொண்டு, இழிகின்ற - இழிந்த, அன்பர்கள் - உன் அன்பர்கள், வான் ஏறினர் - (அந்தத் துன்பப்பெருக்கைக் கடந்து) முத்தியாகிய கரையில்

எறிஞர்கள், யான் - நான், இடர் கடல்வாய் - துன்பக்கடலில், சுழி சென்று - பல சுழிகளிற் சிக்கி, மாதர் திரை பொர - மாதராகிய அலைகள் மோதவும், காமச்சுறவு எறிய - காமமாகிய மகரமீன் எறியவும், அழிகின்றனன் - அழியா நின்றேன், உடையாய் - உடையவனே, அடியேன் உன் அடைக்கலமே - அடியேனும் உன் அடைக்கலப்பொருளே, எ - று.

(க - ரை.) துன்பவெள்ளத்தில் உன் திருவடிப்புணைகொண்டிறங்கின அன்பர்கள்வானேறினார், நான் துன்பமாகிய வெள்ளத்தின் சுழியிலகப்பட்டு மாதராகிய அலையெறிய, காமச்சுறவம் வெட்ட அழியா நின்றேன், அடியேனும் உன் அடைக்கலப்பொருளே என்பது.

(வி - ரை.) வெள்ளம் - கடல் எனினும் அமையும். வான் - ஆகாயம், (முத்தி). (௫)

சுருள்புரிகூழையர்சூழலிற்பட்டுன் றிறமறந்திங்
கிருள்புரியாக்கையிலேகிடந்தெய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரிமானன்னநோக்கிதன்பங்கவிண்ணோர்பெருமா
னருள்புரியாயுடையாயடியேனுன்னடைக்கலமே.

(ப - ரை.) சுருள்புரி - சுருளாகச்செய்யப்பட்ட, கூழையர் - கூந்தலையுடையராகிய மாதரது, சூழலில் பட்டு - கூட்டத்திற் சிக்கி, உன் திறம் மறந்து - உன் திறத்தை மறந்து, இங்கு — இவ்விடத்து, இருள்புரி யாக்கையிலே கிடந்து - (அஞ்ஞானமாகிய) இருளை யுண்டாக்குதற்குரிய உடம்பிற்கிடந்து, எய்த்தனன் - இளைத்தேன், மை தடம் கண் - அஞ்சனம் தோய்ந்த பெருங்கண்களையும், வெருள்புரி - அச்சத்தைக் காட்டுகின்ற, மான் அன்ன நோக்கி - மானினது பார்வை போன்ற பார்வையும் உடைய உமாதேவியின், பங்க - பாகத்தையுமுடையவனே, விண்ணோர் பெருமான் - தேவர் பெருமானே, அருள் புரியாய் - அருள் செய்வாயாக, உடையாய் - உடையவனே, அடியேன் உன் அடைக்கலமே - அடியேனும் உன் அடைக்கலப் பொருளே, எ - று.

(க - ரை.) மாதர் கூட்டத்தி லகப்பட்டு உன்னை மறந்து இவ்வுடம்பிற் கிடந்து இளைத்தேன், இனியாயினும் அருள்புரியவேண்டும், அடியேனும் உன் அடைக்கலப் பொருளே என்பது.

(வி - ரை.) சுருள் - ஐம்பாலினொன்று, அது பின்னே செருகப்படுவது. சூழல் - கருத்து என்றலுமாம். புரிதல் - செய்தல். (௫)

மாழைமைப்பாவியகண்ணியர்வன்மத்திடவுடைந்து
தாழியைப்பாவுதயிர்போற்றளர்ந்தேன்றடமலர்த்தாள்
வாழியெப்போதுவந்தெந்நாள்வணங்குவன்வல்வினையே
னாழியப்பாவுடையாயடியேனுன்னடைக்கலமே.

(ப - ரை.) மாழை - மாவடுவகிர்போன்ற, மை பாவிய - மையோடு கூடிப் பரந்த, கண்ணியர் - கண்களையுடைய மாதரால், வல் மத்து இட உடைந்து - வலிய மத்திட்டுக் கடையச் சிதறுண்டு, தாழியை பாவு தயிர்போல் - மிடாவில் பாவிச் சுழல்கின்ற தயிர்போல, தளர்ந்தேன் - மெலிந்தேன், வல் வினையேன் - வலிய வினையையுடையேனாகிய நான், தடம் மலர் தாள் - பெருமையுள்ள தாமரைமலர்போன்ற திருவடியை. எப்போது வந்து - எந்தக்காலத்தில் வந்து, எநாள் வணங்குவன் - எந்நாளில் வணங்கப் பெறுவேன், ஆழி அப்பா - கருணைக்கடலாகிய என் அப்பனே, உடையாய் - உடையவனே, அடியேன் உன் அடைக்கலமே - அடியேனும் உன் அடைக்கலப் பொருளே, எ - று.

(க - ரை.) மாதர் மத்திட்டுக் கடையச் சிதறுண்டு மிடாவில் பாவிச் சுழல்கின்ற தயிர்போலத் தளர்ந்தேன், இனி எந்தக்காலம் வந்து உன் திருவடியை வணங்குவேன் அடியேனும் உன் அடைக்கலப்பொருளே, என்பது.

(வி - ரை.) மாழை - மாவடு. தடம் - தடாகம் எனினுமாம்.

மின்கணினார்நுடங்குமிடையார்வெகுளிவலையிலகப்பட்டுப்
புன்கணனாய்ப்புரள்வேனைப்புறளாமற்புகுந்தருளி
யென்கணிலேயமுதூறித்தித்தித்தென்பிழைக்கிரங்கு
மங்கணனேயுடையாயடியேனுன்னடைக்கலமே.

(ப - ரை.) மின்கண்ணினார் - மின்னுகின்ற கண்களையுடையவரும், நுடங்கும் இடையார் - துவளாநின்ற இடையினையுடையவரும் ஆகிய மாதரது, வெகுளி வலையில் அகப்பட்டு - சினமாகிய வலை

யிற்சிக்கி, புன் கண்ணன் ஆய் - துன்பத்தை யுடையவனாகி, புரள் வேனை - புரள்கின்ற என்னை, புராமல் - புரளாவண்ணம், புகுந்தருளி - வலிய எழுந்தருளி, என்கண்ணில் - என்னிடத்தில், அமுதூறி - அமிர்தம்போலச் சுரந்து, தித்தித்து - இனித்து, என் பிழைக்கு இரங்கும் - என் குற்றத்துக்கு இரங்கி யருளுகின்ற, அம்கண்ணனே - கிருபைக் கண்ணனே, உடையாய் - உடையவனே, அடியேன் உன் அடைக்கலமே - அடியேன் உன் அடைக்கலப் பொருளே, எ - று.

(க - ரை.) மாதர்வசத்திற்சிக்கித் துன்பப்படுகின்ற என்னைத் துன்பொழித் தாண்டருளி, என்பிழைக்கிரங்குகின்ற கிருபை நோக்குமுடையவனே, அடியேனும் உன் அடைக்கலப்பொருளே என்பது.

(வி - ரை.) நுடங்குதல் - அசைதல். புன்கண் - துன்பம். (எ)

மாவடுவகிரன்னகண்ணிபங்காநின்மலரடிக்கே
கூவிடுவாய்கும்பிக்கேயிடுவாய்நின்குறிப்பறியேன்
பாவிடையாடுகுழல்போற்கரந்துபரந்ததுள்ள
மாகெடுவேனுடையாயடியேனுன்னடைக்கலமே.

(ப - ரை.) மா வடு வகிர் அன்ன - மாவடுவின் பிளவுபோன்ற, கண்ணி - கண்களையுடைய உமாதேவியின், பங்கா - பாகத்தையுடையவனே, நின் - உன்னுடைய, மலர் அடிக்கே - தாமரை மலர்போலும் திருவடிக்கே, கூவிடுவாய் - அழைத்துக்கொள்வாயாக, கும்பிக்கே இடுவாய் - (அன்றி) நரகுக்கே ஆளாக்கிவைப்பாயாக, நின் குறிப்பு அறியேன் - உன் திருவுள்ளக் குறிப்பை அறிகிலேன், பா இடை ஆடு - பாவினிடத்தாடுகின்ற - குழல்போல் - குழல்போல, உள்ளம் - என்மனம், கரந்து - மறைந்து, பரந்தது - பரவிற்று, ஆ கெடுவேன் - ஐயோ கெடுவேன், உடையாய் - உடையவனே, அடியேன் உன் அடைக்கலமே - அடியேன் உன் அடைக்கலப்பொருளே, எ - று.

(க - ரை.) மாவடுவகிர்போலுங் கண்களையுடைய உமாதேவிபாகனே, என்னை உன் திருவடிக்கே யழைத்துக்கொள். அன்றி நரகுக் காளாக்கு, உன் திருவுளக் குறிப்பறிந்திலேன், பாவினிடத்து ஆடுகின்ற குழல்போல என்மனம் அலைபாநின்றது, உடையவனே, அடியேனும் உன் அடைக்கலப்பொருளே என்பது.

(வி - ரை.) மாவடு - மாம்பிஞ்சு. வகிர் - பிளவு. கும்பி - நரகம். பா - நூற்பா. குழல் - நெய்வோர் கருவியிலொன்று. (அ)

பிறிவறியாவன்பர்நின்னருட்பெய்கழற்றாளிணைக்கீழ்
மறிவறியாச்செல்வம்வந்துபெற்றாருன்னைவந்திப்பதோர்
நெறியறியேனின்னையேயறியேனின்னையேயறியு
மறிவறியேனுடையாயடியேனுன்னடைக்கலமே.

(ப - ரை.) பிறிவு அறியா அன்பர் - உன்னை நீங்குதலில்லாத அன்பர்கள், நின் - உனது, அருள் - அருளுருவாகிய, கழல்பெய் - வீரக்கழலணிந்த, தாள் இணை கீழ் - திருவடியிணைக் கீழ், வந்து - வந்தடைந்து, மறிவு அறியா - தடைபடுதலில்லாத, செல்வம் பெற்றார் - முத்திச் செல்வத்தை யடைந்தார்கள், (நான்) உன்னை வந்திருப்பது - உன்னைப் புகழ்தலாகிய, ஓர் நெறி அறியேன் - ஒப்பற்ற நெறியை யறியேன், நின்னையே அறியேன் - உன்னையே யறியேன், நின்னையே அறியும் - உன்னையே யறிகின்ற, அறிவு அறியேன்-அறிவையும் அறியேன், உடையாய் - உடையவனே, அடியேன் உன் அடைக்கலமே - அடியேனும் உன் அடைக்கலப் பொருளே, எ - று.

(க - ரை.) உன்னை விட்டு நீங்காத அன்பர் உன் திருவடியை யடைந்து முத்திச் செல்வம் பெற்றார்கள், நான் உன்னைப் புகழும் வழி யறியேன், உன்னையும் அறியேன், உன்னை யறிதற்குரிய அறிவையுமறியேன், அடியேனும் உன் அடைக்கலப்பொருளே என்பது.

(வி - ரை.) மறிவு - மடங்குதல் (தடைபடல்). (௯)

வழங்குகின்றாய்க்குன்னருளாரமுதத்தைவாரிக்கொண்டு
விழுங்குகின்றேன்விக்கினேன்வினையேனென்விதியின்மையாற்
றழங்கருந்தேனன்னதண்ணீர்பருகத்தந்துய்யக்கொள்ளா
யழுங்குகின்றேனுடையாயடியேனுன்னடைக்கலமே.

(ப - ரை.) உன் அருள் - உன்னருளாகிய, ஆர் அமுதத்தை - அரிய அமிர்தத்தை, வழங்குகின்றாய்க்கு - வழங்குகின்ற வுனக்கு, வாரிக்கொண்டு விழுங்குகின்றேன் - அள்ளிக்கொண்டு விழுங்காநின்றேன், வினையேன் என் விதியின்மையால் - வினையினேன் ஆகிய என் ஆகூழ் இல்லாமையால், விக்கினேன் - விக்கினேன்;

தழங்கு - ஒலிக்கின்ற, அருதேன் அன்ன - அரிய தேனை யொத்த, தண்ணீர் பருகத் தந்து - தண்ணீரைப் பருகக் கொடுத்து, உய்யக் கொள்ளாய் - உய்யக்கொண்டருள்வாயாக, அழுங்குகின்றேன் - வருந்தாநின்றேன், உடையாய் - உடையவனே, அடியேன் உன் அடைக்கலமே - அடியேனும் உன் அடைக்கலப்பொருளே, எ - று.

(க - ரை.) உன் அருளமுதத்தைக் கொடுக்க நான் அள்ளி யுண்டு நல்விதி யில்லாமையால் விக்கினேனாகி வருந்துகின்றேன் ஆதலால், எனக்குத் தண்ணீரைப் பருகக்கொடுத்து உய்யக்கொண்டருளவேண்டும், அடியேனும் உன்னடைக்கலப் பொருளே என்பது.

(வி - ரை.) விக்குதல் - தண்ணீர் முதலியவற்றை யுண்ணும் போது தடைபடல். விதி - நல்விதி. தழங்குதல் - ஒலித்தல். (௪0)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆசைப்பத்து.

## ஆத்துமவிலக்கணம்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கருடக்கொடியோன்காணமாட்டாக்கழற்சேவடியென்னும்
பொருளைத்தந்திங்கென்னையாண்டபொல்லாமணியேயோ
விருளைத்துரந்திட்டிங்கேவாவென்றங்கேகூவு
மருளைப்பெறுவானசைப்பட்டேன்கண்டாயம்மானே.

(ப - ரை.) கருடக்கொடியோன் - கருடக்கொடியை யுடைய வனாகிய திருமாலும், காணமாட்டா - காணவொண்ணாத, கழல் - வீரக்கழலை யணிந்த, சேவடியென்னும் - உன் திருவடியென்கிற, பொருளைத்தந்து - செல்வத்தைக்கொடுத்து, இங்கு என்னை ஆண்ட - இவ்விடத்து என்னை யாண்டருளின, பொல்லா மணியே - பொய்

ளா மணியே, இருளைத் துரந்திட்டு - (அஞ்ஞானமாகிய) இருட்டைக் கெடுத்து, இங்கே வா என்று - இங்கே வருகவென்று, அங்கே கூவும் - அங்கே யழைக்கின்ற, அருளைப் பெறுவான் - அருளைப் பெறும்பொருட்டு, ஆசைப்பட்டேன் - விரும்பினேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) கடவுளே, திருமாலும் காணமாட்டாத உன் திருவடியென்னும் பொருளைத்தந்து என்னையாண்டருளின பொல்லாமணியே, என் அஞ்ஞான இருளையொழித்து என்னை வாவென்றழைக்கின்ற உன்னருளைப்பெற விரும்பினேன், என்பது.

(வி - ரை.) கருடக்கொடியோன் என்பதனிற்றில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. பொல்லாமணி - பொள்ளாமணி, தொளைக்காதமணி, (முழுமணி) பொள்ளல் - தொளைத்தல். கண்டாய் - முன்னிலை யசையிடைச்சொல். (க)

மொய்ப்பானரம்புகயிறுகமூளையென்புதோல்போர்த்த
குப்பாயம்புக்கிருக்ககில்லேன்கூவிக்கொள்ளாய்கோவேயோ
வெப்பாலவர்க்குமப்பாலாமென்னாரமுதேயோ
வப்பாகாணவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

(ப - ரை.) மொய்ப்பு ஆன் - நெருக்கத்தையுடைய, நரம்பு - நரம்புகள், கயிறு ஆக - கயிறாகவும், மூளை என்பு தோல் போர்த்த - மூளை எலும்பு தோல் என்னும் இவைகளைப் போர்த்த, குப்பாயம் - சட்டையுள்ளே, புக்கு இருக்ககில்லேன் - புகுந்திருக்கிலேன், கூவி கொள்ளாய் - அழைத்துக்கொள்வாயாக, கோவே - இறைவனே, எப்பாலவர்க்கும் - எந்தப் பகுதியோருக்கும், அப்பால் ஆம் - அப்பாலாகிய, என் ஆர் அமுதே - என் அரிய அமிர்தமே, அப்பா - அப்பனே, காண - உன்னைக் காண, ஆசைப்பட்டேன் - விரும்பினேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) இறைவனே, இந்தவுடம்பினோடு கூடியிருக்கிலேன், என்னை யழைத்துக்கொள்ள வேண்டும், உன்னைக்காண விரும்பினேன் என்பதாம்.

(வி - ரை.) குப்பாயம் - மேற்போர்வை. மொய்ப்பு - நெருக்கம். (உ)

சீவார்ந்தீ மொய்த்தழுக்கொடு திரியுஞ்சிறுகுடிலிது சிதையக்
கூவாய்கோவே கூத்தா காத்தாட்கொள்ளுங்குருமணியே
தேவாதேவர்க்கரியானே சிவனே சிறிதென்முகநோக்கி
யாவாவென்னவாசைப்பட்டேன் கண்டாயம்மானே.

(ப - ரை.) சீ வார்ந்து - சீ யொழுகி, ஈ மொய்த்து - ஈக்கள் மொய்க்கப்பெற்று, அழுக்கொடு திரியும் - அழுக்கோடுழலுகின்ற, சிறு குடில் - சிறு குடிலாகிய, இது சிதைய - இவ்வுடலானதழிய, கூவாய் - அழைப்பாய், கோவே - இறைவனே, கூத்தா - கூத்தனே, காத்து ஆட்கொள்ளும் - காத்து அடிமை கொள்ளுகின்ற, குரு மணியே - மாணிக்கமே, தேவா - தேவத்தன்மை நிறைந்தவனே, தேவர்க்கரியானே - தேவர்களுக்கு அரியவனே, சிவனே - சிவபெருமானே, சிறிது என் முகம் நோக்கி - சிறிது என் முகத்தைப் பார்த்து, ஆவா என்ன - ஐயோவென்று நீ யிரங்கியருளும் வண்ணம், ஆசைப்பட்டேன் - விரும்பினேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) இறைவனே, இந்த வுடம் பழிய என்னை யழைத் தாட்கொள்ளவேண்டும், நீ யென் முகம் பார்த்து இரங்கியருளும்படி விரும்பினேன் என்பதாம்.

(வி - ரை.) வார்தல் - ஒழுகுதல். மொய்த்தல் - மூசுதல். குடில் - குடிசை. சிதைதல் - அழிதல். (௩)

மிடைந்தெலும்பூத்தைமிக்கழுக்கூறல்வீறிலிநடைக்கூடந்
தொடர்ந்தெனைநலியத்துயருறுகின்றேன்சோத்தமெம்பெருமானே
யுடைந்துநைந்துருகியுள்ளொளிநோக்கியுன்றிருமலர்ப்பாத
மடைந்துநின்றிடுவானாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

(ப - ரை.) எலும்பு மிடைந்து - எலும்புகள் நெருங்கி, ஊத்தை மிக்கு - ஊத்தை மிகுந்து, அழுக்கு ஊறல் வீறு - அழுக்கூறுதல் மிகுந்த, இல் - இடமாகிய, இ - இந்த, நடைகூடம் - நடைவீடு, தொடர்ந்து - பற்றி, என்னை நலிய - என்னை வருத்த, துயர் உறுகின்றேன் - துன்ப மடையாநின்றேன், சோத்தம் - உனக்கு அஞ்சலி செய்கிறேன், எம்பெருமானே - எமது பெருமானே, உடை-

ந்து நைந்து உருகி - மனமுடைந்து நைந்து உருகப்பெற்று, உன் ஒளி நோக்கி - உன்னொளியையே நோக்கி, உன் - உனது, திரு - அழகாகிய, மலர் பாதம் - தாமரை மலர்போன்ற திருவடிகளை, அடைந்து நின்றிடுவான் - அடைந்து நிற்கும்பொருட்டு, ஆசைப்பட்டேன் - விரும்பினேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) இறைவனே, இந்த வுடம்பின் தொடர்பினால் துயருறுகின்றேன், உனக்கு நமஸ்காரம், உன் திருவடியை யடைந்துநிற்க விரும்பினேன் என்பதாம்.

(வி - ரை.) மிடைதல் - நெருங்குதல். வீறிலி - மேன்மையில்லது எனினுமாம். நலிதல் - வருத்துதல். சோத்தம் - உயர்ந்தார் மாட்டிழிந்தார் செய்யு மஞ்சலி. (ச)

அளியுண்ணகத்துப்புறந்தோன்மூடியடியேனுடையாக்கை
புளியம்பழமொத்திருந்தேனிருந்தும்விடையாய்பொடியாடீ
யெளிவந்தென்னையாண்டுகொண்டவென்னாரமுதேயோ
வளியேனென்னவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

(ப - ரை.) அகத்து அளி புண் - உள்ளே கனிந்த புண், புறம் தோல் மூடி - புறத்தே தோலால் மூடப்பெற்று, அடியேன் உடை யாக்கை - அடியேன் உடைய சரீரத்தில், புளியம்பழம் ஒத்து இருந்தேன் - புளியம்பழத்தையொத்துப் பற்றற்றிருந்தேன், இருந்தும் - அங்ஙனமிருந்தும், விடையாய் - இடபவாகநனே, பொடி யாடீ - திருவெண்ணீ றணிவோனே, எளி வந்து - எளிதாக வந்து, என்னை ஆண்டு கொண்ட - என்னை ஆண்டுகொண்டருளின, என் ஆர் அமுதே - என் அரிய அமிர்தமே, அளியேன் என்ன - நீ கிருபையுடையேனென்று சொல்லும் வண்ணம், ஆசைப்பட்டேன் - விரும்பினேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) இறைவனே, இந்த வுடம்பின் தொடர்பை அருவருத்துப் புளியம்பழமொத்திருந்தேன், நீ யெளிதாய் வந்து நான் கிருபையுள்ளவன் நீ அஞ்சாதேயென்னும்படி விரும்பினேன் என்பதாம்.

(வி - ரை.) அளிதல் - கனிதல். யாக்கை என்றது, மகாமாயை யென்பதொரு சத்தி, கன்மவசத்துக்கீடாகப் பூவின் மணத்தைக் காற்று கொடுவந் தறிவிக்குமாறுபோலக் கன்மங்களுக்கான வற்பேர்க் கருத்தை, யவத்தாகாலத்திலே யுண்டாக்கிக், கருவிற்றாகவந்த

ஆன்மாவைச் சுக்கில சுரோணிதங்களிலே கூட்டிக் கட்டுவித்ததாகிய சரீரத்தை. யாத்தல் - கட்டுதல். அளி - கிருபை. (ரு)

எய்த்தேனுயேனினியிங்கிருக்ககில்லேனிவ்வாழ்க்கை
வைத்தாய்வாங்காய்வானோரறியாமலர்ச்சேவடியானே
முத்தாவுன்றன்முகவொளிநோக்கிமுறுவனகைகாண
வத்தாசாலவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

(ப - ரை.) நாயேன் எய்த்தேன் - நாயினேன் இளைத்தேன், இனி இங்கு இருக்ககில்லேன் - இனியிங் கிருக்கிலேன், இ வாழ்க்கை வைத்தாய் - இவ்வாழ்க்கையில் வைத்தனை, வாங்காய் - என்னை வளைத்துக்கொள்வாயாக, வானோர் அறியா - தேவருமறியாத, மலர்-தாமரைமலர்போன்ற, சேவடியானே - திருவடியையுடையவனே; முத்தா - முத்தனே, உன்றன் முக ஒளி நோக்கி - உன் முகக்காந்தியை நோக்கி; முறுவல் நகை காண - முறுவலின் விளக்கத்தைக் காணும்பொருட்டு, அத்தா - அத்தனே, சால ஆசைப்பட்டேன் - மிகவும் ஆசைப்பட்டேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) இறைவனே, நாயினேன் இளைத்தேன், இனி யிவ்வுடம்போடு கூடி வாழ்கிலேன், என்னை அழைத்துக்கொள்வாயாக, உன் முகவொளியையும் நகையையும் காண விரும்பினேன் என்பதாம்.

(வி - ரை.) வாங்குதல் - வளைத்தல். முறுவல் நகை - பல்லொளி. (சா)

பாரோர்விண்ணோர்பரவியேத்தும்பரனேபரஞ்சோதி
வாராய்வாராவுலகந்தந்துவந்தாட்கொள்வானே
பேராயிரமும்பரவித்திரிந்தெம்பெருமானெனவேத்த
வாராவமுதேயாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

(ப - ரை.) பாரோர் - மண்ணுலகத்தாரும், விண்ணோர் - விண்ணுலகத்தாரும், பரவி எத்தும் - வணங்கித்துதிக்கின்ற, பரனே - பரனே, பரஞ்சோதி - பரஞ்சுடரே, வாராய் - வருவாயாக, வாரா உலகம் தந்து - மீட்டும் பிறவிக்கு வாராமைக்குக் காரணமாகிய உலகத்தைக் கொடுத்து, வந்து ஆட்கொள்வானே-வந்து அடிமைகொள்வோனே, பேர் ஆயிரமும் - உன் திருநாமங்கள் ஆயிரத்தையும், பரவித்திரிந்து - வணங்கித்திரிந்து, எம்பெருமான் என ஏத்த - எம்பெருமானே என்று துதிக்க, ஆரா அமுதே - தெவிட்டாத அமிர்

தமே, ஆசைப்பட்டேன் - விரும்பினேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) இறைவனே, முத்தியுலகைத் தந்து வந்தாட்கொள்வோனே, உன் ஆயிரந் திருநாமங்களையும் துதித்தற்கு விரும்பினேன் என்பதாம்.

(வி - ரை.) வாராவுலகம் - மீட்டும் பிறவிக்கு வாராமைக்குக் காரணமாகிய முத்தியுலகம். (எ)

கையாற்றொழுதுன்கழற்சேவடிகள்கழுமத்தழுவிக்கொண்
டெய்யாதென்றன்றலைமேல்வைத்தெம்பெருமான்பெருமானென்
றையாவென்றன்வாயாலரற்றியழல்சேர்மெழுகொப்ப
வையாற்றரசேயாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

(ப - ரை.) உன் - உனது, கழல் - வீரக்கழலணிந்த, சேவடிகள் - திருவடிகளை, கையால்தொழுது - கையால் வணங்கி, கழும தழுவிக்கொண்டு - பொருந்தத் தழுவிக்கொண்டு, எய்யாது - இளைக்காமல், என்தன் தலைமேல் வைத்து - என் தலைமீது வைத்து, எம்பெருமான் பெருமான் என்று - எம்பெருமானே எம்பெருமானே என்று, ஐயா - ஐயனே, என்தன் வாயால் அரற்றி - எனதுவாயால் கூவி, அழல் சேர் மெழுகு ஒப்ப - நெருப்பைச்சேர்ந்த மெழுகை நிகர்த்து ருக, ஐயாற்று அரசே - திருவையாற்றுக்கு வேந்தனே, ஆசைப்பட்டேன் - விரும்பினேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) இறைவனே, உன் திருவடியைக் கையால்தொழுது தழுவிக்கொண்டு தலைமேல் வைத்து, ஐயனேயென்றரற்றி, தீயைச் சேர்ந்த மெழுகுபோல நானுருகவிரும்பினேன் என்பதாம்.

(வி - ரை.) கழுமல் - பொருந்தல். அரற்றல் - கூவல், ஐயாறு - ஓர் திருப்பதி. (அ)

செடியாராக்கைத்திறமறவீசிச்சிவபுரநகர்புக்குக்
கடியார்சோதிகண்டுகொண்டென்கண்ணிணைகளிகூரப்
படிதானில்லாப்பரம்பரனேயுன்பழவடியார்கூட்ட
மடியேன்காணவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

(ப - ரை.) செடி ஆர் - குற்றம் நிறைந்த, ஆக்கை திறம் - உடம்பின்றன்மையே, அற வீசி - அற வெறிந்து, சிவபுரநகர்புக்கு - சிவபுரம் என்னும் நகரிற்புகுந்து, கடி ஆர் - விளக்கம் நிறைந்த, சோதி - ஒளியை, கண்டுகொண்டு - நோக்காநின்று, என் கண் இணை - என்கண்களிரண்டும், களி கூர - களிப்புமிக, படி இல்லா - ஒப்பில்லாத, பரம்பரனே - பரம்பரனே, உன் பழ அடியார் கூட்டம் - உன் பழவடியார் கூட்டத்தை, அடியேன்காண ஆசைப்பட்டேன் - அடியேன் காண விரும்பினேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) இறைவனே, இந்தவுடம்பின் தொடர்பையறுத்துச் சிவநகரிற்புகுந்து உன் ஒளியுருவைக்கண்டு கண்களிகூரவும், உன் பழவடியார் கூட்டத்தைக்காணவும் விரும்பினேன் என்பதாம்.

(வி - ரை) கடி - விளக்கம். படி - ஒப்பு. ஆக்கை - இது யாக்கையென்பதன் மரூஉ. (௬)

வெஞ்சேலனையகண்ணார்தம்வெகுளிவலையிலகப்பட்டு
நைஞ்சேனாயேன்ஞானச்சுடரேநானோர்துணைகாணேன்
பஞ்சேரடியாள்பாகத்தொருவாபவளத்திருவாயா
லஞ்சேலென்னவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

(ப - ரை.) வெம் - விருப்பத்தையுண்டாக்குகிற, சேல் அனைய, சேல் போன்ற, கண்ணார் - கண்களையுடையவராகிய மாதரது, வெகுளிவலையில் அகப்பட்டு - சினமாகிய வலையிற்சிக்கி, நாயேன் நைஞ்சேன் - நாயினேன் நைந்தேன், ஞானம் சுடரே - ஞான சூரியனே, நான் ஓர் துணைகாணேன் - நானொருதவியுங் காண்கிலேன், பஞ்சு - செம்பஞ் சூட்டிய, ஏர் - அழகாகிய, அடியாள் - பாதங்களையுடையாளாகிய உமாதேவியின், பாகத்து - பங்கினையுடைய, ஒருவா - ஒப்பற்றவனே, பவளம் - பவளம்போன்ற, திருவாயால் - திருவாயினால், அஞ்சேல் என்ன - அஞ்சற்கவென்று நீ சொல்ல, ஆசைப்பட்டேன் - விரும்பினேன், அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) இறைவனே, மாதர்வலையிற் சிக்கிவருந்தினேன் உன்னையன்றி வேறு துணைகாணேன், உன்பவளத்திருவாயால் அஞ்சாதேயென்று நீ சொல்லவிரும்பினேன் என்பதாம்.

(வி - ரை.) சேல் - ஓர் வகைமீன், (கெண்டை). வெகுளி - கோலம். நைந்தேன் என்பது நைஞ்சேன் எனத் திரிந்தது. (௩௦)

திருச்சிற்றம்பலம்.

# அதிசயப்பத்து.

## முத்தியிலக்கணம்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வைப்புமாடென்றுமாணிக்கத்தொளியென்றுமனத்திடையுருகாதே
செப்புநேர்முலைமடவரலியர்தங்கடிறத்திடைநைவேனை
யொப்பிலாதனவுவமனிலிறந்தனவொண்மலர்த்திருப்பாதத்
தப்பனாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

(ப - ரை.) வைப்பு - புதையல், மாடு - பொன், என்று-என்று, மனத்திடை உருகாதே - மனத்தில் வைத்துருகாமல், செப்பு நேர் முலை - செப்பினை நிகர்த்த தனங்களையுடைய, மடவரலியர் தங்கள் - மாதர்களுடைய, திறத்திடை - குணங்களால், நைவேனை - வருந்து வேனை, ஒப்பு இல்லா - ஒப்பில்லாத, தன் - தன்னுடைய, உவமனில் இறந்தன - உவமையினின்று நீங்கினவாகிய, ஒள் - ஒள்ளிய, மலர் - தாமரைமலர்போன்ற, திருப்பாதத்து - திருவடியையுடைய, அப்பன் - எமது தந்தையாகிய சிவபிரான், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியரில் கூட்டிய - தன்னடியார்களோடு சேர்த்த, அதிசயம் கண்டாம் - அதிசயத்தைப் பார்த்தோம், எ - று.

(க - ரை.) பொன்முதலியவாகத் தன்னை நினைந்துருகாமல், மாதர் மயக்கத்திலே வருந்துகின்ற என்னை, எமது தந்தையாகிய சிவபிரான் ஆட்கொண்டு தன் அடியாரோடுகூட்டிய அதிசயத்தைப் பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) வைப்பு-புதையல், (நிக்ஷேபம்). மாடு - பொன்.()

நீதியாவனயாவையுநினைக்கிலேனினைப்பவரொடுங்கூடே
னேதமேபிறந்திறந்துழல்வேன்றனையென்னடியானென்று
பாதிமாதொடுங்கூடியபரம்பரனிரந்தரமாய்நின்ற
வாதியாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

(ப - ரை.) நீதி யாவனயாவையும் - நீதியாயுள்ளன ஒன்றையும், நினைக்கிலேன் - கருதகில்லேன், நினைப்பவரொடும் கூடேன் - கருதுவாரோடுங் கூடேன், ஏதமே பிறந்து இறந்து - குற்றத்திலேயே பிறந்திறந்து, உழல்வேன் தன்னை - உழலாநிற்பேனை, என் அடியான் என்று - என் அடியவனென்று, பாதிமாதொடும் கூடிய பரம்பரன் - தன் திருமேனியின் அரைப்பங்கு பெண்ணோடுகூடி யிருக்கிற பரம்பரனும், நிரந்தரம் ஆய் நின்ற ஆதி - எப்பொழுதும் உள்ளவனாய்நின்ற முதல்வனும் ஆகிய சிவபெருமான், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியாரில் கூட்டிய - தன் அடியாரோடுசேர்த்த. அதிசயம் கண்டாம் - அதிசயத்தைப்பார்த்தோம், எ - று.

(க - ரை.) நீதியைச் சிறிதும் நினையாதவனும், நினைப்பவரோடு கூடாதவனும் ஆகிப்பிறந்திறந் துழல்வேனாகிய என்னை, இறைவன் என்னடியானென்று சொல்லி ஆண்டருளித் தன்னடியாரோடு கூட்டிய அதிசயத்தைப் பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) நீதி - நியாயம். ஏதம் - குற்றம். நிரந்தரம் - எப்பொழுதும். (௨)

முன்னையென்னுடையவல்வினைபோயிடமுக்கணதுடையெந்தை
தன்னையாவருமறிவதற்கரியவனெளியவனடியார்க்குப்
பொன்னைவென்றதோர்புரிசடைமுடிதனிலிளமதியதுவைத்த
வன்னையாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

(ப - ரை.) முக்கண் உடை எந்தை-மூன்று கண்களையுடைய எமது தந்தை, தன்னையாவரும் அறிவதற்கு அரியவன் - தன்னை எல்லாரும் அறிதற்கருமையானவன், அடியார்க்கு எளியவன், - மெய்யன்பருக் கெளிமையானவன், பொன்னை வென்றது-சுவர்ணத்தை வென்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, புரிசடைமுடிதனில் - கட்டப்பட்ட சடாமகுடத்தில், இளமதிவைத்த - பாலசந்திரனைத்தரித்த, அன்னை - எமது தாய் போன்றவன், முன்னை - முற்பிறப்பிற்செய்த,

என்னுடைய - என்னுடைய, வலிய போயிட - வலிய வினைகள் அற்றொழிய, ஆண்டு - என்னை ஆண்டருளி, தன் அடியாரில் கூட்டிய - தன்னடியார்களோடு சேர்த்த, அதிசயம் கண்டாம் - அதிசயத்தைப் பார்த்தோம், எ - று.

(க - ரை.) முக்கட் பிரானாகிய இறைவன், என் முன்னை வினையொழிய ஆண்டருளித் தன்னடியாரோடு கூட்டிய அதிசயத்தைப்பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) முன்னையென்பதில் ஐ சாரியை. பொன்னை வெல்லுதலாவது - பொன்னினும் மேற்படுதல். புரி - முறுக்கு எனினுமாம். (௩)

பித்தனென்றெனையுலகவர்பகர்வதோர்காரணமிதுகேளீ
ரொத்துச்சென்றுதன்றிருவருட்கூடிடுமுபாயமதறியாமே
செத்துப்போயருநரகிடைவீழ்வதற்கொருப்படுகின்றேனை
யத்தனாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

(ப - ரை.) பித்தன் என்று - பைத்தியங்கொண்டவனென்று, என்னை - அடியேனை, உலகவர் - உலகத்தார், பகர்வது - சொல்வதாகிய, ஓர் காரணம் இது கேளீர் - ஒருகாரணமாகிய இதனைக் கேட்பீராக, ஒத்து சென்று-இணங்கிச்சென்று, தன் திருவருள் கூடிடும்-தன் திருவருளையடைகின்ற, உபாயம் அறியாமே-உபாயத்தையுணராமல், செத்து போய் - இறந்து, அரு - (துன்பம் பொறுத்தற்கு) அரிதாகிய, நரகு இடை - நரகத்தில், வீழ்வதற்கு - விழுவதற்கு, ஒருப்படுகின்றேனை - சம்மதிக்கிற என்னை, அத்தன் - எமது தந்தையாகிய சிவபெருமான், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியரில் கூட்டிய - தன் அடியாரோடுசேர்த்த, அதிசயம்கண்டாம் - அதிசயத்தைப் பார்த்தோம், எ - று.

(க - ரை.) இறைவன் தன் திருவருளைப்பெறும் வகையறியாத என்னை ஆண்டருளித் தன் அடியாரோடு கூட்டிய அதிசயத்தைப்பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) பகர்தல் - சொல்லுதல். செத்து - இறந்து-அருநரகு - துன்பம் சகித்தற்கரியநரகு. (௪)

பரவுவாரவர்பாடுசென் றணைகிலேன்பன்மலர்பறித்தேத்தேன்
குரவுவார்குழலார்திறத்தேநின்றுகுடிகெடுகின்றேனை
யிரவுநின்றெரியாடியவெம்மிறையெரிசடைமிளிர்கின்ற
வரவனாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

(ப - ரை.) பரவுவார் - (இறைவனை) துதிக்கின்றவராகிய, அவர் பாடு சென்று - அவ்வடியாரிடத்தே சென்று, அணைகிலேன் - அடையேன், பல் மலர் பறித்து ஏத்தேன் - பல மலர்களைப்பறித்து (அருச்சித்து) துதியேன், குரவு - குராமலரை யணிந்த, வார்-நீண்ட, குழலார் - கூந்தலையுடையவராகிய மாதரது, திறத்தே நின்று - குணங்களில் அகப்பட்டு நின்று, குடி கெடுகின்றேனை - குடி கெடா நின்ற என்னை, இரவு நின்று - இடையாமத்து நின்று, எரி ஆடிய - அழலோடாடிய, எம் இறை - எம் இறைவனும், எரி சடை மிளிர்கின்ற - நெருப்புப்போன்ற சடாபாரத்தில் விளங்குகின்ற, அரவன் - பாம்பையுடையவனும் ஆகிய சிவபெருமான், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியரில் கூட்டிய - தன் அடியாரோடு சேர்த்த, அதிசயம் கண்டாம் - அதிசயத்தைப் பார்த்தோம் எ - று.

(க - ரை.) இறைவனை வழிபடாநின்ற அடியார் பக்கலிற் சென்றடைந்திலேன், மலர்கொண் டருச்சித்துத் துதியேன், மாதர் மயக்கிற் சிக்கிக் குடிகெடுகின்றேன், இப்படிப்பட்ட என்னை யாண்டருளித் தன் அடியாரோடு கூட்டிய அதிசயத்தைப் பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) பரவுதல் - வழிபடுதல். பாடு - இடம். எரி - நெருப்பு. (௫)

எண்ணிலேன்றிருநாமவஞ்செழுத்துமென்னேழைமையதனாலே
நண்ணிலேன்கலைஞானிகடம்மொடுநல்வினைநயவாதே
மண்ணிலேபிறந்திறந்துமண்ணாவதற்கொருப்படுகின்றேனை
யண்ணலாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

(ப - ரை.) என் ஏழைமையதனாலே - என் பேதைமையாலே, திருநாமம் - உன் திருநாமமாகிய, ஐந்து எழுத்தினை - ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை, எண்ணிலேன் - நினைத்திலேன், கலைஞானிகள் தம்மொ

டும் - நூலறிவினையுடைய பெரியாரோடும், நண்ணிலேன் - சேர்ந்தி லேன், நல்வினை நயவாதே - (முத்திக்கேதுவாகிய) சற்கிரியைகளை விரும்பிச் செய்யாமல், மண்ணிலே பிறந்து இறந்து - மண்ணுலகத் திற் பிறந்து இறந்து, மண் ஆவதற்கு - மண்ணாய்விடுதற்கு, ஒருப் படுகின்றேனை - சம்மதிக்கின்ற என்னை, அண்ணல் - பெரியோனா கிய சிவபெருமான், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியாரில் கூட் டிய - தன் அடியாரோடு சேர்த்த, அதிசயம் கண்டாம் - அதிசயத் தைப் பார்த்தோம், எ - று.

(க - ரை.) இறைவனது திருநாமமாகிய ஐந்தெழுத்தையும் நினைக்கிலேன், கலைஞானிகளோடுங் கூடேன், பிறந்திறந் துழல்வ தற்கே யொருப்படுவேன், இப்படிப்பட்ட என்னை இறைவன் ஆண் டருளித் தன் அடியாரோடு கூட்டிய அதிசயத்தைப் பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) ஐந்தெழுத்து - பஞ்சாக்கரம். நல்வினை - நற்கரு மம். ஒருப்படுதல் - சம்மதித்தல். (சா)

பொத்தையூன்சுவர்புழுப்பொதிந்துளுத்தசும்பொழுகியபொய்க்கூரை யித்தைமெய்யெனக்கருதிநின்றிடர்க்கடற்சுழித்தலைப்படுவேனை முத்துமாமணிமாணிக்கவயிரத்தபவளத்தின்முழுச்சோதி யத்தனாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

(ப - ரை.) பொத்தை - பருத்ததும், ஊன் சுவர் - தசைச் சுவரும், புழு பொதிந்து உளுத்து அசும்பு ஒழுகிய பொய் கூரை - புழுக்கள் நெருங்கி உளுத்துக் கசிதலாகி ஒழுகிய பொய்யாகிய கூரை வேய்ந்த வீடும் ஆகிய, இத்தை - இவ்வுடம்பை, மெய்யெனக் கருதி நின்று - மெய்யென நினைத்து நின்று, இடர் கடல் சுழிதலைப்படு வேனை - துன்பக் கடற்சுழியி லகப்படுகின்றவனாகிய என்னை, மு த்து - முத்து, மாமணி - பெருமை பொருந்திய மணிகள், மாணி க்கம் வயிரத்த-மாணிக்கம் வயிரம் என்பவற்றினுடையவும், பவளத் தின் - பவளத்தினுடையவும், முழு சோதி - முழு வொளியை யுடைய, அத்தன் - எமது தந்தையாகிய சிவபெருமான், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியாரில் கூட்டிய - தன் அடியாரோடு சேர்த்த, அதிசயம் கண்டாம் - அதிசயத்தைப் பார்த்தோம், எ - று.

(க - ரை.) தசைச்சுவராகிய இவ்வுடம்பை மெய்யெனக் கருதித் துன்பக் கடற்சுழியி லகப்பட்டு வருந்துகின்ற என்னை இறைவன் ஆண்டருளித் தன் அடியாரோடு கூட்டிய அதிசயத்தைப் பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) பொத்தை - பருமை. அசும்பு - கசிவு. கூரை - சிறு வீடு. (எ)

நீக்கிமுன் னெனைத்தன் னொடுநில் லாவகை குரம்பையிற் புகப்பெய்து
நோக்கிநுண் ணியநொடி யனசொற் செய்துநுக மின்றி விளாக்கைத்துத்
தூக்கிமுன் செய்தபொய் யறத்துக ளறுத் தெழுதரு சுடர்ச்சோதி
யாக்கியாண் டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே.

(ப - ரை.) முன் - முன்னே, தன்னொடு நில்லாவகை - தன்னொடுகூடி யிராதபடி, என்னை நீக்கி - என்னைப் பிரித்து, குரம்பையில் புக பெய்து - உடம்பிற் புகவிட்டு, நோக்கி - பார்த்து, நுண்ணிய நொடியன - நுண்ணியனவும் நொடித்தற்குரியவும் ஆகிய, சொல் செய்து - சொல்லைச் சொல்லி, நுகம் இன்றி - நுகத்தடியில்லாமல், விளாக்கைத்து தூக்கி - பற்றியெடுத்து, முன் செய்த - முன் செய்த, பொய் அற - பொய்கெட, துகள் அறுத்து - களங்கத்தைச் சேதித்து, எழு தரு - எழுகின்ற, சுடர் சோதி ஆக்கி - இணையில்லாத ஒளி யுருவாகச்செய்து, ஆண்டு - ஆண்டருளி, தன் அடியாரில் கூட்டிய - தன் அடியாரோடு சேர்த்த, அதிசயம் கண்டாம் - அதிசயத்தைக் கண்டோம், எ - று.

(க - ரை.) இறைவன், முன்னே யென்னை நீக்கி, இவ்வுடம்பிற் புகுத்தி, இதில் நான்படுந் துன்பத்துக் கிரங்கி யாட்கொண்டருளித் தன் அடியாரோடு கூட்டிய அதிசயத்தைப் பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) குரம்பை - கூடு. அது இங்கு உடம்புக்காயிற்று. துகள் - குற்றம். (அ)

உற்றவாக் கையி னுறுபொரு ணறுமல ரெழுதரு நாற்றம்போற்
பற்றலா வதோர் நிலையிலாப் பரம்பொரு ளப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர் சொற்றெளியாமே
யத்த னாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே.

(ப - ரை.) உற்ற ஆக்கையின் உறு பொருள் - பொருந்திய உடம்பிலுள்ள பொருளாய், நறுமலர் எழுதரு நாற்றம்போல் - நல்ல மலரிலுண்டாகிய மணம்போல, பற்றல் ஆவது - பற்றுதற் கேற்றதாகிய, ஓர் நிலை இல்லா - ஒரு நிலையற்ற, பரம்பொருள்-பரம்பொருளாகிய, அ பொருள் பாராதே - அந்தப்பொருளை நோக்காமல், பெற்ற ஆறு பெற்ற பலன் - பெறவேண்டிய முறைப்படியே பெற்ற பயனை, நுகர்ந்திடும் - அநுபவியாநின்ற, பித்தர் சொல் தெளியாமே - பித்தர் சொல்லைத் தெளியாமல், அத்தன் - எமது தந்தையாகிய சிவபெருமான், ஆண்டு - ஆண்டருளி, தன் அடியரில் கூட்டிய - தன்னடியார்களோடுசேர்த்த, அதிசயம் கண்டாம் - அதிசயத்தைப் பார்த்தோம், எ - று.

(க - ரை.) இறைவன், என்னை ஆளவேண்டாமென்று தன்னடியார் தடுக்கவும் கேளாமல் என்னை யாண்டருளித் தன் அடியாரோடு கூட்டிய அதிசயத்தைப் பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) நாற்றம் - மணம். பெற்றவாறு பெற்றவா என ஈறு தொகுத்தது. நுகர்தல் - அநுபவித்தல். பித்தர் - இங்கு அடியாருக்காயிற்று. (௯)

இருடிணிந்தெழுந்திட்டதோர்வல்வினைச்சிறுகுடிலிதுவித்தைப்
பொருளெனக்களித்தருநரகத்திடைவிழப்புகுகின்றேனைத்
தெருளுமும்மதிளொடிவரையிடிதரச்சினப்பதத்தொடுசெந்தீ
யருளுமெய்ந்நெறிபொய்ந்நெறிநீக்கியவதிசயங்கண்டாமே.

(ப - ரை.) இருள் திணிந்து - இருள் நெருங்கி, எழுந்திட்டது - தோன்றியதாகிய, ஓர் - ஒப்பற்ற, வல்வினை - வலியவினை காரணமாக வுண்டாகிய, சிறு குடில் இது - சிறு குடில்போல்வது இவ்வுடம்பு, இத்தை - இதனை, பொருள் எனக் களித்து - ஒரு பொருள் எனக் கருதிக்களித்து, அரு நரகத்திடை - அருமையாகிய நரகத்தில், விழ புகுகின்றேனை - விழப்புகுகின்ற என்னை, தெருளும் மும்மதில் - தெளிந்த முப்புரங்கள், நொடிவரை - ஒரு நொடிப் பொழுதில், இடி தர - இடிந்தொழிய, சினப் பதத்தொடு - கோபக் குறியோடு வெளிப்பட்டு, செந்தீ அருளும் - செந்தீயை யருள் செய்த, மெய்ந்நெறி - உண்மை நெறிப்பயனாகிய சிவபெருமான்.

பொய் நெறி நீக்கிய - எனது பொய்ந்நெறிகளை யொழித்தருளிய, அதிசயம் கண்டாம் - அதிசயத்தைக் கண்டோம், எ - று.

(கு - ரை.) இந்த வுடம்பை யொரு பொருளாகக் கருதிக்களி த்து நரகில் விழப்புகுவேனாகிய என்னை, இறைவன் ஆண்டருளி என் பொய்ந்நெறியை நீக்கி மெய்ந்நெறியை யருள்செய்த அதிசயத்தைப் பார்த்தோம் என்பதாம்.

(வி - ரை.) இருள் - அஞ்ஞானவிருள். பொருள் என - மெய் (௧௦)
யென்று.

திருச்சிற்றம்பலம்.

# புணர்ச்சிப்பத்து.

## அத்துவிதவிலக்கணம்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சுடர்பொற்குன்றைத்தோளாமுத்தை
வாளாதொழும்புகந்து
கடைபட்டேனையாண்டுகொண்ட
கருணாலயனைக்கருமால்பிரமன்
றடைபட்டின்னுஞ்சாரமாட்டாத்
தன்னைத்தந்தவென்னாரமுதைப்
புடைபட்டிருப்பதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(ப - ரை.) சுடர் - ஒளி விடுகின்ற, பொற்குன்றை - பொன் மலையை, தோளாமுத்தை - தொளைக்காத முத்தை, வாளா - சும்மா, தொழும்பு உகந்து - தொண்டினை விரும்பி, கடை பட்டேனை - கடைப்பட்டவனாகிய என்னை, ஆண்டுகொண்ட - ஆண்டுகொண்

டருளின, கருணாலயனை - கருணைக்கு உறையுளா யிருப்பவனை, கருமால் பிரமன் - கரியமாலும் பிரமனும், தடை பட்டு-தடைசெய்யப் பட்டு, இன்னும் சார மாட்டா - இன்னமும் அடையவொண்ணாத, தன்னை - தன்னை, தந்த - கொடுத்த, என் ஆர் அமுதை - என் அரிய அமிர்தத்தை, என் பொல்லா மணியை - என் பொள்ளா மணியை, புணர்ந்து - சேர்ந்து, புடைபட் டிருப்பது - அயலிலிருப்பது, என்றுகொலோ - என்நாளோ, எ - று.

(க - ரை.) ஒளிவிடுகின்ற பொன்மலை முதலியவைபோலும் இறைவனைச் சேர்ந்து அவனருகில் நானிருப்பது என்நாளோ என்பதாம்.

(வி - ரை.) சுடர்தல் - ஒளி விடுதல். தோளா - தொளைக்காத. புடை - அயல் (அருகு). பொள்ளாமணி - பொல்லாமணியென வந்தது. இவ்வாறுவளக்கள் ஒத்து வருதல் வடநூலார் மதம். (க)

ஆற்றகில்லேனடியேனரசே
யவனிதலத்தைம்புலனாய
சேற்றிலழுந்தாச்சிந்தைசெய்து
சிவனெம்பெருமானென்றேத்தி
யூற்றுமணற்போனெக்குநெக்குள்ளே
யுருகியோலமிட்டுப்
போற்றிநிற்பதென்றுகொலோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(ப - ரை.) அரசே - வேந்தனே, அடியேன் - அடியனேன், அவனி தலத்து - பூதலத்தில், ஐம்புலன் ஆய் - ஐம்புலன்களாகிய, சேற்றில் அழுந்த - சேற்றில் மூழ்க, ஆற்றகில்லேன் - பொறுக்ககில்லேன், (ஆதலால்) சிந்தைசெய்து - உன்னைச்சிந்தித்து, சிவன் - சிவனே, எம்பெருமான் - எம்பெருமானே, என்று ஏத்தி - என்று துதித்து, ஊற்று மணல்போல்-ஊற்றுமணல்போல, நெக்குநெக்கு-நெகிழ்ந்து நெகிழ்ந்து, உள்ளே உருகி-மனமுள்ளுருகி, ஓலம் இட்டு-முறையிட்டு, என் பொல்லாமணியை புணர்ந்து - எனது தொளைபடா மாணிக்கத்தைச்சேர்ந்து, போற்றி நிற்பது - வணங்கிநிற்பது, என்றுகோலோ - என்நாளோ, எ - று.

(க - ரை.) இறைவனே, இவ்வுலகத்தில் ஐம்புலச் சேற்றில மூழ்ந்த ஆற்றகிலேன், சிவனே எம்பெருமானே யென்று துதித்து, ஊற்றுமணல்போல மனம் நெகிழ்ந்துருகி ஓலமிட்டு உன்னைச்சேர்ந்து போற்றி நிற்பது எக்காலமோ என்பதாம்.

(வி - ரை.) ஐம்புலன் - சத்த பரிசரூபரசகந்தங்கள். ஓலமிடல் - முறையிடல். (உ)

நீண்டமாலுமயனும்வெருவ
நீண்டநெருப்பைவிருப்பிலேனை
யாண்டுகொண்டவென்னாரமுதை
யள்ளூறுள்ளத்தடியார்முன்
வேண்டுந்தனையும்வாய்விட்டலறி
விரையார்மலர்தூவிப்
பூண்டுகிடப்பதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(ப - ரை.) நீண்டமாலும் - நெடுமாலும் அயனும்-பிரமனும், வெருவ - அஞ்ச, நீண்ட - நீண்டுநின்ற, நெருப்பை - அக்கினியை-விருப்பு இல்லேனை ஆண்டு கொண்ட - தன்னிடத்து அன்பில்லாத வனாகிய என்னை ஆண்டுகொண்டருளின, என் ஆர் அமுதை - என் அரிய அமிர்தத்தை, அள்ளூறு உள்ளத்து - அள்ளூறுகின்ற மனத்தினையுடைய, அடியார் முன் - அடியார்க்கெதிரில், வேண்டுந்தனையும் வேண்டுமளவும், வாய்விட்டு அலறி - வாய்விட்டரற்றி, விரை ஆர் மலர் தூவி - மணம்பொருந்திய மலர்களைத் தூவி, பூண்டு கிடப்பது, அடைந்து கிடப்பது, என்று கொல்லோ - எக்காலமோ, எ - று.

(க - ரை.) திருமாலும் பிரமனும் அஞ்சும்படி நிமிர்ந்த நெருப்பு மலையும், அன்பில்லாத என்னை யாண்டுகொண்டவனும் ஆகிய சிவபெருமானை மலர்களால் அருச்சித்துப்பூண்டு கிடப்பது எக்காலமோ என்பதாம்.

(வி - ரை) நீண்டமால் - திரிவிக்கிரமன். விரை-மணம். (௩)

அல்லிக்கமலத்தயனுமாலு
மல்லாதவருமமரர்கோனுந்

சொல்லிப்பரவுநாமத்தானைச்
சொல்லும்பொருளுமிறந்தசுடரை
நெல்லிக்கனியைத்தேனைப்பாலை
நிறையின்னமுதையமுதின்சுவையைப்
புல்லிப்புணர்வதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(ப - ரை.) அல்லி - அகவிதழ்களையுடைய, கமலத்து - தாமரைமலரிலுள்ள, அயனும் - பிரமனும், மாலும் - விட்டுணுவும், அல்லாதவரும் - மற்றைத் தேவரும், அமரர்கோனும் - இந்திரனும், சொல்லி பரவும் நாமத்தானை - சொல்லித் துதிக்கின்ற திருநாமத்தையுடையவனை, சொல்லும் பொருளும் இறந்த சுடரை - சொல்லையும் பொருளையும் கடந்த சோதியை, நெல்லி கனியை - நெல்லிப்பழத்தை, தேனை - தேனை, பாலை - பாலை, நிறை இன் அமுதை - நிறைந்த இனிய அமிர்தத்தை, அமுதின் சுவையை - அமிர்தத்தின் சுவையை, என் பொல்லா மணியைப் புணர்ந்து - எனது தொளைபடா மணியைச் சேர்ந்து-புல்லி புணர்வது-நெருங்கித்தழுவுவது, என்று கொலோ - என்றோ, எ - று.

(க - ரை.) பிரமனும், திருமாலும், இந்திரனும் புகழ்கின்ற திருநாமங்களை யுடையவனும், சொற்பொருள்களைக் கடந்தவனும், அமுது முதலியவற்றின் சுவையாயுள்ளவனும் ஆகிய சிவபெருமானை நெருங்கித் தழுவுவது எந்நாளோ என்பதாம்.

(வி - ரை.) சொல்லும்பொருளு மிறந்தலாவது - சொல்லுக்கும் பொருளுக்கும் எட்டாது நிற்றல். (௪)

திகழத்திகழுமடியுமுடியுங்
காண்பான்கீழ்மேலயனுமாலு
மகழப்பறந்துங்காணமாட்டா
வம்மானிம்மாநிலமுழுது
நிகழப்பணிகொண்டென்னையாட்கொண்
டாவாவென்றநீர்மையெல்லாம்
புகழப்பெறுவதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(ப - ரை.) திகழத் திகழும் - மிகவும் விளங்குகின்ற, அடியும் முடியும் காண்பான் - அடியையும் முடியையுங் காணும்பொருட்டு, கீழ் மேல் - கீழும் மேலும்; மாலும் அயனும் - திருமாலும் பிரமனும், அகழ பறந்தும் - அகழ்ந்தும் பறந்தும், காணமாட்டா - காணவொண்ணாத, அம்மான் - அந்தப்பெரியோன், இ - இந்த, மாநிலம் முழுதும் - பூமி முழுதும், திகழ - விளங்க, பணிகொண்டு - அடிமைகொண்டு, என்னை ஆட்கொண்டு - என்னை ஆட்கொண்டருளி, ஆவா என்ற - ஆவாவென்றிரங்கின, நீர்மையெல்லாம் - குணங்களெல்லாவற்றையும், புகழ்பெறுவது - புகழக்கிடைப்பது, என்று கொல்லோ - எக்காலமோ, என் பொல்லாமணியைப்புணர்ந்தே - எனது தொளைபடா மணியைச் சேர்ந்து, எ - று.

(க - ரை.) பிரமவிட்டுணுக்களால் காணப்படாத சிவபெருமான் இவ்வுலகமுழுதும் விளங்கும்படி யென்னையாட்கொண்ட குணங்களெல்லாவற்றையும் நான் புகழப் பெறுவது எக்காலமோ என்பதாம்.

(வி - ரை.) காண்பான் - பானீற்றுச்செயவெனெச்சம். திகழ்தல் - தோன்றுதல், நீர்மை - குணம். (௰)

பரிந்துவந்து பரமானந்தம்
பண்டேயடியேற் கருள்செய்யப்
பிரிந்துபோந்து பெருமாநிலத்தி
லருமாலுற்றே னென்றென்று
சொரிந்தகண்ணீர் சொரியவுண்ணீ
ருரோமஞ்சிலிர்ப்ப வுகந்தன்பாய்ப்
புரிந்துநிற்ப தென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப் புணர்ந்தே.

(ப - ரை.) பரிந்து வந்து - விரும்பி வந்து, பண்டே - முன்பே, அடியேற்கு - அடியேனுக்கு, பரம ஆனந்தம் அருள்செய்ய - மேலான இன்பத்தை அருள் செய்ய, பிரிந்து போந்து - பிரிந்து வந்து, பெருமாநிலத்தில் - பெரிய நிலவுலகத்தில், அருமால் உற்றேன் என்று என்று - அருமையாகிய மயக்கத்தை யடைந்தேன்

என்று சொல்லி, சொரிந்த கண்ணீர் சொரிய - பொழிந்த கண்ணீர் பொழிந்தபடியே யிருக்க, உள் நீர் - மனத்தன்பினால், உரோமம் சிலிர்ப்ப - மயிர் சிலிர்க்க, அன்பாய் உகந்து - அன்புருவாய் விரும்பி, என் பொல்லாமணியைப் புணர்ந்து - என் தொளைபடாத மாணிக்கத்தைச் சேர்ந்து, புரிந்து நிற்பது - விசுவசித்து நிற்பது, என்று கொலோ - என்றோ, எ - று.

(க - ரை.) இறைவன் விரும்பி வந்து முன்னமே யெனக்குப் பேரின்பத்தை யருள்செய்ய அதனைப் பிரிந்து இவ்வுலகில் வந்து பெரிய மயக்கத்தை யடைந்தேனென்று கண்ணீரொழுகவும், மயிர் சிலிர்ப்பவும், அன்பு கொண்டு அவ்விறைவனை நான் விரும்பி நிற்பது எந்நாளோ என்பதாம்.

(வி - ரை.) பரிதல் - விரும்புதல். புரிதல் - விரும்புதல். மால் - மயக்கம். (௬)

நினையப்பிறருக்கரியநெருப்பை
நீரைக்காலைநிலனைவிசும்பைத்
தனையொப்பாரையில்லாத்தனியை
நோக்கித்தழைத்துத்தழுத்தகண்டங்
கனையக்கண்ணீரருவிபாயக்
கையுங்கூப்பிக்கடிமலராற்
புனையப்பெறுவதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(ப - ரை.) பிறருக்கு - பிறருக்கு, நினைய அரிய நெருப்பை - நினைதற்கரிய நெருப்பினை, நீரை - நீரை, காலை - காற்றை, நிலனை - மண்ணை, விசும்பை - விண்ணை, தன்னை ஒப்பாரை இல்லா தனியை - தன்னை நிகர்ப்பவரையில்லாத தனிமைப் பொருளை, நோக்கி - விரும்பி, தழைத்து - களித்து, தழுத்த - தழுதழுத்த, கண்டம் கனைய - கண்டம் கனைத்தலுண்டாக, கண்ணீர் அருவி பாய - கண்ணீரானது அருவிபோலப்பாயாநிற்க, கையும் கூப்பி - கைகளையும் குவித்து, கடி மலரால் - மணமுள்ள மலர்களால், புனையப்பெறுவது - அலங்கரிக்கப் பெறுவது, என்று கொல்லோ - எந்நாளோ, என் பொல்லாமணியைப் புணர்ந்து - என் தொளைபடாத மாணிக்கத்தைச் சேர்ந்து, எ - று.

(க-ரை.) இறைவனைநோக்கித் தழுதழுத்தகண்டம் விம்முதல் கண்ணீரருவிபாய்தல் முதலிய குறிகளோடு நின்று மலரால் அலங்கரிக்கப்பெறுவது எந்நாளோ என்பதாம்.

(வி-ரை.) கால் - காற்று. விசும்பு - ஆகாயம். (அ)

நெக்குநெக்குள்ளுருகியுருகி
நின்றுமிருந்துங்கிடந்துமெழுந்து
நக்குமழுதுந்தொழுதும்வாழ்த்தி
நானாவிதத்தாற்கூத்துநவிற்றிச்
செக்கர்போலுந்திருமேனி
திகழநோக்கிச்சிலிர்சிலிர்த்துப்
புக்குநிற்பதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(ப-ரை.) நெக்கு நெக்கு - நெகிழ்ந்து நெகிழ்ந்து, உள் உருகி உருகி நின்றும் - மனமுருகி யுருகி நின்றும், இருந்தும் - இருந்தும், கிடந்தும் - படுத்தும், எழுந்தும் - எழுந்தும், நக்கும் - சிரித்தும், அழுதும் - அழுதும், தொழுதும் - வணங்கியும், வாழ்த்தி - துதித்து, நானாவிதத்தால் - பலவகையாக, கூத்து நவிற்றி - கூத்தாடுதல் செய்து, செக்கர் போலும் திருமேனி - செவ்வானம்போலுந் திருமேனி, திகழ நோக்கி - விளங்கப்பார்த்து, சிலிர் சிலிர்த்து - சிலிர் சிலிர்த்து, புக்கு நிற்பது - புகுந்து நிற்பது, என்று கொல்லோ - எந்நாளோ, என் பொல்லாமணியைப் புணர்ந்து - என் தொளையாத மாணிக்கத்தைச் சேர்ந்து, எ - று.

(க-ரை.) இறைவனது திருமேனியை நோக்கி மனமகிழ்ச்சி, உள்ளுருகுதல் முதலிய குணங்களைப் பெற்று அவனைச் சரணடைந்து நிற்பது எந்நாளோ என்பதாம்.

(வி-ரை.) இருத்தல் - உட்கார்ந்திருத்தல். நகுதல் - சிரித்தல். நவிற்றல் - செய்தல். (கூ)

தாதாய்மூவேழுலகுக்குந்
தாயேநாயேன்றனையாண்ட

பேதாய்பிறவிப்பிணிக்கோர்மருந்தே
பெருந்தேன்பில்கவெப்போது
மேதாமணியேயென்றென்றேத்தி
யிரவும்பகலுமெழிலார்பாதம்
போதாய்ந்தணைவதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(ப - ரை.) மூவேழ் உலகுக்கும் - மூவேழுலகங்களுக்கும், தாதாய் - தந்தையே, தாயே - தாயே, நாயேன் தன்னை யாண்டபேதாய், நாயினேனை ஆண்டருளின அறிவிலீ, பிறவிப்பிணிக்கு ஓர் மருந்தே - பிறவி நோய்க்கு ஒப்பற்ற மருந்தே, பெருந்தேன்பில்க - பெருந்தேன்சிந்த, எப்போதும் - எப்பொழுதும், மேதா மணியே - ஞான மணியே, என்றென்று ஏத்தி - என்று சொல்லித் துதித்து, இரவும் பகலும் - இரவினும் பகலினும், எழில் ஆர்-அழகு நிறைந்த, பாதம் போது - திருவடித்தாமரைமலரை, ஆய்ந்து - ஆராய்ந்து, அணைவது - அணுகப்பெறுவது, என்று கொலோ - எந்நாளோ, என்பொல்லாமணியைப் புணர்ந்து - என் தொளைபடாத மாணிக்கத்தைச் சேர்ந்து, எ - று.

(க - ரை.) மூவேழுலகுக்கும் தந்தை தாயாயிருப்பவனே, நாயேனை யாண்டவனே, பிறவிப்பிணிக்கு மருந்தே, அறிவுருவாகிய மாணிக்கமே என்று துதித்து இரவும் பகலும் இறைவனது திருவடித் தாமரையை நான் அணுகுவது எந்நாளோ என்பதாம்.

(வி - ரை.) தாதை என்பது ஈறுதிரிந்து விளியாயிற்று. மேதாமணி. வடநூன் முடிபு. (௬)

காப்பாய்படைப்பாய்காப்பாய்முழுதுங்
கண்ணார்விசும்பின்விண்ணோர்க்கெல்லா
மூப்பாய்மூவாமுதலாய்நின்ற
முதல்வாமுன்னேயென்னையாண்ட
பார்ப்பானேயெம்பரமாவென்று
பாடிப்பாடிப்பணிந்துபாதப்
பூப்போதணைவதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(ப-ரை.) முழுதும் - எல்லாவற்றையும், காப்பாய் - காவல் செய்வாய், படைப்பாய் - உண்டாக்குவாய், கரப்பாய் - மறைப்பாய், கண் ஆர் விசும்பின் - இடம் நிறைந்த ஆகாயத்திலுள்ள, விண்ணோர்க்கு எல்லாம் - விண்ணுலகத்தார்க்கெல்லாம், மூப்பாய் - முதியோனே, மூலா முதல் ஆய் நின்ற முதல்வா - மூலமாக முதன்மையில் நிலை பெற்ற முதல்வனே, முன்னே என்னை ஆண்ட - முன்னமே என்னை ஆண்டருளின, பார்ப்பானே - வேதியனே, எம் பரமா என்று - எம் பரமனேயென்று, பாடி பாடி - பாடிப்பாடி, பணிந்து - வணங்கி, பாதம் - திருவடியாகிய, பூ - அழகாகிய, போது - தாமரைமலரை, அணைவது - அடையப்பெறுவது, என்று கொல்லோ - என்றோ, என் பொல்லாமணியைப் புணர்ந்து - என் தொளைபடாத மாணிக்கத்தைச் சேர்ந்து, எ-று.

(க-ரை.) காப்பவனே முதலிய சொற்களால் உன்னைத் துதித்து வணங்கி உன் திருவடித்தாமரை மலரை நான் அடையப்பெறுவது எக்காலமோ என்பதாம்.

(வி-ரை.) கரத்தல் - மறைத்தல். அது இங்கு சங்காரத்தை யுணர்த்திற்று. கண் - பெருமையுமாம். (௰)

திருச்சிற்றம்பலம்.

# வாழாப்பத்து.

## முத்தியுபாயம்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாரொடுவிண்ணாய்ப்பரந்தவெம்பரனே
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
சீரொடுபொலிவாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யாரொடுநோகேனார்க்கெடுத்துரைக்கே
னாண்டநீயருளிலையானால்
வார்கடலுலகில்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

(ப - ரை.) பாரொடு விண் ஆய் - பூமியோடு ஆகாயமாகி, பரந்த - பரவிய, எம்பரனே - எமது மேலோனே, நான் - யான், மற்று பற்று இலேன் - வேறு பற்றுடைய னல்லேன், சீரொடு பொலிவாய் - சிறப்போடு கூடி விளங்குவோனே, சிவ புரத்து அரசே - சிவ புரத்துக்கு வேந்தனே, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, யாரொடு நோகேன் - யாரோடு சொல்லி நொந்துகொள்வேன், ஆர்க்கு எடுத்து உரைக்கேன் - யாருக்கு எடுத்துச் சொல்லுவேன், ஆண்ட நீ - என்னை ஆண்டருளின நீயே, அருளிலை யானால் - அருள் செய்திலையாயின், வார் கடல் உலகில் - நெடிய கடல் சூழ்ந்த உலகத்தில், வாழ்கிலேன் - வாழ்கில்லேன், வருக என்று - வருகவென்று, அருள்புரியாய் - அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, எனக்கு உன்னையன்றி வேறொருபற்றில்லை, நீ யென்னை யாண்டருளாவிடின், நான் யாரோடு சொல்லி நோவேன், இவ்வுலகில் வாழ்கிலேன் என்னை வாவென்றழைத்துக்கொள்ள வேண்டும் என்பதாம்.

(வி - ரை.) பார் - பூமி. விண் - ஆகாயம். வார் - நீட்சி. (௮)

வம்பனேன்றன்னையாண்டமாமணியே
மற்றுநான்பற்றிலேன்கண்டா
யும்பருமறியாவொருவனேயிருவர்க்
குணர்விறந்துலகமூடுருவுஞ்
செம்பெருமானேசிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யெம்பெருமானேயென்னையாள்வானே
யென்னைநீகூவிக்கொண்டருளே.

(ப - ரை.) வம்பனேன் தன்னை - வம்பனாகிய என்னை, ஆண்ட - ஆண்டருளின, மா மணியே - மாணிக்கமே, நான் - யான், மற்று பற்று இலேன் - வேறொருபற்று முடையேனல்லேன், உம்பரும் அறியா ஒருவனே - தேவரு மறியாத ஒப்பற்றவனே, இருவர்க்கு - பிரம விட்டுணுக்களாகிய இருவருக்கும், உணர்வு இறந்து - அவர்களது அறிவைக்கடந்து, உலகம் ஊடுருவும் - எல்லா வுலகங்களையும் ஊடுருவிச் சென்ற, செம்பெருமானே - செவ்விய பெருமானே, சிவ புரத்து அரசே - சிவ புரத்துக்கு வேந்தனே, திருப்பெருந்துறை சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, எம்பெருமானே - எம்பெருமானே, என்னை ஆள்வானே - என்னை யாள்வோனே, என்னை - அடியேனை, நீ கூவிக்கொண்டருள் - நீ கூவிப் பணிகொண்டருள்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, எனக்கு உன்னையன்றி வேறொருபற்றில்லை, ஆதலால் என்னை நீ கூவிக்கொண்டருளவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) வம்பன் - வீணன். உம்பர் - தேவர். இருவர் - அரி பிரமர்.

பாடிமால்புகழும்பாதமேயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
தேடிநீயாண்டாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யூடுவதுன்னோடுவப்பதுமுன்னை
யுணர்த்துவதுனக்கெனக்குறுதி
வாடினேனிங்குவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

(ப - ரை.) மால் - திருமால், பாடிபுகழும் - பாடிப்புகழும்படியான, பாதம் ஏ அல்லால் - உன் திருவடியே யன்றி, நான் - யான் மற்று பற்று இலேன் - வேறொருபற்றை யுடையேனல்லேன், தேடி நீ ஆண்டாய் - (அங்ஙனம் பற்றிலாத என்னை) தேடி வந்து நீயே ஆண்டருளினை, சிவபுரத்து அரசே - சிவபுரத்துக்கு வேந்தனே, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையில் எழுந்தருளிய சிவபெருமானே, ஊடுவது உன்னோடு - யான் பிணங்குவது உன்னோடே, உவப்பதும் உன்னை - யான் உவப்பதும் உன்னையே, உணர்த்துவதும் உனக்கு - யான் விண்ணப்பம் செய்வதும் உனக்கே, எனக்கு உறுதி வாடினேன் - எனக்கு உறுதிப்பொருளினின்றும் விடுபட்டுவாடினேன், இங்குவாழ்கிலேன் - இவ்விடத்து வாழகில்லேன், வருக என்று - வருகவென்று, அருள் புரியாய் - அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, எனக்கு உன்னை யன்றி வேறொருபற்றில்லை, இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை நீ வாவென்றழைத்துக் கொள்ளவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) ஊடுதல் - பிணங்குதல் - உவத்தல் - விரும்புதல்.

வல்லைவாளரக்கர்புரமெரித்தானே
மற்றுநான்பற்றிலேன்கண்டாய்
தில்லைவாழ்கூத்தாசிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே

னேன் - நாயினேன் பயந்தேன், நீ ஆண்டு அளித்த அருளினை - நீ என்னை ஆண்டருளின பாசத்திருவடையை, மருளினால் மறந்த - மதி மயக்கத்தால் மறந்த, வஞ்சனேன் - வஞ்சகனாகிய நான், இங்கு வாழ்கிலேன் - இவ்வுலகத்தில் வாழகில்லேன், வருக என்று - வருக வென்று, அருள்புரியாய் - அருள்செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, எனக்கு உன்னையன்றி வேறொருபற்றில்லை, இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை நீ வாவென்றழைத்துக்கொள்ள வேண்டும் என்பதாம்.

(வி - ரை.) பஞ்சின் - பஞ்சுபோல எளிதாமாம். மருள் - மயக்கம். ([illegible])

பரிதிவாழொளியாய்பாதமேயல்லாற்
பற்றுநான்மற்றிலேன் கண்டாய்
திருவுயர்கோலச்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
கருணையேநோக்கிக்கசிந்துளமுருகிக்
கலந்துநான்வாழுமாறறியா
மருளனேனுலகில்வாழ்கிலேன் கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

(ப - ரை.) பரிதி வாழ் ஒளியாய் - பொன்போலும் ஒளியையுடையவனே, பாதமே அல்லால் - உன் பாதமேயன்றி, நான் - யான், மற்று பற்று இலேன் - வேறொரு பற்றுடையேனல்லேன், திரு உயர் - செல்வத்தாற் சிறந்த, கோலம் - அழகாகிய, சிவபுரத்து அரசே - சிவபுரத்துக்கு வேந்தனே, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையில் எழுந்தருளிய சிவபெருமானே, கருணையே நோக்கி - உன் கருணையையே நோக்கி, உள்ளம் கசிந்து உருகி - மனம் கசிந்துருகி, கலந்து - (திருவோலக்கத்தில்) கலந்து, வாழும் ஆறு அறியா - வாழும்விதத்தை அறியாத, மருளனேன் நான் - மருட்சியையுடையேனாகிய நான், உலகில் - உலகத்தில், வாழ்கிலேன் - வாழகில்லேன், வருக என்று - வருகவென்று, அருள் புரியாய் - அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, எனக்கு உன்னையன்றி வேறொரு பற்றில்லை, உன் கருணையையே நினைந்து மனங்கசிந்துருகிக் கலந்துவாழும் வழி யறியாத மருளனேன் இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை நீ வம்மென் றழைத்துக்கொண்டருள வேண்டும் என்பதாம்.

(வி - ரை.) பரிதி - சூரியன் எனினுமாம், திரு - செல்வம். கோலம் - அழகு. (எ)

பந்தணைவிரலாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செந்தழல்போல்வாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யந்தமிலமுதேயரும்பெரும்பொருளே
யாரமுதேயடியேனை
வந்துயவாண்டாய்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

(ப - ரை.) பந்து அணை விரலாள் - பந்துபொருந்திய விரலையுடையாளாகிய உமாதேவியின், பங்க - பங்கனே, நீ அல்லால் - நீயன்றி, நான் - யான், மற்று பற்று இலேன் - வேறோர் பற்றுடையேனல்லேன், செந்தழல் போல்வாய் - செம்மையாகிய நெருப்புப் போல்பவனே, சிவபுரத்து அரசே - சிவபுரத்துக்கு வேந்தனே, திருப்பெருந்துறை உறை சிவனே - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, அந்தம் இல் - முடிவில்லாத, அமுதே - அமிர்தமே, அரு பெரு பொருளே - அரிய பெரியபொருளே, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, வந்து - நீயே வந்து, அடியேனை - அடியனேனை, உய - உய்யும்படி, ஆண்டாய் - ஆண்டருளினை, வாழ்கிலேன் - இங்கு வாழ்கில்லேன், வருக என்று - வருகவென்று, அருள் புரியாய் - அருள் செய்வாய், எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, எனக்கு உன்னையன்றி வேறொரு பற்றில்லை, இவ்வுலகில் வாழ்கிலேன், என்னை நீ வாவென் றழைத்துக்கொள்ளவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) பந்து - நிட்சேயெனினுமாம். உய்யவென்பது உயவென நின்றது, இடைக்குறை. (அ)

பாவநாசாவுன்பாதமேயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
தேவர்தந்தேவேசிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
மூவுலகுருவவிருவர்கீழ்மேலாய்
முழங்கழலாய்நிமிர்ந்தானே
மாவுரியானேவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

(ப - ரை.) பாவநாசா-பாபநாசனே, உன் பாதம் ஏ அல்லால் - உன் திருவடியேயன்றி, நான் - யான், மற்று பற்று இலேன் - வேறொருபற்றும் உடையேனல்லேன், தேவர் தேவே - தேவர்க்கும் தேவனே, சிவபுரத்து அரசே - சிவபுரத்துக்கு வேந்தனே, திருப்பெருந்துறை உறை சிவனே-திருப்பெருந்துறையிலெழுந்தருளிய சிவபெருமானே, மூவுலகு உருவ - மூன்றுலகங்களும் ஊடுருவும்படி; இருவர் - பிரம விட்டுணுக்களாகிய இருவரும், கீழ மேல் ஆ-கீழும்மேலுமாக, முழங்கு - ஒலிக்கின்ற, அழல் ஆய் - தீயுருவாகி, நிமிர்ந்தானே - வளர்ந்தவனே, மா உரியானே - யானைத்தோலையுடையவனே, வாழ்கிலேன் - இங்கு வாழகில்லேன், வருக என்று-வருகவென்று, அருள் புரியாய் - அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, எனக்கு உன்னையன்றி வேறொருபற்றில்லை. இவ்வுலகில்வாழ்கிலேன், என்னை நீ வாவென்றழைத்துக்கொள்ளவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) பாவநாசன் - பாவங்களை நசிக்கப்பண்ணுவோன். மா - புலி யெனினுமாம். யானையாவது, கயாசுரனென்னுமசுரன். (௯)

பழுதில்தொல்புகழாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செழுமதியணிந்தாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே

தொழுவனோபிறரைத்துதிப்பனோவெனக்கோர்
துணையெனநினைவனோசொல்லாய்
மழவிடையானேவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

(ப - ரை.) பழுது இல் - பழுதற்ற, தொல் - பழமையாகிய, புகழாள் - புகழையுடையவளாகிய உமாதேவியின், பங்க-பங்கனே, நீ அல்லால் - நீயன்றி, நான் - யான், மற்று பற்று இலேன் - வேறொருபற்று முடையேனல்லேன், செழுமதி அணிந்தாய்-செழுமையாகிய பிறையை யணிந்தவனே, சிவபுரத்து அரசே - சிவபுரத்துக்கு வேந்தனே, திருப்பெருந்துறை உறைசிவனே-திருப்பெருந்துறையி லெழுந்தருளிய சிவபெருமானே, பிறரை-அயலாரை, தொழுவனோ-வணங்குவேனோ, துதிப்பனோ - துதிப்பேனோ, எனக்கு ஓர் துணை என நினைவனோ - எனக்கொருதுணையென்று நினைப்பேனோ, சொல்லாய் - சொல்லாய், மழவிடையானே - இளமையாகிய இடபவாகனத்தையுடையவனே, வாழ்கிலேன் - இங்குவாழகில்லேன், வருக என்று-வருகவென்று, அருள் புரியாய் - அருள்செய்வாயாக, எ - று.

(பொ - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, எனக்கு உன்னையன்றி வேறொருபற்றில்லை, இவ்வுலகில்வாழ்கிலேன், என்னை நீ வாவென்றழைத்துக் கொள்ளவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) மதி - சந்திரன். அது இங்குப்பிறைக்காயிற்று. மழவு - இளமை. (௪௦)

திருச்சிற்றம்பலம்.

# அருட்பத்து.

மகாமாயாசுத்தி.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சோதியேசுடரேசூழொளிவிளக்கே
சுரிகுழற்பணைமுலைமடந்தை
பாதியேபரனேபால்கொள்வெண்ணீற்றாய்
பங்கயத்தயனுமாலறியா
நீதியேசெல்வத்திருப்பெருந்துறையி
னிறைமலர்க்குருந்தமேவியசீ
ராதியேயடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

(ப - ரை.) சோதியே - சோதியே, சுடரே - சுடரே, சூழ் ஒளி விளக்கே - சூழ்ந்த ஒளியையுடைய விளக்கே, சுரி குழல் - சுரித்த கூந்தலையும், பணை முலை-பருத்த தனங்களையும் உடைய, மடந்தை - உமாதேவியின், பாதியே - பாகனே, பரனே - மேலானவனே, பால் கொள் - பாலினது நிறத்தைக்கொண்ட, வெள் நீற்றாய் - திருவெண்ணீற்றையுடையவனே, பங்கயத்து அயனும் - தாமரைமலரை யிடமாகவுடைய பிரமனும், மாலும்-திருமாலும், அறியா - அறியவொண்ணாத, நீதியே - நீதிமானே, செல்வம் - செல்வப்பெருக்குள்ள, திருப்பெருந்துறையில்-திருப்பெருந்துறையின்கண், நிறை மலர் - நிறைந்த மலர்களையுடைய, குருந்தம் - குருந்தமரத்தை, மேவிய - பொருந்திய, சீர் - சிறப்பமைந்த, ஆதியே - முதல்வனே, அடியேன் - அடியனேன், ஆதரித்து அழைத்தால் - அன்பு செய்து அழைத்தால்- அதெந்துவே என்று அருளாய் - அஞ்சற்கவென்று அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, அடியேன் விரும்பி யழைத்தால் அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) சுரிகுழல் - சுழற்சியையுடைய கூந்தல். பனைத்தல் - பருத்தல். அயனும் என்ற வும்மையை மாலுக்கும் கூட்டுக. அதெந்து - யதெந்து என்பதன் மரூஉ - இது அஞ்சாதே யென்னும் பொருளது. என்ன - யார், என்றுரைப்பினு மமையும். (௧)

நிருத்தனேநிமலாநீற்றனேநெற்றிக்
 கண்ணனேவிண்ணுளோர்பிரானே
யொருத்தனேயுன்னையோலமிட்டலறி
 யுலகெலாந்தேடியுங்காணேன்
றிருத்தமாம்பொய்கைத்திருப்பெருந்துறையிற்
 செழுமலர்க்குருந்தமேவியசீ
ரருத்தனேயடியேனாதரித்தழைத்தா
 லதெந்துவேயென்றருளாயே.

(ப - ரை.) நிருத்தனே - கூத்தப்பிரானே, நிமலா - நிமலனே, நீற்றனே - திருவெண்ணீற்றை யுடையானே, நெற்றிக்கண்ணனே - நெற்றிக்கண்ணை யுடையானே, விண்ணுளோர் பிரானே - தேவர் பெருமானே, ஒருத்தனே - ஒப்பற்றவனே, உன்னை ஓலமிட்டு - உனக்கு முறையிட்டு, அலறி - அலறி நின்று, உலகு எல்லாம் - உலகமுழுதும், தேடியும் - தேடியும், காணேன் - காண்கிலேன், திருத்தம் ஆம் பொய்கை - திருத்தமாகிய பொய்கையையுடைய, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறையின்கண், செழு மலர் - செழுமையாகிய மலர்களையுடைய, குருந்தம் - குருந்தமரத்தை, மேவிய - பொருந்திய, சீர் - சிறப்பமைந்த, அருத்தனே - செல்வனே, அடியேன் ஆதரித்து அழைத்தால் - தொண்டனாகிய யான் அன்புசெய்து அழைத்தால், அதெந்துவே என்று - அஞ்சற்க என்று, அருளாய் - அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, அடியேன் விரும்பியழைத்தால் அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) நிருத்தம் - கூத்து. நிமலன் - மலரகிதன். அருத்தம் - செல்வம். (௨)

எங்கணாயகனேயென்னுயிர்த்தலைவா
வேலவார்குழலிமாரிருவர்
தங்கணாயகனே தக்கநற்காமன்
றனதுடறழலெழவிழித்த
செங்கணாயகனே திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீ
ரங்கணாவடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

(ப - ரை.) எங்கள் நாயகனே - எங்கள் நாதனே, என் உயிர்த் தலைவனே - என் ஆன்மநாயகனே, ஏலம் - மயிர்ச்சாந்தணிந்த, வார் - நீண்ட, குழலிமார் இருவர் தங்கள் - கூந்தலையுடையவராகிய இரண்டு தேவிமார்க்கும், நாயகனே - நாதனே, தக்க - தகுதியாகிய, நல் - அழகமைந்த, காமன் தனது உடல் - மன்மதனது உடம்பு, நீறு எழ - துகளாயெழும்படி, விழித்த - திறந்த, செங்கண் - செம்மையாகிய நெருப்புக்கண்ணையுடைய, நாயகனே - தலைவனே, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறையின்கண், செழுமலர் - செழுமையாகிய மலர்களையுடைய, குருந்தம் - குருந்தமரத்தை, மேவிய - பொருந்திய, சீர் - சிறப்பமைந்த, அம் கண்ணா - கிருபைக்கண்ணனே, அடியேன் - அடியனேன், ஆதரித்து அழைத்தால் - அன்புசெய்து அழைத்தால், அதெந்துவே என்று அருளாய் - அஞ்சற்கவென்று அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, அடியேன் விரும்பி யழைத்தால் அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) ஏலம் - மயிர்ச்சாந்து. இருவர் - கங்கையும் மலைமங்கையும். நெருப்புக்கண்ணாதலால் செங்கண் என்றார். (௩)

கமலநான்முகனுங்கார்முகினிறத்துக்
கண்ணனுநண்ணுதற்கரிய
விமலனேயெமக்குவெளிப்படாயென்ன
வியன்றழல்வெளிப்பட்டவெந்தாய்

திமிலநான்மறைசேர்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீ
ரமலனேயடியேனுதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

(ப - ரை.) கமலம் - தாமரைமலரில் வாழ்கின்ற, நான்முகனும் - சதுர்முகனும், கார்முகில் நிறத்து கண்ணனும் - கார்கால மேகநிறத்தையுடைய திருமாலும், நண்ணுதற்கு அரிய - அடைதற்கரிய, விமலனே - மலரகிதனே, எமக்கு வெளிப்படாய் என்ன - எம்பொருட்டு வெளிப்படுவாயாகவென்று வேண்ட, வியன் தழல் - பெரிய அழலுருவாகி, வெளிப்பட்ட - வெளியான, எந்தாய் - எந்தையே, திமிலம் - பேரொலியையுடைய, நான் மறை சேர் - நான்கு வேதங்களும் கூடிய, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறையின்கண், செழுமலர் - செழுமையாகிய மலர்களையுடைய, குருந்தம் மேவிய - குருந்தமரத்தை மேவிய, சீர் - சிறப்பமைந்த, அமலனே - மலமுத்தனே, அடியேன் - அடியனேன், ஆதரித்து அழைத்தால் - அன்புசெய்து அழைத்தால், அதெந்துவே என்று - அஞ்சற்கவென்று, அருளாய் - அருள்செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, அடியேன் விரும்பியழைத்தால் அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) விமலன் என்பதில் வி எதிர்மறையாய் இன்மைப் பொருள் தரும் உபசருக்கம்.

துடிகொணேரிடையாள்சுரிகுழன்மடந்தை
துணைமுலைக்கண்கடோய்சுவடு
பொடிகொள்வான்றழலிற்புள்ளிபோலிரண்டு
பொங்கொளிதங்குமார்பினனே
செடிகொள்வான்பொழில்சூழ்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீ
ரடிகளேயடியேனுதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

(ப - ரை.) துடிகொள் - உடுக்கையின் உருவமைந்த, நேர் இடையாள் - நேரிய இடையையுடையவளாகிய, சுரி குழல் மடந்தை - சுரிந்த கூந்தலையுடைய உமாதேவியின், துணை - இரண்டாகிய, முலைக்கண்கள் தோய் - முலைக்கண்கள் அழுந்தின, சுவடு - தழும்புகள், பொடி கொள் - சாம்பலைக்கொண்ட, வான் தழலில் - பெரிய நெருப்பின்மீதுள்ள, இரண்டு புள்ளிபோல் - இரண்டு பொறிகள் போல, பொங்கு - விளங்குகின்ற, ஒளி தங்கும் மார்பினனே - ஒளி தங்கிய திருமார்பையுடையவனே, செடி கொள்வான் பொழில் சூழ் - ஒளியைக்கொண்ட மேன்மையையுடைய சோலைகள் சூழ்ந்த, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறையின்கண், செழு மலர் - செழுமையாகிய மலர்களையுடைய, குருந்தம் மேவிய - குருந்தமரத்தை மேவிய, சீர் - சிறப்புவாய்ந்த, அடிகளே - கடவுளே, அடியேன் ஆதரித்து அழைத்தால் - தொண்டனாகிய யான் அன்புசெய்து அழைத்தால், அதெந்துவே என்று - அஞ்சற்கவென்று, அருளாய் - அருள்செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, அடியேன் விரும்பி அழைத்தால் அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) துடி - உடுக்கை. துணை - இரண்டு. செடி - புதல் எனினுமாம். (௫)

துப்பனே தூயாய் தூயவெண்ணீறு
துதைந்தெழுதுளங்கொளிவயிரத்
தொப்பனேயுன்னையுள்குவார்மனத்தி
னுறுசுவையளிக்குமாரமுதே
செப்பமாமறைசேர்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீ
ரப்பனேயடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

(ப - ரை.) துப்பனே - பவளம்போல்பவனே, தூயாய் - தூயவனே, தூய வெள் நீறு - பரிசுத்தமாகிய திருவெண்ணீறு, துதைந்து - படிந்து, எழு துளங்கு ஒளி - தோன்றுகின்ற விளக்கமாகிய ஒளியையுடைய, வயிரத்து ஒப்பனே - வயிரத்துக்குச் சமானமானவனே, உன்னை உள்குவார் மனத்தில் - உன்னை நினைப்பவரது மனத்

தில், உறு சுவை அளிக்கும் - மிகுந்த சுவையைக்கொடுக்கின்ற, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, செப்பம் ஆம் - செப்பமாகிய, மறை சேர் - வேதங்கள் சேர்ந்த, திருப்பெருந்துறையில் - திருப்பெருந் துறையின்கண், செழுமலர் - செழுமையாகிய மலர்களையுடைய, குருந்தம் மேவிய - குருந்தமரத்தை மேவிய, சீர் - சிறப்பமைந்த, அப்பனே - எமது தந்தையே, அடியேன் ஆதரித்து அழைத்தால் - அடியேன் அன்புசெய்து அழைத்தால், அதெந்துவே என்று - அஞ்சற்கவென்று, அருளாய் - அருள்செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, அடியேன் விரும்பி யழைத்தால் அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) துப்பு - அறிவு எனினுமாம். துணையென்றலுமொன்று. உள்குதல் - நினைத்தல். (௬)

மெய்யனேவிகிர்தாமேருவேவில்லா
மேவலர்புரங்கண்மூன்றெரித்த
கையனேகாலாற்காலனைக்காய்ந்த
கடுந்தழற்பிழம்பன்னமேனிச்
செய்யனேசெல்வத்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீ
ரையனேயடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

(ப - ரை.) மெய்யனே - மெய்யாயிருப்பவனே, விகிர்தா-பொய்யாயிருப்பவனே, மேருவே - மேருமலையையே, வில் ஆ - வில்லாகக்கொண்டு, மேவலர் புரங்கள் மூன்று - பகைவரது புரங்கள் மூன்றையும், எரித்த - எரித்து நீறுக்கின, கையனே - கையையுடையவனே, காலால் - திருவடியால், காலனைக் காய்ந்த - யமனைக்கோபித்த, கடு தழல் பிழம்பு அன்ன மேனி செய்யனே - வேகமாகிய தீத்திரள்போன்ற திருமேனியில் செந்நிறமமைந்தவனே, செல்வம் - செல்வப்பெருக்குள்ள, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறையின்கண், செழுமலர் - செழுமையாகிய மலர்களையுடைய, குருந்தம் மேவிய - குருந்தமரத்தை மேவிய, சீர் - சிறப்பு வாய்ந்த, ஐயனே-

கடவுளே, அடியேன் ஆதரித்து அழைத்தால் - அடியேன் அன்பு செய்தழைத்தால் அடெேந்துவே என்று - அஞ்சற்கவென்று, அருளாய் - அருள்செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறையிறைவனே, அடியேன் விரும்பி அழைத்தால் அஞ்சாதே யென்றருள் செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) விகிர்தம் - பொய். (எ)

முத்தனேமுதல்வாமுக்கணாமுனிவா
மொட்டறாமலர்பறித்திறைஞ்சிப்
பத்தியாய்நினைந்துபரவுவார்தமக்குப்
பரகதிகொடுத்தருள்செய்யுஞ்
சித்தனேசெல்வத்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீ
ரத்தனேயடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

(ப - ரை.) முத்தனே - இயல்பாகவே பாசநீக்கமுடையானே, முதல்வா - முதல்வனே, முக்கணா - மூன்று கண்களையுடையவனே, முனிவா - முனிவனே, மொட்டு அறா - முகிழ்த்தன்மை நீங்காத, மலர் - மலர்களை, பறித்து இறைஞ்சி - பறித்தருச்சித்து வணங்கி, பத்தியாய் நினைந்து - பத்தியாய் நினைத்து, பரவுவார்தமக்கு - வழிபடுவோர்க்கு, பரகதி கொடுத்து அருள் செய்யும் - முத்தியைக்கொடுத்தருளுகின்ற, சித்தனே-சித்தனே, செல்வம்-செல்வப்பெருக்கினையுடைய, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறையின்கண், செழுமலர் - செழுமையாகிய மலர்களையுடைய, குருந்தம் மேவிய - குருந்த மரத்தைமேவிய, சீர் - சிறப்பமைந்த, அத்தனே - எமது தந்தையே, அடியேன் ஆதரித்து அழைத்தால் - அடியேன் அன்பு செய்து அழைத்தால், அதெந்துவே என்று - அஞ்சற்க வென்று, அருளாய் - அருள்செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, அடியேன் விரும்பியழைத்தால் அஞ்சாதேயென்றருள்செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) முத்தன் - மலரகிதன், பாசரகிதன். (அ)

மருளனேன்மனத்தைமயக்கறநோக்கி
மறுமையோடிம்மையுங்கெடுத்த
பொருளனேபுனிதாபொங்குவாளரவங்
கங்கைநீர்தங்குசெஞ்சடையாய்
தெருளுநான்மறைசேர்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீ
ரருளனேயடியேனுதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே.

(ப - ரை.) மருளனேன் மனத்தை - மருட்சியையுடையவனாகிய என் மனத்தை, மயக்கு அற நோக்கி-மயக்கமற்றொழிய நோக்கி, மறுமையோடு இம்மையும் கெடுத்த - மறுமையுடனே இம்மையையும் கெடுத்தருளின, பொருளனே - பெருஞ் செல்வனே, புனிதா-பரிசுத்தனே, பொங்கு - சிறுகின்ற, வாள் அரவம் - ஒளியையுடைய பாம்பும், கங்கை நீர் - கங்கையாறும், தங்கு - தங்கிய, செஞ்சடையாய் - செஞ்சடையை யுடையவனே, தெருளும் - தெளிந்த, நான் மறை சேர் - நான்கு வேதங்களுஞ்சேர்ந்த, திருப்பெருந்துறையில் - திருப்பெருந்துறையின்கண், செழுமலர்-நிறைந்த மலர்களையுடைய, குருந்தம் மேவிய - குருந்தமரத்தை மேவிய, சீர் - சிறப்பமைந்த, அருளனே - அருளுடையவனே, அடியேன் - அடியனேன், ஆதரித்து அழைத்தால்-அன்புசெய்து அழைத்தால், அதெந்துவே என்று - அஞ்சற்கவென்று, அருளாய் - அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, அடியேன் விரும்பியழைத்தால் அஞ்சாதேயென் றருள்செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) மறுமை - மறு பிறப்பு. இம்மை - இப்பிறப்பு. பொருளன் - மெய்யன் எனினுமாம். (க)

திருந்துவார்பொழில்சூழ்திருப்பெருந்துறையிற்
செழுமலர்க்குருந்தமேவியசீ
ரிருந்தவாறெண்ணியேசறுநினைந்திட்
டென்னுடையெம்பிரானென்றென்

பிட்டுநேர்படமண் சுமந்தபெருந்துறைப்பெரும்பித்தனே
சட்டநேர்படவந்திலாதசழக்கனேனுனைச்சார்ந்திலேன்
சிட்டனேசிவலோகனேசிறுநாயினுங்கடையாயவெங்
கட்டனேனையுமாட்கொள்வான்வந்துகாட்டினாய்கழுக்குன்றிலே.

(ப - ரை.) பிட்டு நேர்பட - பிட்டினைப்பெற, மண் சுமந்த - மண்ணைச்சுமந்த, பெருந்துறை - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய, பெரும் பித்தனே - பெரும் பிச்சனே, சட்டம் நேர்பட வந்திலாத - உன் கட்டளைக்கிணங்க வந்திலாத, சழக்கனேன் - அறியாமையை யுடையேனாகிய நான், உன்னை சார்ந்திலேன் - உன்னை யடைந்திலேன், சிட்டனே - பெரியோனே, சிவலோகனே - சிவபுரத்தையுடையவனே, சிறு நாயினும் கடை ஆய - சிறிய நாயினுங் கடைப்பட்ட, வெம் - குரூரமாகிய, கட்டனேனையும் - துன்பத்தை யுடையேனாகிய என்னையும், ஆட்கொள்வான் - அடிமைகொண்டருள, கழுக்குன்றிலே வந்து - திருக்கழுக்குன்றிலே யெழுந்தருளி, காட்டினாய் - உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய், எ - று.

(க - ரை.) பெருந்துறைப் பெருமானே, உன் கட்டளைக்கிணங்கிவராத என்னையும் ஆட்கொள்ளும்பொருட்டுத் திருக்கழுக்குன்றத்தில் உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய் என்பதாம்.

(வி - ரை.) சட்டம் - வேத சிவாகமாதிகள். சழக்கு - குற்றம்.

மலங்கினேன்கண்ணினீரைமாற்றிமலங்கெடுத்தபெருந்துறை
விலங்கினேன்வினைக்கேடனேனினிமேல்விளைவதறிந்திலே
னிலங்குகின்றநின்சேவடிகளிரண்டும்வைப்பிடமின்றியே
கலங்கினேன்கலங்காமலேவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே.

(ப - ரை.) நீ - நீ, மலங்கினேன் - கலங்கினவனாகிய எனது, கண்ணில் நீரை மாற்றி - கண்ணீரைத் துடைத்து, மலம் கெடுத்த - என் மலங்களை அழித்த, பெருந்துறை - திருப்பெருந்துறையை, விலங்கினேன் - விட்டு விலகினேன், வினைக்கேடனேன் - வினையாகிய கேடுதியையுடையேன், இனிமேல் விளைவது அறிந்திலேன் - இனிமேல் உண்டாவதை உணர்ந்திலேன், இலங்குகின்ற - விளங்குகின்ற, நின் சேவடிகள் இரண்டும் - உன் திருவடிகளிரண்டையும் பாக்

வைப்பு இடம் இன்றி-வைத்தற்குரிய இடமில்லாமல், கலங்கினேன்-மனங் கலங்கினேன், கலங்காமல் - கலங்காவண்ணம், கழுக்குன்றிலேவந்து - திருக்கழுக்குன்றிலே வந்து, காட்டினாய் - உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய், எ - று.

(க - ரை.) பெருந்துறைப் பெருமானே, என்மலத்தைக் கெடுத்தருளின திருப்பெருந்துறையை விலகி, இனிமேல் விளைவதையும் அறியாமல், உன் திருவடிகளை யமைக்க இடமின்றிக் கலங்கினேன், அவ்வாறு கலங்காமல் நீ திருக்கழுக்குன்றத்தில் வந்து உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய் என்பதாம்.

(வி - ரை.) மலங்குதல் - கலங்குதல். விலங்கல் - விலகல். ()

பூணொணாததொரன்புபூண்டுபொருந்திநாடொறும்போற்றவு
நாணொணாததொர்நாணமெய்திநடுக்கடலுளாழ்ந்துநான்
பேணொணாதபெருந்துறைப்பெருந்தோணிபற்றியுகைத்தலுங்
காணொணாத்திருக்கோலநீவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே.

(ப - ரை.) பூணொணாதது - பெறவொண்ணாததாகிய, ஓர் - ஒப்பற்ற, அன்பு பூண்டு - அன்பைப்பெற்று, நாள்தொறும் - தினந்தோறும், பொருந்தி போற்றவும் - பொருந்தி வணங்குதற்கும், நாண் ஒணாதது ஓர் நாணம் எய்தி - நாணொணாததாகிய ஒப்பற்ற நாணத்தையடைந்து, (அதனால்) நடுக்கடலுள் - (பிறவியாகிய) கடலின் நடுவே, நான் அழுந்தி-நான் முழுகி, பேணொணாத - விரும்புதற்கரிய, பெருந்துறை - திருப்பெருந்துறையாகிய, பெருந்தோணிபற்றி - பெரிய மரக்கலத்தைப் பிடித்து, உகைத்தலும் - செலுத்தலும், நீ கழுக்குன்றிலேவந்து - நீ திருக்கழுக்குன்றிலேவந்து, காணொணா - காணவொண்ணாத, திருக்கோலம் காட்டினாய் - திருக்கோலத்தைக் காட்டியருளினாய், எ - று.

(க - ரை.) பெருந்துறைப்பெருமானே, உன்னை யன்புசெய்து வணங்க நாணிப்பிறவிக்கடலி லழுந்திப் பெருந்துறை யென்கிற பெருந்தோணி பற்றிச்செலுத்தலும், நீ திருக்கழுக்குன்றில் வந்து உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய் என்பதாம்.

(வி - ரை.) பூணொணாததோரன்பு - பேரன்பு. (௪)

கோலமேனிவராகமேகுணமாம்பெருந்துறைக்கொண்டலே
சீலமேதுமறிந்திலாதவென்சிந்தைவைத்தசிகாமணி
ஞாலமேகரியாகநானுனைநச்சிநச்சிடவந்திடுங்
காலமேயுனையோதநீவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே.

(ப - ரை.) கோலம் மேனி வராகமே - அழகாகிய திருமேனியையுடைய மலையே, குணம் ஆம் - மங்கள குணங்களோடு கூடிய, பெருந்துறைக் கொண்டலே - திருப்பெருந்துறையிலுள்ள மேகமே, சீலம் ஏதும் அறிந்திலாத - நல்லொழுக்கம் சிறிது முணர்ந்திலாத, என் சிந்தை வைத்த - என் மனத்தை யமைத்தருளின, சிகாமணி - சிரோமணியே, ஞாலமே கரி ஆக - உலகத்தாரே சாட்சியாக, நான் உன்னை நச்சி நச்சிட - நான் உன்னை மிகவும் விரும்ப, வந்திடும் காலமே - நேரிடுகின்ற காலத்திலே, உன்னை ஓத - உன்னைத் துதிக்கும்படி, நீ கழுக்குன்றிலே வந்து - நீ கழுக்குன்றிலே வந்து, காட்டினாய் - உன் திருக்கோலத்தை காட்டி யருளினாய், எ - று.

(க - ரை.) பெருந்துறைப் பெருமானே, நான் உன்னைத் துதிக்க, நீ திருக்கழுக்குன்றில் உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய் என்பதாம்.

(வி - ரை.) கொண்டலே யென்றது எல்லாப்பதத்தினுஞ் சிறந்த முத்திப்பதத்தையும் வரையாது கொடுக்கும் உதாரசீல னாதலால் என்க. (௫)

பேதமில்லதொர்கற்பளித்தபெருந்துறைப்பெருவெள்ளமே
யேதமேபலபேசநீயெனையேதிலார்முனமென்செய்தாய்
சாதல்சாதல்பொல்லாமையற்றதனிச்சரண்சரணாமெனக்
காதலாலுனையோதநீவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே.

(ப - ரை.) பேதம் இல்லது - வேறுபாடில்லாததாகிய, ஓர் கற்பு அளித்த - ஒப்பற்ற கல்வியைத் தந்த, பெருந்துறை - திருப்பெருந்துறையிலுள்ள, பெரு வெள்ளமே - பெருங்கடலே, ஏதம்பல பேச - குற்றங்கள் பலவற்றையும் எடுத்துப்பேச, ஏதிலார் முன்னம் - அயலார்க்கெதிரில், நீ என்னை என் செய்தாய் - நீ என்னை என் செய்தனை, சாதல் சாதல் பொல்லாமை அற்ற - இறத்தலென்கிற பொல்லாங்கில்லாத, தனி சரண் - ஒப்பற்ற உன் திருவடியே, சரண் ஆம் என - எனக்கு அடைக்கலமாகு மென்று, காதலால் - ஆசையோடு, உன்னை ஓத - உன்னைத் துதிக்க, நீ கழுக்குன்றிலே வந்து -

நீ திருக்கழுக்குன்றிலே வந்து, காட்டினாய் - உன் திருக்கோலத்தைக் காட்டி யருளினாய், எ - று.

(க - ரை.) பெருந்துறைப் பெருமானே, உன் திருவடியே யெனக்குப் புகலிடமாதலால் உன்னைத் துதிக்க நீ திருக்கழுக்குன்றில் உன் திருக்கோலத்தைக் காட்டி யருளினாய் என்பதாம்.

(வி - ரை.) பேதம் - வேறு பாடு. கற்பு - கல்வி. ஏதம் - குற்றம். ஏதிலார் - அயலார். (சு)

இயக்கிமா ரறுபத்துநால்வரையெண்குணஞ்செய்தவீசனே
மயக்கமாயதோர்மும்மலப்பழவல்வினைக்குளழுந்தவுந்
துயக்கறுத்தெனையாண்டுகொண்டுநின்றூய்மலர்க்கழறந்தெனைக்
கயக்கவைத்தடியார்முனேவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே.

(ப - ரை.) இயக்கிமார் - இயக்கிமாராகிய, அறுபத்து நால்வரை - அறுபத்துநான்குபேரை, எண் குணம் செய்த ஈசனே - எண் குணங்களைப் பெறச்செய்த ஈசனே, மயக்கம் ஆயது - மயக்கத்தால் உண்டாவதாகிய, ஓர் மும்மலம் - ஒப்பற்ற மும்மலத்தொடர்பாகிய, பழ வல்வினைக்குள் - பழமையாகிய வலிய வினைக்கடலுள், அழுந்தவும் - நான் அழுந்தாநிற்கவும், துயக்கு அறுத்து - என் சோர்வை அறுத்து, என்னை ஆண்டுகொண்டு - என்னை ஆண்டுகொண்டருளி, நின் - உனது, தூ - பரிசுத்தமாகிய, மலர் - தாமரைமலர்போன்ற, கழல் - திருவடியை, தந்து - கொடுத்து, என்னை - அடியேனை, கயக்கவைத்த அடியார் முன்னே - மெலியவைத்த அடியார்களுக்கெதிரில், கழுக்குன்றிலே வந்து - திருக்கழுக்குன்றிலே வந்து, காட்டினாய் - உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய், எ - று.

(க - ரை.) பெருந்துறைப் பெருமானே, மயக்கத்துக்கேதுவாகிய மும்மலவாசனையி லழுந்தாநிற்கவும், என்சோர்வைக் கெடுத்து எனக்கு உன் திருவடியைத் தந்து, அடியார்க்கெதிரில் எழுந்தருளித் திருக்கழுக்குன்றில் உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய் என்பதாம்.

(வி - ரை.) எண்குணம் - அட்டசித்தி, துயக்கு - சோர்வு. (எ)

திருச்சிற்றம்பலம்.

# கண்டபத்து.

## நிருத்ததரிசனம்.

### கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

இந்திரியவயமயங்கியிறப்பதற்கேகாரணமா
யந்தரமேதிரிந்துபோயருநரகில்வீழ்வேற்குச்
சிந்தைதனைத்தெளிவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வந்தமிலாவானந்தமணிகொடில்லைகண்டேனே.

(ப - ரை.) இந்திரியவயம் - இந்திரியவயத்தால், மயங்கி-மயக்கமடைந்து, இறப்பதற்கே காரணமாய் - சாதலுக்கே காரணமாகி, அந்தரமே திரிந்து - வேறுபட்டே திரிந்து, போய் - சென்று, அருநரகில் வீழ்வேற்கு - அரியநரகத்தில் வீழ்வேனாகிய எனக்கு, சிந்தை தன்னை தெளிவித்து - மனத்தைத் தெளிவித்து, சிவம் ஆக்கி - சிவமாக்கி, என்னை ஆண்ட - என்னை ஆண்டருளின, அந்தம் இல்லா ஆநந்தம் - முடிவில்லாத ஆநந்தவுருவை, அணிகொள் தில்லைகண்டேன் - அழகைக்கொண்ட தில்லையம்பலத்தில் கண்டேன், எ - று.

(க - ரை.) இந்திரியவசப்பட்டு இறப்பதற்கேதுவாக வேறுபட்டுத்திரிந்து அரியநரகில் வீழ்வேனாகிய எனது சிந்தையைத் தெளிவித்துச் சிவமாக்கி யாண்டருளின இன்பவுருவைத் தில்லைப்பதியிற் கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) இந்திரியம் - பஞ்சேந்திரியங்கள். வயம் - வசம். அந்தரம் - வேறுபாடு. (க)

வினைப்பிறவியென்கின்றவேதனையிலகப்பட்டுத்
தனைச்சிறிதுநினையாதேதளர்வெய்திக்கிடப்பேனை
யெனைப்பெரிதுமாட்கொண்டென்பிறப்பறுத்தவிணையிலியை
யனைத்துலகுந்தொழுந்தில்லையம்பலத்தேகண்டேனே.

(ப - ரை.) வினைப்பிறவி என்கின்ற - வினையினாலுண்டாகிய பிறவி யென்கிற, வேதனையில் அகப்பட்டு - வேதனையிற் சிக்கி, தன்னை சிறிதும் நினையாதே - தன்னைச் சிறிதேனும் நினையாமல், தளர்வு எய்தி கிடப்பேனை - தளர்ச்சியடைந்து கிடக்கின்ற என்னை, எனை பெரிதும் - எத்தனைப் பெரிதும், ஆட்கொண்டு - அடிமைகொண்டு, என் பிறப்பு அறுத்த-என் பிறவித்தளையைச் சேதித்த, இணை இலியை-ஒப்பிலியாகிய சிவபெருமானை, அனைத்து உலகும் தொழும்-எல்லா வுலகங்களும் வணங்குகின்ற, தில்லை அம்பலத்து கண்டேன் - தில்லையம்பலத்திற் கண்டேன், எ - று.

(க - ரை.) பிறவித்துன்பத்தி லகப்பட்டுத் தன்னைச் சற்றும் நினையாமல் தளர்ந்துகிடக்கின்ற என்னை யாட்கொண்டு என் பிறவியை யொழித்த இணையிலியாகிய சிவபெருமானை தில்லைப்பதியிற் கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) பிறவிக்குக் காரணம்வினையாதலால் வினைப்பிறவி யென்றார். (உ)

உருத்தெரியாக்காலத்தேயுள்புகுந்தென்னுளமன்னிக்
கருத்திருத்தியூன்புக்குக்கருணையினாலாண்டுகொண்ட
திருத்துருத்திமேயானைத்தித்திக்குஞ்சிவபதத்தை
யருத்தியினானாயடியேனணிகொடில்லைகண்டேனே.

(ப - ரை) உரு தெரியா காலத்தே - உருவுதெரியாத காலத்திலே, உள்புகுந்து - உள்ளேபுகுந்து, என் உள்ளம் மன்னி - என் மனத்தில் நிலைபெற்று, கரு திருத்தி - பிறவியைத்திருத்தி, ஊன் புக்கு - உடம்பிற் புகுந்து, கருணையினால் ஆண்டு கொண்ட - தன் பெருங்கருணையா லாண்டுகொண்டருளின, திரு துருத்தி மேயானை - திருத்துருத்தியில் எழுந்தருளினவனை, தித்திக்கும் சிவபதத்தை - இனிக்கின்ற சிவபதத்தை, அருத்தியினால் - ஆசையால், நாயடியேன் - நாயடியேன், அணிகொள் தில்லை கண்டேன் - அழகைக்கொண்ட தில்லை யம்பலத்திற் கண்டேன், எ - று.

(க - ரை.) இளமைப்பருவத்திலே என்னுள்ளத்திற் புகுந்து நிலைபெற்று என் பிறவியைக்கெடுத்துத் தன்கருணையினால் என்னையாண்

டுகொண்ட இறைவனை நான் தில்லைப்பதியிற்கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) கரு - பிறவி. திருத்துருத்தி - ஓர்திருப்பதி. (௩)

கல்லாதபுல்லறிவிற்கடைபட்டநாயேனை
வல்லாளனாய்வந்துவனப்பெய்தியிருக்கும்வண்ணம்
பல்லோருங்காணவென்றன்பசுபாசமறுத்தானை
யெல்லோருமிறைஞ்சுதில்லையம்பலத்தேகண்டேனே.

(ப - ரை.) கல்லாத புல் அறிவின் - கல்லாத அற்ப அறிவினால், கடை பட்ட நாயேனை - கடையனாகிய நாயினேனை, வல்லாளனாய் வந்து, வலியனாய் வந்து, வனப்பு எய்தி இருக்கும் வண்ணம் - அழகுபெற்றிருக்கும் வண்ணம், பல்லோரும் காண - பலருங் காணும்படி, என்றன் - என்னுடைய, பசு பாசம் அறுத்தானை - பசு பாசங்களைச் சேதித்தவனை, எல்லோரும் இறைஞ்சு - எல்லாரும் வந்து வணங்குகின்ற, தில்லை அம்பலத்தே கண்டேன் - தில்லையம்பலத்திலே கண்டேன், எ - று.

(க - ரை.) கல்லாத புல்லறிவினால் கடைப்பட்டவனாகிய என்னை, எல்லாருங் காண வந்து என் பசுபாசத்தை யறுத்தருளின இறைவனைத் தில்லைப்பதியிற் கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) புல்லறிவுக்குக் காரணம் கல்லாமை யாதலால் கல்லாத புல்லறிவின் என்றார். வனப்பு - அழகு. (௪)

சாதிகுலம்பிறப்பென்னுஞ்சுழிப்பட்டுத்தடுமாறு
மாதமிலிநாயேனையல்லலறுத்தாட்கொண்டு
பேதைகுணம்பிறருருவம்யானெனதென்னுரைமாய்த்துக்
கோதிலமுதானானைக்குலாவுதில்லைகண்டேனே.

(ப - ரை.) சாதி குலம் பிறப்பு என்னும் - சாதி குலம் பிறவியென்கிற, சுழிபட்டு - சுழியிலகப்பட்டு, தடுமாறும் - தடுமாறுகின்ற, ஆதம் இலி நாயேனை - ஆதரவில்லாதவனாகிய நாயினேனை, அல்லல் அறுத்து - துன்பமறுத்து, ஆட்கொண்டு - அடிமை கொண்டு, பேதை குணம் - பேதைமைக் குணத்தையும், பிறர் உருவம் - பிறர்

வடிவத்தையும், யான் எனது என் உரை - யான் எனது என்னுஞ் சொல்லையும், மாய்த்து-நசிப்பித்து, கோது இல் - குற்றமற்ற, அமுது ஆனானை - அமிர்தமானவனை, குலாவு - விளங்குகின்ற, தில்லை கண்டேன் - தில்லையம்பலத்திற் கண்டேன், எ - று.

(க - ரை.) சாதி குலம் பிறப்பு என்கிற சுழியிலகப்பட்டுத் தடுமாறி ஆதரவில்லாத என்னைத் தன்பொழித் தாட்கொண்டு, என் பேதைமை முதலானவற்றைக் கெடுத்து எனக்கமுதம்போல இனிதாயிருப்பவனைத் தில்லைப்பதியிற் கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) ஆதம் - ஆதரவு. உரை - சொல். (௫)

பிறவிதனையறமாற்றிப்பிணிமூப்பென்றிவையிரண்டு
முறவினொடுமொழியச்சென்றுலகுடையவொருமுதலைச்
செறிபொழில்சூழ்தில்லைநகர்த்திருச்சிற்றம்பலமன்னி
மறையவரும்வானவரும்வணங்கிடநான்கண்டேனே.

(ப - ரை.) பிறவிதன்னை - பிறவியை, அறமாற்றி - அறவொழித்து, பிணி மூப்பு என்ற இவை இரண்டும் - பிணி மூப்பு என்று சொல்லப்பட்ட இவை யிரண்டும், உறவினொடும் ஒழிய - உறவினரோடும் ஒழிய, சென்று - போய், உலகு உடைய ஒரு முதலை - உலகத்தையுடைய ஒப்பற்ற முதல்வனை, செறிபொழில்சூழ் - நெருங்கிய சோலைசூழ்ந்த, தில்லைநகர் - தில்லைநகரத்தில், திருச்சிற்றம்பலம் மன்னி - திருச்சிற்றம்பலத்தில் நிலைபெற்று, மறையவரும் - பூசுரரும், வானவரும் - சுரரும், வணங்கிட - தொழுதிட, நான் கண்டேன் - நான் கண்டேன், எ - று.

(க - ரை.) பிறவியைக்கெடுத்துப் பிணி மூப்புக்களைப் பற்றறவொழித்த உலககாரணனைத் தில்லைப்பதியில் வேதியர் முதலானோர் வணங்க நான் கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) அற - முழுதும். உறவு - இனம். முதல் - பண்பாகுபெயர். (௬)

பத்திமையும்பரிசுமிலாப்பசுபாசமறுத்தருளிப்
பித்தனிவனெனவென்னையாக்குவித்துப்பேராமே
சித்தமெனுந்திண்கயிற்றாற்றிருப்பாதங்கட்டுவித்த
வித்தகனார்விளையாடல்விளங்குதில்லைகண்டேனே.

(ப - ரை.) பத்திமையும் - பத்திசெய்தற்றன்மையும், பரிசும் - (அதற்கேற்ற) நல்லொழுக்கமும், இல்லா - இல்லாத, பசுபாசம் அறுத் தருளி - பசுபாசங்களை அறுத்தருளி, இவன் பித்தன் என்ன - இவன் பித்தனென்று கண்டோர் சொல்லும் வண்ணம், என்னை ஆக்குவித்து - என்னைச் செய்து, பேராமே - பெயராமல், சித்தம் என்னும் - மனம் என்கிற, திண்கயிற்றால் - வலியகயிற்றால், திருப்பாதம் கட்டுவித்த - திருவடியைப் பிணிப்பித்த, வித்தகனார் - ஞான வுருவினராகிய சிவபிரானாரது, விளையாடல் - திருவிளையாடலை, விளங்கு தில்லைகண்டேன் - விளங்குகின்ற தில்லையம்பலத்தில் கண்டேன், எ - று.

(க - ரை.) பத்திமுதலியவை யில்லாத எனது பசு பாசத்தை யறுத்து, என்னைப் பித்தனாக்கி, மனக்கயிற்றால் தன் திருவடியைக் கட்டுவித்த இறைவனது விளையாடலைத் தில்லைப்பதியிற் கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) பத்திமை - பத்தித்தன்மை. பேர்தல் - நிலைபெயர்தல். (எ)

அளவிலாப்பாவகத்தாலமுக்குண்டிங்கறிவின்றி
விளைவொன்றுமறியாதேவெறுவியனாய்க்கிடப்பேனுக்
களவிலாவானந்தமளித்தென்னையாண்டானைக்
களவிலாவானவருந்தொழுந்தில்லைகண்டேனே.

(ப - ரை.) அளவு இல்லா பாவகத்தால் - அளவற்ற எண்ணங்களால், அழுக்கு உண்டு - அழுக்கப்பட்டு, இங்கு - இவ்வுலகத்தில், அறிவு இன்றி - அறிவில்லாமல், விளைவு ஒன்றும் அறியாதே - மேல் விளையக் கடவதனைச் சிறிதும் அறியாமல், வெறுவியனாய் கிடப்பேனுக்கு - வெறுமையனாய்க் கிடப்பவனாகிய எனக்கு, அளவு இல்லா ஆநந்தம் அளித்து - அளவற்ற இன்பத்தைக் கொடுத்து, என்னை ஆண்டானை - என்னை ஆண்டருளினவனை, களவு இல்லா வானவரும் தொழும் - களவற்ற தேவர்களும் வணங்குகின்ற, தில்லைகண்டேன் - தில்லையம்பலத்திற் கண்டேன், எ - று.

(க - ரை.) அளவற்ற எண்ணங்களாகிய கடலி லழுந்திக்கிடப்பவனாகிய எனக்கு, எல்லையில்லாத இன்பத்தைக் கொடுத்து என்னை யாண்டருளினவனைத் தில்லைப்பதியிற் கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) பாவகம் - எண்ணம். வெறுவியன் - வீணன்.

பாங்கினொடுபரிசென்றுமறியாதநாயேனை
யோங்கியுளத்தொளிவளரவுலப்பிலாவன்பருளி
வாங்கிவினைமலமறுத்துவான்கருணைதந்தானை
நான்குமறைபயிறில்லையம்பலத்தேகண்டேனே.

(ப - ரை.) பாங்கினொடு பரிசு - முறையோடு கூடிய குணங்களை, ஒன்றும் அறியாத நாயேனை - சிறிதும் அறியாத நாயினேனை, உள்ளத்து - மனத்தில், ஒளி - ஒளியானது, ஓங்கி வளர - ஓங்கி உயர, உலப்பு இல்லா அன்பு அருளி - கெடுதலில்லாத அன்பினை அருள்செய்து, வினை வாங்கி - வினைகளை நீக்கி, மலம் அறுத்து - மலத்தைச்சேதித்து, வான் கருணை தந்தானை - தனது மேலான கருணையைக் கொடுத்தவனை, நான்கு மறை - நான்கு வேதங்களும், பயில் - பழகுகிற, தில்லையம்பலத்தே கண்டேன் - தில்லையம்பலத்திற் கண்டேன், எ - று.

(க - ரை.) நல்லொழுக்க முதலியவை யில்லாத எனக்கு அன்பினைத் தந்து, மலத்தைக் கெடுத்துக் கருணை செய்தவனைத் தில்லைப் பதியிற் கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) பாங்கு - முறைமை. பரிசு - ஒழுக்கம், உலப்பு - கெடுதி. (க)

பூதங்களைந்தாகிப்புலனாகிப்பொருளாகிப்
பேதங்களனைத்துமாய்ப்பேதமிலாப்பெருமையனைக்
கேதங்கள்கெடுத்தாண்டகிளரொளியைமரகதத்தை
வேதங்கடொழுதேத்தும்விளங்குதில்லைகண்டேனே.

(ப - ரை.) பூதங்கள் ஐந்து ஆகி - ஐம்பூதங்களாகி, புலன் ஆகி - ஐம்புலன்களாகி, பொருள் ஆகி - எல்லாப் பொருள்களு மாகி, பேதங்கள் அனைத்தும் ஆய் - வேறுபாடுகள் எல்லாமாகி, பேதம் இல்லா - வேறுபாடில்லாத, பெருமையனை - பெருமையையுடையவனை, கேதங்கள் கெடுத்து ஆண்ட - எமது துன்பங்களை அழித்து எம்மை யாண்டருளின, கிளர் ஒளியை - மிக்கு விளங்கு மொளி

யினை, மரகதத்தை-மரகதமணியை, வேதங்கள் தொழுது ஏத்தும் - வேதங்கள் வணங்கித் துதிக்கின்ற, விளங்கு தில்லை கண்டேன் - விளங்கா நின்ற தில்லையம்பலத்தில் கண்டேன், எ - று.

(க - ரை.) பூதங்கள் முதலானவை யாகி நின்றவனும், எமது துன்பத்தைக் கெடுத்தாண்டவனும் ஆகிய இறைவனைத் தில்லைப்பதியிற் கண்டேன் என்பதாம்.

(வி - ரை.) கேதம் - துன்பம். மரகதம் - பச்சை. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# பிரார்த்தனைப்பத்து.

## சதாமுத்தி.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கலந்துநின்னடியாரோடன்றுவாளாகளித்திருந்தேன்
புலர்ந்துபோனகாலங்கள்புகுந்துநின்றதிடர்பின்னா
ளுலர்ந்துபோனேனுடையானேயுலவாவின்பச்சுடர்காண்பா
னலந்துபோனேனருள்செய்யாயார்வங்கூரவடியேற்கே.

(ப - ரை.) அன்று - அந்நாளில், நின் அடியாரோடு கலந்து - உன் அடியாருடன் கூடி, வாளா - சும்மா, களித்திருந்தேன் - களிப்படைந்திருந்தேன், காலங்கள் புலர்ந்து போன - நாட்கள் கழிந்து போயின, பின்னாள் - பிற்காலத்தில், இடர் புகுந்து நின்றது - துன்பம் புக்கு நின்றது, உடையானே - உடையவனே, உலர்ந்து போனேன் - வாடிப்போனேன், உலவா இன்பம் - கெடாத இன்பத்தைத் தருகிற, சுடர் - சோதியை, காண்பான் - காணும்பொருட்டு, அலந்து போனேன் - துன்பப்பட்டுப்போனேன், அடியேற்கு-அடியேனுக்கு, ஆர்வம் கூர - அன்பு மிகும்படி, அருள் செய்யாய் - கிருபை செய்வாயாக, எ - று.

(க - ரை.) அந்நாளில் உன்னடியாரோடு கூடிக் களித்திருந்தேன், இந்நாளில் துன்பம் புகுந்து நின்றது, இனியாயினும் உன்மீது அன்பு மிகும்படி யெனக் கருள்செய்வாயாக என்பதாம்.

(வி - ரை.) புலர்தல் - கழிதல். உலத்தல் - கெடுதல். அலத்தல் - வருந்தல். ஆர்வம் - அன்பு. (க)

அடியார்சிலருன்னருள்பெற்றாரார்வங்கூரயானவமே
முடையார்பிணத்தின்முடிவின்றிமுனிவாலடியேன்மூக்கின்றேன்
கடியேனுடையகடுவினையைக்களைந்துன்கருணைக்கடல்பொங்க
வுடையாயடியேனுள்ளத்தேயோவாதுருகவருளாயே.

(ப - ரை.) அடியார் சிலர் - உன் அடியாரிற்சிலர், ஆர்வம் கூர - உன்னிடத்தன்பு மிகுதலால், உன் அருள் பெற்றார் - உன் அருளைப்பெற்றார்கள், யான் - நான், முடை ஆர் பிணத்தின் - முடை நாற்றம் பொருந்திய பிசாசம்போல, முடிவின்றி - முடிவில்லாமல், முனிவால் - கோவத்தால், அடியேன் - அடியனேன், அவமே - பய னில்லாமலே, மூக்கின்றேன் - முதிராநின்றேன், கடியேனுடைய - கடுமையை யுடையேனது, கடுவினையை - கொடியவினைகளை, களைந்து - நீக்கி, அடியேன் உள்ளத்து - அடியேனது மனத்தில், உன் கருணைக்கடல் பொங்க - உன் கருணையாகிய கடல் பொங்கவும், ஓவாது உருக - அம்மனமானது இடையறாது உருகவும், அருளாய் - அருள் செய்வாயாக, உடையாய் - உடையவனே, எ - று.

(க - ரை.) உன்னிடத்தன்பு மிகுதியால் அடியார் சிலர் உன்னருள்பெற்றார், அன்பில்லாத நான் பேய்போல மூத்துழலாநின்றேன், இறைவனே, என் வினையைக்களைந்து, உன்னிடத் தன்பு மிகும்படி எனக்கருள் செய்வாயாக என்பதாம்.

(வி - ரை.) முடை - புலால் நாற்றம். பிணம் - உடம்பெனினுமாம். மூத்தல் - முதிர்தல். (உ)

அருளாரமுதப்பெருங்கடல்வாயடியாரெல்லாம்புக்கழுந்த
விருளாராக்கையிதுபொறுத்தேயெய்த்தேன்கண்டாயெம்மானே
மருளார்மனத்தோருன்மத்தன்வருமாலென்றிங்கெனைக்கண்டார்
வெருளாவண்ணமெய்யன்பையுடையாய்பெறநான்வேண்டுமே.

(ப - ரை.) அருள் - உன் திருவருளாகிய, ஆர் - அரிய, அமுதம் - அமிர்தத்தா னியன்ற, பெருங்கடல்வாய் - பெரிய கடலினிடத்து, அடியார் எல்லாம் - உன் அடியாரெல்லாரும், புக்கு அழுந்த-போய் மூழ்க, இருள் ஆர்-அஞ்ஞானமாகிய இருள் நிறைந்த, ஆக்கை-உடம்பாகிய, இது பொறுத்து, இதனைச்சுமந்து, எய்த்தேன் - இளைத்தேன், எம்மானே-எம்பெருமானே, மருள் ஆர் மனத்து - மருட்சி நிறைந்தமனத்தையுடைய, ஓர் உன்மத்தன் - ஒரு உன்மத்தனானவன்; வரும் என்று - வருகின்றானென்று, இங்கு என்னைக்கண்டார் - இவ்வுலகத்தில் என்னைக் கண்டவர்கள், வெருளாவண்ணம் - அஞ்சாதவகை, நான் - அடியேன், மெய்யன்பை பெறவேண்டும் - மெய்யன்பைப் பெறுதல் வேண்டும், உடையாய் - உடையவனே, எ - று.

(க - ரை.) இறைவனே, உன் அருட்கடலில் அடியாரெல்லாம் மூழ்க, யான் இவ்வுடம்பைத்தாங்கி யிளைத்தேன்; உன்னிடத்து மெய்யன்பை யெனக்கருள்செய்வாயாக என்பதாம்.

(வி - ரை.) இருள் - அஞ்ஞானவிருள். ஒன்றுந்தோன்றாது மறைத்தலால் அஞ்ஞானத்தை யிருளென்றார். (௩.)

வேண்டும்வேண்டுமெய்யடியாருள்ளேவிரும்பியெனையருளா
லாண்டாயடியேனிடர்களைந்தவமுதேயருமாமணிமுத்தே
தூண்டாவிளக்கின்சுடரனையாய்தொண்டனேற்குமுண்டாங்கொல்
வேண்டாதொன்றும்வேண்டாதுமிக்கவன்பேமேவுதலே.

(ப - ரை.) வேண்டும் வேண்டும் - பலகால் விரும்புகிற, மெய் அடியார் உள்ளே - மெய்யடியார்க்கிடையே, என்னை - அடியேனை, விரும்பி ஆண்டாய் - விரும்பி ஆண்டருளினையாகி, அடியேன் இடர் களைந்த - அடியேனது துன்பத்தை நீக்கின, அமுதே - அமிர்தமே, அரு - அருமையாகிய, மாமணி - மாணிக்கமே, முத்தே - முத்தமே, தூண்டாவிளக்கின் சுடர் அனையாய் - தூண்டாவிளக்கின் ஒளியை நிகர்த்தவனே, வேண்டாது ஒன்றும் வேண்டாது - விரும்பப்படாததாகிய ஒரு பொருளையும் விரும்பாமல், மிக்க அன்பே மேவுதல் - மிகுந்த அன்பினையே பொருந்துதல், தொண்டனேற்கும் - உன் தொழும்பனேனுக்கும், உண்டாம் கொல் - உண்டாமோ, எ - று.

(க - ரை.) இறைவனே, ஒரு பொருளையும் விரும்பாமல் உன்னிடத் தன்பே யெனக்குண்டாம்படி நேரிடுவதாகிய ஒரு காலமு முண்டோ என்பதாம்.

(வி - ரை.) நவமணிகளுள் முத்துச் சிறந்தமையின் அருமாமணியாகிய முத்தெனக் கொள்ளினு மமையும். (௪)

மேவுமுன் றனடியாருள்விரும்பியானுமெய்ம்மைமயே
காவிசேருங்கயற்கண்ணாள்பங்காவுன் றன் கருணையினாற்
பாவியேற்குமுண்டாமோபரமானந்தப்பழங்கடல்சேர்ந்
தாவியாக்கையானெனதென் றியாதுமின்றியறுதலே.

(ப - ரை.) மேவும் உன்றன் அடியாருள் - பொருந்திய உன் அடியார் நடுவே, யானும் - நானும், மெய்ம்மையே விரும்பி - உண்மையாகவே விரும்பி, காவி சேரும் - நீலமலரின் தன்மையமைந்த, கயல் கண்ணாள் - சேற்கண்ணளாகிய உமாதேவியின், பங்கா - பாகனே, உன்றன் கருணையினால் - உன் கருணையினால், பரமானந்தம் - பேரின்பமாகிய, பழங்கடல் சேர்ந்து - பழமையாகிய கடலையடைந்து, ஆவி யாக்கை - உயிர் உடம்பு என்பவைகளை, யான் எனது என்ற - யான் எனது என்று சொல்லப்பட்ட, யாதும் இன்றி அறுதல் - யாதுமில்லாது அற்றொழிதல், பாவியேற்கும் உண்டாமோ - பாவியாகிய எனக்கும் உண்டாகுமோ, எ - று.

(க - ரை.) இறைவனே, பாவியேனுக்கும், உன் பரமானந்தக் கடலில் மூழ்கி யானெனதென்னுஞ் செருக்கறுதல் உண்டாமோ என்பதாம்.

(வி - ரை.) காவி - நீலப்பூ. (௫)

அறவேபெற்றார்நின்னன்பரந்தமின்றியகநெகவும்
புறமேகிடந்துபுலைநாயேன்புலம்புகின்றேனுடையானே
பெறவேவேண்டுமெய்யன்புபேராவொழியாப்பிரிவில்லா
மறவாநினையாவளவிலாமாளாவின்பமாகடலே.

(ப - ரை.) உடையானே - உடையவனே, பேரா-நிலைபெயராததும், ஒழியா-அழியாததும், பிரிவு இல்லா-பிரிவற்றதும், மறவா-

மறவாததும், நினையா-நினையாததும், அளவு இல்லா - அளவற்றதும், மாளா - குறையாததும் ஆகிய, இன்பம் - ஆநந்தமாகிய, மாகடலே - பெருங்கடலே, நின் அன்பர் - உன் அன்பர்கள், அறபெற்றார் - மேற்கூறியவற்றை ஒழியப்பெற்றார்கள், (அதுவேயுமன்றி) அகம் நெகவும் - மனம் நெகிழவும் (பெற்றார்கள்), (அங்ஙனமாக) புலைநாயேன் - புலை நாயினேன், புறமே கிடந்து - புறத்தே கிடந்து, புலம்புகின்றேன் - புலம்பாநின்றேன், மெய் அன்பு பெறவேண்டும் - யானும் உன் மெய்யன்பைப் பெறுதல்வேண்டும், எ - று.

(க - ரை.) இறைவனே, உன் அன்பர் அகநெகிழப்பெற்றார்கள், யான் புறமேகிடந்து புலம்புகின்றேன், இனியேனும் எனக்கு உன்னிடத் தன்புண்டாகும்படி கருணைசெய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) அறவே பெற்றார் - அறவே பெற்றாராகிய எனினுமாம். அறவு - பற்றறுதி. (சு)

கடலேயனையவானந்தங்கண்டாரெல்லாங்கவர்ந்துண்ண
விடரேபெருக்கியேசற்றிங்கிருத்தலழகோவடிநாயே [தேன்
னுடையாய்நீயேயருளுதியென்றுணர்த்தாதொழிந்தேகழிந்தொழிந்
சுடராரருளாலிருணீங்கச்சோதியினித்தான்றுணியாயே.

(ப - ரை.) கடலே அனைய ஆனந்தம் - கடலையே நிகர்த்த இன்பத்தை, கண்டார் எல்லாம் - உன்னைக் கண்டவரெல்லாரும், கவர்ந்து உண்ண - கவர்ந்து அநுபவியாநிற்க, அடி நாயேன் - அடிமையாகிய நாயினேன், இடரே பெருக்கி - துன்பத்தையே பெருகச்செய்து, ஏசற்று - துக்கித்து, இங்கு - இவ்வுலகத்தில், இருத்தல் - இருப்பது, அழகோ - அழகாமோ, உடையாய் - உடையவனே, நீயே அருளுதி என்று - நீயே அருள்செய்யக்கடவையென்று கருதி, உணர்த்தாது ஒழிந்து - உனக்கு அறிவியாதொழிந்து, கழிந்தொழிந்தேன் - உன்னைப் பிரிந்தொழிந்தேன், சோதி - சோதியே, ஆர் அருள் சுடரால் - அரிய உன் அருட்சுடரினால், இருள் நீங்க - என் அஞ்ஞான இருள் நீங்கும்படி, இனித்தான் - இனியாயினும், துணியாய் - உன் திருவுளத்தில் நிச்சயித்தல்வேண்டும், எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னருட்கடலைக் கண்டாரெல்லாரும் அதில் மூழ்கிக் கவர்ந்துண்ணாநிற்க,யான் துன்பத்தைப்பெருக்கி

இளைத்திருப்ப தழகாகுமோ, இனியாயினும் உன்னருட்சுடரால் எனது அஞ்ஞான விருள்நீங்கும்படி நீ திருவுளம்பற்றவேண்டும் என்பதாம்,

(வி - ரை.) சுடர் - சூரியன். (௭)

துணியாவுருகாவருள்பெருகத்தோன்றுந்தொண்டரிடைப்புகுந்து
திணியார்மூங்கிற்சிந்தையேன்சிவனேநின்றுதேய்கின்றே
னணியாரடியாருனக்குள்ளவன்புந்தாராயருளளியத்
தணியாதொல்லைவந்தருளித்தளிர்ப்பொற்பாதந்தாராயே.

(ப - ரை.) சிவனே - சிவபிரானே, துணியா - துணிந்து, உருகா - உருகி, அருள் பெருக - உன் அருள் பெருகும்படி, தோன்றும் - தோன்றாநின்ற, தொண்டர் இடைபுகுந்து-தொழும்பரிடையே புகுந்து, திணி ஆர் - வலிமை பொருந்திய, மூங்கில் - மூங்கில் போன்ற, சிந்தையேன் - மனத்தை யுடையேன், நின்று தேய்கின்றேன் - நின்று மெலியாநின்றேன், அணி ஆர் - அழகு பொருந்திய, அடியார் - உன் அடியவர், உனக்கு உள்ள அன்பும் தாராய் - உனக்குச் செய்கின்ற அன்பையும் தாராய், அருள் அளிய - அருள் கனிய, தணியாது - தாழ்க்காமல், ஒல்லை வந்தருளி - விரைவில் எழுந்தருளி, தளிர் - தளிர்போன்ற, பொன் பாதம் தாராய் - உன் பொன்னடியையும் தாராய், (இங்ஙனமாயின் யான் எவ்வாறுய்வேன்) எ - று.

(க - ரை.) இறைவனே, உன் மெய்யன்பரிடையே புகுந்து நின்று வன்னெஞ்சனாகிய நான் தேயாநின்றேன், உன்னிடத்தன்பு செய்யவும் எனக்குக் கருணை செய்யாய்; உன் திருவடியையும் தாராய், யான் எவ்வாறுய்வேன் என்பதாம்.

(வி - ரை.) திணி - திண்மை. துணியா, உருகா, என்பன செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள். (அ)

தாராவருளொன்றின்றியேதந்தாயென்றுன்றமரெல்லா
மாராநின்றாரடியேனுமயலார்போலவயர்வேனோ
சீராருளாற்சிந்தனையைத்திருத்தியாண்டசிவலோகா
பேரானந்தம்பேராமைவைக்கவேண்டும்பெருமானே.

(ப - ரை.) தாரா அருள்-தரவொண்ணாத உன் அருளை, ஒன்று இன்றி தந்தாய் என்று - முழுதும் தந்தனை யென்று, உன் தமர் எல்லாம் - உன் அடியார் எல்லாரும், ஆரா நின்றார் - அநுபவியா நின்றார்கள், அடியேனும் - அடியனேனும், அயலார்போல - அயலவர்போல, அயர்வேனோ - துன்புறுவேனோ, சீர் ஆர் - சிறப்பினையுடைய, உன் அருளால்-உன் கருணையால், சித்தனையை திருத்தி - என் மனத்தைத்திருத்தி, ஆண்ட - என்னை ஆண்டருளின, சிவலோகா - சிவபுரத்தானே, பெருமானே-பெருமையுடையானே, பேர் ஆனந்தம்-பேரின்பமானது, போரமை - நிலைபெயராமல், வைக்கவேண்டும் - வைத்தல் வேண்டும், எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னருள் முழுதும் தந்தாயென்று உன்னடியா ரெல்லாரும் அநுபவியா நின்றார்கள், அடியேன் ஒருவன் மாத்திரம் அயலார்போல அயர்வேனோ, என்மனத்தைத் திருத்தி யாண்டருளினவனே, பேரின்பம் நிலை பெயராமல் என்னிடத்தருள் செய்யவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) தாராவருள் - தரவொண்ணாத அருள். (அருமையாகிய அருள்). (௯)

மானோர்பங்காவந்திப்பார்மதுரக்கனியேமனநெகா
நானோர்தோளாச்சுரையொத்தானம்பியித்தால்வாழ்ந்தாயே
யூனேபுகுந்தவுனையுணர்ந்தேயுருகிப்பெருகுமுள்ளத்தைக்
கோனேயருளுங்காலந்தான்கொடியேற்கென்றோகூடுவதே.

(ப - ரை.) மான் ஓர் பங்கா - மானை ஒரு பாகத்தில் உடையவனே, வந்திப்பார் மதுரக்கனியே - வாழ்த்துவாராகிய அன்பர்க்கு மதுரமாகிய கனிபோல்பவனே, மனம் நெகா - மனம் நெகிழாமல், நான் ஓர் தோளா சுரை ஒத்தால் - நான் ஒரு தொளைக்காத சுரையை நிகர்த்தால், நம்பி - நம்பீ, இத்தால் - இதனால், வாழ்ந்தாயே - வாழ்ந்து விட்டாயோ, ஊனே புகுந்த-உடலிற்புகுந்த,உன்னை உணர்ந்து-உன்னையறிந்து, உருகி - உருகி, பெருகு - (உருகுதலே) பெருகப்பெற்ற, உள்ளத்தை - மனத்தை, கோனே — இறைவனே, அருளும் காலம் - நீ யருள்செய்யும் காலமானது, கொடியேற்கு - கொடியனேனுக்கு, கூடுவது என்றோ - கூடுவது எந்நாளோ, எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னை யறிந்து உருகும்படியான மனத்தை அடியேற்கருளுங்காலம் எக்காலமோ என்பதாம்.

(வி - ரை.) வந்திப்பார் மதுரக்கனியே யென்றமையால் வந்தியார்தார்க்குக் கைக்குங்கனி யென்றதாயிற்று. (௧௦)

கூடிக்கூடியுன்னடியார்குனிப்பார்சிரிப்பார்களிப்பாரா
வாடிவாடிவழியற்றேன்வற்றன்மரம்போனிற்பேனோ
வூடியூடியுடையாயொடுகலந்துள்ளுருகிப்பெருகிநெக்
காடியாடியானந்தமதுவேயாகவருள்கலந்தே.

(ப - ரை.) உன் அடியார் கூடிகூடி - உன் அடியார்கள் சேர்ந்து சேர்ந்து, குனிப்பார் - கூத்தாடுவோரும், சிரிப்பார் - சிரிப்பவரும், களிப்பார் - களிப்பவரும், ஆ - ஆகிநிற்க, வாடி வாடி வழி அற்றேன் - வாடி வாடி வழியற்றவனாகிய நான், வற்றல் மரம்போல் நிற்பேனோ - உலர்ந்த மரம்போல நிற்பேனோ, உடையாயொடும் - உடையவனாகிய உன்னோடும், ஊடி ஊடி - நான் பிணங்கிப்பிணங்கி, கலந்து - கூடி, உள் உருகி - மனமுருகி, பெருகி - பெருகி, நெக்கு - நெகிழ்ந்து, ஆடி ஆடி - கூத்தாடிக்கூத்தாடி, ஆநந்தமதுவே யாக - இன்பவுருவே யாகும்வண்ணம், கலந்து அருள் - என்னைக் கூடி யருள்வாயாக, எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னடியார் திரண்டு திரண்டு கூத்தாடுதல் முதலியவற்றைச் செய்யாநிற்க, நானொருவன் மாத்திரம் வாடி, வற்றல்மரம்போல நிற்பேனோ, நான் உன்னைக்கலந்து மனமுருகி ஆநந்தவுருவமாம்படி யருள்செய்வாயாக என்பதாம்.

(வி - ரை.) களிப்பாராக என்பது களிப்பாரா என ஈறு தொகுத்தது. வற்றல் மரம் - உலர்ந்த மரம். (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# குழைத்தபத்து.

## ஆத்துமநிவேதனம்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

குழைத்தாற்பண்டைக்கொடுவினைநோய்
காவாயுடையாய்கொடுவினையே
னுழைத்தாலுறுதியுண்டோதா
னுமையாள்கணவாவெனையாள்வாய்
பிழைத்தாற்பொறுக்கவேண்டாவோ
பிறைசேர்சடையாய்முறையோவென்
றழைத்தாலருளாதொழிவதே
யம்மானேயுன்னடியேற்கே.

(ப - ரை.) பண்டை - முன்னாளிற்செய்த, கொடுவினைநோய் - கொடியவினைகளும் அவற்றாலுண்டாகும் நோய்களும், குழைத்தால் - என்னை மெலிவித்தால், காவாய் - என்னைக் காத்தருள்வாயாக, உடையாய் - உடையவனே, கொடு வினையேன் - கொடியவினையையுடைய நான், உழைத்தால் - வருந்தினால், உறுதி உண்டோ - (அதனால் உனக்கு ஒரு) நன்மையுண்டோ, உமையாள் கணவா - உமாதேவிக்குக் கொழுநனே, என்னை ஆள்வாய் - என்னை யாள்வாயாக, பிழைத்தால் - பிழைசெய்தால், பொறுக்க வேண்டாவோ - (அதனை) பொறுத்துக் கொள்ளவேண்டாவோ, பிறைசேர்சடையாய் - பிறை தங்கிய சடையையுடையவனே, முறையோ என்று அழைத்தால் - முறையோ வென்று கூவினால், அம்மானே - எமது தந்தையே, உன் அடியேற்கு - உன் அடியேனுக்கு, அருளாது ஒழிவதே - அருள்செய்யா தொழிவதோ, (உனக்குத் தகுதியாவது), எ - று.

(க - ரை.) இறைவனே, கொடுவினைநோய் என்னை வருத்தினால் என்னைக் காத்தருளவேண்டும், அடியேன் வருந்தினால் உனக்கு

றுதியோ, யாம் பிழைசெய்தால் நீ பொறுக்கவேண்டாவோ, யாம் முறையிட்டழைத்தால் நீ யருளாதொழிவதுதானோ உனக்குத்தகுதி யாவது என்பது.

(வி - ரை.) குழைத்தல் - மெலிவித்தல். உறுதி - நன்மை.

அடியேனல்லலெல்லாமுன்
னகலவாண்டாயென்றிருந்தேன்
கொடியேரிடையாள்கூறுவெங்
கோவேயாவவென்றருளிச்
செடிசேருடலைச்சிதையாத
தெத்துக்கெங்கள்சிவலோகா
வுடையாய்கூவிப்பணிகொள்ளா
தொறுத்தாலொன்றும்போதுமே.

(ப - ரை.) அடியேன் - அடியேனுடைய, அல்லல் எல்லாம் - துன்பங்கள் எல்லாம், அகல - நீங்கும்படி, முன் ஆண்டாய் - முன்னே ஆண்டருளினாய், என்று இருந்தேன் - என்று கருதி யிருந்தேன், கொடி ஏர் இடையாள் - கொடிபோலும் அழகிய இடையை யுடையவளாகிய உமாதேவியின், கூறு - பங்கனே, எம் கோவே - எம் மிறைவனே, ஆவா என்று அருளி - ஐயோவென்றருளிச்செய்து, செடிசேர் உடலை - பாவஞ்சேர்ந்த உடம்பை, சிதையாதது - அழிக்காதது, எத்துக்கு - யாதுக்கு, எங்கள் சிவலோகா - எங்கள் சிவலோகனே, உடையாய் - உடையவனே, கூவிபணிகொள்ளாது - அழைத்துப் பணிகொள்ளாமல், ஒறுத்தால் - வருத்தினால், ஒன்றுமே போதும் - அவ்வொறுத்தல் ஒன்றுமே அடியேனுக்கு அமையும், எ - று.

(க - ரை.) இறைவனே, அடியேனது துன்பமுழுதும் நீங்கும்படி முன்னே யென்னை யாண்டனை யென்றிருந்தேன், எனக்கிரங்கி இந்த வுடம்பையழியாதது யாதுக்கு, என்னைக் கூவிப்பணி கொள்ளாது வருத்தினால் அதுவேயமையும் என்பது.

(வி - ரை.) கொடி - பூங்கொடி. எதுக்கு என்பது எத்துக்கு என மிக்குவந்தது. ஒறுத்தல் - வருத்துதல். (௨)

ஒன்றும்போதாநாயேனை
யுய்யக்கொண்டநின்கருணை
யின்றேயின்றிப்போய்த்தோதா
னேழைபங்காவெங்கோவே
குன்றேயனையகுற்றங்கள்
குணமாமென்றேநீகொண்டா
லென்றான்கெட்டதிரங்கிடா
யெண்டோண்முக்கணெம்மானே.

(ப - ரை.) ஒன்றும் போதா நாயேனை - ஒன்றுக்கும் பற்றாத நாயினேனை, உய்யக்கொண்ட - உய்யக் கொண்டருளின, நின் கருணை - உன் கருணையானது, இன்று இன்றிபோய்த்தோ-இன்று இல்லாது போய்விட்டதோ, ஏழை பங்கா - ஏழை பங்கனே, எம் கோவே - எம்மிறைவனே, குன்றே அனைய குற்றங்கள் - மலையை நிகர்த்த பெருங்குற்றங்களையும், குணம் ஆம் என்று நீ கொண்டால்- குணமாமென்று நீ யேற்றுக்கொண்டால், என் தான் கெட்டது - உனக்கு யாது காரியந்தான் கெட்டுப்போயிற்று, இரங்கிடாய் - இரங்கியருளாய், எண் தோள் - எட்டுப்புயங்களையும், முக்கண் - மூன்று கண்களையும் உடைய,எம்மானே - எம்பெரியோனே, எ - று.

(க - ரை.) இறைவனே, ஒன்றுக்கும் பற்றாத நாயேனை முன்னே யாண்டருளின வுன் கருணை இப்பொழுது இல்லாமற்போயிற்றோ, என் குற்றங்கள் குன்றை நிகர்த்திருப்பினும் அவற்றைக் குணமென்று நீ கொண்டால் உனக்கென்ன கெடுதி, என்மீதிரக்கஞ் செய்தருளவேண்டும் என்பதாம்.

(வி - ரை.) போயிற்றோ என்பது போய்த்தோ என வந்தது. குணம் - நன்மை. (௩)

மானேர்நோக்கிமணவாளா
மன்னேநின்சீர்மறப்பித்திவ்
வூனேபுகவென்றனைநூக்கி
யுழலப்பண்ணுவித்திட்டா
யானாலடியேனறியாமை
யறிந்துநீயேயருள்செய்து
கோனேகூவிக்கொள்ளுநா
ளென்றென்றன்னைக்கூறுவதே.

(ப - ரை.) மான் நேர் நோக்கி - மானினது நோக்கத்தை யொத்த நோக்கத்தை யுடையவளாகிய உமாதேவிக்கு, மணவாளா - மணாளனே, மன்னே - இறைவனே, நின் சீர் - உன் மேன்மையை, மறப்பித்து - மறக்கப்பண்ணி, இ ஊன் ஏ புக - இவ்வுடம்பின் கண்ணே புக, என்றனை நூக்கி - என்னைத் தள்ளி, உழலப் பண்ணுவித்திட்டாய் - உழலச் செய்வித்தாய், ஆனால் - ஆயின், அடியேன் அறியாமை அறிந்து - அடியேனது பேதைமையை உணர்ந்து, நீயே அருள் செய்து - நீயே யருள்பண்ணி, கோனே - தலைவனே, கூவிக்கொள்ளும் நாள் - என்னை அழைத்துக்கொள்ளும் நாள், என்று என்று - என்றோ வென்று தான், உன்னைக் கூறுவது - யான் உன்னைப் புகழ்வது, எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னை மறக்கப்பண்ணி இவ்வுடம்பிற் புகுத்தி யுழலச்செய்தனை யானால், அடியேனது அறியாமையை யறிந்து நீயே யென்னைக் கூவிக்கொள்ளுங் காலம் எக்காலமோ வென்று எப்பொழுது உன்னைப் புகழ்வது என்பது.

(வி - ரை.) மான் ஏர் எனவும் பிரித்து மானினது நோக்கம் போல அழகாகிய என்றும் பொருளுரைக்கலாம். நூக்கல் - தள்ளல்.

கூறுநாவேமுதலாகக்
கூறுங்கரணமெல்லாநீ
தேறும்வகைநீதிகைப்புநீ
தீமைநன்மைமுழுதுநீ
வேறோர்பரிசிங்கொன்றில்லை
மெய்ம்மையுன்னைவிரித்துரைக்கிற்
றேறும்வகையென்சிவலோகா
திகைத்தாற்றேற்றவேண்டாவோ.

(ப - ரை.) கூறும் - (உனையே) புகழ்கின்ற, நாவே முதல் ஆக - நாவையே முதலாகக்கொண்டு, கூறும் - சொல்லுகிற, கரணம் எல்லாம் நீ - கரணங்களெல்லாம் நீயே, தேறும் வகை நீ - தெளியும் விதம் நீயே, திகைப்பு நீ - திகைத்தலும் நீயே, தீமை நன்மை முழுதும் நீ - தீமை நன்மைகள் என்கிற எல்லாம் நீயே, இங்கு - இவ்வி

டத்தில், வேறு ஓர் பரிசு - வேறொருவகை, ஒன்று இல்லை - சிறிதும் இல்லை, மெய்ம்மை - உண்மையாக, உன்னை விரித்து உரைக்கின் - உன்னை விரித்துச் சொல்லப்புகின், தேறும் வகை என் - தெளியும் விதம் யாது, சிவலோகா - சிவலோகனே, திகைத்தால் — யாம் திகைத்தால், தேற்றவேண்டாவோ - எம்மைத் தெளிவிக்கவேண்டாவோ, எ - று.

(க - ரை.) இறைவனே, எல்லாம் நீயாயிருந்தால் நான் தெளியும் வழி யாது, நான் திகைத்தால் என்னைத் தேற்றவேண்டாவோ என்பது.

(வி - ரை.) நா - நாக்கு. திகைத்தல் - மயங்கல், (பிரமித்தல்).

வேண்டத்தக்கதறிவோய்நீ
வேண்டமுழுதுந்தருவோய்நீ
வேண்டுமயன்மாற்கரியோய்நீ
வேண்டியென்னைப்பணிகொண்டாய்
வேண்டிநீயாதருள்செய்தா
யானுமதுவேவேண்டினல்லால்
வேண்டும்பரிசொன்றுண்டென்னி
லதுவுமுன்றன்விருப்பன்றே.

(ப - ரை.) வேண்டத்தக்கது அறிவோய் நீ - (ஆன்மாக்கள்) வேண்டுதற்குரியன இவை யென்று அறிவோன் நீயே, வேண்ட - (அவ்வாறு அவர்கள்) வேண்டுதலும், முழுதும் - (வேண்டப்படுவன) எல்லாவற்றையும், தருவோய் நீ - கொடுப்போன்நீயே, வேண்டும் - (உன்னை) பிரார்த்திக்கிற, அயன்மாற்கு-பிரமவிட்டுணுக்களுக்கும், அரியோய் நீ - அரியையாயிருப்பவனும் நீயே, (அப்படிப்பட்ட பெருமையையுடைய நீ) வேண்டி - விரும்பி, என்னை பணி கொண்டாய் - என்னைத் தொண்டுகொண்டாய், வேண்டி - விரும்பி, நீ யாது அருள்செய்தாய் - நீ எதனை அருள் செய்தனையோ, யானும் - நானும், அதுவேவேண்டின் அல்லால் - அதனையே விரும்புதலல்லாமல், வேண்டும் பரிசு - விரும்பும் பரிசு, ஒன்று உளது என்னின் - ஒன்று உளது என்றால், அதுவும் - அதுவும், உன்றன் விருப்பு அன்றே - உன்விருப்பல்லவோ, எ - று.

(க - ரை.) இறைவனே, வேண்டத்தக்கதை யறிதல் முதலாயின குணங்களையுடைய நீ விரும்பி யெதனையருள்செய்வையோ அதனையே யானும் விரும்புவதன்றி வேறில்லை, அப்படி நான் விரும்பினும் அவ்விருப்பமும் உன் விருப்பமேயாம் என்பது.

(வி - ரை.) பரிசு - தன்மை, பரிசில் எனினுமாம். (சு)

அன்றேயென்றனாவியு
 முடலுமுடைமையெல்லாமுங்
குன்றேயனையாயென்னையாட்
 கொண்டபோதேகொண்டிலையோ
வின்றோரிடையூறெனக்குண்டோ
 வெண்டோண்முக்கணெம்மானே
நன்றேசெய்வாய்பிழைசெய்வாய்
 நானேவிதற்குநாயகமே.

(ப - ரை.) அன்றே - அந்நாளே, என்றன் ஆவியும் - என் உயிரையும், உடலும் - உடம்பையும், உடைமையும் - பொருளும், (ஆகிய) எல்லாமும் - முழுதும், குன்றே அனையாய் - மலையை நிகர்த்தவனே, என்னை ஆட்கொண்ட போதே - என்னை அடிமைகொண்டபொழுதே, கொண்டிலையோ - ஏற்றுக்கொள்ளவில்லையோ, (அங்ஙனமாக) இன்று - இப்பொழுது, எனக்கு - அடியேனுக்கு, ஓர் இடையூறு உண்டோ - ஒரு தடை யுண்டோ, எண் தோள்-எட்டுத் தோள்களையும், முக்கண் - மூன்று கண்களையும் உடைய, எம்மானே - எம்பெரியோனே, நன்றே செய்வாய் - நன்மையே செய்யக்கடவை, பிழை செய்வாய் - தீமையே செய்யக்கடவை, இதற்கு - இந்தக்காரியத்துக்கு, நாயகம் - தலைவன், நானே - யானோ ,எ - று,

(க - ரை.) இறைவனே, என்னை நீ யாட்கொண்ட போதே என் உடல் பொருளாவிகளைக் கொண்டனை யல்லவா, இன்று எனக்கு ஒரு தடையுண்டோ, நீ நன்று செய்தாலும் தீது செய்தாலும் உன்னைக் கேட்போர் ஒருவருமில்லை யென்பது.

(வி - ரை,) இடையூறு - தடை. நாயகம் - பண்பாகு பெயர். அன்று என்றது - குருமூர்த்தமா யெழுந்தருளி யாட்கொண்ட காலத்தை. (எ)

நாயிற்கடையாநாயேனை
　　நயந்துநீயேயாட்கொண்டாய்
மாயப்பிறவியுன்வசமே
　　வைத்திட்டிருக்குமதுவன்றி
யாயக்கடவேனுநானோதா
　　னென்னதோவிங்கதிகாரங்
காயத்திடுவாயுன்னுடைய
　　கழற்கீழ்வைப்பாய்கண்ணுதலே.

(ப - ரை.) நாயின் கடை ஆம் - நாயினும் கடையேனாகிய, நாயேனை - நாயினேனை, நயந்து - விரும்பி, நீயே ஆட்கொண்டாய் - நீயே அடிமைகொண்டாய், மாயப்பிறவி - மாயப்பிறப்பு, உன்வசமே வைத்திட்டிருக்கும் அது அன்றி - உன்வசத்திலேயே வைத்திருப்பதல்லாமல், ஆயக்கடவேன் - ஆராயக்கடவேன், நானோதான் - நான்தானோ, இங்கு அதிகாரம் என்னதோ - இவ்விடத்தில் அதிகாரம் என்னுடையதோ, காயத்து இடுவாய் - இந்த வுடம்பில் வைப்பாய், உன்னுடைய கழல் கீழ்வைப்பாய் - உன் திருவடியின்கீழே வைப்பாய், கண்ணுதலே-நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானே, எ-று.

(க - ரை.) இறைவனே, நாயினும் இழிந்தவனாகிய என்னை நீயே விரும்பி யாட்கொண்டனை, மாயப்பிறவியும் உன் வசத்ததே, என்னை யிவ்வுடம்பில் இட்டாலும் உன் திருவடியிலிட்டாலும் சம்மதமே யென்பது.

(வி - ரை.) நயத்தல் - விரும்புதல். ஆய்தல் - ஆராய்தல். (௭)

கண்ணார்நுதலோய்கழலிணைகள்
　　கண்டேன்கண்கள்களிகூர
வெண்ணாதிரவும்பகலுநா
　　னவையேயெண்ணுமதுவல்லா
மண்மேல்யாக்கைவிடுமாறும்
　　வந்துன்கழற்கேபுகுமாறு
மண்ணாவெண்ணக்கடவேனோ
　　வடிமைசாலவழகுடைத்தே.

(ப-ரை.) கண் ஆர் நுதலோய் - நெற்றிக்கண்ணனே, கண்கள் களிகூர - என் கண்கள் களிப்புமிகும்படி, கழல் இணைகள் - உன் இரண்டு திருவடிகளையும், கண்டேன் - தரிசித்தேன், எண்ணாது - வேறொன்றையும் எண்ணாமல், இரவும் பகலும் - இரவினும் பகலினும், நான் - யான், அவையே எண்ணும் அது அல்லால் - அந்தத் திருவடிகளையே எண்ணுவதல்லது, மண்மேல் - மண்ணின் மீது, யாக்கை விடும் ஆறும் - சரீரம் விட்டு நீங்குமாற்றையும், வந்து - வந்து, உன் கழற்கே புகும் ஆறும் - உன் திருவடியின்கண்ணே சேருமாற்றையும், அண்ணா - தந்தையே, அடிமை - உன் தொண்டனேன், எண்ணக்கடவேனோ - நினைக்கக்கடவேனோ, (அவ்வாறு நினைத்தல்) சால அழகு உடைத்து - மிகவும் அழகுடைத்து, எ - று.

(க-ரை.) கண்ணுதலே, உன் திருவடியை கண் களிகூரக் கண்டேன், அவற்றை இரவும் பகலும் நினைத்தலன்றி, மண்மேல் இவ்வுடம்பு விடும்வகை முதலியவற்றை யெண்ணக்கடவேனோ, எண்ணினால் மிகவும் அழகாம் என்பது.

(வி-ரை.) கண்ணார் நுதலோய் - கண்ணமைந்த நெற்றியை யுடையானே. அடிமை - பண்பாகுபெயர். (௬)

அழகேபுரிந்திட்டடிநாயே
னரற்றுகின்றே னுடையானே
திகழாநின்ற திருமேனி
காட்டியென்னைப்பணிகொண்டாய்
புகழேபெரியபதமெனக்குப்
புராணநீதந்தருளாதே
குழகாகோலமறையோனே
கோனேயென்னைக்குழைத்தாயே.

(ப-ரை.) அழகே புரிந்திட்டு - உன்னழகையே காண விரும்பி, அடிநாயேன் - உன் அடிமையாகிய நாயினேன், அரற்றுகின்றேன் - அழாநின்றேன், திகழாநின்ற திருமேனி காட்டி - விளங்கா நின்ற திருமேனியைக்காட்டி, என்னை பணிகொண்டாய் - என்னைத் தொண்டுகொண்டாய், புகழே பெரிய - புகழானே பெருமை

யடைந்த, பதம் - உன் திருவடியை, புராண - புராதநனே, நீ தந்தருளாதே - நீ தந்தருளாமல், குழகா - சிவபிரானே, கோலம் மறையோனே - அழகாகிய வேதியனே, கோனே - இறைவனே, என்னை குழைத்தாயே - என்னை மனங்குழைத்தனையே, எ - று.

(க - ரை.) இறைவனே, உன்னழகைக் காண விரும்பியே அடியேன் அரற்றுகின்றேன், விளங்குகின்றவுன் திருமேனியைக் காட்டி யென்னைப் பணிகொண்டனை, உன் திருவடியை யெனக்குத் தந்தருளாமல் என்னை மனங்குழைத்தாயே என்பது.

(வி - ரை.) புரிதல் - விரும்புதல். பதம் - திருவடி, பதவி யெனினுமாம். புராணன் - பழையோன். குழகன் - அழகன். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# உயிருண்ணிப்பத்து.

சிவானந்தமேலிடுதல்.



கலிவிருத்தம்.



திருச்சிற்றம்பலம்.

பைந்நாப்படவரவேரல்குலுமைபாகமதாயென்
மெய்ந்நாடொறும்பிரியாவினைக்கேடாவிடைப்பாகா
செந்நாவலர்பரசும்புகழ்த்திருப்பெருந்துறையுறைவா
யெந்நாட்களித்தெந்நாளிறுமாக்கேனினியானே.

(ப - ரை) பை நா - பசிய நாவையும், படம் - படத்தையும் உடைய, அரவு - பாம்புபோன்ற, ஏர் - அழகினையுடைய, அல்குல் - அல்குலையுடைய, உமைபாகமதாய் - உமாதேவிபாகத்தை யுடைத்தாகி, என் - எனது, மெய் - மனத்தை, நாள்தொறும் பிரியா - தினந்தோறும் நீங்காத, வினைக்கேடா - வினைக்கேடனே, விடைப்பாகா -

இடபமூர்வோனே, செந்நாவலர் - செவ்விய நாவலர்கள், பாசும்-துதிக்கின்ற, புகழ் - புகழினையுடைய, திருப்பெருந்துறை உறைவாய் - திருப்பெருந்துறையில் வாழ்வோனே, இனி - இனி, யான் - நான், எந்நாள்களித்து - எந்தக்காலத்தில் களித்து, எந்நாள் இறுமாக்கேன்- எந்தக்காலத்தில் இறுமாந்திருப்பேன், எ - று.

(க - ரை.) உமாதேவிபாகனும் என்மனத்தில் என்றும் பிரியாதிருக்கிற பாவநாசனே, இடபவாகநனே, அறிஞர் புகழும்படியான திருப்பெருந்துறையில் எழுந்தருளி யிருப்பவனே, இனி நான் எந்தக்காலத்தில் உன்னருள்பெற்று இறுமாந்திருப்பேனோ என்பதாம்.

(வி - ரை.) நா, படம் என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. மெய்யென்றது இங்கு மனத்தைக்குறித்தது. செந்நாவலர்- செவ்விய நாவன்மையுள்ளவர். (அறிஞர்) இவர் முத்தமிழ்விரகர் முதலாயினோர். இறுமாப்பு-திருவருள்பெற்றதனாலுண்டாகுஞ் செருக்கு. வினைக்கேடன் என்றது - மெய்யன்பரின் பஞ்சபாசத்தை நசிப்பித்தாட்கொள்ளும் பேரருளாளனென்றும் பொருளது.　　(க)

நானாரடியணைவானொருநாய்க்குத்தவிசிட்டிங்
கூனாருடல்புகுந்தானுயிர்கலந்தானுளம்பிரியான்
றேனார்சடைமுடியான்மன்னுதிருப்பெருந்துறையுறைவான்
வானோர்களுமறியாததோர்வளமீந்தனனெனக்கே.

(ப - ரை.) அடி அணைவான் - திருவடியை யடைய, நான் ஆர்- நான்யார், ஒருநாய்க்கு தவிசு இட்டு - ஒருநாயனையேனுக்கு ஆசநமிட்டு, இங்கு - இவ்விடத்தில், ஊன் ஆர் உடல்புகுந்தான் - எனது மாமிசம் நிறைந்த உடம்பிற் புகுந்தவனாகி, உயிர் கலந்தான் - உயிரோடு கலந்து, உள்ளம் பிரியான்-என் மனத்தைவிட்டு நீங்காதவனாயிருந்து, எனக்கு - அடியேனுக்கு, வானோர்களும் அறியாதது - தேவர்களும் அரியவொண்ணாததாகிய, ஓர்வளம் ஈந்தனன் - ஒப்பற்ற செல்வத்தைக் கொடுத்தருளினன், (அவன் யாவனெனின்) தேன் ஆர் சடைமுடியான் - வண்டுகள் நிறைந்த சடைமுடியை யுடையவனாய், மன்னு - நிலைபெற்ற, திருப்பெருந்துறை உறைவான்-திருப்பெருந்துறையில் வாழ்வோனாகிய சிவபெருமான், எ - று.

(க - ரை.) திருவடியை யடைதற்கு நான் என்ன தகுதியுடையேன், அப்படியிருக்க, என்னுள்ளேபுகுந்து உயிரிற்கலந்து என்

மனத்தினின்றும் பிரியாதவனுயிருக்கிற திருப்பெருந்துறை யிறைவன், தேவர்களும் அறியாத ஒப்பற்ற செல்வத்தைக் கொடுத்தருளினன் என்பது.

(வி - ரை.) நானூர் என்றது ஒருரிமையுமில்லேன் என்றபடி. அணைவான் என்பதில் வான் எதிர்கால வினையெச்சவிகுதி. புகுந்தான் கலந்தான் என்பன முற்றெச்சங்கள். தேன் - கொன்றை மலர்த்தேன் எனினுமாம். வளம் என்றது முத்திச்செல்வத்தை. (௨)

எனைநானென்பதறியேன்பகலிரவாவதுமறியேன்
மனவாசகங்கடந்தானெனைமத்தோன்மத்தனாக்கிச்
சினமால்விடையுடையான்மன்னுதிருப்பெருந்துறையுறையும்
பனவனெனைச்செய்தபடிறறியேன்பரஞ்சுடரே.

(ப - ரை.) என்னை நான் என்பது அறியேன் - என்னை யான் என்பதை அறிந்திலேன், பகல் இரவு ஆவதும் அறியேன் - பகல் இரவு என்பனவகளையும் அறிந்திலேன், (அங்ஙனமாக) மனவாசகம் கடந்தான் - மனம் வாக்கு என்பவற்றைக் கடந்தவனும், சினம் மால் விடை உடையான் - கோபத்தையுடைய பெரிய இடபத்தையுடையவனும், மன்னு - நிலைபெற்ற, திருப்பெருந்துறை உறையும் - திருப்பெருந்துறையில் வாழ்கின்ற, பனவன் - வேதியனும், பரஞ்சுடர் - பரஞ்சோதியும் ஆகிய சிவபெருமான், என்னை - அடியேனை, மத்தோன் மத்தன் ஆக்கி - மிகு களிப்புடையோனாகச்செய்து, என்னை செய்த படிறு அறியேன் - என்னைச்செய்த வஞ்சகத்தை அறிந்திலேன், எ - று.

(க - ரை.) யான் இத்தன்மையேனென் றறியாத என்னைத் திருப்பெருந்துறை யிறைவன் மதோன்மத்தனாக்கி வஞ்சித்த வகையை யறிந்திலேன் என்பது.

(வி - ரை.) எனை என்றது - ஆன்மசொரூபத்தை. "எனை நானென்பதறியேன்" என்றது தேகத்தை நான் என்பதை அறிந்திலேன் என்றபடி "மனவாசகங் கடந்தான்" என்றாராயினும் இனம் பற்றியும் பன்மைபற்றியும் எஞ்சி நின்ற காயத்தையுஞ் சேர்த்து, முக்கரணங்களுக்கும் எட்டாதவன் என்றுரைத்துக்கொள்க. (௩)

வினைக்கேடருமுளரோபிறர்சொல்லீர்வியனுலகி
லெனைத்தான்புகுந்தாண்டானெனதென்பின்புரையுருக்கிப்
பினைத்தான்புகுந்தெல்லேபெருந்துறையிலுறைபெம்மான்
மனத்தான்கண்ணினகத்தான்மருமாற்றத்திடையானே.

(ப - ரை.) என்னை - அடியேனை, தான் - தானே, புகுந்து - எழுந்தருளி, ஆண்டான் - ஆண்டுகொண்டான், எனது என்பின் புரை உருக்கி - எனது என்பின் உட்டுளைகளையும் உருகச்செய்து, பின்னை புகுந்து - மேலும் வந்து, பெருந்துறையில் உறை பெம்மான் - திருப்பெருந்துறையில் வாழ்கின்ற பெருமான், மனத்தான் - என் மனத்தினிடத்தினன், கண்ணின் அகத்தான் - கண்ணினிடத்தினன், மற்றும் - பின்னும், மாற்றத்திடையான் - சொல்லினிடத்தினன், (இவன்போல) வியன் உலகில் - பெரிய வுலகின்கண், வினைக்கேடரும் - வினைக்கேடர்களும், பிறர் உளரோ - பிறர் உளரா வரோ, சொல்லீர் - (உலகத்தாரே) சொல்லுங்கள், எ - று.

(க - ரை.) உலகத்தாரே, திருப்பெருந்துறை யிறைவன், எனது என்புருகச்செய்து என் மனத்திலும் கண்ணிலும் சொல்லிலும் இருக்கிறான், இவனைப்போலப் பாவநாசர் உலகத்தில் உளரோ, சொல்லுங்கள் என்பது.

(வி - ரை.) வினைக்கேடர் - வினையைக்கெடுப்பவர். எல்லே - வியப்பிடைச்சொல். (௪)

பற்றாங்கவையற்றீர்பற்றும்பற்றாங்கதுபற்றி
நற்றாங்கதியடைவோமெனிற்கெடுவீரோடிவம்மின்
றெற்றார்சடைமுடியான்மன்னுதிருப்பெருந்துறையிறைசீர்
கற்றாங்கவன்கழல்பேணினரொடுங்கூடுமின்கலந்தே.

(ப - ரை.) பற்று அவை அற்றீர் - பற்றுக்களாகிய அவைகளை அற்றவர்களாய், பற்றும் - பற்றுதற்குரிய, பற்று - பற்றாகிய, அது - அதனை, பற்றி - பிடித்து, நற்று ஆம் கதி - நல்லதாகிய கதியை, அடைவோம் என்னின் - அடைவோமென்பீராயின், கெடுவீர் - கெடுவீர்களே, ஓடிவம்மின் - ஓடிவாருங்கள், தெற்று ஆர் சடை

முடியான் - அழகினை யுடையதாகிய அரிய சடைமுடியை யுடைய வனும், மன்னு - நிலைபெற்ற, திருப்பெருந்துறை இறை - திருப் பெருந்துறைக்கு இறைவனும் ஆகிய சிவபெருமானது, சீர் - புக ழையே, கற்று - சொல்லக் கற்று, ஆங்கு-அவ்வாறே, அவன் கழல் - அவன் திருவடியையே, பேணினரொடும் - விரும்பினவராகிய அடி யாரோடும், கலந்து கூடுமின் - கலந்து கூடுங்கள், எ - று.

(க - ரை.) விடவேண்டிய பற்றைவிட்டுப் பற்றவேண்டிய பற்றைப்பற்றி உய்ய எண்ணுவீராயின், விரைந்து வந்து, திருப்பெ ருந்துறை யிறைவனது புகழைப் பேசக்கற்று, அவனடியாரொடுகூடி வாழுங்கள் என்பது.

(வி - ரை.) பற்று இரண்டனுள் முன்னையது பிரபஞ்சப்பற்று. பின்னையது இறைவன் பற்று. "பற்றுக பற்றற்றான் பற்றினைப் பற்றைப், பற்றுகபற்று விடற்கு" என்றார் தேவரும். நன்று நற்று என வலித்தல் பெற்றது. தென் - அழகு. தெற்று - அழகையுடை யது. கலந்து கூடுதல் - இடையறாது கலந்திருத்தல். (௫)

கடலின்றிரையதுபோல்வருகலக்கமலமறுத்தென்
னுடலும்மெனதுயிரும்புகுந்தொழியாவண்ணநிறைந்தான்
சுடருஞ்சுடர்மதிசூடியதிருப்பெருந்துறையுறையும்
படருஞ்சடைமகுடத்தெங்கள்பரன்றான்செய்தபடிறே.

(ப - ரை.) கடலின் திரைபோல் வரு - கடலினிடத் தலைகள் போல வருகின்ற, கலக்கம் - கலங்குதற் கேதுவாகிய, மலம் அறு த்து - மலத்தைச் சேதித்து, என் உடலும்-என் உடம்பினும், எனது உயிரும் - என் உயிரினும், புகுந்து - நுழைந்து, ஒழியாவண்ணம் - நீங்கா வண்ணம், நிறைந்தான் - நிறைந்தனன், சுடரும் - விளங்கு கின்ற, சுடர் - ஒளியையுடைய, மதி சூடிய - பிறையை யணிந்த, திருப்பெருந்துறை உறையும் - திருப்பெருந்துறையில் வாழ்கின்ற, படரும் சடை மகுடத்து - படர்ந்த சடாமகுடத்தையுடைய, எங் கள் பரன் - எம்மேலோன், செய்த படிறு - செய்த வஞ்சகம், (இரு ந்தவாறு என்னை,) எ - று.

(க - ரை.) கடலின் அலைகள்போல் ஒன்றன்பின் ஒன்றாக இடையறாது வருகின்ற என் கலக்கத்துக்குக் காரணமாகிய மலங்

களை யொழித்து, என் உடலுயிர்களிற் புகுந்து இடையற நிறைந்து நின்ற திருப்பெருந்துறை யிறைவன் என்னைச் செய்த வஞ்சக மிருந்தவா றென்னை என்பது,

(வி - ரை.) திரை-முதனிலைத் தொழிலாகு பெயர். மகுடம் - முடி. (௬)

வேண்டேன் புகழ்வேண் டேன்செல்வம்வேண் டேன்மண்ணும் விண்
வேண்டேன்பிறப்பிறப்புச்சிவம்வேண்டார் தமைநாளுந்[ணும்
தீண்டேன்சென்றுசேர்ந்தேன்மன் னுதிருப்பெருந்துறையிறைதாள்
பூண்டேன்புறம்போகேனினிப்புறம்போகலொட்டேனே.

(ப - ரை.) புகழ் வேண்டேன் - புகழை விரும்பேன், செல்வம் வேண்டேன் - பொருளை விரும்பேன், மண்ணும் விண்ணும் வேண்டேன் - மண்ணையும் விண்ணையும் விரும்பேன், பிறப்பு இறப்பு வேண்டேன் - பிறப்பு இறப்பு என்பவைகளை விரும்பேன், சிவம் வேண்டார் தம்மை - சிவத்தை விரும்பாதவர்களை, நாளும் தீண்டேன் - எந்நாளும் தொடேன், மன்னு - நிலைபெற்ற, திருப்பெருந்துறை இறை தாள் - திருப்பெருந்துறை இறைவனது திருவடியை, சென்று சேர்ந்தேன் - சென்று அடைந்தேன் ஆகி, பூண்டேன் - பூண்டுகொண்டேன், இனி புறம்போகேன் - இனிப்புறம் போகிலேன், புறம்போகல் ஒட்டேன் - (அந்தத்திருவடியை) புறத்தே செல்லவு மொட்டேன், எ - று.

(க - ரை.) புகழ் செல்வம் முதலியவற்றை விரும்பேன், சிவத்தைவிரும்பாதவர்களைத் தொடேன், திருப்பெருந்துறை யிறைவனது திருவடியை யடைந்தேன், இனி அத்திருவடியைப் புறத்துச் செல்லவொட்டேன் என்பது.

(வி - ரை.) "தோன்றிற்புகழொடு தோன்றுகவஃதிலார் - தோன்றலிற் றோன்றாமை நன்று" எனச்சிறப்பித்துக் கூறப்படுதலால் புகழை முன்வைத்தார். (எ)

கோற்றேனெனக்கென் கோகுண்கடல்வாயமுதென்கோ
வாற்றேனெங்களரனேயருமருந்தேயெனதரசே
சேற்றார்வயல்புடைசூழ்தருதிருப்பெருந்துறையுறையு
நீற்றார்தருதிருமேனிநின்மலனேயுனையானே.

(ப - ரை.) எங்கள் அரனே - எங்கள் சிவபெருமானே, அருமருந்தே - அரியமருந்தே, எனது அரசே - என் அரசனே, சேற்று ஆர் - சேற்றால் நிறைந்த, வயல் - கழனிகள், புடை சூழ் தரு - பக்கங்களில் சூழப்பெற்ற, திருப்பெருந்துறை உறையும் - திருப்பெருந்துறையில் வாழ்கின்ற, நீற்று ஆர் தரு - திருவெண்ணீற்றால் நிறைந்த, திருமேனி - திருமேனியையுடைய, நின்மலனே - நிர்மலனே, உன்னை - உன்னை, யான் - நான், எனக்கு கோல்தேன் என்கோ - எனக்குக்கொம்பிற் கட்டிய தேன் என்கேனோ, குரைகடல்வாய் - ஒலிக்கின்ற பாற்கடலிற் றோன்றிய, அமுது என்கோ - அமிர்தம் என்கேனோ, ஆற்றேன் - உன்னைப்பிரிந்திருக்க யான் சகியேன், எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, உன்னைக்கோற்றேன் என்பேனோ, அமிர்தம் என்பேனோ, யான் யாதென்று சொல்வேன், இனி உன்னைப்பிரிந்திருக்கப்பொறேன் என்பது.

(வி - ரை.) கோற்றேன் - கொம்புத்தேன். குரைத்தல் - ஒலித்தல், அரன் - சங்காரகர்த்தன். மருந்து என்றது பிறவிப்பிணிக்கு மருந்து என்றபடி. நின்மலன் - மலரகிதன். (அ)

எச்சம்மறிவேனானெனக்கிருக்கின்றதையறியே
னச்சோவெங்களரனேயருமருந்தேயெனதமுதே
செச்சைமலர்புரைமேனியன்றிருப்பெருந்துறையுறைவா
னிச்சமெனநெஞ்சின்மன்னியானாகிநின்றானே.

(ப - ரை.) எச்சம் அறிவேன் நான் - இறைவன் குறைகளையறிவேனாகிய நான், எனக்கு இருக்கின்றதை - எனக்கிருப்பதை, அறியேன் - அறிந்திலேன், அச்சோ - அதிசயம், எங்கள் அரன் - எங்கள் சிவபிரான், அருமருந்து - அருமையாகிய மருந்து, எனது அமுது - என் அமுதம், செச்சைமலர் புரை மேனியன் - வெட்சிமலரை நிகர்த்த திருமேனியையுடையவன், திருப்பெருந்துறை உறைவான் - திருப்பெருந்துறையில் வாழ்வோன், (அவன்) நிச்சம் - நாடோறும், என - என்னுடைய, நெஞ்சில் மன்னி - மனத்தில் நிலைபெற்று, யான் ஆகி நின்றான் - நானேயாகி நின்றனன், எ - று.

(க - ரை.) இறைவன் குறைகளை யறிவேனாகிய நான் என் குறைகளை யறியேன், அப்படியிருக்க, திருப்பெருந்துறை யிறைவன்

என் மனத்தில் இடையறாமல் நிலைபெற்று நானேயாய் நின்றனன் என்பது.

(வி - ரை.) இறைவனிடத்துக் குறை - தமக்கருள்செய்யாமை முதலியன. எமக்கிருக்கின்றது என்றது நம்மிடத்துள்ள குறை. அதாவது அவனை வழிபடாமை. அரனே, மருந்தே, அமுதே, என்பவற்றின் ஈற்றேகாரங்கள் அசைகள். புணர்தல் - நிகர்த்தல். யானாகி நின்றான் என்றது வேற்றுமையின்றி நிற்றலை. (௯)

வான்பாவியவுலகத்தவர்தவமேசெயவவமே
யூன்பாவியவுடலைச்சுமந்தடவிமரமானேன்
றேன்பாய்மலர்க்கொன்றைமன்னுதிருப்பெருந்துறையுறைவாய்
நான்பாவியனானாலுனைநல்காயெனலாமே.

(ப - ரை.) வான் பாவிய உலகத்தவர் - விண்ணிலுள்ள உலகத்தவர்களாகிய தேவர்களும், தவமே செய்ய - தவத்தையே செய்யாநிற்க, அவமே - வீணே, ஊன் பாவிய உடலை - தசை செறிந்த வுடம்பை, சுமந்து - தாங்கி, அடவி மரம் ஆனேன் - காட்டுமரமானேன், தேன் பாய் - தேன் பெருகிப் பாயாநின்ற, கொன்றைமலர் மன்னு - கொன்றைமலர் நிலைபெற்ற, திருப்பெருந்துறை உறைவாய் - திருப்பெருந்துறையில் வாழ்வோனே, நான் பாவியன் ஆனால் - நான் பாவியேனாயினும், உன்னை நல்காய் எனல் ஆமே - உன்னைத் தந்தருளாய் என்றல் கூடுமோ, எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனே, தேவர்களும் உன்னைக் காணும்பொருட்டுத் தவஞ்செய்யாநிற்க, நான் இந்தப் பொய்யுடம்பைச் சுமந்து காட்டுமரமாயினேன், நான் பாவியாயிருப்பினும் என் தவறுகளைப் பொறுத்து உன்னையெனக்குத் தந்தருளலே தகுதி என்பது.

(வி - ரை.) வான் பாவிய வுலகத்தவர் என்பதற்கு, மேன்மைபொருந்திய உயர்ந்தோர் என்றலும் பொருந்தும். தவமே என்பதில் ஏகாரம் தேற்றம் அன்றிப்பிரிநிலை. எலும்பு நரம்பு முதலியவற்றினும் தசைமிக்கிருத்தலால் உடலை "ஊன் பாவிய வுடல்" என்றார். அடவி மரம் - பயனிலிக்கு எடுத்துக்காட்டுவதோருவமை. ஆமேஎன்னும் ஏகாரம் வினாவாய் எதிர்மறைப்பொருளைத் தந்துநின்றது. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# அச்சப்பத்து.

## ஆனந்தமுறுதல்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

புற்றில்வாளரவுமஞ்சேன்பொய்யர்தம்மெய்யுமஞ்சேன்
கற்றைவார்சடையெம்மண்ணல்கண்ணுதல்பாதநண்ணி
மற்றுமோர்தெய்வந்தன்னையுண்டெனநினைந்தெம்பெம்மாற்
கற்றிலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

(ப - ரை. புற்று இல் வாள் அரவும் அஞ்சேன் - புற்றையில்லமாகவுடைய ஒளி பொருந்திய பாம்பையும் அஞ்சேன், பொய்யர் தம் மெய்யும் அஞ்சேன் - பொய்யர்களுடைய மெய்யையும் அஞ்சேன், கற்றை வார் சடை - திரட்சியாகிய நீண்ட சடையையுடைய, எம் அண்ணல் - எமது பெரியோனாகிய, கண்ணுதல் - கண்ணுதலின், பாதம் நண்ணி - திருவடியை யடைந்தும், மற்றும் ஓர் தெய்வம் தன்னை - வேறொரு தெய்வத்தை, உண்டு என நினைந்து - உண்டென்று நினைத்து, எம் பெம்மான் கற்றிலாதவரை - எம்பெருமானைக் கற்றிலாதாரை, கண்டால் - காணின், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும் வகையாயிரா நின்றது, எ - று.

(க - ரை.) பாம்பு முதலியவற்றிற்கு அஞ்சேன், ஆயினும் தில்லைச் சிற்றம்பலவர் திருவடியை யடைந்தும், வேறு தெய்வங்களை உண்மையென்று நினைந்து எம்மிறைவனைக் கல்லாதவரைக் கண்டால் யாம் அஞ்சும்படியாயிரா நின்றது என்பது.

(வி - ரை.) உலகத்தில் அச்சத்தைத் தரும் பொருள்கள் பலவற்றுள்ளும் சிறந்தது பாம்பாதலால் "புற்றில் வாளரவு மஞ்சேன்" என அதனை முன் வைத்தார். "பாம்பைக்கண்டால் படையும் நடுங்கும்" எனப் பழமொழியு முண்டு. எம் பெம்மான் கற்றிலாதவர் - எம்மிறைவனது புகழைக் கல்லாதவர். அம்ம - உரையசையிடைச்சொல்.

அஞ்சேன் என்றது தம்மை. யாம் அஞ்சுமாறு என்றது தம்மோ டொப்பாரையும் தழுவி யென்க. (௧)

வெருவரேன்வேட்கைவந்தால்வினைக்கடல்கொளினுமஞ்சே
னிருவரான்மாறுகாணாவெம்பிரான்றம்பிரானார்
திருவுருவன்றிமற்றோர்தேவரெத்தேவரென்ன
வருவராதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

(ப - ரை.) வேட்கை வந்தால் வெருவரேன் - ஆசை மிகுந் தால் அஞ்சேன், வினைக்கடல் கொளினும் அஞ்சேன் - வினைக்கட லானது என்னைச் சூழ்ந்துகொண்டாலும் அஞ்சேன், இருவரால் மாறு காணா - பிரம விட்டுணுக்களாகிய இருவராலே மாறுபட்டுக் காண வொண்ணாத, எம் பிரான் - எம் பிரான், தம் பிரான் - தம்பிரான், (அவனது) ஆர் - அருமையாகிய, திருவுரு அன்றி - திருவுருவையே கண்டு களிப்பதல்லது, மற்றோர் தேவர் - மற்றோராகிய தேவர்கள், எத்தேவர் என்ன - என்ன தேவர்களென்று, அருவராதவரை கண் டால் - அருவருக்காதவர் களைக்காணின், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும்வகையா யிரா நின்றது, எ - று.

(க - ரை.) ஆசை, வினை, என்பவைகட்கு அஞ்சேன் ஆயி னும், பிரம விட்டுணுக்களால் காணவொண்ணாத எம்மிறைவரது திரு வுருவத்தைக் கண்டு களித்தலன்றி, பிறதெய்வங்களைக் கண்டு இவர் எத்தன்மையாகிய தேவர் என்றிகழ்ந்து அருவருக்காதவரைக் கண் டால் யாம் அஞ்சும்படியா யிரா நின்றது என்பது.

(வி - ரை.) வேட்கை காமவிச்சை எனினுமாம். மாறுகாணா என்ற குறிப்பால் இருவர் என்னும் தொகைக் குறிப்புச்சொல் பிரம விட்டுணுக்களை யுணர்த்திற்று. மற்றோர் தேவர் - பிறசமயத்தாரு டைய தேவர் எனினுமாம். (உ)

வன்புலால்வேலுமஞ்சேன்வளைக்கையார்கடைக்கணஞ்சே
னென்பெலாமுருகநோக்கியம்பலத்தாடுகின்ற
வென்பொலாமணியையேத்தியினிதருள்பருகமாட்டா
வன்பிலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

(ப - ரை.) வல் - வலிய, புலால் - புலால்தங்கிய, வேலும் - வேற்படையையும், அஞ்சேன் - அஞ்சேன், வளை கையார்-வளையலை

யணிந்த கையினையுடையராகிய மாதரது, கடைக்கண் - கடைக்கண்ணையும், அஞ்சேன் - அஞ்சேன், நோக்கி என்பு எல்லாம் உருக - அன்பர் பார்த்துத் தமது எலும்புகளெல்லாம் உருகும்படி, அம்பலத்து ஆடுகின்ற - பொன்னம்பலத்தில் நடிக்கின்ற, என் பொல்லா மணியை - என் பொள்ளாமணியை, ஏத்தி - துதித்து, அருள் - அவனது அருளமுதத்தை, இனிது பருகமாட்டா - இனிதாகப் பருகமாட்டாத, அன்பு இல்லாதவரை கண்டால் - அன்பற்றவர்களைக்காணின், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும்வகையா யிராநின்றது, எ - று.

(க - ரை.) வேல் முதலியவற்றிற்கும் அஞ்சேன் ஆயினும் பொன்னம்பலத்திலாடுகின்ற இறைவனைத் துதித்து அவனது அருளைப் பருகமாட்டாத அன்பிலிகளைக் காணில் யாம் அஞ்சும்படியாயிராநின்றது என்பது.

(வி - ரை.) வன்புலால் என்ற விசேடணத்தால் வேல் என்றது ஓராயுத விசேடத்தை யுணர்த்திற்று. "கூம்பலங் கைத்தலத் தன்ப ரென்பூடுருகக் குனிக்கும், பாம்பலங்காரப்பரன்" ஆதலால் "என்பெலா முருக நோக்கியம்பலத்தாடுகின்ற வென்பொலாமணி" என்றார். (௩)

கிளியனார்கிளவியஞ்சேனவர்கிறிமுறுவலஞ்சேன்
வெளியநீறாடுமேனிவேதியன்பாதநண்ணித்
துளியுலாங்கண்ணராகித்தொழுதழுதுள்ளநெக்கிங்
களியிலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

(ப - ரை.) கிளி அன்னார் - கிளியை நிகர்த்த மாதரது, கிளவி அஞ்சேன் - மொழியை அஞ்சேன், அவர் - அவரது, கிறி - வஞ்சகத்தோடுகூடிய, முறுவல் அஞ்சேன் - நகையையும் அஞ்சேன், வெளிய நீறு ஆடும் - வெண்மையாகிய திருவெண்ணீற்றில் மூழ்கிய, மேனி - திருமேனியையுடைய, வேதியன் பாதம் நண்ணி - அந்தணனது திருவடியையடைந்து, துளி உலாம் கண்ணர் ஆகி - நீர்த்துளிகள் சிந்துகின்ற கண்களையுடையவர்களாய், தொழுது அழுது - வணங்கியழுது, உள்ளம் நெக்கு - மனம் நெகிழ்ந்து, இங்கு - இவ்விடத்தில், அளி இல்லாதவரை கண்டால் - களிவில்லாதவரைக் காணின், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும்வகையா யிராநின்றது, எ - று.

(க - ரை.) மாதர் சொல்முதலியவற்றிற்கு அஞ்சேன் ஆயினும், இறைவனது திருவடியை யடைந்து கண்ணீர்துளிக்கத் தொழு தழுது மனம் நெகிழ்ந்து கனியாதவரைக்கண்டால் யாம் அஞ்சும்படி யாயிராநின்றது என்பது.

(வி - ரை.) மாதாது மொழி,நகைமுதலியவை அறிவை மயக் கித் தீவினைக்காளாக்குதலால் அவற்றிற் சஞ்சுதலாயிருக்க அவற்றை யும் அஞ்சேன் என்றற்கு, "கிளியனார் கிளவியஞ்சே னவர்கிறி முறு வலஞ்சேன்" என்றார். வேதியன் - வேதப்பிரதிபாத்தியன் என் றுரைத்தலும் பொருந்தும். அளி - மூத்தினிலைத்தொழிற்பெயர். (௪)

பிணியெலாம்வரினுமஞ்சேன்பிறப்பினோடிறப்புமஞ்சேன்
றுணிநிலாவணியினான்றன்றொழும்பரோடழுந்தியம்மா
றிணிநிலம்பிளந்துங்காணாச்சேவடிபரவிவெண்ணீ
றணிகிலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

(ப - ரை.) பிணி எல்லாம் - நோய்களெல்லாம், வரினும் - வ ந்தாலும், அஞ்சேன்-அஞ்சேன், பிறப்பினோடு இறப்பும் அஞ்சேன் - பிறப்புடனே இறப்பையும் அஞ்சேன், துணிநிலா அணியினான் தன்- துண்டப்பிறையாகிய ஆபரணத்தை யுடையவனாகிய சிவபெருமா னது, தொழும்பரோடு - தொண்டரோடு, அழுந்தி - பொருந்தி, அ மால் - அந்தத் திருமால், திணிநிலம் பிளந்தும் - வலிய பூமியைப் பிளந்தும், காணா - காணாத, சேவடிபரவி - திருவடியைத் துதித்து, வெண்ணீறு அணிகிலாதவரை - திருவெண்ணீறணியாதவரை, கண் டால் - காணின், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும்வகையாயிரா நின்றது. எ - று.

(க - ரை.) நோய்களெல்லாம் ஒருங்குகூடி யென்னை வருத்த வந்தாலும் அஞ்சேன், பிறப்பிறப்புக்களுக்கும் அஞ்சேன், ஆயினும் சந்திரசேகரனாகிய இறைவனது அன்பரோடுகூடி, திருமால் நிலம் பிளந்துங்காணாத அவனது திருவடியை வழிபட்டு, அவனது திரு வெண்ணீற்றை அணியாதவரைக் கண்டால், யாம் அஞ்சும்படியா யிராநின்றது என்பது.

(வி - ரை.) துணிநிலா - சந்திரகண்டம். மலை, மரம், உயிர்த்தொகை முதலிய எல்லாப்பொருள்களையும் தாங்கும் வன்மையுடைமையால் பூமியைத் "திணிநிலம்" என்றார் (௫)

வானுலாமெரியுமஞ்சேன்வரைபுரண்டிடினுமஞ்சேன்
றோளுலாநீற்றனேற்றன்சொற்பதங்கடந்தவப்பன்
றாளதாமரைகளேத்தித்தடமலர்புனைந்துநையு
மாளலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

(ப - ரை.) வான் உலாம் - ஒளிவீசுகின்ற, எரியும் அஞ்சேன் - நெருப்பையும் அஞ்சேன், வரைபுரண்டிடினும் அஞ்சேன் - மலைகள் புரண்டிட்டாலும் அஞ்சேன், தோள் உலாம் நீற்றன் - தோளில் விளங்குகின்ற திருவெண்ணீறுடையவன், ஏற்றன் - இடபத்தையுடையவன், சொல்பதம் கடந்த - சொல்லளவைக் கடந்த, அப்பன் - அப்பன், (அவனது) தாள் தாமரைகள் - திருவடித்தாமரைகளை, ஏத்தி - துதித்து, தடம் மலர் புனைந்து - பெருமை பொருந்திய மலர்களால் அலங்கரித்து, நையும் - மனமுருகுகின்ற, ஆள் அல்லாதவரைக்கண்டால் - அடிமையல்லாதவரைக் காணின், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும்வகையாயிராநின்றது, எ - று.

(க - ரை.) நெருப்புக்கும் அஞ்சேன், மலை புரண்டு மேல்விழினும் அஞ்சேன், ஆயினும் திருவெண்ணீற்றையணிந்த திருத்தோளனும், சொல்லளவைக் கடந்த எமது தந்தையும் ஆகிய சிவபெருமானது பாததாமரையைத் துதித்து, அதனைமலர்களால் அலங்கரித்து மனமுருகி நிற்கின்ற அடிமைத்திறமுடையரல்லாதாரைக்கண்டால் யாம் அஞ்சும்படியாயிராநின்றது என்பது.

(வி - ரை.) தாள என்பதில் அகரம் சாரியை. (௬)

தகைவிலாப்பழியுமஞ்சேன்சாதலைமுன்னமஞ்சேன்
புகைமுகந்தெரிகைவீசிப்பொலிந்தவம்பலத்துளாடு
முகைநகைக்கொன்றைமாலைமுன்னவன்பாதமேத்தி
யகநெகாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

(ப - ரை.) தகைவு இலா - தடுத்தற்கரிய, பழியும் அஞ்சேன் - பழியையும் அஞ்சேன், சாதலை முன்னம் அஞ்சேன் - இறத்

தலை முன்னமே அஞ்சேன், புகைமுகந்த எரி - புகையைக்கொண்ட நெருப்பை, கைவீசி - கைக்கொண்டு வீசி, பொலிந்த - விளங்காநின்ற, அம்பலத்துள் - பொன்னம்பலத்தில், ஆடும் - ஆடுகின்ற, முகை - முகையாகிய, நகை - ஒளியோடு கூடிய, கொன்றைமாலை - கொன்றைமலர் மாலையையணிந்த, முன்னவன் - முன்னோனது, பாதம் - திருவடியை, ஏத்தி-துதித்து, அகம் நெகாதவரை கண்டால் - மனம் நெகிழாதவரைக் காணின், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும்வகையாயிராநின்றது, எ - று.

(க - ரை.) தடுத்தற்கரிய பெரும்பழிக்கு அஞ்சேன், இறப்புக்கும் அஞ்சேன், ஆயினும், அனலேந்தி அம்பலத்திலாடுகின்ற முதல்வனது திருவடியைத்துதித்து, மனம் நெகிழாதவரைக் கண்டால், யாம் அஞ்சும்படியாயிராநின்றது என்பது.

(வி - ரை.) தகைவிலாப்பழி-பெரும்பழி. மூகந்த எரி - முகந்தெரி என அகரந்தொகுத்தலாயிற்று. எரி என்றது தாருகாவன முனிவர்கள் விடுத்த மழுப்படையை. முகை - மொட்டு. (போரும்பு). (௭)

தறிசெறிகளிறுமஞ்சேன்றழல்விழியுழுவையஞ்சேன்
வெறிகமழ்சடையனப்பன்விண்ணவர்நண்ணமாட்டாச்
செறிதருகழல்களேத்திச்சிறந்தினிதிருக்கமாட்டா
அறிவிலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

(ப - ரை.) தறிசெறி - கட்டுத்தறியில் கட்டப்படுகிற, களிறும் அஞ்சேன் - யானையையும் அஞ்சேன். தழல்விழி - நெருப்புப் போலும் கண்களையுடைய, உழுவை அஞ்சேன் - புலியையும் அஞ்சேன், வெறிகமழ் - மணம்வீசுகின்ற, சடையன் - சடாபாரத்தையுடையவன், அப்பன் - அப்பன், (அவனது) விண்ணவர் நண்ணமாட்டா - தேவர்களும் நண்ணவொண்ணாத, செறிதரு - நெருங்கிய, கழல்கள் - திருவடிகளை, ஏத்தி - துதித்து, சிறந்து - சிறப்படைந்து, இனிது இருக்கமாட்டா - இனிதாயிருக்கமாட்டாத, அறிவில்லாதவரை கண்டால் - அறிவிலிகளைக்காணின், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும் வகையாயிராநின்றது, எ - று.

(க - ரை.) யானை, புலி, என்னும் துஷ்டமிருகங்களுக்கும் அஞ்சேன், ஆயினும், எமதுதந்தையாகிய சிவபெருமானது திருவடி

யைத் துதித்து மேன்மையடைந்திருக்கமாட்டாத அறிவிலிகளைக் கண்டால் யாம் அஞ்சும்படியாயிரா நின்றது என்பது.

(வி - ரை.) "தறிசெறிகளிறு" "தழல்வீழியுழுவை" என்றதனுல் அவற்றின் கொடுமை விளங்கியவாறு காண்க.

மஞ்சுலா முருமு மஞ்சேன் மன்னரோ டுறவு மஞ்சே
னஞ்சமே யமுத மாக்கு நம்பிரா னெம்பிரா னாய்ச்
செஞ்சவே யாண்டு கொண்டான் றிருமுண்டந் தீட்ட மாட்டா
தஞ்சுவா ரவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே.

(ப - ரை.) மஞ்சு உலாம் - மேகத்தில் உலாவுகிற, உருமும் அஞ்சேன் - இடியையும் அஞ்சேன், மன்னரோடு - அரசருடைய, உறவும் அஞ்சேன் - உறவையும் அஞ்சேன், நஞ்சமே - விடத்தையே, அமுதம் ஆக்கும் - அமிர்தமாக்கிக்கொண்ட, நம் பிரான் - நமது பிரான், எம்பிரான் ஆய் - எம்பிரானுகி, செஞ்செவே ஆண்டுகொண்டான் - செம்மையாக ஆண்டுகொண்டருளினவன், (அவனது) திருவிபூதியாகிய செல்வத்தை, முண்டம் தீட்டமாட்டாது - தமது நெற்றியில் தரிக்கமாட்டாமல், அஞ்சுவார் அவரை கண்டால் - அஞ்சுவோராகிய அவரைத் தரிசித்தால், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும் வகையா யிராநின்றது, எ - று.

(க - ரை.) இடிக்கும் அஞ்சேன், மன்னருறவையும் அஞ்சேன், ஆயினும், நஞ்சத்தையே அமிர்தமாக்கிக்கொண்டவனும், எம்மை யினிதா யாண்டுகொண்டவனும் ஆகிய இறைவனது செல்வமாகிய திருவெண்ணீற்றைத் தமது நெற்றியில் தரித்தற்கஞ்சுவோரைக் கண்டால் யாம் அஞ்சும்படியாயிராநின்றது என்பது.

(வி - ரை.) உரும் - இடி. இறைவற்கு விபூதி உருத்திராக்கம், யானைத்தோல், தலைமாலை முதலியவே செல்வமாதலால், விபூதியைத் திரு என்றூர். "பதம்பரவைக்கு வருந்துபிராற்குப் பசுமயின்மேல் - கதம்பரவைக்கு வரச்சுற்று கட்செவிக் கங்கணற்குச் - சிதம்பரவைக்குமுதுகுன்ற வாணற்குச் செல்வமெல்லாம் - மதம்பரவைக்கு நிகர்கரித்தோறலை மாலைகளே" எனப் பிற அறிஞர் கூறுதலுங் காண்க. முண்டம்-நெற்றி. (க)

கோணிலாவாளியஞ்சேன் கூற்றுவன் சீற்றமஞ்சே
னீணிலாவணியினானை நினைந்துநைந் துருகிநெக்கு
வாணிலாங்கண்கள் சோரவாழ்த்திநின் றேத்தமாட்டா
வாணலாதவனைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

(ப - ரை.) கோண் இல்லா - கோணுதலில்லாத, வாளி அஞ்சேன் - பாணத்தை அஞ்சேன், கூற்றுவன் சீற்றம் அஞ்சேன் - இயமனது கோபத்தையும் அஞ்சேன், நீள் நிலா - நீண்ட நிலவாகிய, அணியினானை - ஆபரணத்தையுடையவனை, நினைந்து - எண்ணி, நைந்து - வருந்தி, உருகி - உருகாநின்று, நெக்கு - நெகிழ்ந்து, வாள் நிலாம் - ஒளி நிலைபெற்றிருக்கிற, கண்கள் சோர - கண்களில் நீரொழுக, வாழ்த்தி நின்று ஏத்தமாட்டா - வாழ்த்திநின்று துதிக்க மாட்டாத, ஆண் அல்லாதவனை கண்டால் - ஆண்மையுடையனல்லா தானைக் காணின், நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும் வகையாயிரா நின்றது, எ - று.

(க - ரை.) அம்புக்கும் அஞ்சேன், யமனது கோவத்துக்கும் அஞ்சேன், ஆயினும், சந்திரசேகரனாகிய சிவபெருமானை நினைந்து மனங்கரைந்துருகிக் கண்களில் நீரொழுக நின்று வாழ்த்தித் துதிக்கமாட்டாத ஆண்மையில்லாதவனைக் கண்டால் யாம் அஞ்சும்படியா யிராநின்றது என்பது.

(வி - ரை.) கோண் முதனிலைத்தொழிற்பெயர். நிலா - சந்திரன். வாணிலாங்கண்கள்சோர என்பதனை வாள் நில் ஆம் கண்கள் சோர எனப்பிரித்து ஒளிநிலைபெற்ற நீரானது கண்களில் ஒழுக என்றுரைப்பினும் அமையும். இறைவனைவழிபடுதலினுஞ் சிறந்த ஆண்மையின்றாதலால் அவ்வழிபாடில்லாதானை "ஆணலாதவர்" என்றார்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பாண்டிப்பதிகம்.

## சிவாநந்தவிளைவு.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

பருவரைமங்கைதன்பங்கரைப்பாண்டியற்காரமுதா
மொருவரையொன்றுமிலாதவரைக்கழற்போதிறைஞ்சித்
தெரிவரநின்றுருக்கிப்பரிமேற்கொண்டசேவகனு
ரொருவரையன்றியுருவறியாதென்றனுள்ளமதே.

(ப - ரை.) பரு - பருத்த், வரை - மலையரையனது, மங்கை - பெண்ணாகிய உமாதேவியின், பங்கரை - பாகரை, பாண்டியற்கு - பாண்டியனுக்கு, ஆர் அமுது ஆம் ஒருவரை - அரிய அமிர்தமாகிய ஒருவரை, ஒன்றும் இல்லாதவரை - ஒன்றையுமுடையரல்லாதாரை, கழல்போது இறைஞ்சி - திருவடித் தாமரைமலரை வணங்கி, தெரிவரநின்று - தோன்றும்படி நின்று, உருக்கி - மனத்தை யுருகச்செய்து, பரிமேற்கொண்ட சேவகனார் - குதிரைமேற் கொண்டுவந்த மகாவீரராகிய, ஒருவரை - ஒப்பற்றவரை, அன்றி - அல்லாமல், என்றன் உள்ளம் - என்மனமானது, உரு அறியாது-பிறதெய்வங்களின் வடிவையும் அறியாது, எ - று.

(க - ரை.) உமாதேவிபாகரும், பாண்டியனுக்கு அமிர்தமாயிருப்பவரும், குறிகுண முதலிய ஒன்றுமில்லாதவரும், குதிரைமேற் கொண்டுவந்து, கண்டோர் மனமுருகப் பண்ணினவரும் ஆகிய சிவபெருமானை யன்றி, என் மனமானது வேறொரு தேவரை உருவறிய மாட்டாது என்பது.

(வி - ரை.) பருவரையென்றது இமையமலையை. ஒன்றும் என்பதற்கு ஹேயகுணங்கள் சிறிதும் என்றுரைப்பினும் அமையும். உருவறியாது என்றது வடிவத்தைப் பார்க்கவுஞ் சகியாது என்றபடி. (க)

சதுரைமறந்தறிமால்கொள்வர்சார்ந்தவர்சாற்றிச்சொன்னேங்
கதிரைமறைத்தன்னசோதிகழுக்கடைப்பிடித்துக்
குதிரையின்மேல்வந்துகூடிடுமேற்குடிகேடுகண்டீர்
மதுரையர்மன்னன்மறுபிறப்போடமறித்திடுமே.

(ப - ரை.) சார்ந்தவர் - அடைந்தவர், சதுரைமறந்து - தமது திறத்தை மறந்து, அறிமால் கொள்வர்-அறிமயக்கம் கொள்வர், சாற்றிசொன்னேம்-பறையறைந்து சொன்னேம், கதிரை மறைத்தன்ன-சூரியனை மறைத்தாற்போன்ற ஒளியானது, கழுக்கடை கைப்பிடித்து - ஈட்டியைக் கைப்பிடித்து, குதிரையின்மேல் வந்து கூடிடுமேல் - குதிரையின்மேல் எழுந்தருளிவந்து கலந்திடின், குடிகேடு - நமது குடிக்குக் கெடுதியாம், மதுரையர் மன்னன் மறுபிறப்போட மறித்திடும் - மதுராபுரியார்க்கு அரசனாகிய பாண்டியனது மறுபிறப்பை யோட்டி, மீண்டுவராதபடி தடுக்கும், எ - று.

(க - ரை.) இறைவனைச் சேர்ந்தவர்கள் தமது சதுரப்பாட்டை மறந்து அறிவுமயங்கப் பெறுவர், பறையறைந்து சொல்லினேம், சூரியனை மறைத்தாற்போன்ற ஒளியானது ஈட்டியைக் கையிற் பிடித்து, குதிரையின்மீ தேறிவந்து எம்மைக் கூடுமாயின், நமது குடிக்குக் கெடுதியுண்டாம், பாண்டியனது மறுபிறவி வந்தடையாதபடி தடுக்கும் என்பது.

(வி - ரை.) இறைவனது அழகில் ஈடுபட்டவர் தம் மறிவை யிழந்து நிற்பாராதலால், "சதுரை மறந்தறிமால் கொள்வர் சார்ந்தவர்" என்றார். கதிரை மறைத்தன்ன சோதி என்றது இறைவன் திருமேனி யானைத் தோலால் மறைக்கப்பட்டிருத்தலால் என்க. "மதயானை யீருரியூடே மறைந்து மழைமறைத்த உதயாதிபனென நின்றோர்" என்றார் பிறரும். கழுக்கடையென்றது இவ்விடத்து ஈட்டியையே யுணர்த்திற்று. குதிரைச்சேவகர் கைப்பிடித்து வருவது அதுவேயாகலான். (௨)

நீறின்பவெள்ளத்துணிந்திக்குளிக்கின்றநெஞ்சங்கொண்டீர்
பாரின்பவெள்ளங்கொளப்பரிமேற்கொண்டபாண்டியனு
ரோரின்பவெள்ளத்துருக்கொண்டுதொண்டரையுள்ளங்கொண்டார்
பேரின்பவெள்ளக்கா' பெய்காமலேசென் றுபேணுமினே.

(ப - ரை.) நீர் - நீங்கள், இன்பவெள்ளத்துள் - ஆநந்தப்பெருக்கில், நீந்திக்குளிக்கின்ற - நீந்திக்குளிக்கவேண்டுமென்கிற, நெஞ்சம் கொண்டீர் - மனத்தையுடையீர், பார் - பூமியிலுள்ளாரெல்லாரையும், இன்பவெள்ளம்கொள்ள - ஆநந்தப்பெருக்கானது கொண்டுசெல்லும் வண்ணம், பரிமேற்கொண்ட பாண்டியனார் - குதிரைமேற்கொண்ட பாண்டியனார், ஓர் - ஒப்பற்ற, இன்பவெள்ளத்து உருக்கொண்டு - ஆநந்தப்பெருக்கி னுருவங்கொண்டு, தொண்டரை - தொழும்பரை, உள்ளம் கொண்டார் - மனங்கவர்ந்தார், பேரின்பவெள்ளத்துள் சென்று - பேரானந்தப் பெருக்கினுள்ளும் சென்று, பெய்கழலே பேணுமின் - வீரக்கழலணிந்த திருவடியையே விரும்புங்கள், எ - று.

(க - ரை.) பேரின்பப் பெருக்கிற் குளிக்கவேண்டுமென்னும் எண்ணமுள்ளவர்களே, ஆநந்தவெள்ளமானது உலகத்தை யெல்லாம் கவர்ந்து செல்லும்படி குதிரைமேற்கொண்டுவந்த சோமசுந்தர பாண்டியனார் தம்தொழும்பரை மனங்கவர்ந்தார், ஆதலால் நீங்கள் பேரின்பப்பெருக்கில் அகப்பட்டாலும் அவ்விறைவனது திருவடியாகிய மரக்கலத்தை யாதாரவாகப் பற்றுங்கள் என்பது.

(வி - ரை.) இறைவன் குதிரைச்சேவகனாய் எழுந்தருளின திருக்கோலம் கண்டோர்க்கு மிகுந்த இன்பமளித்தது என்றற்கு, "பாரின்பவெள்ளங்கொளப் பரிமேற்கொண்ட பாண்டியனார்" என்றார். ()

செறியும்பிறவிக்குநல்லவர்செல்லன்மின்றென்னனன்னாட்
டிறைவன்கிளர்கின்றகாலமெக்காலத்துள்ளு
மறிவொண்கதிர்வாளுறைகழித்தானந்தமாக்கடவி
யெறியும்பிறப்பையெதிர்ந்தார்புரளவிருநிலத்தே.

(ப - ரை.) தென்னன் - பாண்டியனது, நல் நாட்டு - நல்லநாட்டின்கண், செறியும் பிறவிக்கு - நெருங்கிய பிறப்புக்கு, நல்லவர் செல்லன்மின் - நல்லோர் செல்லாதீர்கள், இக்காலம் - இந்தக்காலம், இறைவன் கிளர்கின்ற காலம் - இறைவன் (அரசுசெய்து) விளங்குகின்ற காலமாயிராநின்றது, எக்காலத்துள்ளும் - எந்தக்காலத்திலும், அறிவு - ஞானமாகிய, ஒள் - ஒள்ளிய, கதிர்-ஒளியுள்ள, வாள்-வாட்படையை, உறைகழித்து - உறைநீக்கி, ஆநந்தம் மாகடவி - இன்பமாகிய குதிரையைச் செலுத்தி, இருநிலத்து - பெரியநிலவுலகத்தில்,

பிறப்பை எதிர்த்தார் புரள - பிறவியை எதிர்ந்தவர் புரளும்படி, எறியும் - வீசுவன், எ - று.

(க - ரை.) நல்லவர்களே, நீங்கள் பாண்டிநன்னாட்டிக் பிறவா தொழிவீர்களாக, ஏனெனின் இறைவன் அந்நாட்டில் அரசாட்சிசெலுத்துங்கால மிதுவாதலால், அவன் பிறவியை எதிர்ந்தவர் யாவரும் புரளும்படி, ஆநந்தப்பரியைச் செலுத்திவந்து ஞானவாளால் எறியாநின்றான் ஆதலால் என்பது.

(வி - ரை.) செறியும் பிறவியென்றது மிக்கபிறவியென்றபடி. நல்லவர் முன்னிலைக்கண்வந்தது. அறிவொண் குற்றுகரப்புணர்ச்சிபெற்றது. உறை என்றது இவ்விடத்து மலமறைப்பை.

காலமுண்டாகவேகாதல்செய்துய்மின்கருதரிய
ஞாலமுண்டானொடுநான்முகன்வானவர்நண்ணரிய
வாலமுண்டானெங்கள்பாண்டிப்பிரான்றன்னடியவர்க்கு
மூலபண்டாரம்வழங்குகின்றான்வந்துமுந்துமினே.

(ப - ரை.) காலம் உண்டாக - காலமுண்டாயிருக்க, காதல் செய்து - இறைவனுக்கு அன்புசெய்து, உய்மின் - உய்யுங்கள், கருது அரிய - நினைத்தற்கரிய, ஞாலம் உண்டானொடும் - உலகமுண்டவனாகிய திருமாலோடும், நான்முகன் - பிரமனும், வானவர் - மற்றைத்தேவர்களும், நண் அரிய - கிட்டுதற்கும் அரிதாகிய, ஆலம் - நஞ்சை, உண்டான் - அமுதுசெய்தவன், எங்கள்பாண்டிப்பிரான் - எங்கள் திருப்பாண்டிப்பெருமான், தன் அடியவர்க்கு - தன்அடியார்க்கு, மூலபண்டாரம் - மூலபொக்கசத்தை, வழங்குகின்றான் - கொடுக்கின்றான், வந்து முந்துமின் - வந்து முந்திக்கொள்ளுங்கள், எ - று.

(க - ரை.) விரைவில் இறைவனுக்கு அன்புசெய்து உய்யுங்கள், திருமால் பிரமன்முதலியோர் கிட்டுதற்கரிதாகிய நஞ்சை அமுதுசெய்தவனாகிய பாண்டிப்பிரான், தன் அடியவர்க்கு மூலபொக்கசதனத்தை வழங்காநின்றான் ஆதலால் அத்தனத்தைப் பெறுதற்கு நீங்கள் முந்துங்கள் என்பது.

(வி - ரை.) காலமுண்டாக என்றது விரைவாக என்றபடி. கருதரிய ஆலம் நண்ணரிய ஆலம் எனக் கூட்டுக. மூலபண்டாரம் என்றது முத்திச்செல்வத்தை. (௫)

ஈண்டியமாயாவிருள்கெடவெப்பொருளும்விளங்கத்
தூண்டியசோதியைமீனவனுஞ்சொல்லவல்லனல்லன்
வேண்டியபோதேவிலக்கிலைவாய்தல்விரும்புமின்றாள்
பாண்டியனாரருள்செய்கின்றமுத்திப்பரிசிதுவே.

(ப - ரை.) ஈண்டிய - நெருங்கிய, மாயா இருள் கெட - கெடாத அஞ்ஞான இருள் நசிக்கவும், எப்பொருளும் விளங்க - எப்பொருளும் விளங்கவும், தூண்டிய - தூண்டப்பட்ட, சோதியை - ஞான ஒளியை, மீனவனும் - பாண்டியனும், சொல்ல வல்லன் அல்லன் - சொல்லச் சமர்த்தனல்லன், வேண்டியபோதே - விரும்பின போதே, விலக்கு இல்லை - தடையில்லை, தாள் வாய்தல் விரும்புமின் - திருவடிப்பேற்றை விரும்புங்கள், பாண்டியனார் அருள்செய்கின்ற - பாண்டிப்பிரானார் அருள்செய்கிற, முத்திப்பரிசு இதுவே - முத்தித்திறம் இதுவேயாம், எ - று.

(க - ரை.) மாயையாகிய இருளொழியத் தூண்டிய ஒளியுருவனைப் பாண்டியனும் புகழவல்லனல்லன், ஆதலால் நீங்கள் விரும்பினால் தடையில்லை, இறைவன் திருவடிப்பேற்றை விரும்புங்கள், அவன் அருள் செய்கின்ற முத்தித்திறம் இதுவேயாம் என்பது.

(வி - ரை.) கெடுத்தற்கரிய மிக்க விருள் என்றற்கு "ஈண்டிய மாயாவிருள்" என்றார். "மாயா விருள்கெட" "எப்பொருளும் விளங்க" என்றதனால் சோதி ஞானவொளியைக் குறித்தது. (கூ)

மாயவனப்பரிமேல்கொண்டுமற்றவர்கைக்கொளலும்
போயறுமிப்பிறப்பென்னும்பகைகள்புகுந்தவருக்
காயவரும்பெருஞ்சீருடைத்தன்னருளேயருளுஞ்
சேயநெடுங்கொடைத்தென்னவன்சேவடிசேர்மின்களே.

(ப- ரை.) மாயனைப் பரிமேல் கொண்டு - மாயமாகிய அழகிய குதிரைமேற்கொண்டுவந்து, அவர்கைக்கொளலும் - அவ்விறைவர் கைக்கொள்ளுதலும், இப்பிறப்பு என்னும் பகைகள் - இப்பிறவி யென்னும் பகைகள், போய் அறும் - அற்றுப்போம், (ஆதலால்) புகுந்தவருக்கு - அடைந்தவருக்கு, ஆய - உண்டாகிய, அருபெரு - அரிய பெரிய, சீர் உடை - சிறப்பையுடைய, தன் அருளே - தன் அருட்

செல்வத்தையே, அருளும்-அருளாநின்ற,சேய்நெடு கொடை - மிகப் பெரியகொடையாகவுடைய, தென்னவன் - பாண்டிப்பிரானது, சேவடி - திருவடிகளை, சேர்மின்கள் - அடையுங்கள், எ - று.

(க - ரை.) தன்னையடைந்தவருக்கு அருட்செல்வத்தைக் கொடுக்கின்ற இறைவனது திருவடியைச் சென்றுசேருங்கள், அவன் குதிரை வீரனாய்வந்து நம்மையேற்றுக்கொள்ளுதலும் நம்முடைய பிறவிப்பகைகள் அற்றொழியும் என்பது.

(வி - ரை.) நரியாகிய பரியாதலால் "மாயவனப்பரி" என்றார். வனம் - அழகு. (எ)

அழிவின்றிநின்றதொரானந்தவெள்ளத்திடையழுத்திக்
கழிவில்கருணையைக்காட்டிக்கடியவினையகற்றிப்
பழமலம்பற்றறுத்தாண்டவன்பாண்டிப்பெரும்பதமே
முழுதுலகுந்தருவான்கொடையேசென்றுமுந்துமினே.

(ப - ரை.) அழிவு இன்றிநின்றது - அழிவில்லாது நின்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, ஆநந்தவெள்ளத்திடை - இன்பப் பெருக்கில், அழுத்தி - அழுந்து வித்து, கழிவு இல் கருணையை காட்டி - ஒழிவில்லாதகருணையைக்காட்டி, கடிய வினை அகற்றி - கடுமையாகிய வினைகளை நீக்கி, பழமலம்பற்றறுத்து - பழமையாகிய மலங்களைப்பற்றறுத்து, ஆண்டவன் - ஆண்டருளின இறைவன், பாண்டிப் பெரும்பதமே - பாண்டிநாட்டுப் பெரும்பதமொன்றைமாத்திரந்தானோ, முழுது உலகுந்தருவான்-உலகமுழுதும் தருவான், (ஆதலால்) கொடையே - அவனது கொடையையே, சென்று முந்துமின்-சென்று முந்துங்கள், எ - று.

(க - ரை.) அழிவற்ற இன்பப்பெருக்கில் அழுந்து வித்து, நீங்காத தன் கருணையைக்காட்டி, கொடியவினையை நீக்கி, மலப்பற்றறுத்தாண்ட இறைவன் பாண்டிப் பதம் ஒன்றேயல்ல, உலகமுழுதும் கொடுப்பன் ஆதலால் அவன் கொடையையே முந்துங்கள் என்பது.

(வி - ரை.) இறைவனுக்குக் கருணையெக்காலத்தும் உண்டென்றற்கு, "கழிவில்கருணை" என்றார். (அ)

விரவியதீவினைமேலைப்பிறப்புமுந்நீர்கடக்கப்
பரவியவன்பனையென்புருக்கும்பரம்பாண்டியனார்
புரவியின்மேல்வரப்புந்திகொளப்பட்டபூங்கொடியார்
மரவியன்மேல்கொண்டுதம்மையுந்தாமறியார்மறந்தே.

(ப - ரை.) விரவிய - கலந்த, தீவினை - கொடிய வினைகளா லுண்டாகிய, மேலைப்பிறப்பு - மேலைப்பிறவியாகிய, முந்நீர் கடக்க - கடலைக்கடக்க, பரவிய - வழிபட்ட, அன்பனை - அன்பர்களை, என்பு உருக்கும் - எலும்பை யுருக்குகின்ற, பரம் - மேலான, பாண்டியனார் - பாண்டிப்பிரானார், புரவியின்மேல் வர - குதிரையின்மேல் வர, (அதைக்கண்டு) புந்தி கொளப்பட்ட - அறிவு கோட்பட்ட, பூங்கொடியார் - பூங்கொடிபோல்வாராகிய மாதர்கள், மர இயல் மேல் கொண்டு - மரத்தினியற்கையை மேற்கொண்டு, மறந்து - மறந்து, தம்மையும் தாம் அறியார் - தம்மையுந் தாமறிந்திலர், எ - று.

(க - ரை.) வினைவயத்தா லுண்டாகிய பிறவிக்கடலைக் கடக்கும்பொருட்டுத் தம்மை வழிப்பட்ட அன்பனை என்புருகச்செய்கிற பாண்டிப்பிரானார் குதிரையின்மேலேறி வரக்கண்டு தம்மறிவிழந்த மாதர்கள் தம்மைத் தாமறியாமல் மறந்து மரம்போல நின்றார்கள் என்பது.

(வி-ரை.) தீவினையென்றது நல்வினைக்கு மறுதலையையன்று. கொடிய வினைகள் என்றபடி. விரவிய என்றதனானே இருவினையென்பது புலனாயிற்று. நல்வினை தீவினையென்னு மிரண்டும் ஆன்மாக்களுக்குப் பிறவியைத் தருதற்கண், பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போல ஒரு நிகரனவாமாதலின், "விரவிய தீவினை" என்றார். (௬)

கூற்றைவென்றாங்கைவர்கோக்களையும்வென்றிருந்தழகால்
வீற்றிருந்தான்பெருந்தேவியுந்தானுமோர்மீனவன்பா
லேற்றுவந்தாருயிருண்டதிறலொற்றைச்சேவகனே
தேற்றமிலாதவர்சேவடிசிக்கெனச்சேர்மின்களே.

(ப - ரை.) கூற்றை வென்று - யமனை வென்று, ஆங்கு - அவ்விடத்தில், ஐவர் கோக்களையும் வென்று இருந்து - ஐவராகிய அரசரையும் வென்று இருந்து, அழகால் வீற்றிருந்தான் - அழகோடு

வீற்றிருந்தான், (எவ்விடத்தேயெனின்) பெருந்தேவியும் தானும் - பெருந்தேவியும் தானுமாக, ஓர் மீனவன்பால் - ஒப்பற்ற பாண்டியனிடத்தில், (அவன் யாவனெனின்) ஏற்றவந்தார் உயிர் - எதிர்த்து வந்தவருடைய உயிரை, உண்ட - வாங்கின, திறல் - வலியுள்ள, ஒற்றை சேவகனே - ஒப்பற்ற மகாவீரனே, (ஆதலால்) தேற்றம் இல்லாதவர் - தெளிதல் இல்லாதவர்கள், சேவடி - அவன் திருவடியையே, சிக்கென சேர்மின் - உறுதியாக அடையுங்கள், எ - று.

(க - ரை.) இறைவன் யமனையும் ஐம்புலன்களையும் வென்று, அழகாகத் தானும் தேவியுமாகப் பாண்டியனிடத்தில் வீற்றிருந்தான், அவன் திருவடியை உறுதியாகப்பற்றுங்கள் என்பது.

(வி - ரை.) ஆங்கு - அசையெனினுமாம். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# பிடித்தபத்து.

## முத்திக்கலப்புரைத்தல்.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உம்பர்கட்கரசேயொழிவறநிறைந்த
யோகமேயூற்றையேன்றனக்கு
வம்பெனப்பழுத்தென்குடிமுழுதாண்டு
வாழ்வறவாழ்வித்தமருந்தே
செம்பொருட்டுணிவேசீருடைக்கழலே
செல்வமேசிவபெருமானே
யெம்பொருட்டுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) உம்பர்கட்கு அரசே-தேவர்களுக்கு அரசனே, ஒழிவு அற நிறைந்த - எங்கும் நீக்கமில்லாது நிறைந்த, யோகமே-பலனே, ஊத்தையேன் தனக்கு - அழுக்குடம்புடையேனாகிய எனக்கு, வம்பு என பழுத்து - புதுமையென்று சொல்லும்படி கனிந்து, என்குடி முழுது ஆண்டு - என்குடிமுழுதும் ஆண்டருளி, வாழ்வு அற - (உடம்போடுகூடிவாழும்) வாழ்க்கை அறும்படி, வாழ்வித்த - (சிவபுரப்பேறுபெற்று) வாழும்படிசெய்த, மருந்தே - அமிர்தமே, செம்பொருள் துணிவே - செவ்விய நூற்பொருளின் துணிவே, சீர் உடை கழலே-சிறப்பையுடைய திருவடியையுடையவனே, செல்வமே-எமது ஐசுவரியமே, சிவபெருமானே - சிவபிரானே, எம்பொருட்டு-எம்பொருட்டு, உன்னை சிக்கென பிடித்தேன்-உன்னை உறுதியாகப்பற்றினேன்,இனி-இனி, எங்கு எழுந்தருளுவது - நீ எங்கே யெழுந்தருள்வது, எ - று.

(க - ரை.) தேவர்கட்கரசனே, எங்கும் நீக்கமறநிறைந்தவனே, எனக்கிரங்கி என்குடிமுழுதுமாண்டருளிச் சிவபுரப்பேற்றை யருள் செய்த அமிர்தமே, செவ்விய நூற்பொருளின் துணிவே, சிவபிரானே, உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீ யெங்கே யெழுந்தருள்வது என்பது.

(வி - ரை.) உம்பர் - மேலிடம். அது இடவாகுபெயராய் அங்குள்ளதேவர்களுக்காயிற்று. வாழ்வற என்றது பிறப்பற என்றபடி. எல்லாநூல்களும் புகழ்வது இறைவனது புகழையே யாதலால் "செம்பொருட்டுணிவே" என்றார். ஊத்தை, மலமெனினுமாம். (க)

விடைவிடாதுகந்தவிண்ணவர்கோவே
வினையனேனுடையமெய்ப்பொருளே
முடைவிடாதடியேன்மூத்தறமண்ணாய்
முழுப்புழுக்குரம்பையிற்கிடந்து
கடைபடாவண்ணங்காத்தெனையாண்ட
கடவுளேகருணைமாகடலே
யிடைவிடாதுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) விடை - இடபத்தை, விடாது உகந்த - விடாமல் விரும்பின, விண்ணவர்கோவே - தேவர்பெருமானே, வினையனேன்

உடைய - வினையேனது, மெய்யருளே - உண்மைப்பொருளே, மு டைவிடாது - முடைநாற்றத்தையுடைய உடம்பை விடாமல், அடி யேன் மூத்து - அடியேன் முதிர்ந்து, அற மண்ஆய் - மிகவும் மண் ணுகி, முழு புழு குரம்பையில் கிடந்து - முழுப்புழுக்கூட்டிற் கிட ந்து, கடைபடாவண்ணம் - கடையாகாதவண்ணம், என்னை காத்து ஆண்ட - என்னைத்தடுத்தாண்ட, கடவுளே - கடவுளே, கருணை மா கடலே - கருணையாகிய பெருங்கடலே, இடைவிடாது - இடையறா மல், உன்னை சிக்கென பிடித்தேன் - உன்னை உறுதியாகப் பிடித் தேன், இனி - இனி, எங்கு எழுந்தருளுவது - எங்கே யெழுந்தருள் வது, எ - று.

(க - ரை.) இடபவாகனனே, தேவர்கோனே, எனக்கு மெய்ப் பொருளா யிருப்பவனே, இவ்வுடம்பிற்கிடந்து கடைபடாவண்ணம் என்னைக்காத்தருளின கடவுளே, கருணைக்கடலே, இடையறாமல் உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீ எங்கே எழுந்தருள்வது என்பது.

(வி - ரை.) மெய்ப்பொருள்-அழியாப்பொருள். முடை - புலா ல்நாற்றம். (௨)

அம்மையேயப்பாவொப்பிலாமணியே
யன்பினில்விளைந்தவாரமுதே
பொய்ம்மையேபெருக்கிப்பொழுதினைச்சுருக்கும்
புழுத்தலைப்புலையனேன்றனக்குச்
செம்மையேயாயசிவபதமளித்த
செல்வமேசிவபெருமானே
யிம்மையேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) அம்மையே - தாயே, அப்பா - தந்தையே, ஒப்பு இல்லாமணியே - உவமையில்லாதமணியே, அன்பினில்விளைந்த - அன்பென்னுங்கடலிலுண்டான, ஆர் அமுதே - அருமையாகிய அமிர் தமே, பொய்ம்மை எ பெருக்கி - பொய்யையேவளர்த்து, பொழுதி னை சுருக்கும் - காலத்தைக்குறைக்கின்ற, புழுத்து அலைபுலையனேன் தனக்கு - புழுத்தலைகின்ற புலையனேனுக்கு, செம்மை ஆய - செவ்

வையாகிய, சிவபதம் அளித்த - சிவபதத்தைக்கொடுத்தருளிய, செல்வமே - எமது ஐசுவரியமே, சிவபெருமானே - சிவபெருமானே, இம்மையே - இவ்வுலகத்திற்றானே, உன்னை சிக்கென பிடித்தேன் - உன்னை உறுதியாகப்பற்றினேன், இனி - இனி, எங்கு எழுந்தருளுவது - எங்கு எழுந்தருள்வது, எ - று.

(க - ரை.) எனக்குத் தாயா யிருப்பவனே, தந்தையாயிருப்பவனே, ஒப்பற்ற மாணிக்கமே, அன்பாகிய கடலிலுண்டான அமிர்தமே, பொய்யை விருத்திசெய்து காலங்கழிக்கின்ற புலையேனுக்குச் சிவபதத்தையருள்செய்த செல்வமே, இவ்வுலகத்தில் உன்னை உறுதியாய்ப்பற்றினேன், இனி நீ எங்கேயெழுந்தருள்வது என்பது.

(வி - ரை.) விளைந்த ஆரமுதே என்றதற்கேற்ப அன்பைக்கடலாக்கியுரைக்க லாயிற்று. பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்குதலாவது - பொய்வியாபாரங்களைச்செய்தே வாணாளைக்கழித்தல்.
(௩)

அருளுடைச்சுடரேயளிந்ததோர்கனியே
பெருந்திறலருந்தவர்க்கரசே
பொருளுடைக்கலையேபுகழ்ச்சியைக்கடந்த
போகமேயோகத்தின்பொலிவே
தெருளிடத்தடியார்சிந்தையுட்புகுந்த
செல்வமேசிவபெருமானே
யிருளிடத்துன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) அருள் உடை சுடரே - அருளையுடைய சோதியே, அளிந்தது ஓர் கனியே - கனிந்ததாகிய ஒப்பற்ற கனியே, பெரும் திறல் - பேராற்றலையுடைய, அருந்தவர்க்கு - அரியதவத்தினையுடையோர்க்கு, அரசே - அரசனே, பொருள் உடை - பொருட்சிறப்பையுடைய, கலையே - நூலே, புகழ்ச்சியைகடந்த - புகழைக்கடந்த, போகமே - இன்பமே, யோகத்தின்பொலிவே - யோகத்தின் அழகே, தெருள் இடத்து-தெளிவாகிய இடத்தையுடைய, அடியார் சிந்தையுள் புகுந்த - அடியார் மனத்திற் புகுந்த, செல்வமே - ஐசுவரியமே, சிவபெருமானே - சிவபெருமானே, இருள் இடத்து - (அஞ்ஞா

னமாகிய) இருள்செறிந்த இவ்வுலகத்தில்,உன்னை சிக்கென பிடித்தேன் - உன்னை உறுதியாகப்பற்றினேன், இனி - இனி, எங்கு எழுந்தருளுவது - நீ எங்கே எழுந்தருள்வது, எ - று.

(க-ரை.) அருட்சுடரே, ஒப்பற்றகனியே, தபோதனர்க்கிறைவனே, பொருட்சிறப்பமைந்த நூலுருவாயிருப்பவனே, புகழுக்கடங்காத இன்பமே, யோகப்பொலிவே, தெளிவுள்ள அன்பர் மனத்தில் நிலைபெற்றிருக்கும் செல்வமே, அஞ்ஞான இருள் செறிந்த இவ்வுலகத்தில் உன்னை உறுதியாய்ப்பற்றினேன்,இனி நீ எங்கே யெழுந்தருள்வது என்பது.

(வி - ரை.) அன்பர்க்குக் கனிந்த கனிபோல் இனிமையைத் தருதலால் "அளிந்ததோர் கனியே" என்றார். சாபாநுக்கிரகங்களைச் செய்யவல்லராதலால் தவமுடையோரை "பெருந்திறலருந்தவர்" என்றார், (ச)

ஒப்புனக்கில்லாவொருவனேயடியே
னுள்ளத்துளொளிர்கின்றவொளியே
மெய்ப்பதமறியாவீறிலியேற்கு
விழுமியதளித்ததோரன்பே
செப்புதற்கரியசெழுஞ்சுடர்மூர்த்தி
செல்வமேசிவபெருமானே
யெய்ப்பிடத்துன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) ஒப்பு உனக்கு இல்லா-உவமையுனக்கில்லாத, ஒருவனே - ஒருத்தனே, அடியேன் உள்ளத்துள் - அடியேன் மனத்தில், ஒளிர்கின்ற - விளங்குகின்ற, ஒளியே - சோதியே, மெய் பதம் அறியா - உண்மைப் பதத்தை அறியாத, வீறு இலியேற்கு - மேன்மையிலேனுக்கு, விழுமியது - சிறந்ததாகிய பதத்தை, அளித்தது - கொடுத்ததாகிய, ஓர் அன்பே - ஒப்பற்ற அன்பே, செப்புதற்கு அரிய - சொல்லுதற்கரிய, செழு சுடர் மூர்த்தி - செழுமையாகிய ஒளியுருவனே, எய்ப்பு இடத்து - இளைத்த இடத்தில், உன்னை சிக்கென பிடித்தேன் - உன்னை உறுதியாகப்பற்றினேன், இனி-இனி, எங்கு எழுந்தருளுவது - நீ எங்கே எழுந்தருள்வது, எ - று.

(க - ரை.) ஒப்பற்றவனே, அடியேன் மனத்தில் விளங்கும் ஒளியே, உண்மையாகிய பதத்தை யறியாத கடையேனுக்குச் சிறந்த பதத்தைக்கொடுத்த அன்புருவமே, சொல்லுதற்கரிய ஒளியுருவமே, நான் இளைத்த இடத்தில் உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீஎங்கே யெழுந்தருள்வது என்பது.

(வி - ரை.) விழுமியது என்றது முத்திப்பேற்றை. இன்னதினும் என்றது வளாவிழுமியது என்றமையால் முத்தியினும் சிறந்ததொன்றில்லை யென்றாயிற்று. "சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங், காக்கமெவனோ வுயிர்க்கு" என்னுந் திருக்குறளில் சிறப்பு என்பது இப்பொருட்டாதலைப் பரிமேலழகருரையாலுணர்க.

(௫)

அறவையேன்மனமேகோயிலாக்கொண்டாண்
டளவிலாவானந்தமருளிப்
பிறவிவேரறுத்தென்குடிமுழுதாண்ட
பிஞ்ஞகாபெரியவெம்பொருளே
திறவிலேகண்டகாட்சியேயடியேன்
செல்வமேசிவபெருமானே
யிறவிலேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) அறவையேன் மனமே - அநாதனாகிய என் மனத்தையே, கோயில் ஆ கொண்டு - கோயிலாகக்கொண்டு, ஆண்டு-ஆண்டருளி, அளவு இல்லா - அளவற்ற, ஆநந்தம் அருளி - இன்பத்தை அருள்செய்து, பிறவி வேர் அறுத்து - பிறவியின் வேரை யறுத்து, என் குடி முழுது ஆண்ட - என் குடிமுழுதும் ஆண்டருளின, பிஞ்ஞகா - பிஞ்ஞகனே, பெரிய - பெரிதாகிய, எம் பொருளே - எமது திரவியமே, திறவிலே கண்ட காட்சியே - வெளிப்படையாய்க் காணப்பட்ட காட்சியே, அடியேன் செல்வமே - அடியேனது ஐசுவரியமே, சிவபெருமானே - சிவபிரானே, இறவிலே - இறுதியிலே, உன்னை சிக்கென பிடித்தேன்-உன்னைஉறுதியாகப்பற்றினேன், இனி-இனி, எங்கு எழுந்தருளுவது - நீ எங்கே யெழுந்தருள்வது, எ - று.

(க - ரை.) ஆதரவற்ற என் மனத்தையே கோயிலாகக்கொண்டு எழுந்தருளி என்னை யாண்டு அளவுகடந்த இன்பத்தைத் தந்து

பிறவியை வேரோடறுத்து என் குடிமுழுதும் ஆண்டருளின சிவபிரானே, எமக்குப் பெருஞ்செல்வமே, வெளிப்படையாய்க் காணப்பட்ட காட்சியே, முடிவில் உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீ யெங்கே யெழுந்தருள்வது என்பது.

(வி - ரை.) அறவை - திக்கற்றவன். (௬)

பாசவே ரறுக்கும்பழம்பொருடன்னைப்
பற்றுமா றடியனேற்கருளிப்
பூசனையுகந்தென்சிந்தையுட்புகுந்து
பூங்கழல்காட்டியபொருளே
தேசுடைவிளக்கேசெழுஞ்சுடர்மூர்த்தி
செல்வமேசிவபெருமானே
யீசனேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) பாசவேர் அறுக்கும் - பாசத்தின் வேரை அறுக்கின்ற, பழம்பொருள் தன்னை - பழமையாகிய பொருளை, பற்றும் ஆறு - பற்றும் வழியை, அடியனேற்கு அருளி - அடியேனுக்கு அருள்செய்து, பூசனை உகந்து - என்பூசனையை விரும்பி, என்சிந்தையுள் புகுந்து - என்மனத்திற் புகுந்து, பூ கழல் காட்டியபொருளே - தாமரை மலரையொத்த திருவடியைக் காட்டினபொருளே, தேசு உடை விளக்கே - ஒளியையுடைய விளக்கே, செழு சுடர் மூர்த்தி - செழுமையாகிய் ஒளியுருவனே, செல்வமே - எமது ஐசுவரியமே, சிவபெருமானே - சிவபிரானே, ஈசனே - இறைவனே, உன்னைசிக்செனபிடித்தேன்-உன்னை உறுதியாகப்பற்றினேன், இனி-இனி, எங்கு எழுந்தருளுவது - எங்கு எழுந்தருள்வது, எ - று.

(க - ரை.) பாசவேரைக்களைதற்குரிய பழம்பொருளைப்பற்றும் வழியை அடியேனுக்கு அருள்செய்து, என்பூசனையை யேற்று என் மனம் புகுந்து திருவடியைக் காட்டிய பொருளே, ஒளியுள்ள விளக்கே, ஒளியுருவமே, உன்னை உறுதியாய்ப்பற்றினேன், இனி நீ எங்கே யெழுந்தருள்வது.

(வி - ரை) பூசனை - ஆராதனை. ஈசன் - பெருஞ் செல்வத்தை யுடையவன். (௭)

அத்தனேயண்டரண்டமாய்நின்ற
வாதியேயாதுமீறில்லாச்
சித்தனேபத்தர்சிக்கெனப்பிடித்த
செல்வமேசிவபெருமானே
பித்தனேயெல்லாவுயிருமாய்த்தழைத்துப்
பிழைத்தவையல்லையாய்நிற்கு
மெத்தனேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) அத்தனே - கடவுளே, அண்டர் - உலகத்தாரும், அண்டம் - உலகங்களும், ஆய் நின்ற - ஆகிநின்ற, ஆதியே - முதலே, யாதும் - சிறிதும், ஈறு இல்லா - முடிவில்லாத, சித்தனே - அறிவுருவனே, பத்தர் சிக்கென பிடித்த - பத்தர்கள் உறுதியாகப்பிடித்த, செல்வமே - பாக்கியமே, சிவபெருமானே - சிவபிரானே, பித்தனே - பித்தனே, எல்லா உயிரும் ஆய் தழைத்து - எல்லாவுயிர்களுமாகிச் செழித்து, பிழைத்து - தப்பி, அவை அல்லை ஆய் நிற்கும் - அவைகள் அல்லையாகியும் நிற்கின்ற, எத்தனே - வஞ்சகனே, உன்னை சிக்கென பிடித்தேன் - உன்னை உறுதியாகப்பற்றினேன், இனி - இனி, எங்கு எழுந்தருளுவது - எங்கு எழுந்தருள்வது, எ - று.

(க - ரை.) கடவுளே, உலகமும் உலகத்துயிர்களுமான முதல்வனே, முடிவில்லாத அறிவுருவனே, பத்தர் உறுதியாய்ப்பற்றின செல்வமே, சிவபிரானே, பித்தனே, எல்லாவுயிர்களுமாகி அவையல்லையுமாயிருக்கும் உபாயத்தையுடையவனே, உன்னை உறுதியாய்ப் பற்றினேன், இனி நீ எங்கே யெழுந்தருள்வது என்பது.

(வி - ரை.) அண்டர் அண்டம் என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. எல்லாவுயிருமாயிருந்தும் அவற்றுக்கு அயலாயிருத்தல் ஒருபாயமாதலால் "எத்தனே" என்றார். (அ)

பானினைந்தூட்டுந்தாயினுஞ்சாலப்
பரிந்துநீபாவியேனுடைய
வூனினையுருக்கியுள்ளொளிபெருக்கி
யுலப்பிலாவானந்தமாய

தேனினைச்சொரிந்துபுறம்புறந்திரிந்த
செல்வமேசிவபெருமானே
யானுனைத்தொடர்ந்துசிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) நினைந்து - (ஊட்டி நெடுநேரமாயிற்றென்று) கருதி, பால் ஊட்டும் - (மக்களுக்குப்) பாலை யுண்பிக்கிற, தாயினும் - அன்னையினும், நீ சால பரிந்து - நீ மிகவும் இரங்கி, பாவியேனுடைய - பாவியாகிய என்னுடைய, ஊனினை உருக்கி - உடலை யுருக்கி, உள் ஒளி பெருக்கி - மனத்தில் ஒளியைப் பெருக்கி, உலப்பு இல்லா - அழிவில்லாத, ஆநந்தம் ஆய - இன்பமாகிய, தேனினைச் சொரிந்து - தேனைப் பொழிந்து, புறம் புறம் திரிந்த - புறம் புறமாகவே திரிந்த, செல்வமே - எமது ஐசுவரியமே, சிவபெருமானே - சிவபிரானே, யான் உன்னை தொடர்ந்து - நான் உன்னைத் தொடர்ந்து, சிக்கென பிடித்தேன் - உறுதியாகப் பற்றினேன், இனி - இனி, எங்கு எழுந்தருளுவது - எங்கு எழுந்தருள்வது, எ - று.

(க - ரை.) தாயினுஞ் சிறந்த கருணையாளனே, நீ மிகவும் இரங்கி என்னுடலுருகச்செய்து என்மனத்தில் ஒளி பெருகச்செய்து பேரின்பத் தேனைச் சொரிந்த செல்வமே, சிவபெருமானே, நான் உன்னைத் தொடர்ந்து உறுதியாய்ப் பற்றினேன், இனி நீ எங்கே யெழுந்தருள்வது என்பது.

(வி - ரை.) இறைவன் உயிர்களுக்குத் தாயினுஞ் சிறந்த பரிவுடையன் என்றற்கு, "பானினைந்தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து" என்றும். உள்ளொளியென்றது ஞானவொளியை. (௩)

புன்புலால்யாக்கைபுரைபுரைகனியப்
பொன்னெடுங்கோயிலாப்புகுந்தென்
னென்பெலாமுருக்கியெளியையாயாண்ட
வீசனேமாசிலாமணியே
துன்பமேபிறப்பேயிறப்பொடுமயக்காந்
தொடக்கெலாமறுத்தநற்சோதி
யின்பமேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

(ப - ரை.) புன் புலால் யாக்கை - புல்லிய புலாலுடம்பை, புரை புரை கனிய - உட்டுளைகள் தோறும் அளிய, பொன் நெடுங் கோயில் ஆ - அழகிய பெரிய கோயிலாகக்கொண்டு, புகுந்து - நுழைந்து, என் என்பு எல்லாம் உருக்கி - என் என்பு முழுதும் உருகச் செய்து, எளியை ஆய் - எளியையாகி வந்து, ஆண்ட - என்னை ஆண்டருளின, ஈசனே - ஈசனே, மாசு இல்லா மணியே - குற்றமற்ற மாணிக்கமே, துன்பம் - துன்பம், பிறப்பு - பிறவி, இறப்பொடு - இறப்போடு, மயக்கு ஆம் - மயக்கமும் ஆகின்ற, தொடக்கு எல்லாம் அறுத்த - கட்டெல்லாம் சேதித்த, நல் சோதீ - பரஞ்சுடரே, இன்பமே - ஆநந்த வுருவே, உன்னை - நின்னை, சிக்கென பிடித்தேன் - உறுதியாகப்பற்றினேன், இனி - இனி, எங்கு எழுந்தருளுவது - எங்கு எழுந்தருள்வது, எ - று.

(க - ரை.) என் புலாலுடம்பை யிடமாகக்கொண்டு புகுந்து என்புருகப்பண்ணி என்னை யெளிதிலாண்டருளின ஈசனே, குற்றமற்ற மாணிக்கமே, துன்புருவாகிய பிறப்பிறப்புத் தொடர்ச்சி முழுதும் ஒழித்தருளின பரஞ்சுடரே, ஆநந்த வுருவே, உன்னை உறுதியாய்ப்பற்றினேன், இனி நீ எங்கே யெழுந்தருள்வது என்பது.

(வி - ரை.) அற்பகாலத் தழியு மியல்புடைமையால் உடம்பைப் "புன் புலால் யாக்கை" என்றார். (கO)

திருச்சிற்றம்பலம்.

# திருவேசறவு.

## சுட்டறிவொழித்தல்.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

இரும்புதருமனத்தேனையீர்த்தீர்த்தென்னென்புருக்கிக்
கரும்புதருசுவையெனக்குக்காட்டினையுன்கழலிணைக
ளொருங்குதிரையுலவுசடையுடையானேநரிகளெல்லாம்
பெருங்குதிரையாக்கியவாறன்றேயுன்பேரருளே.

(ப - ரை.) இரும்பு தரு மனத்தேனை - இரும்புபோன்றவன்னெஞ்சுகிய என்னை, ஈர்த்து ஈர்த்து - இழுத்திழுத்து, என் என்பு உருக்கி - என் என்புகள் உருகும்படிசெய்து, கரும்பு தருசுவை - கரும்புபோன்ற இன் சுவையையுடைய, உன்கழல் இணைகள் - உன் திருவடிக ளிரண்டையும், எனக்கு காட்டினை - எனக்குக் காட்டியருளினை, ஒருங்கு - ஒருங்கே, திரை உலவு - (கங்கையின்) அலைகள் உலாவுகின்ற, சடை - சடாபாரத்தை, உடையானே-உடையவனே, நரிகள் எல்லாம் - நரிகள் எல்லாவற்றையும், பெருங்குதிரை ஆக்கிய ஆறு - பெரிய குதிரைகளாகச் செய்தவிதம் என்ன வியப்பு, உன் பேர் அருள் - இது உன்பேரருளின் காரியமேயாம், எ - று.

(க - ரை.) இரும்புபோன்ற வன்மனத்தையுடைய என்னை வலிந்து பற்றி என் என்புருகச்செய்து உன் திருவடியைக் காட்டியருளினை, கங்கைச்சடையனே, உன் பெருங் கருணையால் நரிகளைப் பரிகளாக்கித் தந்தனையன்றே, இது என்னவியப்பு என்பது.

(வி - ரை.) இரும்புதரு என்பதில் தரு உவமையுருபு. இறைவனது திருவடி அன்பர்க்குக் கரும்புபோல இனிமை தருதலால், "இரும்புதருசுவை யெனக்குக் காட்டினை யுன்கழலிணைகள்" என்றார். அன்று ஏ அசைகள். (க)

பண்ணார்ந்தமொழிமங்கைபங்காநின்னாளானார்க்
குண்ணார்ந்தவாரமுதேயுடையானேயடியேனை
மண்ணார்ந்தபிறப்பறுத்திட்டாள்வாய்நீவாவென்னக்
கண்ணாரவுய்ந்தவாறன்றேயுன்கழல்கண்டே.

(ப - ரை.) பண் ஆர்ந்த - பண்போலப்பொருந்திய, மொழி - மொழியையுடைய, மங்கை - உமாதேவியின், பங்கா - பங்கனே, நின் ஆள் ஆனார்க்கு - உன் அடிமையானவர்க்கு, உண் ஆர்ந்த - உண் பதற்குரிய, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, உடையானே - உடையவனே, அடியேனை - அடியனேனை, மண் ஆர்ந்த பிறப்பு அறுத் திட்டு - மண்ணுலகிற்பிறந்த பிறவியைச் சேதித்து, ஆள்வாய் நீ - ஆண்டருள்வோனாகிய நீ, வா என்ன - வருகவென்ன, உன் கழல் கண்ணார கண்டு - உன் திருவடியைக் கண்ணாரக்கண்டு, உய்ந்த ஆறு - நான் உய்ந்தவிதம் என்னவியப்பு, எ - று.

(க - ரை.) உமாதேவிபங்கனே, உன் அன்பர்க்கு அமிர்தமா யிருப்பவனே, அடியேனைப் பிறப்பறுத்தாள்வாயாகிய நீ வாவென் றலும், உன் திருவடியைக் கண்ணாரக்கண்டு நான் உய்ந்தவிதம் என் னவியப்பு என்பது.

(வி - ரை.) இனியமொழி என்றற்கு, "பண்ணார்ந்தமொழி" என்றார். (உ)

ஆதமிலியான்பிறப்பிறப்பென்னுமருநரகி
லார்தமருமின்றியேயழுந்துவேற்காவாவென்
றோதமலிநஞ்சுண்டவுடையானேயடியேற்குன்
பாதமலர்காட்டியவாறன்றேயெம்பரம்பரனே.

(ப - ரை.) ஆதம் இலி - ஆதரவிலியாகிய, யான் - நான், பிறப்பு இறப்பு என்னும் - பிறப்பிறப்பென்கிற, அரு நரகில் - அரிய நரகத்தில், ஆர் தமரும் இன்றியே - தமரொருவருமில்லாமலே, அழுந்துவேற்கு - மூழ்குகின்றவனாகிய எனக்கு, ஆவா என்று - ஐயோ வென்று, ஓதம் மலி நஞ்சு உண்ட - கடலிற்பெருகிய நஞ்சையுண்ட, உடையானே - உடையவனே, அடியேற்கு - அடியேனுக்கு, உன் பாதமலர் - உன் திருவடித்தாமரை மலரை, காட்டிய ஆறு அன்றே -

காட்டியவிதமன்றே, எம் பரம்பரனே - எமது மேலோர்க்கு மேலா
னவனே, எ - று.

(க - ரை.) ஆதரவற்றவனாய்ப் பிறப்பிறப்பென்னும் அரிய நரகத்தில் அழுந்துகின்ற எனக்கு ஐயோவென்றிரங்கி உன் திருவடித் தாமரைமலரைக் காட்டின விதம் என்ன வியப்பு என்பது.

(வி - ரை.) தமர்-உறவினர். ஆதரமென்பது, ஆதமென நின்றது செய்யுள்விகாரம். (௫)

பச்சைத்தாலரவாட்டீபடர்சடையாய்பாதமல
ருச்சத்தார்பெருமானேயடியேனையுய்யக்கொண்
டெச்சத்தார்சிறுதெய்வமேத்தாதேயச்சோவென்
சித்தத்தாறுய்ந்தவாறன்றேயுன்றிறநினைந்தே.

(ப - ரை.) பச்சை தாலு அரவு ஆட்டீ - பச்சை நாக்கினையுடைய பாம்பை அசைப்பவனே, படர் சடையாய் - விரிந்த சடையையுடையவனே, உச்சத்து ஆர் - உயர்ச்சியோடு பொருந்திய, பாத மலர் - திருவடித்தாமரை மலரையுடைய, பெருமானே - பெருமையுள்ளவனே, அடியேனை - அடியனேனை, உய்ய - உய்யும்வண்ணம், கொண்டு - ஆட்கொண்டு, எச்சத்து ஆர் - குறைகளோடுகூடின, சிறு தெய்வம் - சிறு தெய்வங்களை, ஏத்தாதே - துதியாமல், உன் திறன் நினைந்து - உன் திறத்தையே கருதி, என் சித்தத்து ஆறு - என் மனத்தின்படியே, உய்ந்த ஆறு - நான் உய்ந்தவிதம், அச்சோ அன்றே - அதிசயமன்றே, எ - று.

(க - ரை.) பாம்பசைப்பவனே, பரந்த சடையையுடையவனே, சிறந்த திருவடித்தாமரையை யுடையவனே, புன் சிறு தெய்வங்களை நான் துதியாதபடி உன் திறத்தையே நினைந்து உய்ந்தவிதம் என்ன வியப்பு என்பது.

(வி - ரை.) தாலு அரவென்பது தாலரவெனக் குற்றுகர விதியாற் புணர்ந்தது. உச்சத்தார்-தேவர் எனினுமாம். திறன்-தன்மை.

கற்றறியேன்கலைஞானங்கசிந்துருகேனாயிடினு
மற்றறியேன்பிறதெய்வம்வாக்கியலால்வார்கழல்வந்
துற்றிறுமாந்திருந்தேனெம்பெருமானேயடியேற்குப்
பொற்றவிசுநாய்க்கிடுமாறன்றேநின்பொன்னருளே.

(ப - ரை.) கலை ஞானம் கற்றறியேன் - கலைஞானங்களைக் கற்றறிந்திலேன், கசிந்து உருகேன் - மனங் கசிந்து உருகேன், ஆயி

டினும் - ஆனாலும், வாக்கு இயலால் - வாக்கினியற்கையால், பிற தெய்வம் - வேறு தெய்வங்களை, அறியேன் - துதித்தறியேன், வார் கழல் வந்து உற்று - உன் நெடிய திருவடியை வந்தடைந்து, இறு மாந்து இருந்தேன் - இறுமாப்படைந்திருந்தேன், எம்பெருமானே - எம்பிரானே, அடியேற்கு - அடியேனுக்கு, நின் பொன் அருள் - உன் அழகிய அருள் வாய்த்தவாறு, நாய்க்கு - நாயினுக்கு, பொன் தவிசு - பொற்பீடத்தை, இடும் ஆறு அன்றே - இட்டவிதம் போல் வதன்றோ, எ - று.

(க - ரை.) கலை ஞானங்களைக் கற்றறியேன், மனம்கசிந்துரு கேன், ஆனாலும் பிறதெய்வத்தை வாழ்த்தியறியேன், உன் திருவடிப் பேற்றால் இறுமாந்திருந்தேன், இப்படிப்பட்ட என்மீது உன் பேரருள் செய்தவிதத்தை நோக்கின், நாய்க்குப் பொற்பீடம் இட்டாற் போல்வதன்றோ, இது என்ன வியப்பு என்பது.

(வி - ரை.) கலைஞானம் - கல்விநூல். பிறதெய்வமென்றது பிறவிக்கோட்பட்ட சிறு தெய்வங்களை. இதனை, செத்துப்பிறக் கின்ற தெய்வங்கள் மணவாளவென்னு மான்றோர் வாக்கானு முணர்க. (௫)

பஞ்சாயவடி மடவார்கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நஞ்சாயதுயர்கூர நடுங்குவேனின்னருளா
லுய்ஞ்சேனெம்பெருமானேயுடையானேயடியேனை
யஞ்சேலென்றாண்டவாறன்றேயம்பலத்தமுதே.

(ப - ரை.) பஞ்சு ஆய அடி - பஞ்சுபோன்ற பாதத்தையுடைய, மடவார் - மாதர்களுடைய, கடைக்கண்ணால் இடர்ப்பட்டு - கடைக் கண் பார்வையால் துன்பப்பட்டு, நஞ்சு ஆய - நஞ்சுபோன்ற, துயர் கூர - துயரம்மிகுதலால், நடுங்குவேன் - நடுங்குவேனாகிய நான், நின் அருளால் - உன் அருளினால், உய்ஞ்சேன் - உய்ந்தேன், எம் பெருமானே - எமது சிவபிரானே, உடையானே - உடையவனே, அம்பலத்து அமுதே - அம்பலத்திலுள்ள அமிர்தமே, அடியேனை - அடியேனை, அஞ்சேல் என்று - அஞ்சாதேயென்று, ஆண்ட ஆறு - ஆண்டருளின விதம் இருந்தவா றழகிது, எ - று.

(க - ரை.) மாதர் கடைக்கண்ணால் துன்பமடைந்து நடுங்கு கின்ற நான் உன் கருணையால் உய்ந்தேன், அடியேனை அஞ்சே லென்று நீ யாட்கொண்ட விதம் என்ன வியப்பு என்பது.

(வி - ரை.) "பண்டறியேன் கூற்றென்பதனை யினி யறிந்தேன் பெண்டகையாற் பேரமர்க்கட்டு" என்றும், "கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப் பேதைக் கமர்த்தனகண்" என்றும் மேலோர் கூறுதலால். "மடவார்கடைக் கண்ணாலிடர்ப் பட்டு நெஞ்சாய துயர்கூர நடுங்குவேன்" என்றார். (௬)

என்பாலைப்பிறப்பறுத்திங்கிமையவர்க்குமறியவொண்ணாத்
தென்பாலைத்திருப்பெருந்துறையுறையுஞ்சிவபெருமா
னன்பாநீயகநெகவேபுகுந்தருளியாட்கொண்ட
தென்பாலேநோக்கியவாறன்றேயெம்பெருமானே.

(ப - ரை.) என்பால் பிறப்பு - என்பாற்பட்ட பிறவித்தளையை, அறுத்து - சேதித்து, இங்கு - இவ்விடத்தில், இமையவர்க்கும் அறியவொண்ணா - தேவர்களுக்கும் அறியவொண்ணாத, தென்பால்-தென்றிசையிலுள்ள, திருப்பெருந்துறை உறையும் - திருப்பெருந்துறையில் வாழ்கின்ற, சிவபெருமான் - சிவபெருமானே, அன்பால்-(என்னிடத்து உனக்குள்ள) அன்பினால், நீ - நீ, அகம்நெக புகுந்து அருளி - என்மனம் நெகிழும்படி எழுந்தருளி, ஆட்கொண்டது - ஆட்கொண்டருளினது, என்பாலே நோக்கிய ஆறு - என்னிடத்தே நீ நோக்கம் வைத்தபடியாம், இதென்ன வியப்பு எம்பெருமானே? எ - று.

(கு - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமானே, என்பிறப்பை அறுத்து என்னை ஆட்கொண்டருளினது என்மீது நீ அருணோக்கம் வைத்தபடியேயாம், இதென்னவியப்பு என்பது.

(வி - ரை.) என்பாலை, தென்பாலை என்பவற்றில் ஐ சாரியை. சிவபெருமான் அண்மைவிளி. தேவரை இமையவர் என்றது - மங்கலவழக்கு. (௭)

மூத்தானேமூவாதமுதலானேமுடிவில்லா
வோத்தானேபொருளானேயுண்மையுமாயின்மையுமாய்ப்
பூத்தானேபுகுந்திங்குப்புரள்வேனைக்கருணையினாற்
பேர்த்தேநீயாண்டவாறன்றேயெம்பெருமானே.

(ப - ரை.) மூத்தானே - மூத்தவனே, மூவாதமுதலானே - மூக்காத முதல்வனே, முடிவு இல்லா - முடிவற்ற, ஓத்தானே - வேதப்

பிரதிபாத்தியனே, பொருளானே - வேதப்பொருளா யுள்ளவனே, உண்மையுட் ஆய் இன்மையும் ஆய் - உண்மையும் இன்மையு மாகி, பூத்தானே - பொலிந்தவனே, இங்கு புரள்வேனை - இவ்வுலகத்தில் புரள்வேனாகிய என்னை, கருணையினால் புகுந்து - கருணையால் எழுந்தருளி, பேர்த்து - என்னிலையைப் பெயர்த்து, நீ ஆண்ட ஆறு - நீ ஆண்டருளினவிதம் இருந்தவாறு அழகிது, எ - று.

(க - ரை.) மூத்தவனே, மூவாத முதல்வனே, முடிவற்ற வேதப்பிரதிபாத்தியனே, உண்மையின்மைகளா யிருப்பவனே. இவ்வுலகத்திற்கிடந்து புரள்வேனாகிய என்னை உன் பெருங்கருணையால் ஆண்டருளின விதம் என்னவியப்பு என்பது.

(வி - ரை.) "மூத்தானே மூவாத முதலானே" என்றது மூட்பாணினியவன் என்றபடி. பூத்தானே புகுந்து என்பதற்கு பூமியில் நீதானேவலியவந்து என்றுரைத்தலுமாம். (அ

மருவினியமலர்ப்பாதமனத்தில்வளர்ந்துள்ளுருகத்
தெருவுதொறுமிகவலறிச்சிவபெருமானென்றேத்திப்
பருகியநின்பரங்கருணைத்தடங்கடலிற்படிவாமா
றருளெனக்கிங்கிடைமருதேயிடங்கொண்டவம்மானே.

(ப - ரை.) மரு இனிய-மணத்தால் இனிதாகிய, மலர்-தாமரைமலர்போன்ற, பாதம் - உன் திருவடிகள், மனத்தில் வளர்ந்து - என் மனத்தில் வளர்ந்து, உள் உருக்க - உள்ளுருக்க, தெருவு தொறும் - வீதிகள்தோறும், மிக அலறி - மிகவும் அலறி, சிவபெருமான் என்று ஏத்தி - சிவபெருமானேயென்று துதித்து, பருகிய - பருகத் நின் - உனது, பரங்கருணை - பெருங்கருணையாகிய, தடம் கடலில் பெருங்கடலில், படிவு ஆம் ஆறு – படியும்வண்ணம், இங்கு எனக்கு அருள் - இங்கு எனக்கு அருள்செய்வாயாக, இடை மருதே - திருவிடைமருதூரையே, இடம் கொண்ட - இடமாகக்கொண்ட, அம்மானே - எமது தந்தையே, எ - று.

(க - ரை.) தாமரைமலர்போலும் உன் திருவடிகள் என் மனத்திற்றங்கி உள்ளுருக்கத் தெருக்கள்தோறும் அலறிச் சிவபெருமானேயென்று துதித்து, உன் பெருங்கருணைக்கடலில் அழுந்தச்செய்தருள வேண்டும், திருவிடைமருதூரப்பனே, என்பது.

(வி - ரை.) மருவினிய என்பதற்கு அன்பர் அடைதற்கினிமையாயிருக்கிற எனினுமாம். பருகிய செப்பியவென்னும் ...ய் பாட்டெச்சம். இது படிவாமாறு என்பதின் முதனிலையோடு முடிந்தது. (௯)

நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநமவெனப்பெற்றேன்
றேனாயின்னமுதமுமாய்த்தித்திக்குஞ்சிவபெருமான்
றானேவந்தெனதுள்ளம்புகுந்தடியேற்கருள்செய்தா
னூனாருமுயிர்வாழ்க்கையொறுத்தன்றேவெறுத்திடவே.

(ப - ரை.) தேன் ஆய் - தேன்போன்றும், இன் அமுதமும் ஆய் - இனிய அமிர்தம்போன்றும், தித்திக்கும் - இனிக்கின்ற, சிவபெருமான் - சிவபெருமானானவன், தானே வந்து - தானே எழுந்தருளி, எனது உள்ளம் புகுந்து - என் மனத்திற் புகுந்து, ஊன் ஆரும் - உடலோடுகூடிய, உயிர் வாழ்க்கை - உயிர் வாழ்க்கையை, ஒறுத்து வெறுத்திட - மிகவும் வெறுத்திடும்வண்ணம், அடியேற்கு அருள் செய்தான் - அடியேனுக்கு அருள்புரிந்தான், (இவ்வாறு இறைவன் அருள்புரிந்தமையால்) சிவாயநம என பெற்றேன் - ஸ்ரீபஞ்சாட்சரத்தியானஞ் செய்யப் பாத்திரனாயினேன், (ஆகவே, நானேயோ தவம் செய்தேன் - நான்தானே யிப்பெற்றியை யடையத்தக்க தவஞ் செய்தவனாயினேன். சிவாயநம எனப்பெற்றேன், எ - று.

(க - ரை.) தேன் முதலியவைபோல இனிக்கின்ற சிவபெருமான் தானேவந்து என் மனம்புகுந்து, நான் இப்பிறவியை வெறுக்கும்படி எனக்கு அருள்செய்தான்; இவ்வாறு இவன் அருள்செய்ய அதனால் ஸ்ரீபஞ்சாட்சரத்தைத் தியானிக்கத்தக்க நற்றவத்தைச் செய்தவனாயினேன் என்பது.

(வி - ரை.) தேனாய் அமுதமுமாய் என்பவற்றில் ஆய் உவமவுருபு. ஒறுத்தல் - உண்டி சுருக்கல் முதலியவற்றால் வருத்துதல் எனினுமாம். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# திருப்புலம்பல்.

## சிவானந்தமுதிர்வு.

### கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பூங்கமலத்தயனொடுமாலறியாதநெறியானே
கோங்கலர்சேர்குவிமுலையாள்கூறாவெண்ணீறாடீ
யோங்கெயில்சூழ்திருவாரூருடையானேயடியேனின்
பூங்கழல்களவையல்லாதெவையாதும்புகழேனே.

(ப - ரை.) பூ கமலத்து - அழகிய தாமரைமலரிலுள்ள, அயனொடு - பிரமனோடு, மால் - திருமாலும், அறியாத - அறியவொண்ணாத, நெறியானே - வழியையுடையவனே, கோங்கு அலர் சேர் - கோங்கரும்பை நிகர்த்த, குவிமுலையாள் - குவிந்த தனங்களையுடையவளாகிய உமாதேவியின், கூறா - பங்கனே, வெண்ணீறு ஆடீ - திருவெண்ணீறணிவோனே, ஓங்கு எயில் சூழ் - உயர்ந்த மதில் சூழ்ந்த, திரு ஆரூர் உடையானே - திருவாரூரை யுடையவனே, அடியேன் - அடியனேன், நின் - உனது, பூ கழல்கள் அவையல்லாது - பொலிவாகிய திருவடிகளாகிய அவற்றை யன்றி, எவை - வேறெவற்றையும், யாதும் புகழேன் - சிறிதும் புகழேன், எ - று.

(க - ரை.) திருவாரூரில் எழுந்தருளிய இறைவனே, அடியேன் உன் திருவடியை யன்றி வேறொன்றையும் புகழேன் என்பது.

(வி - ரை.) பூ - பொலிவு எனினுமாம். அயன் அஜன் என்னும் வடமொழித்திரிபு. (௧)

சடையானேதழலாடீதயங்குமூவிலைச்சூலப்
படையானேபரஞ்சோதீபசுபதீமழவெள்ளை
விடையானேவிரிபொழில்சூழ்பெருந்துறையாயடியேனு
னுடையானேயுனையல்லாதுறுதுணைமற்றறியேனே.

(ப - ரை.) சடையானே - சடாபாரத்தை யுடையவனே, தழலாடீ - அழலாடுவோனே, தயங்கும் - விளங்குகின்ற, மூவிலை - மூன்றிலைகளையுடைய, சூலப்படையானே-சூலப்படையை யுடையவனே, பரஞ்சோதி - பரஞ்சுடரே, பசுபதீ - பசுபதியே, மழவு - இளமை பொருந்திய, வெள்ளை விடையானே - வெள்விடையை யுடையவனே, விரி பொழில் சூழ் - விரிந்த சோலை சூழ்ந்த, பெருந்துறையாய்-திருப்பெருந்துறையை யுடையவனே, உடையானே - உடையவனே, அடியேன் நான் - அடியேனாகிய நான், உன்னை அல்லாது - உன்னையன்றி, மற்று உறு துணை-வேறு உற்ற துணையை, அறியேன்-அறிந்திலேன், எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபிரானே, உன்னையன்றி உற்றதுணையை நான் அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) தழலாடி - தழலோடாடி. பசுபதி - ஆன்மாக்களுக்குத் தலைவன். (௨)

உற்றாரையான்வேண்டேனூர்வேண்டேன்பேர்வேண்டேன்
கற்றாரையான்வேண்டேன்கற்பனவுமினியமையுங்
குற்றாலத்தமர்ந்துறையுங்கூத்தாவுன்குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக்கசிந்துருகவேண்டுவனே.

(ப - ரை) யான் - நான், உற்றாரை வேண்டேன் - உறவினரை விரும்பேன், ஊர்வேண்டேன் - ஊரைவிரும்பேன், பேர்வேண்டேன் - பேரை விரும்பேன், யான் - நான், கற்றாரைவேண்டேன் - கற்றாரைவிரும்பேன், இனிகற்பனவும் - இனிக்கற்கவேண்டுவனவும், அமையும் - போதும், குற்றாலத்து அமர்ந்து உறையும் - திருக்குற்றாலத்தில் விரும்பியுறைகின்ற, கூத்தா - கூத்தப்பிரானே, உன்குரைகழற்கே - உனது ஒலிக்கின்ற வீரகண்டையணிந்த திருவடிக்கே, கற்றாவின் மனம்போல - கன்றையுடைய பசுவைப்போல, கசிந்து உருகவேண்டுவன் - கசிந்துருகவிரும்புவேன், எ - று.

(க - ரை.) திருக்குற்றாலத்திறைவனே, உற்றார் முதலியவும் யான் விரும்பேன், உன் திருவடிப்பேற்றின்பொருட்டே கற்றாவின் மனம்போலக்கனிந்துருக விரும்புவேன் என்பது.

(வி - ரை.) குழைகழல் - வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. கன்று ஆ என்பது கற்றா என வலித்தலாயிற்று. ஆகவே கன்றையுடைய பசுவென்பது பொருள். (௰)

திருச்சிற்றம்பலம்.

---

# குலாப்பத்து.

## அனுபவமிடையீடுபடாமை.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

ஓடுங்கவந்தியுமேயுறவென்றிட்டுள்கசிந்து
தேடும்பொருளுஞ்சிவன்கழலேயெனத்தெளிந்து
கூடுமுயிருங்குமண்டையிடக்குனித்தடியே
னாடுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(ப - ரை.) ஓடும் கவந்தியுமே - ஓடும் கோவணமுமே, உறவு என்றிட்டு - உறவென்று துணிந்து, உள்கசிந்து - மனங்கசிந்து, தேடும் பொருளும் - தேடுகிறபொருளும், சிவன் கழலே எனத்தெளிந்து - சிவபெருமானது திருவடிகளே யென்று தெளிந்து, கூடும் உயிரும் - உடலும் உயிரும், குமண்டையிடக் குனித்து - நிறைந்து தெவிட்ட நடித்து, அடியேன் - அடியனேன், ஆடும் - நடிக்கின்ற, குலாத்தில்லையாண்டானைக் கொண்டன்று - விளங்குகின்ற தில்லையாண்டானைப் பற்றினேன், எ - று.

(க - ரை.) ஓட்டையும் கோவணத்தையும் உறவெனத் துணிந்து, தேடுதற்குரிய பொருளும் சிவபிரான் திருவடியேயென்றுதேறி, உடலுயிர்கள் நிறைந்து தெவிட்டும்படி நடித்து, குலாத்தில்லையாண்டானைப்பற்றினேன் என்பது.

(வி - ரை.) ஓடு - பலிபாத்திரம். "விமலர்தந்தவோடு" என்புழி ஓடு இப்பொருட்டாதல்காண்க. குமண்டை ஓர் கூத்தென்பாருமுளர். தில்லை - தில்லைவனமாகிய சிதம்பரம். (௧)

துடியேரிடுகிடைத்தூய்மொழியார்தோணசையாற்
செடியேறுதீமைகளெத்தனையுஞ்செய்திடினு
முடியேன்பிறவேனெனைத்தனதாண்முயங்குவித்த
வடியேன்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(ப - ரை.) துடி ஏர் - உடுக்கைபோன் றழகிய, இடுகு இடை - சுருங்கிய இடையினையும், தூ மொழியார் - இன்மொழியையும் உடைய மாதரது, தோள் நசையால் - தோள் விருப்பத்தால், செடி யேறு தீமைகள் - பாவம் மிகுதற்கேதுவாகிய தீமைகள், எத்தனையும் செய்திடினும் - எவ்வளவு செய்தாலும், அடியேன் முடியேன் பிற வேன் - அடியேன் இறவேன் பிறவேன், எனை - என்னை, தன தாள் முயங்குவித்த - தன் திருவடிகளைத் தழுவுவித்த, குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லை யாண்டானைப் பற்றி னேன், எ - று.

(க - ரை.) மாதர் தோளைத் தழுவவேண்டுமென்னும் விருப் பத்தால் நான் எத்தனையோ தீமைகளைச்செய்தாலும் என் பிறப்பு இறப்புக்களை யறுத்துத் தன் திருவடியை யடைவித்த குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன் என்பது.

(வி - ரை.) இடுகுதல் - சுருங்குதல். நசை - விருப்பம். செடி - குற்றம். அது இங்குப் பாவத்துக்காயிற்று. (உ)

என்புள்ளுருக்கியிருவினையையீடழித்துத்
துன்பங்களைந்துதுவந்துவங்கடூய்மைசெய்து
முன்புள்ளவற்றைமுழுதழியவுள்புகுந்த
வன்பின்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(ப - ரை.) என்பு உள் உருக்கி - என்புள்ளும் உருகச்செய்து, இருவினையை ஈடு அழித்து - இருவினைகளின் பெருமை குலைத்து, துன்பம் களைந்து - துன்பத்தை நீக்கி, துவந்துவங்கள் தூய்மை செய்து - (அவற்றின்) தொடர்புகளைப் பரிசுத்தப்படுத்தி, முன்பு உள்ளவற்றை - முன்புள்ளனவற்றை, முழுது அழிய - முழுதும் நசிக்க, உள் புகுந்த - என் மனத்திற் புகுந்த, அன்பின் - அன்பினை யுடைய, குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன், எ - று.

(க - ரை.) என் என்புருக்கி இருவினையைக் கெடுத்து, தூன் பத்தைக் களைந்து, பற்றுக்களை யொழித்து, இனிமேல் வரக்கடவன வாகிய துன்பங்கள் முழுதும் அழியும்படி என் மனத்திற் புகுந்திருந்த குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன் என்பது.

(வி - ரை.) த்வந்த்வம் என்னும் வடமொழி துவந்துவம் என வந்தது. தூய்மை செய்தல் - இல்லையாக்குதல். முன்புள்ளவற்றை என்றது இனிமேல் வரக்கடவதுன்பங்களை. (௯)

குறியுநெறியுங்குணமுமிலார்குழாங்கடமைப்
பிறியுமனத்தார்பிறிவரியபெற்றியனைச்
செறியுங்கருத்திலுருத்தமுதாஞ்சிவபதத்தை
யறியுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(ப - ரை.) குறியும் - அடையாளமும், நெறியும் - வழியும், குணமும் - குணமும், இல்லார்-இல்லாதவரும், குழாங்கள் தம்மை-பாசக்கூட்டங்களை, பிறியும் மனத்தார் - பிரிகின்ற மனத்தையுடையவரும் ஆகிய அன்பர், பிறிவு அரிய-தன்னைவிட்டுப் பிரிதல் அருமையாகிய, பெற்றியனை-தன்மையையுடையவனை, செறியும் கருத்தில்-நெருங்கின மனத்தில், உருத்து - உருக்கொண்டு, அமுது ஆம் சிவபதத்தை - அமிர்தமாகிய சிவபதத்தை, அறியும் - அறிஞரால் அறியப்படுகின்ற, குலாத்தில்லையாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லையாண்டானைப் பற்றினேன், எ - று.

(க - ரை) குறி முதலியவையில்லாதவரும்மனைவிமக்கள் முதலியபாசக் கூட்டத்தைவிட்ட வருமாகிய அன்பர் தன்னைவிட்டு நீங்குதற்கரிய தன்மையையுடையவனை, நெருங்கின மனத்தில் உருவங்கொண்டுவந்து அமிர்தமாயிருக்குஞ் சிவபதத்தை, அறிஞரால் அறியத்தகுந்த குலாத்தில்லையாண்டானைப்பற்றினேன் என்பது.

(வி - ரை.) குறி முதலியவையின்மையும், பாசக்கூட்டங்களிடத்தில் பற்றின்மையும் அன்பர்க்கிலக்கணமாதலால் "குறியுநெறியுங் குணமுமிலார் குழாங்கடமைப் பிறியுமனத்தார்" என்றார். செறிதல்-கிட்டுதல். உருத்து பெயரடியாகப்பிறந்த வினை. அறியும் செயப்பாட்டுவினை. (௰)

பேருங்குணமும்பிணிப்புறுமிப்பிறவிதனைத்
தூரும்பரிசுதுரிசறுத்துத்தொண்டரெல்லாஞ்
சேரும்வகையாற்சிவன்கருணைத்தேன்பருகி
யாருங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(ப - ரை.) பேருங் குணமும் - பேரும் குணமும், பிணிப்புறும் - தளைக்கின்ற, இ பிறவி தன்னை - இந்தப்பிறவியை, தூரும் பரிசு - தூரும்வண்ணம், துரிசு அறுத்து - பற்றறுத்து, தொண்டர் எல்லாம் - தொழும்பர் எல்லாரும், சேரும் வகையால் - கூடும் விதத்தால், சிவன் - சிவபெருமானது, கருணை - கருணையாகிய, தேன் - தேனை, பருகி - உண்டு, ஆரும் - யாவரும் வந்து பொருந்துகின்ற, குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன், எ - று.

(க - ரை.) பேர் முதலியவற்றால் தளைக்கப்படுகின்ற இந்தப் பிறவியைப் பற்றறுத்துத்தொண்டர்யாவரும் சேரும்விதத்தால் சிவ பெருமானது கருணையாகிய தேனைப்பருகி, யாவரும்வந்து பொருந்துகின்ற குலாத்தில்லையாண்டானைப்பற்றினேன் என்பது.

(வி - ரை) தூர்தல் - நிரவுதல். பருகல் - உண்டல். (௫)

கொம்பிலரும்பாய்க்குவிமலராய்க்காயாகி
வம்புபழுத்துடலமாண்டிங்ஙன்போகாமே
நம்புமென்சிந்தைநணுகும்வண்ணநானணுகு
மம்பொன்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(ப - ரை.) கொம்பில் அரும்பு ஆய் - கொம்பில் அரும்பாகி, குவி மலர் ஆய் - குவிந்த மலராகி, காய் ஆகி - காயாகி, வம்பு பழுத்து - வீணே பழுத்து, உடலம் - உடம்பு, மாண்டு - மடிந்து, இங்ஙன்போகாமே - இப்படி போகாமல், நம்பும் - நம்புகின்ற, என் சிந்தை - என் மனம், நணுகும் வண்ணம் - அணுகும் வண்ணம், நான் அணுகும் - நான் அணுகப்பெற்ற, அம்பொன் - அழகிய பொன்மயமான, குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன், எ - று.

(க - ரை.) இவ்வுடம்பானது கொம்பில் அரும்புபோன்றும், மலர்போன்றும், காய்போன்றும, முதிர்ந்து இங்கு வீணாய் மாண்டு

போகாமல், என் மனம் நம்பிச்சேரும்படி நான் அடைந்த குலாத் தில்லையாண்டானைப் பற்றினேன் என்பது.

(வி - ரை.) ஆய் என்பன இரண்டும் ஆகி யென்ப தொன்றும் போன்று என்னும் பொருளில் வந்தன. (௬)

மதிக்குந்திறலுடையவல்லரக்கன்றோ ணெரிய
மிதிக்குந்திருவடியென்றலைமேல்வீற்றிருப்பக்
கதிக்கும்பசுபாசமொன்றுமிலோமெனக்களித்திங்
கதிர்க்குங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(ப - ரை.) மதிக்கும்-யாவரும் மதித்தற்குரிய, திறல் உடைய - வெற்றியையுடைய, வல் அரக்கன் - வலிய அரக்கனாகிய இராவண னது, தோள் நெரிய - தோள்கள் நொறுங்கும்படி, மிதிக்கும் - ஊன்றின, திருவடி - திருவடி, என் தலைமேல் வீற்றிருப்ப - என் சிர மீது வீற்றிருக்க, கதிக்கும் - பெருகுகின்ற, பசுபாசம் - பசுபாசங்க ளாகிய, ஒன்றும் இலோம் என - ஒன்றையும் உடையோ மல்லோ மென்று, களித்து - களிப்படைந்து, இங்கு அதிர்க்கும் - இங்கு ஆரவாரித்தற்குக் காரணமான, குலாத்தில்லை யாண்டானைக் கொண் டன்று - குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன், எ - று.

(க - ரை.) யாவராலும் மதிக்கப்பெற்ற வெற்றியையுடைய வலிய அரக்கனாகிய இராவணனது தோள் நெரியும்படி மிதித்த திரு வடி என் சிரசின்மேல் வீற்றிருக்க, மேலுமேலும் பெருகுகின்ற பசு பாசங்களில் சிறிதும் யாம் உடையோமல்லோம் எனக்களித்து ஆர வாரித்தற்குக் காரணமான குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன் என்பது.

(வி - ரை.) தோணெரிய மிதிக்குந் திருவடி யென்றமையால் மதிக்குந் திறலுடைய வல்லரக்கன் என்றது இராவணனைக் குறித் தது. கதித்தல் - பருத்தல். பசு - பாச சம்பந்தமுடையது. பாசம் - ஆணவாதியமலம். (௭)

இடக்குங்கருமுருட்டேனப்பின்கானகத்தே
நடக்குந்திருவடியென்றலைமேனட்டமையாற்
கடக்குந்திறலைவர்கண்டகர்தம்வல்லாட்டை
யடக்குங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(ப - ரை.) இடக்கும் - இடக்குச்செய்கிற, கரு - கரிய, முருட்டு எனப்பின் - முருட்டுப்பன்றியின்பின்னே, கானகத்து நடக்கும் - காட்டில் நடந்த, திருவடி - திருவடியை, என் தலைமேல் நட்டமையால் - என் சிரத்தின்மீது நட்டதனால், கடக்கும் - வெல்லுகின்ற, திறல் - வலியையுடைய, ஐவர் கண்டகர் - ஐந்து துட்டர்களுடைய, வல்லாட்டை - வலிய ஆட்டை, அடக்கும் - அடக்கின, குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன், எ - று.

(க - ரை.) ஒருவர்க்கும் வயப்படாத கரிய முருட்டுப்பன்றியின்பின்னே நடந்த திருவடியை என் தலைமீது நட்டதனால், யாவரையும் வெல்லுகின்ற வலியமைந்த ஐந்து துட்டர்களுடைய வல்லாட்டை அடக்கின குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன் என்பது.

(வி - ரை.) எனத்துப்பின் எனற்பாலது எனப்பின் என அத்துச்சாரியை குறைந்துவந்தது. ஏனம் - பன்றி. ஐவர் என்றது ஐம்பொறிகளை. (அ)

பாழ்ச்செய்விளாவிப்பயனிலியாய்க்கிடப்பேற்குக்
கீழ்ச்செய்தவத்தாற்கிழியீடுநேர்பட்டுத்
தாட்செய்யதாமரைச்சைவனுக்கென்புன்றலையா
லாட்செய்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே

(ப - ரை.) பாழ் செய் விளாவி - பாழாகிய வயலில் சேர்ந்து, பயன் இலி ஆய் - பயனிலியாகி, கிடப்பேற்கு - கிடக்கின்ற எனக்கு, கீழ் செய்தவத்தால் - முன்னே செய்த தவத்தினால், கிழியீடு நேர்பட்டு - கிழியீடு கிடைத்து, தாள் செய்ய தாமரை - திருவடியாகிய செந்தாமரைமலரையுடைய, சைவனுக்கு - சைவனுக்கு, என் புன்தலையால் - என் புல்லிய சிரத்தால், ஆட்செய் - அடிமைசெய்ய, குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன், எ - று.

(க - ரை.) பாழ்வயலிற் சேர்ந்து வீணாய்க்கிடக்கின்ற எனக்கு முற்செய்த தவத்தால் பொற்கிழிபோலக் கிடைத்து, சைவனது திரு

வடித்தாமரைக்கு என் புல்லிய தலையால் ஆட்செய்தற்கிடமாகிய குலாத்தில்லையாண்டானைப் பற்றினேன் என்பது.

(வி - ரை.) பாழ்செய் - சாவியாய்ப்போன விளைநிலம். இழிநிதிப்பொதி. சைவன் என்றது தம்மை யாண்டருளும்பொருட்டுச் சிவப்பிராமணனாய் வந்த சிவபிரானை. அல்லது சிவபெருமானை ஆதிசைவனென வாகமங்கள் கூறலினெனினு மமையும். (௯)

கொம்மைவரிமுலைக்கொம்பனையாள்கூறனுக்குச்
செம்மைமனத்தாற்றிருப்பணிகள்செய்வேனுக்
கிம்மைதரும்பயனித்தனையுமீங்கொழிக்கு
மம்மைகுலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

(ப - ரை.) கொம்மை - திரட்சியாகிய, வரி - தேமல்படர்ந்த, முலை - தனங்களையுடைய, கொம்பு அனையாள் - பூங்கொம்புபோல்பவளாகிய உமாதேவியின், கூறனுக்கு - பங்கனுக்கு, செம்மை மனத்தால் - செவ்விய மனத்தினால், திருப்பணிகள் செய்வேனுக்கு - திருத்தொண்டுகள் செய்வேனுக்கு, இம்மை தரும்பயன் இத்தனையும் - இப்பிறப்பிலுண்டாகின்ற பயனிவ்வளவையும், ஈங்கு ஒழிக்கும் - இவ்விடத்தே நீக்குகின்ற, அம்மை - தாயாகிய, குலாத்தில்லையாண்டானைக் கொண்டன்று - குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன், எ - று.

(க - ரை.) உமாதேவி பாகனுக்கு செவ்விய மனத்தோடு திருத்தொண்டுசெய்கின்ற எனக்கு, இம்மையில் உண்டாகிற சுகதுக்கங்களாகிய பயன்களை யொழிக்கின்ற தாயாகிய குலாத்தில்லை யாண்டானைப் பற்றினேன் என்பது.

(வி - ரை.) கூறன் என்ற குறிப்பால், கொம்மைவரிமுலைக் கொம்பனையாள் என்றது உமாதேவிக்காயிற்று. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# அற்புதப்பத்து.

## அநுபவமாற்றாமை.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மையலாயிந்தமண்ணிடைவாழ்வெனுமாழியுளகப்பட்டுத்
தையலாரெனுஞ்சுழித்தலைப்பட்டுநான்றலைதடுமாறாமே
பொய்யெலாம்விடத்திருவருடந்துதன்பொன்னடியிணைகாட்டி
மெய்யனாய்வெளிகாட்டிமுன்னின்றதோரற்புதம்விளம்பேனே.

(ப - ரை.) மையல் ஆய் - மயக்கங்கொண்டு, இந்த மண்ணிடைவாழ்வு என்னும் - இந்த மண்ணுலகில் வாழ்வு என்கிற, ஆழியுள் அகப்பட்டு - கடலில் சிக்கி - தையலார் என்னும் - மாதர் என்கிற, சுழித்தலைப்பட்டு - சுழியிற் சிக்கி, நான் - யான், தலைதடுமாறாமே - தலைதடுமாறாமல், பொய் எல்லாம் விட - பொய் யெல்லாம் ஒழிய, திருவருள் தந்து - திருவருளைக் கொடுத்து, தன் பொன் அடி இணை காட்டி - தன்பொன்போலும் திருவடியிரண்டைக்காட்டி - மெய்யன் ஆய் - மெய்யையுடையவனாய், வெளிகாட்டி - வெளியாகக்காட்டி, முன் நின்றது - எதிரே நின்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, அற்புதம்-அதிசயத்தை, விளம்பேன் - சொல்லேன், எ - று.

(க - ரை.) நான் மயக்கங்கொண்டு இவ்வுலக வாழ்வென்கிற கடலில், மாதரென்னும் சுழியில் அகப்பட்டுத்தடுமாறாமல், இறைவன் எனது பொய்யொழுக்கங்கள் யாவும் ஒழியத்திருவருள்செய்து, தன் இரண்டு திருவடியைக்காட்டி, மெய்யனாய் என்முன்னே வெளிப்பட்டு நின்ற அதிசயத்தைச் சொல்லுமாற்றலுடையேனல்லேன் என்பது.

(வி - ரை.) மண்ணிடைவாழ்வு - பிரபஞ்சவாழ்வு. ஆழமுடையதாதலால் கடல் ஆழியெனப்பட்டது. தையலார் - கைபுனையப்பட்டவர்.

(க)

ஏய்ந்தமாமலரிட்டுமுட்டாததோரியல்பொடும்வணங்காதே
சாந்தமார்முலைத்தையனல்லாரொடுந்தலைதடுமாறுகிப்
போந்தியான்றுயர்புகாவணமருள்செய்துபொற்கழலிணைகாட்டி
வேந்தனாய்வெளியேயென்முனின்றதோரற்புதம்விளம்பேனே.

(ப - ரை.) ஏய்ந்த - ஏற்ற, மா மலர் இட்டு - அழகிய மலர்களைக்கொண்டு அருச்சித்து, முட்டாதது - தடைபடாததாகிய, ஓர்- ஒப்பற்ற, இயல்பொடும் - முறைமையோடும், வணங்காது - தன்னைப் பணியாமல், சாந்தம் ஆர் - சந்தனம் பூசப்பெற்ற, முலை - தனங்களையுடைய, தையல் நல்லாரொடும் - மாதரோடுகூடி, தலைதடுமாறு ஆகி - தலைதடுமாற்றங்கொண்டு, யான்போந்து - நான்போய், துயர் புகா வண்ணம் - துன்பத்தில் புகாதபடி, அருள்செய்து - இறைவன் அருள்செய்து, பொன் - அழகாகிய, கழல் இணைகாட்டி - திருவடியிணையைக்காட்டி, வேந்தன் ஆய் - தலைவனாகி, வெளியே - வெளியாகவே, என்முன் - எனக்கெதிரில், நின்றது - (இறைவன்) நின்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, அற்புதம் - அதிசயத்தை, விளம்பேன் - சொல்லேன், எ - று.

(க - ரை.) இறைவனை நல்லமலர்களால் அருச்சித்து வணங்காமல் மாதர் விருப்பத்தால் தடுமாறித் துன்புறுகின்ற எனக்கு இறைவன் அத்துன்பத்தை யொழித்துத் தன் திருவடியைக்காட்டி, எனக்கெதிரே வெளிப்பட்டு நின்ற அதிசயத்தைச் சொல்லுமாற்றலுடையேனல்லன் என்பது.

(வி - ரை.) ஏய்ந்த மாமலர் என்றது இறைவற்கேற்ற அழகிய மலர் என்றபடி. முட்டாததோரியல்பு - குற்றமற்ற முறைமை. (உ)

நடித்துமண்ணிடைப்பொய்யினைப்பலசெய்துநானெனதெனுமாயக்
கடித்தவாயிலேநின்றுமுன்வினைமிகக்கழறியேதிரிவேனைப்
பிடித்துமுன்னின்றப்பெருமறைதேடியவரும்பொருளடியேனை
யடித்தடித்துவக்காரமுன்றீற்றியவற்புதமறியேனே.

(ப - ரை.) மண் இடை - பூமியில், நடித்து - நடநஞ்செய்து, பலபொய்யினைச்செய்து - பலபொய்த்தொழில்களைச் செய்து, நான் எனது என்னும்-நான் எனது என்கிற, மாயம்-மாயப்பாம்புகள், கடித்தவாயிலே நின்று - கடித்த இடத்தில் நின்று, முன்வினைமிக-முற்

காலத்துச்செய்த வினைகளாகியவிஷம் மிகுதலால், சுழற்றி எ திரிவேனை - புலம்பித் திரிகின்றவனாகிய என்னை, பிடித்து - பற்றி, முன்நின்று - எதிரேநின்று, அ - அந்த, பெருமறைதேடிய - பெரியவேதங்களும் தேடுதற்குரிய, அரும்பொருள் - அருமையாகிய பொருள், அடியேனை - அடியனேனை, அடித்து அடித்து - அடித்தடித்து, அக்காரம் - சர்க்கரைக்கட்டியை, முன் தீற்றிய - முன்னே ஊட்டின, அற்புதம் - அதிசயத்தை, அறியேன் - அறிகிலேன், எ - று.

(க - ரை.) இவ்வுலகத்தில் பொய்த்தொழில்கள் பலவற்றைச் செய்து, நான் எனது என்கிற அகங்கார மமகாரங்களாகிய பாம்புகள் கடித்தவாயினின்று முன்வினைப்பயனாகிய விஷமேற, அதனால் புலம்பித்திரிகிற என்னை, இறைவன் தன் பெருங்கருணையால் பிடித்து அடித்தடித்துச் சிவபோகமாகிய சர்க்கரைக்கட்டியை எனக்கு ஊட்டிய அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) கடித்த என்னுங் குறிப்பால் மாயத்தைப் பாம்பாக்கியும், வினையை, விஷமாக்கியும் உரைக்கலாயிற்று. அக்காரம் - சர்க்கரை. (௩)

பொருந்துமிப்பிறப்பிறப்பிவைநினையாதுபொய்களேபுகன்றுபோய்க்
கருங்குழலினார்கண்களாலேறுண்டுகலங்கியேகிடப்பேனைத்
திருந்துசேவடிச்சிலம்பவைசிலம்பிடத்திருவொடுமகலாவே
யருந்துணைவனாயாண்டுகொண்டருளியவற்புதமறியேனே.

(ப - ரை.) பொருந்தும் - பொருந்திய, இ - இந்த, பிறப்பு இறப்பு இவை - பிறப்பிறப்புக்களாகிய இவற்றை, நினையாது - நினையாமல், பொய்களே புகன்று போய் - பொய்களையே சொல்லிச் சென்று, கருங்குழலினார் - கரிய கூந்தலையுடையவராகிய மாதரது, கண்களால் ஏறுண்டு - கண்களாகிய வாட்களால் எறியப்பட்டு, கலங்கி கிடப்பேனை - கலங்கிக்கிடக்கின்ற என்னை, திருந்து - திருந்திய, சேவடி சிலம்பு அவை - சேவடியிலணியப்பெற்ற சிலம்புகளாகிய அவை, சிலம்பிட - ஒலிக்க, திருவொடும் அகலாது - உமாதேவியாரோடும் நீங்காமல், அரு - அருமையாகிய, துணைவனாய் - தலைவனாகி, ஆண்டுகொண்டருளிய - ஆண்டுகொண்டருளின, அற்புதம் - அதிசயத்தை, அறியேன் - அறிகிலேன், எ - று.

(க - ரை.) இந்தப் பிறப்பிறப்புத் துன்பங்களை நினையாமல், மாதர் கண்களாகிய வாட்களால் - எறியப்பட்டுக் கலங்கிக்கிடக்கிற என்னை, இறைவன் உமாதேவியாரோடும் எழுந்தருளி ஆண்டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) பிறப்பிறப்புத் துன்பங்களைப் பிறப்பிறப்பென்றே யொழிந்தார் அத்துன்பங்களுக்கஞ்சி. திரு என்றது உமாதேவியை.

மாடுஞ்சுற்றமுமற்றுளபோகமுமங்கையர்தம்மோடுங்
கூடியங்குளகுணங்களாலேறுண்டுகுலாவியேதிரிவேனை
வீடுதந்தென்றன்வெந்தொழில்வீட்டிடமென்மலர்க்கழல்காட்டி
யாடுவித்தெனதகம்புகுந்தாண்டதோரற்புதமறியேனே.

(ப - ரை.) மாடும் - பொன்னும், சுற்றமும் - உறவும், மற்று உள்ள போகமும் - மற்றுமுள்ள போகங்களும், மங்கையர் தம்மோடும் - மாதர்களோடும், கூடி - கலந்து, அங்கு உள்ள குணங்களால் ஏறுண்டு - அங்குள்ள குணங்களால் எறியுண்டு, குலாவி திரிவேனை கொண்டாடித்திரிகின்ற என்னை, வீடுதந்து - விடுவித்து, என்றன் வெந்தொழில் வீட்டிட - என் கொடுந்தொழில்களை அழிக்க, மென் மெல்லிய, மலர் - தாமரைமலர்போன்ற, கழல் காட்டி - திருவடியைக்காட்டி, ஆடுவித்து - ஆட்டி, எனது அகம் புகுந்து - என் மனம் புகுந்து, ஆண்டது - ஆண்டருளினதாகிய, ஓர் - ஒப்பற்ற அற்புதம் - அதிசயத்தை, அறியேன் - அறிகிலேன், எ - று.

(க - ரை.) பொன் முதலியவற்றின் ஆசையிற் சிக்கி உழல நின்ற என்னை அவ்வாசையினின்றும் விடுவித்துத் தன் திருவடியைக்காட்டி என் தீமைகளை யொழித்து என் மனம் புகுந்து என்னை ஆண்டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) போகம் - செல்வம். வீடு முதனிலை திரிந்த தொழிற்பெயர். (௫)

வணங்கும்இப்பிறப்பிறப்பிவைநினையாதுமங்கையர்தம்மோடும்
பிணைந்துவாயிதழ்ப்பெருவெள்ளத்தழுந்திநான்பித்தனாய்த்திரிவேனை
குணங்களுங்குறிகளுமிலாக்குணக்கடல்கோமளத்தொடுங்கூடி [
யணைந்துவந்தெனையாண்டுகொண்டருளியவற்புதமறியேனே

(ப - ரை.) வணங்கும் - வளைந்து கொள்ளுகின்ற, இ - இந்த, பிறப்பு இறப்பு இவை - பிறப்பிறப்புக்களாகிய இவற்றை, நினையாது - நினையாமல், மங்கையர் தம்மோடும் - மாதரோடும், பிணைந்து - கலந்து, வாய் இதழ் - வாயிதழிலுண்டாகிய, பெருவெள்ளத்து - பெரிய பெருக்கில், நான் அழுந்தி - நான் முழுகி, பித்தனாய் திரிவேனை - பித்தனாகித் திரிகின்ற என்னை, குணங்களும் குறிகளும் இல்லா—குணங்களும் குறிகளும் ஆகிய இவைகளில்லாத, குணக்கடல் - குணக்கடலாகிய சிவபிரான், கோமளத்தொடும் கூடி - உமாதேவியாரோடும் கூடி, அணைந்துவந்து - தழுவா நின்று வந்து, என்னை ஆண்டு கொண்டருளிய - என்னை ஆண்டுகொண்டருளின, அற்புதம் - அதிசயத்தை, அறியேன் - அறிகிலேன், எ - று.

(க - ரை.) சூழ்ந்து வருத்துகிற இந்தப் பிறப்பிறப்புத் துன்பங்களை நினையாமல் மாதர் இன்ப வெள்ளத்தில் அழுந்திப் பித்தனாகிய என்னை, இறைவன் உமாதேவியாரோடும் எழுந்தருளி ஆண்டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) வாயிதழ் என்றது அதராமிர்தத்தை, "பாலொடு தேன்கலந்தற்றே பணிமொழி வாலெயி றூறிய நீர்" என்றார் பெருநாவலரும். (௬)

இப்பிறப்பினி லிணைமலர்கொய்து நானியல்பொடஞ்செழுத்தோதித்
தப்பிலாதுபொற்கழல்களுக்கிடாது நான்றடமுலையார்தங்கண்
மைப்புலாங்கண்ணாலேறுண்டுகிடப்பேனைமலரடியிணைகாட்டி
யப்பனென்னைவந்தாண்டுகொண்டருளியவற்புதமறியேனே.

(ப - ரை.) இப்பிறப்பினில் - இந்தப் பிறவியில், இணை மலர் கொய்து - தொடுத்தற்குரிய மலர்களைப் பறித்து, நான் - யான், இயல்பொடு - முறைமையோடு, அஞ்சு எழுத்து ஓதி - ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையோதி, தப்பு இல்லாது - குற்றமில்லாமல், பொன் - அழகாகிய, கழல்களுக்கு - திருவடிகளில், இடாது - அணியாமல், நான் - யான், தடம் - மலைபோன்ற, முலையார் தங்கள் - தனங்களையுடையவராகிய மாதருடைய, மைப்பு உலாம் கண்ணால் - கறுப்புப் பொருந்திய கண்களால், ஏறுண்டு கிடப்பேனை - எறியுண்டு கிடக்கிற என்னை, மலர் - தாமரைமலர்போன்ற, அடி யிணை காட்டி - திருவடி யிணை

யைக்காட்டி, அப்பன் - என் அப்பனாகிய சிவபிரான், வந்து - எழுந்தருளி, ஆண்டுகொண்டருளிய - ஆண்டுகொண்டருளின, அற்புதம் - அதிசயத்தை, அறியேன் - அறிகிலேன், எ - று.

(க - ரை.) இந்தப் பிறப்பில் மலர்களைக்கொய்து, ஸ்ரீ பஞ்சாக்ஷர செபத்துடனே தன் திருவடியில் அருச்சிக்காமல் மாதர் கண் வலையிற் சிக்கி மயங்கிக் கிடக்கிற என்னை, எமது தந்தையாகிய சிவபெருமான் தானே வலிய வந்து ஆண்டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) இணைத்தல் - தொடுத்தல். இணை - தனக்குத் தானே சமானமான எனினுமாம். மைப்பு தொழிற்பெயர். (கறுத்தல்).

ஊசலாட்டுமிவ்வுடலுயிராயினவிருவினையறுத்தென்னை
யோசையாலுணர்வார்க்குணர்வரியவனுணர்வுதந்தொளியாக்கிப்
பாசமானவைபற்றறுத்துயர்ந்ததன்பரம்பெருங்கருணையா
லாசைதீர்த்தடியாரடிக்கூட்டியவற்புதமறியேனே.

(ப - ரை.) ஊசல் ஆட்டும் - ஊசல் ஆட்டுகின்ற, இவ்வுடல் உயிர் ஆயின - இந்தவுடம்பு உயிர் என்பவைகளுக்குக் காரணமான, இருவினை - இருவினைகளை, அறுத்து - சேதித்து, என்னை - அடியேனை, ஓசையால் - ஒலியினால், உணர்வார்க்கு உணர்வு அரியவன் - உணர்வார்க்கும் உணர்தற்கரியவன், உணர்வு தந்து - அறிவைக்கொடுத்து, ஒளி ஆக்கி - ஒளியுருவாக்கி, பாசமானவை பற்று அறுத்து - பாசங்களாயுள்ளவற்றைப்பற்றறுத்து, உயர்ந்த - சிறந்த, தன் - தனது, பரம் - மேன்மையாகிய, பெருங்கருணையால் - பெருங்கருணையினால், ஆசை தீர்த்து - ஆசையை நீக்கி, அடியார் அடி - அடியவர்களுடைய திருவடிகளில், கூட்டிய - சேர்த்த, அற்புதம் - அதிசயத்தை, அறியேன் - அறிகிலேன், எ - று,

(க - ரை.) இறைவன், இந்தப்பிறவிக்குக் காரணமான இருவினைகளையறுத்து என்னை ஒளியுருவாக்கி, என் பாசத்தைப் பற்றறுத்துத் தன் பெருங்கருணையால் தன் அடியார் கூட்டத்திற் சேர்த்த அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) ஊசலாட்டுதல்-கீழ்மேலாக்குதல் ஓசை - சத்தப் பிரமாணம். இருவினை - நல்வினை, தீவினைகள் இவ்விரண்டுமே பிறவிக்கேதுவாகலினவற்றை யொழித்தேனென்றார். (௮)

பொச்சையானவிப்பிறவியிற்கிடந்துநான்புழுத்தலைநாய்போல
விச்சையாயினவேழையர்க்கேசெய்தங்கிணங்கியேதிரிவேனை
யிச்சகத்தரியயனுமெட்டாததன்விரைமலர்க்கழல்காட்டி
யச்சனென்னையுமாண்டுகொண்டருளியவற்புதமறியேனே.

(ப - ரை.) பொச்சை ஆன - காடு போன்ற, இப்பிறவியில் கிடந்து - இந்தப்பிறவித்தொகையிற் கிடந்து, நான் - யான், புழுத்து அலை நாய் போல - புழுத்தலைகின்ற நாய்போல, ஏழையர்க்கே - மாதர்களுக்கே, இச்சை ஆயின செய்து - விருப்பமான காரியங்களைச் செய்து, அங்கு இணங்கிதிரிவேனை - அங்கு இசைந்து திரிகின்றவனாகிய என்னை, இ சகத்து - இவ்வுலகில், அரி அயனும்-திருமாலும் பிரமனும், எட்டாத - எட்டவொண்ணாத, தன் - தனது, விரைமலர்-மணமுள்ள தாமரைமலர்போன்ற, கழல் காட்டி - திருவடிகளைக்காட்டி, அச்சன் - எமது தந்தையாகிய சிவபெருமான், என்னையும்-அடியேனையும், ஆண்டுகொண்டருளிய - ஆண்டுகொண்டருளின, அற்புதம் - அதிசயத்தை, அறியேன் - அறிகிலேன், எ - று.

(க - ரை.) இந்தப்பிறவிக்காட்டிற் கிடந்து புழுத்தலைநாய் போல அலைந்து, மாதர் விருப்பத்தின்படியே ஒழுகிக்கெடுகிற என்னை, இறைவன் தன் திருவடியைக்காட்டி ஆட்கொண்டருளின அதிசயத்தைச் சொல்ல அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) பலபிறவியென்றற்கு, "பொச்சையான விப்பிறவி" என்றார். இணங்குதல் - இசைதல். (௯)

செறியுமிப்பிறப்பிறப்பிவைநினையாதுசெறிகுழலார்செய்யுங்
கிறியுங்கீழ்மையுங்கெண்டையங்கண்களுமென்னியேகிடப்பேனை
யிறைவனெம்பிரானெல்லையில்லாததன்னிணைமலர்க்கழல்காட்டி
யறிவுதந்தெனையாண்டுகொண்டருளியவற்புதமறியேனே.

(ப - ரை.) செறியும் - நெருங்கிய, இ-இந்த, பிறப்பு இறப்பு-பிறப்பிறப்புக்களாகிய, இவை - இவற்றை, நினையாது - நினையாமல்-

செறி குழலார்-நெருங்கின கூந்தலையுடையவராகிய மாதர், செய்யும்-செய்கிற, கிறியும் - பொய்யொழுக்கத்தையும், கீழ்மையும் - தாழ்வானகாரியங்களையும், கெண்டை அம் கண்களும் - கெண்டைமீன்போன்ற அழகிய கண்களையும், உன்னி கிடப்பேனை - நினைத்துக்கிடக்கின்ற என்னை, இறைவன் - இறைவனாகிய, எம்பிரான் - எம்பெருமான், எல்லை இல்லாத - எல்லையற்ற, தன் - தன்னுடைய, இணை - இரண்டாகிய, மலர் - தாமரைமலர்போன்ற, கழல் காட்டி - திருவடியைக்காட்டி, அறிவுதந்து - அறிவைக்கொடுத்து, என்னை ஆண்டுகொண்டருளிய - என்னை ஆண்டுகொண்டருளின, அற்புதம் - அதிசயத்தை, அறியேன் - அறிகிலேன், எ - று.

(க - ரை.) இந்தப் பிறப்பிறப்புத் துன்பங்களை நினையாமல் மாதர் வசத்திற் சிக்கிக்கிடக்கிற என்னை, இறைவன் தன் பெருங் கருணையால் தன் திருவடியைக்காட்டி அறிவைக்கொடுத்து ஆண்டருளின அதிசயத்தைச்சொல்ல அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) செறிதல் - நெருங்குதல், அது இங்கு மிகுதிக்காயிற்று. அறிவு - ஞானம். (௰)

திருச்சிற்றம்பலம்.

# சென்னிப்பத்து.

## சிவவிளைவு.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தேவதேவன்மெய்ச்சேவகன்றென்பெருந்துறைநாயகன்
மூவராலுமறியொணாமுதலாயவானந்தமூர்த்தியான்
யாவராயினுமன்பரன்றியறியொணாமலர்ச்சோதியான்
றூயமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிச்சுடருமே.

(ப - ரை.) தேவ தேவன்-தேவர்பெருமான், மெய் சேவகன்-உண்மையாகிய மகாவீரன், தென்பெருந்துறை நாயகன்-தென் திருப்பெருந்துறைக்குத் தலைவன், மூவராலும் அறியொணு - மூவராலும் அறிய வொண்ணுத, முதல் ஆய-முதல்வனுகிய, ஆநந்தமூர்த்தியான்-இன்பவுருவானவன், யாவர் ஆயினும்-எவராயினும், அன்பர் அன்றி-அன்பரல்லது, அறியொணு - அறியவொண்ணுத, மலர் - பரவுதலையுடைய, சோதியான் - ஒளியுருவானவன், (அவனது) தூய - பரிசுத்தமாகிய, மா - பெருமைபொருந்திய, மலர் - தாமரைமலரை நிகர்த்த, சேவடி கண் - சேவடியின்கண், நம் - எமது, சென்னி-தலையானது, மன்னி - பொருந்தி, சுடரும் - ஒளிசெய்யும், எ - று.

(க - ரை.) தேவர்களுக்குத் தேவனும், மகாவீரனும், திருப்பெருந்துறைத் தலைவனும், மூவராலும் அறியவொண்ணுத இன்பவடிவனும், முதல்வனும், அன்பரன்றி மற்றையர்க் கறியவொண்ணுத ஒளியுருவனும் ஆகிய சிவபெருமானது திருவடியில் எமது சிரசானது பொருந்தி விளங்காநிற்கும் என்பது.

(வி - ரை.) தேவ தேவன் - இந்திராதி தேவர்களுக்குத் தேவன். மூவர் - படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில் செய்யும் பிரமன், விஷ்ணு, உருத்திரன். (௪)

அட்டமூர்த்தியழகனின்னமுதாயவானந்தவெள்ளத்தான்
சிட்டன்மெய்ச்சிவலோகநாயகன்றென்பெருந்துறைச்சேவகன்
மட்டுவார்குழன்மங்கையாளையோர்பாகம்வைத்தவழகன்றன்
வட்டமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிமலருமே.

(ப - ரை.) அட்ட மூர்த்தி அழகன் - அட்டமூர்த்தியாகிய அழகன், இன் அமுது ஆய - இனிய அமிர்தம்போன்ற, ஆநந்த வெள்ளத்தான் - இன்பப்பெருக்கானவன், சிட்டன் - பெரியோன், மெய் - உண்மையாகிய, சிவலோக நாயகன் - சிவபுரத்துக்கு அரசன், தென் - தென்றிசையிலுள்ள, பெருந்துறை சேவகன் - திருப்பெருந்துறைச் சேவகன், மட்டு - தேன்பொருந்திய, வார் - நீண்ட, குழல்-கூந்தலையுடைய, மங்கையாளை - மங்கைப்பருவத்தினளாகிய உமாதேவியை, ஓர் பாகம் வைத்த - ஒரு பாகத்தில் அமைத்துக்கொண்ட, அழகன் - அழகன், (அவனது) வட்டம் ஆம் - வட்ட வடிவாகிய,

மலர் - தாமரைமலர்போன்ற, சேவடிகண் - சேவடியின்கண், நம் - எமது, சென்னி - தலையானது, மன்னி - பொருந்தி, மலரும் - மலராநிற்கும், எ - று.

(க - ரை.) அட்டமூர்த்தமா யுள்ளவனும், இனிய அமிர்தம் போன்றவனும், இன்பப்பெருக்கா யிருப்பவனும், மேலானவனும், சிவலோகத்துக்கிறைவனும், திருப்பெருந்துறைச் சேவகனும், உமா தேவிபங்கனும் ஆகிய சிவபெருமானது திருவடியில் நமது சிரசானது பொருந்தி விளங்காநிற்கும் என்பது.

(வி - ரை.) அட்டமூர்த்தம் - எட்டு வடிவம். அவை பஞ்ச பூதங்களும், சூரியனும், சந்திரனும், ஆன்மாவும் ஆகிய இவை. (உ)

நங்கைமீரெனைநோக்குமினங்கணாதனம்பணிகொண்டவன்
றெங்குசோலைகள்சூழ்பெருந்துறைமேயசேவகனாயகன் [கொள்வான்
மங்கைமார்கையில்வளையுங்கொண்டெம்முயிருங்கொண்டெம்பணி
பொங்குமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிப்பொலியுமே

(ப - ரை.) நங்கைமீர் - மாதர்காள், என்னை நோக்குமின் - என்னை நோக்குங்கள், நங்கள் நாதன் - எங்கள் நாதன், நம் பணி கொண்டவன் - நம்மைத் தொண்டுகொண்டவன், தெங்கு சோலைகள் சூழ் - தென்னஞ்சோலைகள் சூழ்ந்த, பெருந்துறை மேய - திருப்பெருந்துறையில் எழுந்தருளிய, சேவகன் - மகாவீரன், நாயகன் - தலைவன், மங்கைமார் கையில் - மாதர் கையிலுள்ள, வளையும் கொண்டு - வளையலையுங்கொண்டு, எம் உயிரும் கொண்டு - எமது உயிரையும் கொண்டு, எம் பணி கொள்வான் - எம்மைத் தொண்டுகொண்டவன், (அவனது) பொங்கு - விளங்குகின்ற, மா - அழகிய, மலர் - தாமரை மலர் போன்ற, சேவடி கண் - சேவடியின்கண், நம் - எமது, சென்னி - தலையானது, மன்னி - பொருந்தி, பொலியும் - விளங்கும், எ - று.

(க - ரை.) மாதர்களே, எம்மிறைவனும், எம்மைப் பணிகொண்டவனும், திருப்பெருந்துறைச் சேவகனும் ஆகிய இறைவன், மாதர் கைவளையும் உயிருங்கொண்டு எம்மையும் பணிகொள்பவன், அவனது திருவடியில் எமது சிரசானது பொருந்தி விளங்காநிற்கும் என்பது.

(வி - ரை.) நங்கை - பெண்மைக்குணங்கள் நிரம்பப் பெற்றவள். மங்கைமார் கையில் வளைகொண்டது உலாக்காலத்தில் எனக் கொள்க. (௩)

பத்தர்சூழப்பராபரன்பாரில்வந்துபார்ப்பானெனச்
சித்தர்சூழச்சிவபிரான்றில்லைமூதூர்நடஞ்செய்வா
னெத்தனாகிவந்தில்புகுந்தெமையாளுங்கொண்டெம்பணிகொள்வான்
வைத்தமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிமலருமே.

(ப - ரை.) பத்தர்சூழ்-பத்தர்கள் சூழ்ந்த, அ-அந்த, பராபரன்-ஆதியந்த மில்லாத சிவபெருமான், பார்ப்பான் என - வேதியனென்னும்படி, பாரில் வந்து - பூமியில் எழுந்தருளி, சித்தர் சூழ்-சித்தர்கள் சூழ்ந்த, அ சிவபிரான் - அந்தச்சிவபிரான், தில்லை மூதூர் - தில்லையாகிய பழைய நகரின்கண், நடம் செய்வான் - நடநம் செய்பவன்; எத்தன் ஆகி வந்து - எத்தனாய் வந்து, இல் புகுந்து-வீடேறி, எம்மை ஆளும் கொண்டு - எங்களை ஆளாகவுங்கொண்டு, எம் பணி கொள்வான் - எமது தொண்டினையும் கொள்வோன், (அவனது) மாமலர் வைத்த - மாமலர் போல வைக்கப்பட்ட, சேவடி கண் - சேவடியின் கண்ணே, நம் - நமது; சென்னி - தலையானது, மன்னி - பொருந்தி, மலரும் - மலரா நிற்கும், எ - று.

(க - ரை.) பத்தரால் சூழப்பட்டவனும், வேதியனாய் இவ்வுலகில் வந்து சித்தரால் சூழப்பட்டவனும், தில்லையில் நடிப்பவனும், எம்மை யாட்கொண்டு எம்பணியையுங் கொள்பவனும் ஆகிய சிவபெருமானது திருவடியில் எமது சிரசானது பொருந்தி விளங்கா நிற்கும் என்பது.

(வி - ரை.) பத்தர் - அன்பர். சித்தர் - அறிஞர். (ஞானியர்) எத்தன் - வஞ்சகன். பார்ப்பானென்றது - குருமூர்த்தமா யெழுந்தருளிய திருவுருவை. (௪)

மாயவாழ்க்கையைமெய்யென்றெண்ணிமதித்திடாவகைநல்கினான்
வேயதோளுமைபங்கனெங்கடிருப்பெருந்துறைமேவினான்
காயத்துள்ளமுதூறவூறநீகண்டுகொள்ளென்றுகாட்டிய
சேயமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னித்திகழுமே.

(ப - ரை.) மாய வாழ்க்கையை - மாய வாழ்வை, மெய் என்று எண்ணி - மெய்யென்று நினைத்து, மதித்திடாவகை-மதியாத வண்ணம், நல்கினான் - அருள் செய்தவன், வேய தோள் - வேயின் தன்மையவாகிய தோள்களையுடைய, உமைபங்கன் - உமாதேவி பாகன், எங்கள் திருப்பெருந்துறை மேவினான்-எங்கள் திருப்பெருந்துறையில் எழுந்தருளினவன், ஊறஊற-சுரக்கச் சுரக்க, காயத்துள் அமுது-சரீரத்தினுள் அமிர்தமாம், கண்டுகொள் என்று காட்டிய - இதனைக் கண்டுகொள்ளென்று காட்டின, சேய - செம்மையாகிய, மாமலர் -அழகிய தாமரை மலர்போன்ற, சேவடி கண் - சேவடியின்கண்ணே, நம் - எமது, சென்னி-தலையானது, மன்னி - பொருந்தி, திகழும் - விளங்கும் எ - று.

(க - ரை.) மாயவாழ்வாகிய இந்தப்பிரபஞ்ச வாழ்க்கையை மெய்யென்று மதித்தழியாதபடி எனக்கு நல்லறிவைக்கொடுத்தவனும், உமாதேவிபாகனும், திருப்பெருந்துறை நாயகனும் ஆகிய சிவபெருமானது திருவடியில் எமது சிரசானது பொருந்தி விளங்காநிற்கும் என்பது.

(வி - ரை.) மாயவாழ்க்கை - பொய்வாழ்க்கை. வேய் - மூங்கில். சேய என்பதற்குப் பகுதி, செம்மை. (௫)

சித்தமேபுகுந்தெம்மையாட்கொண்டுதீவினைகெடுத்துய்யலாம்
பத்திதந்துதன்பொற்கழற்கணேபன்மலர்கொய்துசேர்த்தலு
முத்திதந்திந்தமூவுலகுக்குமப்புறத்தெமைவைத்திடு
மத்தன்மாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிமலருமே.

(ப - ரை.) சித்தம் புகுந்து - மனத்தில்புகுந்து, எம்மை ஆட்கொண்டு - எங்களை அடிமைகொண்டு, தீவினைகெடுத்து - தீவினையை அழித்து, உய்யல் ஆம் பத்தி தந்து - உய்தற்குரியதாகிய பத்தியைத் தந்து, தன்பொன்கழல்கண்-தனது அழகிய திருவடியின்கண், பல மலர் கொய்து சேர்த்தலும்-பலமலர்களைக் கொண்டர்ச்சித்தலும், முத்தி தந்து - வீடுதந்து, இந்த மூவுலகுக்கும் அப்புறத்து-இந்த மூன்றுலகுக்கும் அப்பால், எமைவைத்திடும் - எம்மைவைக்கின்ற, அத்தன்-எமது தந்தையாகிய சிவபிரானது, மா - அழகிய, மலர் - தாமரைமலர்

போன்ற, சேவடிக் கண்-சேவடியின்கண், நம் சென்னி-எமது தலையானது, மன்னி - பொருந்தி, மலரும் - மலரா நிற்கும், எ - று.

(க - ரை.) எமது மனத்திற்புகுந்து எம்மையாட்கொண்டு எமது தீவினையை யழித்து, உய்யும்வழியாகிய பத்தியை யருளி, தன் பொன்னடியில் மலர்சாத்தலும் முத்திதந்து இந்த மூன்றுலகங்களுக்கும் மேலாகிய பதத்தில் எம்மைவைக்கின்ற எமது தந்தையாகிய சிவபெருமானது திருவடியில் எமது சிரசானது பொருந்திவிளங்கா நிற்கும் என்பது.

(வி - ரை.) தன் திருவடியில் யாம் சாத்தினது மலர், அதற்கீடாக நமக்கவன் தந்தது மேலாகியபதம், ஆதலால் இறைவன் பித்தன் என்றற்கு "தன் பொற்கழற்கணே பன்மலர்கொய்து சேர்த்தலும் முத்திதந்திந்த மூவுலகுக்கு மப்புறத்தெமை வைத்திடும்மத்தன்" என்றார் எனினுமாம். (௬)

பிறவியென்னுமிக்கடலைநீந்தத்தன் பேரருடந்தருளினு
னறவையென்றடியார்கடங்களருட்குழாம்புகவிட்டுநல்
லுறவுசெய்தெனையுய்யக்கொண்டபிரான்றனுண்மைப்பெருக்கமாந்
திறமைகாட்டியசேவடிக்கணஞ்சென்னிமன்னித்திகழுமே.

(ப - ரை.) பிறவி என்னும்-பிறவியென்கிற, இ கடலை நீந்த-இந்தக்கடலை நீந்துதற்கு, தன் பேர் அருள் தந்து அருளினன்-தன் பெரிய அருளைக் கொடுத்தருளினன், அறவை என்று-அநாதையென்று, அடியார்கள் தங்கள் - அடியாருடைய, அருள் குழாம் - அருட்டொகுதியில், புகவிட்டு - புகுத்தி, நல் உறவுசெய்து - நல்லுறவாகச்செய்து, என்னை உய்யக் கொண்ட - என்னை உய்யக்கொண்டருளின, பிரான் - உபகாரகுணமுள்ளவன், (அவனது) உண்மை பெருக்கம் ஆம்-மெய்யின் பெருக்கமாகிய, திறமை காட்டிய-திறமைகாட்டின, சேவடிக் கண் - சிவந்த திருவடியில், நம் சென்னி - எமது தலையானது, மன்னி - பொருந்தி, திகழும் விளங்கும், எ - று.

(க - ரை.) பிறவிக்கடலைத் தாண்டுதற்குத் தன் பேருட்புணையைத் தந்தருளினவனும், அநாதன் என்று என்னைத் தன் அடியார் கூட்டத்திற் புகவிட்டு அவர்களோடுறவாக்கி என்னை உய்யும்படி ஆட்கொண்டருளின இறைவனது திருவடியில் எமது சிரசானது பொருந்தி விளங்காநிற்கும் என்பது.

(வி - ரை.) பிறவியைக் கடல் என்றதனால் பேரருளைப் புணையென்னலாயிற்று. (௭)

புழுவினாற்பொதிந்திடுகுரம்பையிற்பொய்தனையொழிவித்திடு [ன்று
மெழில்கொள்சோதியெம்மீசனெம்பிரானென்னுடையப்பனென்றெ
தொழுதகையினராகித்தூய்மலர்க்கண்கணீர்மல்குந்தொண்டர்க்கு
வழுவிலாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிமலருமே.

(ப - ரை.) புழுவினால் பொதிந்திடு குரம்பையில் - புழுக்களால் வேயப்பட்ட கூட்டில், பொய்தனை ஒழிவித்திடும் - பொய்யை ஒழிவிக்கிற, எழில் கொள் சோதி - அழகைக்கொண்ட ஒளியையுடைய, எம் ஈசன் - எங்கள் ஈசன், எம்பிரான் - எம்பெருமான், என் உடை அப்பன் - என்னுடைய அப்பன், என்று என்று - என்று சொல்லி, தொழுத கையினர் ஆகி - தொழுகின்ற கையையுடையவராகி, தூ - பரிசுத்தமாகிய, மலர் - தாமரைமலர்போன்ற, கண்கண் - கண்களில், நீர் மல்கும் - நீர் நிறைந்த, தொண்டர்க்கு - தொழும்பர்க்கு, வழுவு இலா - தவறுதலில்லாத, மலர் - தாமரைமலர்போன்ற, சேவடிக் கண் - சேவடியின்கண், நம் சென்னி-எமது தலையானது மன்னி - பொருந்தி, மலரும் - மலராநிற்கும், எ - று.

(க - ரை.) புழுக்கூடாகிய உடம்பிற் பொய்யெண்ணங்களை நீக்கி யருள்கின்ற தேஜோமயன், எம் ஈசன், எம்பிரான், என்னப்பன், என்று தொழுதகையினராய் நின்று கண்ணீர் சிந்துகின்ற மெய்யன்பருக்குத் தவறாமல் முத்திதந்தருளுகிற இறைவனது திருவடியில் எமது சிரசானது பொருந்தி விளங்காநிற்கும் என்பது.

(வி - ரை.) பொதிதல் - வேய்தல். புழுவினாற் பொதிந்திடு குரம்பை என்றது உடம்பை. வழுவிலா - முத்திதருதலில் தவறுதலில்லாத. (அ)

வம்பனாய்த்திரிவேனைவாவென்றுவல்வினைப்பகைமாய்த்திடு
மும்பரானுலகூடறுத்தப்புறத்தனாய்நின்றவெம்பிரா
னன்பரானவர்க்கருளிமெய்யடியார்கட்கின்பந்தழைத்திடுஞ்
செம்பொன்மாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னித்திகழுமே.

(ப - ரை.) வம்பன் ஆய் திரிவேனை - வீணனாய்த் திரிகின்ற என்னை, வா என்று - வாவென்று, வல் வினைப்பகை மாய்த்திடும் - வலிய வினையாகிய பகையை அழிக்கின்ற, உம்பரான - மேலான, உலகு ஊடு அறுத்து - உலகங்களை ஊடறுத்துச்சென்று, அப்புறத்தன் ஆய் நின்ற - அப்பாற்பட்டவனாகி நின்ற, எம்பிரான் - எம்பெருமான், அன்பர் ஆனவர்க்கு அருளி - அன்பரானவர்க்கு அருள்செய்து, மெய் அடியார்கட்கு - மெய்யடியார்க்கு, இன்பம் தழைத்திடும் - இன்பம் செழிக்கப்பெற்ற, செம்பொன் - செம்பொன்போன்ற, மா மலர் சேவடிக்கண்-அழகிய மலர்போன்ற சேவடியின்கண், நம் சென்னி மன்னி - எமது தலையானது பொருந்தி, திகழும் - விளங்காநிற்கும், எ - று.

(கு - ரை.) வம்பனாய்த் திரிகின்ற என்னை வாவென்றழைத்து என் வலிய வினைப்பகையை யழிக்கின்ற மேலோனும், எல்லாவுலகங்களையும் கடந்து நின்றவனும் ஆகிய சிவபிரானது திருவடியில் எமது சிரசானது பொருந்தி விளங்காநிற்கும் என்பது.

(வி - ரை.) உம்பர் - மேலிடம். உம்பரான் - மேலிடத்தையுடையவன். உலகூடறுத்தப் புறத்தனாய் நின்றது. சர்வசங்காரகாலத்தில். அன்றியும் பிரமவிஷ்ணுக்களுக்கிடையே நெருப்புப்பொருப்பாய் நிமிர்ந்ததைக் குறித்ததெனினும் பொருந்தும். (௬)

முத்தனைமுதற்சோதியைமுக்கணப்பனைமுதல்வித்தினைச்
சித்தனைச்சிவலோகனைத்திருநாமம்பாடித்திரிதரும்
பத்தர்காளிங்கேவம்மினீருங்கள்பாசந்தீரப்பணிமினோ
சித்தமார்தருஞ்சேவடிக்கணஞ்சென்னிமன்னித்திகழுமே.

(ப - ரை.) முத்தனை - பாசவிமுத்தனை, முதல் சோதியை - முதலாமொளியை, முக்கண் அப்பனை - மூன்று கண்களையுடைய எமது அப்பனை, முதல் வித்தினை - மூலவித்தை, சித்தனை - மெய்யன்பர்களின் சித்தமாகிய மனத்திற் குடிகொண்டிருப்பவனை, சிவலோகனை - சிவபுரமாகிய ஸ்ரீ மகாகைலாயத்தில் எழுந்தருளியிருப்பவனை, திரு நாமம் பாடி திரிதரும் - திருப்பெயர் பாடித்திரிகின்ற, பத்தர்காள் - பத்தர்களே, இங்கே வம்மின் - இங்கே வாருங்கள், நீர்-(வந்த) நீங்கள், உங்கள் பாசம் தீர - உங்கள் பாசம் ஒழிய, பணி

மின் - வணங்குங்கள், சித்தம் ஆர் தரும் - உண்மைநிறைந்த, சேவடிக் கண்-சேவடியின்கண், நம் சென்னி மன்னி - எமது தலையானது பொருந்தி, திகழும் -விளங்கும், எ - று.

(க - ரை.) முத்தன், முதற்சோதி, முக்கணப்பன், முதல் வித்து, சித்தன், சிவலோகன், அவனது திருநாமம் பாடித்திரியா நின்ற பத்தர்களே, இங்கே வந்து அவ்விறைவனை உங்கள் பாசபந்தம் அறும்படி பணியுங்கள், அவனது திருவடியில் எமது சிரசானது பொருந்தி விளங்காநிற்கும் என்பது.

(வி - ரை.) முத்தன் - பாசநீக்க முள்ளவன். முதற்சோதி யென்றது முச்சுடர்களுக்குங் காரணமாகிய ஒளியென்றபடி. முதல் வித்து - பிரபஞ்சத்துக்கு முதற்காரணன். சித்தன் - அறிவுருவனெனினுமாம். (௫0)

திருச்சிற்றம்பலம்.

# திருவார்த்தை.

## அறிவித்தன்புறுதல்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாதிவர்பாகன்மறைபயின்ற
　　வாசகன்மாமலர்மேயசோதி
கோதில்பரங்கருணையடியார்
　　குலாவுநீதிகுணமாகநல்கும்
போதலர்சோலைப்பெருந்துறையெம்
　　புண்ணியன்மண்ணிடைவந்திழிந்
தாதிப்பிரமம்வெளிப்படுத்த
　　வருளறிவாரெம்பிரானுவாரே.

(ப - ரை.) மாது இவர் பாகன் - பெண்ணூர்ந்த பங்கன், மறை பயின்ற வாசகன் - வேதங்களிற் பழகிய சொல்லினன், மா -

பெருமைபொருந்திய, மலர் - (அன்பரது இதயமாகிய) தாமரை மலரில், மேய - தங்கிய, சோதி - ஒளி, கோது இல் - குற்றமில்லாத, பரம் கருணை - மேலான அருள்வடிவு, அடியார் குலாவு நீதி - அடியார் கைப்பற்றின நியாயங்களை, குணம் ஆக - குணமாகக்கொண்டு, நல்கும் - அருள்செய்கிற, போது அலர் சோலை - பேரரும்புகள் விரியாநின்ற சோலைசூழ்ந்த, பெருந்துறை - திருப்பெருந்துறையி லெழுந்தருளிய, எம் புண்ணியன் - எமது புண்ணியவுருவினன், (அவன்) மண்ணிடை - மண்ணுலகில், இழிந்து வந்து - இறங்கி வந்து, ஆதி பிரமம் வெளிப்படுத்த - ஆதியாகிய பிரமப்பொருளை வெளிப்படுத்தின, அருள் அறிவார் - அருளின்றன்மையை அறியவல்லார், எம்பிரான் ஆவார் - எம்பிரான்மாராவார், எ - று.

(க - ரை.) மங்கைபங்கனும், வேதம்பயின்ற வாக்கினனும், அன்பரது இதயதாமரையி லெழுந்தருளியிருப்பவனும், பெருங்கருணையாளனும், அடியார் நீதிகளைக் குணமாய்க்கொண்டருள்கின்ற திருப்பெருந்துறைப் புண்ணியனும் ஆகிய சிவபெருமான் இந்த மண்ணுலகில் வந்து, முதற்பொருளாகிய பிரமத்தை எமக்கு வெளிப்படுத்தின பெருங்கருணையை அறிய வல்லவர் எம்பிரான்மாராவார் என்பது.

(வி - ரை.) இவர்தல் - ஏறுதல். அது இங்குத் தங்குதற்பொருளது. வேதம் - இறைவன் வாக்காதலால் "மறைபயின்ற வாசகன்" என்றார். (௧)

மாலயன் வானவர்கோனும்வந்து
 வணங்கவவர்க்கருள்செய்தவீசன்
ஞாலமதனிடைவந்திழிந்து
 நன்னெறிகாட்டிநலந்திகழுங்
கோலமணியணிமாடநீடு
 குலாவுமிடவைமடநல்லாட்குச்
சீலமிகக்கருணையளிக்குந்
 திறமறிவாரெம்பிரானாவாரே.

(ப - ரை.) மால் அயன் வானவர் கோனும் - திருமாலும் பிரமனும் இந்திரனும், வந்து வணங்க - வந்து தொழ, அவர்க்கு அருள் செய்த ஈசன் - அவர்களுக்கு அருள் செய்த ஈசன், ஞாலம் அத

ணிடை - உலகத்தில், இழிந்து வந்து - இறங்கி வந்து, நல்நெறி காட்டி - நல் வழியைக்காட்டி, நலம் திகழும் - நன்மை விளங்குகின்ற, கோலம் - அழகாகிய, மணி அணி - மணிகளால் அலங்கரிக்கப்பட்ட, மாடம் - மாளிகைகள், நீடு - நீண்ட, குலாவும் - விளங்குகின்ற, இடைவை-திரு இடை மருதூரில், மட நல்லாட்கு-ஒரு மடமங்கைக்கு, சீலம் மிக - ஒழுக்க மிகும்படி, கருணை அளிக்கும் - கருணைசெய்த, திறம் அறிவார் - திறத்தினை அறிபவர், எம்பிரான் ஆவார் - எம்பிரான்மா ராவார், எ - று.

(க - ரை.) திருமாலும், பிரமனும், இந்திரனும் வந்து வணங்க அவர்களுக்கு அருள் செய்த இறைவன், இந்தப் பூமியில் எழுந்தருளி ஆன்மாக்களுக்கு நன்னெறியைக் காட்டி, திருவிடைமருதூரில் ஒரு மாதுக்கு நல்லொழுக்க மிகும்படி கருணை செய்தவிதத்தை அறிபவர் எம்பிரான்மா ராவர் என்பது.

(வி - ரை.) வானவர்கோனும் என்ற உம்மையை மால் அயன் என்பவற் றிற்றிலுங் கூட்டுக. இடை மருது என்பது இடைவையென மரூஉ வாயிற்று. (௨)

அணிமுடியாதியமரர்கோமா
னானந்தக்கூத்தனறுசமயம்
பணிவகைசெய்துபடவதேறிப்
பாரொடுவிண்ணும்பரவியேத்தப்
பிணிகெடநல்கும்பெருந்துறையெம்
பேரருளாளன்பெண்பாலுகந்து
மணிவலைகொண்டுவான்மீன்விசிறும்
வகையறிவாரெம்பிரானாவாரே.

(ப - ரை.) அணி முடி ஆதி - அலங்கரிக்கப்பட்ட முடியையுடைய முதல்வன், அமரர் கோமான் - தேவர் பெருமான், ஆனந்தக் கூத்தன் - இன்பக் கூத்தாடுவோன், அறு சமயம் - ஆறு சமயங்களும், பணிவகை செய்து - பணியும் விதம் செய்து, படவது ஏறி - படவேறி, பாரொடு விண்ணும் - மண்ணுலகத்தாரோடு விண்ணுலகத்தாரும், பரவி ஏத்த - வழிபட்டுத் துதிக்க, பிணிகெட நல்கும்-பிணி

நீங்க அருள் செய்த, பெருந்துறை - திருப்பெருந்துறையி லெழுந் தருளிய, எம் பேர் அருளாளன் - எமது பேரருளாளனாகிய சிவபெருமான், பெண்பால் உகந்து - பெண்பாகத்தை விரும்பி, மணி வலை கொண்டு - அழகிய வலையைக் கொண்டு, வான்மீன் விசிறும்-மேன்மையாகிய மீன்களைக் கவர்ந்த, வகை அறிவார் - விதத்தை அறிபவர், எம்பிரான் ஆவார் - எம்பிரான்மா ராவார், எ - று.

(க - ரை.) தேவ தேவனாகிய சிவபெருமான் பெண்பாகனாய்ப் படவேறி அழகிய வலையைக்கொண்டு மீன்களைக் கவர்ந்த விதத்தை அறிபவர் எம்பிரான்மா ராவர் என்பது.

(வி - ரை.) ஆனந்தக் கூத்தன் - கண்டார்க்கு இன்பஞ் செய்யுந்திருக் கூத்தினை யுடையவன். அன்றி ஆனந்தத்தாற் கூத்தாடுவோன். படவு - தெப்பம். வலைகொண்டு மீன் கவர்ந்த வரலாற்றைத் திருவிளையாடற்புராணம் வலை வீசின படலத்திற் காண்க. (ரு)

வேடுருவாகிமகேந்திரத்து
மிகுகுறைவானவர்வந்துதன்னைத்
தேடவிருந்தசிவபெருமான்
சிந்தனைசெய்தடியோங்களுய்ய
வாடலமர்ந்தபரிமாவேறி
யையன்பெருந்துறையாதியந்நா
ளேடர்களையெங்குமாண்டுகொண்ட
வியல்பறிவாரெம்பிரானாவாரே.

(ப - ரை.) வேடு உரு ஆகி - வேடனுருக்கொண்டு, மகேந்திரத்து - மகேந்திரமலையில், மிகு குறை - மிகுந்த குறைகளையுடைய, வானவர் - தேவர்கள், வந்து - வந்து, தன்னை தேட இருந்த - தன்னைத்தேடும்படி எழுந்தருளியிருந்த, சிவபெருமான்-சிவபிரான், அடியோங்கள் உய்ய-அடியோம் உய்யும் வண்ணம், சிந்தனைசெய்து - சிந்தித்து, ஆடல் அமர்ந்த-வெற்றியமைந்த, பரிமா ஏறி-குதிரை யேறி, ஐயன் - ஐயனாகிய, பெருந்துறை ஆதி- திருப்பெருந்துறைக்கு முதல்வன், அ நாள் - அந்நாளில், ஏடர்களை - தோழர்களை, எங்கும்-எவ்விடத்தும், ஆண்டுகொண்ட - ஆண்டுகொண்டருளின, இயல்பு அறி

வார் - இயல்பை அறிபவர், எம்பிரான் ஆவார் - எம்பிரான்மாரா வார், எ - று.

(க - ரை.) மகேந்திரமலையில் வேடவுருக்கொண்டு, தேவர்கள் வந்து தங்குறைகளைச் சொல்லித்தேடும்படி யிருந்த சிவபெருமான், அடியோங்கள் உய்யும்படிச்சிந்தித்துக் குதிரையேறிவந்து அன்பர்களை ஆண்டுகொண்டவகையை அறிபவர் எம்பிரான்மாராவர் என்பது.

(வி - ரை.) இறைவன் பரிமா வேறிவந்தவரலாற்றைத் திருவிளையாடற் புராணம் நரி பரியாக்கிய படலத்திற்காண்க. (௪)

வந்திமையோர்கள்வணங்கியேத்த
மாக்கருணைக்கடலாயடியார்
பந்தனைவிண்டறநல்குமெங்கள்
பரமன்பெருந்துறையாதியந்நா
ளுந்துதிரைக்கடலைக்கடந்தன்
றோங்குமதிலிலங்கையதனிற்
பந்தணைமெல்விரலாட்கருளும்
பரிசறிவாரெம்பிரானாவாரே.

(ப - ரை.) இமையோர்கள் வந்து-தேவர்கள் வந்து, வணங்கி ஏத்த-வணங்கித்துதிக்க, மா - பெரிதாகிய, கருணை கடலாய் - கருணைக்கடலாகி, அடியார்-அடியாருடைய, பந்தனை - பிறவிப்பிணிப்பு, விண்டு அற - நீங்கி யொழிய, நல்கும் - அருள் செய்கிற, எங்கள் பரமன் - எங்கள் பரமன், பெருந்துறை ஆதி-திருப்பெருந்துறை முதல்வன், அ நாள்-அந்நாளில், உந்து திரை கடலை - எழுகின்ற அலைகளையுடைய கடலை, கடந்து-தாண்டி, அன்று - அக்காலத்தில், ஓங்கும்-உயர்ந்த, மதில் - மதில் சூழ்ந்த, இலங்கையதனில் - இலங்கையில், பந்து அணை - பந்துதங்கிய, மெல்விரலாட்கு - மென்மையாகிய விரலையுடையவளுக்கு, அருளும் பரிசு அறிவார் - அருளினதன்மையை அறிபவர், எம்பிரான் ஆவார் - எம்பிரான்மாராவார், எ - று.

(க - ரை.) தேவர்கள் வந்துவணங்கித்துதிக்க இரங்கி, அடியாரது பாசபந்தம் அற்றொழியும்படி அருள்செய்த மேலோனாகிய திருப்பெருந்துறை முதல்வன், கடலைக்கடந்து சென்று இலங்கையில்

வண்டோதரிக்கு அருள்செய்தவிதத்தை அறிபவர் எம்பிரான்மாராவர் என்பது.

(வி - ரை.) இலங்கை யென்ற குறிப்பால் பந்தணை மெல்விரலாள் என்றது வண்டோதரியை யுணர்த்திற்று. (௫)

வேவத்திரிபுரஞ்செற்றவில்லி
வேடுவனாய்க்கடிநாய்கள்சூழ
வேவற்செயல்செய்யுந்தேவர்முன்னே
யெம்பெருமான்றானியங்குகாட்டி
லேவுண்டபன்றிக்கிரங்கியீச
னெந்தைபெருந்துறையாதியன்று
கேவலங்கேழலாய்ப்பால்கொடுத்த
கிடப்பறிவாரெம்பிரானாவாரே.

(ப - ரை.) திரிபுரம் வேவ - முப்புரம் வேம்படி, செற்றவில்லி- அழித்தவில்லையுடையவன், வேடுவன் ஆய் - வேடுவனாகி, கடிநாய்கள் சூழ - வேகத்தையுடைய நாய்கள் சூழ, ஏவல் செயல்செய்யும் - ஏவற்றொழிலைச் செய்கின்ற, தேவர்முன்னே - தேவர்களுக்கெதிரே, எம்பெருமான்-எம்பெருமானானவன், இயங்குகாட்டில்-சஞ்சரிக்கிற காட்டில், ஏ உண்டபன்றிக்கு இரங்கி-அம்புண்ட பன்றிக்கு இரங்கி, ஈசன்-சிவபெருமான், எந்தை - எமது தலைவன், பெருந்துறை ஆதி- திருப்பெருந்துறை முதல்வன், அன்று - அக்காலத்தில், கேவலம் - அற்பமாகிய, கேழல் ஆய் - பன்றியாகி, பால்கொடுத்த - பாலருந்திய, கிடப்பு அறிவார் - கிடையை அறிபவர், எம்பிரான் ஆவார் - எம்பிரான்மாராவார், எ - று.

(க - ரை.) திரிபுராந்தகனாகிய சிவபெருமான் வேடவுருக்கொண்டு, ஏவல்செய்யுந் தேவர்களுக்கெதிரில், காட்டில் அம்புதைத்துக் கிடந்த பன்றிக்கிரங்கித்தானும் ஓர் பன்றிவடிவங்கொண்டு அதன் குருளைகட்குப்பால்கொடுத்த வகையை அறிபவர் எம்பிரான்மாராவர் என்பது.

(வி-ரை.) பன்றிக்குருளைக்கிரங்கிப் பால்கொடுத்தவரலாற்றைத் திருவிளையாடற் புராணம் பன்றிக்குட்டிக்குப் பால்கொடுத்த படலத்திற்காண்க. (௬)

நாதமுடையதோர்நற்கமலப்
போதினினண்ணியநன்னுதலா
ரோதிப்பணிந்தலர்தூவியேத்த
வொளிவளர்சோதியெம்மீசன்மன்னும்
போதலர்சோலைப்பெருந்துறையெம்
புண்ணியன்மண்ணிடைவந்துதோன்றிப்
பேதங்கெடுத்தருள்செய்பெருமை
யறியவல்லாரெம்பிரானாவாரே.

(ப - ரை.) நாதம் உடையது - நாதத்தையுடையதாகிய, ஓர் - ஒப்பற்ற, நல்கமல போதினில் - நல்ல தாமரைப்பூவில், நண்ணிய - பொருந்திய, நல் நுதலார் - அழகிய நெற்றியையுடையவர், ஓதி-புகழ்ந்துரைத்து, பணிந்து - வணங்கி, அலர் தூவி - மலர்களைத் தூவி, ஏத்த - துதிக்க, ஒளிவளர்சோதி - பிரகாசம்மிகுந்த சோதிசொரூபனாகிய, எம் ஈசன் - எங்களீசன், மன்னும் - நிலைபெற்ற, போது அலர்சோலை-போரும்புகள் மலர்கின்ற சோலைசூழ்ந்த, பெருந்துறை-திருப்பெருந்துறையிலுள்ள, எம்புண்ணியன் - எங்கள் புண்ணியமூர்த்தி, மண் இடைவந்து தோன்றி - மண்ணுலகத்தில் வந்துதோன்றி, பேதம் கெடுத்து - வேறுபாட்டை யழித்து, அருள்செய் பெருமை - அருள்செய்த பெருமையை, அறியவல்லார் - அறியவல்லவர், எம்பிரான் ஆவார் - எம்பிரான்மாராவார், எ - று.

(க - ரை.) திருமகள் சரசுவதி என்போர் வாழ்த்தி வணங்கி மலர்களைத்தூவி வழிபட, அவர்பொருட்டுப் பூமியில்வந்து அவர்களுடைய வேறுபாட்டைக்கெடுத்து அவர்களுக் கருள்செய்த பெருமையை அறிபவர் எம்பிரான்மாராவர் என்பது.

(வி - ரை) கமலப்போதினி னண்ணிய நன்னுதலார் என்ற குறிப்பால் திருமகளையும் சரசுவதியையும் கொள்ளலாயிற்று. (எ)

பூவலர்கொன்றையமாலைமார்பன்
போருகிர்வன்புலிகொன்றவீரன்
மாதுநல்லாளுமைமங்கைபங்கன்
வண்பொழில்சூழ்தென்பெருந்துறைக்கோ

னேதில்பெரும்புகழெங்களீச
னிருங்கடல்வாணற்குத்தீயிற்றோன்று
மோவியமங்கையர்தோள்புணரு
முருவறிவாரெம்பிரானாவாரே.

(ப - ரை.) பூ அலர் - மலர்கள் விரியாநின்ற, அம் - அழகிய, கொன்றைமாலை - கொன்றைமாலையையணிந்த, மார்பன் - மார்பை யுடையவன், போர் - போர்த்தொழிலுக்குரிய, உகிர் - நகங்களை யுடைய, வல் புலி - வலிய புலியை, கொன்ற வீரன் - கொன்ற மகாவீரன், மாது நல்லாள் உமை மங்கை பங்கன் - மாதரிற் சிறந்தவளாகிய உமாதேவி பங்கன், வண் பொழில் சூழ் - வளவிய சோலை சூழ்ந்த, தென் பெருந்துறை கோன் - தென் திருப்பெருந்துறை நாயகன், ஏதம் இல் - குற்றமில்லாத, பெரும் புகழ் - பெரும் புகழை யுடைய, எங்கள் ஈசன் - எம்முடைய ஈசன், இரு - பெரிய, கடல் வாணற்கு - வருணனுக்கு, தீயில் தோன்றும் - நெருப்பிலுதித்த, ஓவியம் - சித்திரம்போன்ற, மங்கையர் - மாதருடைய, தோள் புணரும் - தோள்களைத்தழுவிய, உரு அறிவார் - உருவத்தின் தன்மையை அறிபவர், எம்பிரானாவார் - எம்பிரான்மாராவார், எ - று.

(க - ரை.) இறைவன், வருணனுக்குத் தீயிற்றோன்றிய பெண்களைத் தழுவின செய்தியை அறிபவர் எம்பிரான்மாராவர் என்பது.

(வி - ரை.) புலியென்றது தாருகாவனத் திருடியர் செய்த வேள்வியிற்றோன்றிய புலியை. (அ)

தூவெள்ளைநீறணியெம்பெருமான்
சோதிமகேந்திரநாதன்வந்து
தேவர்தொழும்பதம்வைத்தவீசன்
றென்னன்பெருந்துறையாளியன்று
காதல்பெருக்கக்கருணைகாட்டித்
தன்கழல்காட்டிக்கசிந்துருகக்
கேதங்கெடுத்தென்னையாண்டருளுங்
கிடப்பறிவாரெம்பிரானாவாரே.

(ப - ரை.) தூ வெள்ளை நீறு அணி - பரிசுத்தமாகிய வெண்ணீற்றை யணிந்த, எம்பெருமான் - எமது சிவபெருமான், சோதி - ஒளியுருவாகிய, மகேந்திர நாதன் - மகேந்திரத்தலைவன், வந்து தேவர் தொழும் - வந்து தேவர்கள் வணங்குகின்ற, பதம் - தன் திருவடியை, வைத்த - இம்மண்ணில் வைத்த, ஈசன் - இறைவன், தென்னன் - தென்னவன், பெருந்துறை ஆளி - திருப்பெருந்துறையை யாள்வோன், அன்று - அக்காலத்தில், காதல் பெருக - ஆசை அதிகரிக்க, கருணை காட்டி - கருணையைக்காட்டி, தன் கழல் காட்டி - தன் திருவடியைக்காட்டி, கசிந்து உருக - கசிந்துருகும்வண்ணம், கேதம் கெடுத்து - துன்பத்தைக்கெடுத்து, என்னை ஆண்டருளும் என்னை ஆண்டருளின, கிடப்பு அறிவார் - கிடக்கையை அறிபவர்; எம்பிரானாவார் - எம்பிரான்மாராவார், எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவன் அந்நாளில் வந்து கருணைசெய்து தன் திருவடியைக்காட்டி என் மனங் கசிந்துருகும்படி என் துன்பங்களை யொழித்தென்னை யாண்டருளின செய்தியை அறிபவர் எம்பிரான்மாராவர் என்பது.

(வி - ரை.) ஆளி என்பதில் இகரவிகுதி ஆண்பாலைக்குறித்தது. கேதம் - வடசொல். (௯)

அங்கணனெங்களமரர்பெம்மா
  னடியார்க்கமுதனவனிவந்த
வெங்கள்பிரானிரும்பாசந்தீர
  விகபரமாயதோரின்பமெய்தச்
சங்கங்கவர்ந்துவண்சாத்தினோடுஞ்
  சதுரன்பெருந்துறையாளியன்று
மங்கையர்மல்குமதுரைசேர்ந்த
  வகையறிவாரெம்பிரானாவாரே.

(ப - ரை.) அங்கணன் - அழகிய கண்களையுடையவன், எங்கள் அமரர் பெம்மான் - எங்கள் தேவர் பெருமான், அடியார்க்கு அமுதன் - அடியார்க்கு அமுதமானவன், அவனி வந்த - பூமியில் வந்த, எங்கள் பிரான் - எங்கள் பெருமான், இரு பாசம் தீர - பெரிய

பாசம் நீங்கவும், இகபரம் ஆயது - இகபரங்களாகிய, ஓர் இன்பம் எய்த - ஒப்பற்ற இன்பமுண்டாகவும், சங்கம் கவர்ந்து - வளையலை யெடுத்து, வண்சாத்தினோடும் - வளவியதலையணியோடும், சதுரன் - சதுரப்பாட்டையுடையவன், பெருந்துறை ஆளி - திருப்பெருந்துறையை ஆளுதலுடையவன், அன்று - அந்நாளில், மங்கையர் மல்கும் - மாதர்கள் நிறைந்த, மதுரைசேர்ந்த - மதுரையையடைந்த, வகை அறிவார்-வகையையறிபவர், எம்பிரானாவார் - எம்பிரான்மாராவார், எ-று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமான் வளையலெடுத்து மங்கையர் நிறைந்த மதுரைப்பதியிலெழுந்தருளிய வரலாற்றை அறிபவர் எம்பிரான்மாராவார் என்பது.

(வி - ரை.) அங்கணன் - கிருபைக்கண்ணன். இகபரம் - இம்மை மறுமைகள். சாத்து - தலைக்கோலம். வளையலெடுத்து வந்த வரலாற்றைத் திருவிளையாடற்புராணம் வளையல் விற்றபடலத்திற் காண்க. (கo)

திருச்சிற்றம்பலம்

## எண்ணப்பதிகம்.

### ஒழியாவின்பத்துவகை.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாருருவாயபிறப்பறவேண்டும்
பத்திமையும்பெறவேண்டுஞ்
சீருருவாயசிவபெருமானே
செங்கமலமலர்போ
லாருருவாயவென்னாரமுதே
யுன்னடியவர்தொகைநடுவே
யோருருவாயநின்றிருவருள்காட்டி
யென்னையுமுய்யக்கொண்டருளே.

(ப - ரை.) பார் - பூமியில், உரு ஆய - உருக்கொண்ட, பிறப்பு-பிறவி, அறவேண்டும் - அற்றொழியவேண்டும், பத்திமையும் பெற வேண்டும் - பத்திமையும் அடையவேண்டும், (ஆதலால்) சீர் உரு ஆய - சிறந்த உருவத்தைக்கொண்ட, சிவபெருமானே-சிவபிரானே, செங்கமல மலர்போல் - செந்தாமரை மலர்போல, ஆர் உரு ஆய - அரிய உருவாகிய, என் ஆர் அமுதே - என் அரிய அமிர்தமே, உன் அடியவர் தொகைநடுவே - உன் அடியார் திரளின் இடையே, ஓர் உரு ஆய் - ஒப்பற்ற உருவாகி, நின் திரு அருள் காட்டி-உன் திருவருளைக்காட்டி, என்னையும் - அடியேனையும், உய்ய கொண்டருள் - உய்யக்கொண்டருள்வாயாக, எ - று.

(க - ரை.) எம்பெருமானே, என்பிறவியற்றொழிய வேண்டும், நான் உன்னிடத் தன்புசெய்தலையும் பெறவேண்டும், உன் அடியார் நடுவில் என்னையு மாட்கொண்டருளவேண்டும் என்பது.

(வி - ரை.) பார் எல்லாவுலகங்களையுங் குறித்தது. பத்திமை - பத்தி. என்னையும் என்றவும்மை இழிவு சிறப்பு. இறந்தது தழீ இயது மாம். (க)

உரியேனல்லேனுனக்கடிமை
யுன்னைப்பிரிந்திங்கொருபொழுதுந்
தரியேனாயேனின்னதென்
றறியேன்சங்கராகருணையினாற்
பெரியோனொருவன் கண்டுகொளென் -
பெய்கழலடிகாட்டிப்
பிரியேனென்றென்றருளியவருளும்
பொய்யோவெங்கள்பெருமானே.

(ப - ரை.) உனக்கு அடிமை-உனக்கு அடிமையாகிய நான், உரியேன் அல்லேன் - உரியவனல்லேன், உன்னை பிரிந்து - உன்னை நீங்கி, இங்கு - இவ்விடத்து, ஒரு பொழுதும் - சிறிது நேரமும், தரியேன் - தரித்திரேன், நாயேன் - நாயினேன், இன்னது என்று அறியேன் - (காரணம்) இன்னதென்று அறிகிலேன், சங்கரா-சங்கரனே, கருணையினால் - கருணையால், பெரியோன் ஒருவன் - யான் பெரியோனாகிய ஒருவன், கண்டுகொள் என்று - என்னை அறிந்துகொள்

என்று, உன் பெய்கழல் அடி காட்டி - உன் வீரக் கழலைத் தரித்த திருவடியைக்காட்டி, பிரியேன் என்று என்று - பிரியேனென்று சொல்லி, அருளிய அருளும்-அருளின அருளும், பொய்யோ-பொய் தானோ, எங்கள் பெருமானே - எங்கள் சிவபெருமானே, எ - று.

(க - ரை.) உனக்கு அடிமை உரியேனல்லேன், ஆயினும் உன்னைப் பிரிந்து இவ்விடத்துச் சிறிது நேரமும் தரிக்கலாற்றேன், அதற்குக் காரணமறியேன், நான் பெரியவன், என்னைக் கண்டுகொள் ளென்று உன் திருவடியைக் காட்டிப் பிரியேனென்று நீ சொல்லி யருளியதும் பொய்யோ என்பது.

(வி - ரை.) ஒரு பொழுதும் என்றது சிறிது பொழுதும் என்றபடி. (உ)

என்பேயுருகநின்னருளளித்துன
 னிணைமலரடிகாட்டி
முன்பேயென்னையாண்டுகொண்ட
 முனிவாமுனிவர்முழுமுதலே
யின்பேயருளியெனையுருக்கி
 யுயிருண்கின்றவெம்மானே
நண்பேயருளாயென்னுயிர்
 நாதாநின்னருணாணாமே.

(ப - ரை.) என்பு உருக - எலும்புகள் உருகும்படி, நின் அருள் அளித்து - உன் அருளைக் கொடுத்து, உன் - உன்னுடைய, இணை மலர் - இரண்டு தாமரை மலர்போன்ற, அடி - திருவடிகளை, காட்டி - காட்டி, முன்பே - முன்னமே, என்னை ஆண்டு கொண்ட - என்னை ஆண்டுகொண்டருளின, முனிவா - முனிவனே, முனிவர் முழு முதலே - முனிவர்க்கு முழு முதற்பொருளே, இன்பே அருளி-ஆநந் தத்தையே கொடுத்து,என்னை உருக்கி-என்னை உருகச் செய்து, உயிர் உண்கின்ற - உயிரைப் பருகுகின்ற, எம்மானே - எம் பெரியோனே, என் உயிர் நாதா - என் உயிர்த்தலைவனே, நின் அருள் நாணாமே - நின் அருள் கூசாமல், நண்பே அருளாய் - உன் நட்பையே அருள் செய்வாயாக, எ - று.

(க - ரை.) என் என்புருகப்பண்ணி என்னை முன்பே யாண்டருளின முதல்வனே, இன்பத்தைத் தந்து என்னுயிரைக் கவர்கின்ற எம்பெருமானே, உன் அருள் கூசாதபடி உன்னிடத்தன்பு செய்தலையே எனக் கருள்செய்யவேண்டும் என்பது.

(வி - ரை.) முன்பேயென்றது திருப்பெருந்துறையில் குருமூர்த்தமா யெழுந்தருளியிருந்த காலத்தை. (ங)

பத்திலனேனும்பணிந்திலனேனுமுன்
  னுயர்ந்தபைங்கழல்காணப்
பித்திலனேனும்பிதற்றிலனேனும்
  பிறப்பறுப்பாயெம்பெருமானே
முத்தனையானேமணியனையானே
  முதல்வனேமுறையோவென்
றெத்தனையானும்யான்றொடர்ந்துன்னை
  யினிப்பிரிந்தாற்றேனே.

(ப - ரை) பத்து இலனேனும் - பற்றிலேனாயினும், பணிந்திலனேனும் - பணிந்திலேனாயினும், பிறப்பு அறுப்பாய் - என் பிறவித்தளையைச் சேதிப்பாயாக, எம் பெருமானே - எம் பெரியோனே, முத்து அனையானே - முத்தை நிகர்த்தவனே, மணி அனையானே - மணியை நிகர்த்தவனே, முதல்வனே-முதன்மையானவனே, முறையோ என்று - முறையோவென்று, எத்தனையானும்-எவ்வளவானும், யான் தொடர்ந்து - நான் தொடர்ந்து, உன்னை - உன்னை, இனி பிரிந்து ஆற்றேன் - இனி (உன்னைப்) பிரிந்து சகியேன், எ - று.

(க - ரை) எம்பெருமானே, நான் உன்னைப் பற்றிலேனாயினும், பணிந்திலேனாயினும், உன் திருவடியைக் காணவேண்டுமென்னும் பித்திலேனாயினும், உன் புகழையே பிதற்றித் திரியேனாயினும் என் பிறவியை யொழித்தருளவேண்டும், யான் சிறிது நேரமாயினும் உன்னைப் பிரிந்திருக்க லாற்றேன் என்பது.

(வி - ரை.) பத்து-பற்று. பிதற்றல் - பலகாற் பேசல். வெண்ணீற்றை யணிந்திருக்கையால் முத்தனையானே என்றும், செந்நிற மேனியனாகையால் மணியனையானே என்றும் கூறினார். (ச)

காணுமதொழிந்தேனின்றிருப்பாதங்
கண்டுகண்களிகூரப்
பேணுமதொழிந்தேன்பிதற்றுமதொழிந்தேன்
பின்னையெம்பெருமானே
தாணுவேயழிந்தேனின்னினைந்துருகுந்
தன்மையென்புன்மைகளாற்
காணுமதொழிந்தேனீயினிவரினுங்
காணவுநாணுவனே.

(ப - ரை.) நின் திரு பாதம் - உன் திருவடியை, காணுமது ஒழிந்தேன் - காண்பதை ஒழிந்தேன், கண்டு கண் களிகூர - கண்டு கண்கள் களிப்புமிக, பேணுமது ஒழிந்தேன் - விரும்புவதை ஒழிந்தேன், பிதற்றுமது ஒழிந்தேன்-பிதற்றுவதை ஒழிந்தேன், பின்னை-மேலும், எம் பெருமானே - எம்பெருமானே, தாணுவே - தாணுவே, நின் நினைந்து உருகும் - உன்னை நினைந்துருகும் தன்மை, அழிந்தேன் - ஒழிந்தேன், என் புன்மைகளால் - என் புன்மைகளாலே, காணு மது ஒழிந்தேன் - காண்பதை ஒழிந்தேன், நீ இனிவரினும் - நீ இனி வந்தாலும், காணவும் நாணுவன் - காணவும் நாணுவேன், எ - று.

(க - ரை.) எம்பெருமானே, உன் திருவடியைக் காண்கிலேன், கண்டு கண் களிகூர விரும்பேன், பிதற்றிலேன், உன்னை நினைந்துருகுந் தன்மையுமில்லேன், இனி நீயே வந்தாலும் உன்னைக்காணவும் கூசுவேன் என்பது.

(வி - ரை.) பேணுதல் - விரும்புதல். தாணு - சலித்தலில்லாதவன். (௫)

பாற்றிருநீற்றெம்பரமனைப்பரங்
கருணையோடெதிர்ந்து
தோற்றிமெய்யடியார்க்கருட்டுறையளிக்குஞ்
சோதியைநீதியிலேன்
போற்றியென்னமுதேயெனநினைந்தேத்திப்
புகழ்ந்தழைத்தலறியென்னுள்ளே
யாற்றுவனாகவுடையவனேயெனை
யாவவென்றருளாயே.

(ப - ரை.) பால் - வெண்மையாகிய, திருநீற்று - திருநீற்றை பணிந்த, எம் பரமனே - எம்பரமனே, பரம் கருணையோடும் எதிர்ந்து தோற்றி - மேலான கருணையோடும் எதிர்ந்து காணப்பட்டு, மெய் அடியார்க்கு - மெய்யடியவர்களுக்கு, அருள் துறை அளிக்கும் - அருட்டுறையை அருள்செய்கிற, சோதியை - ஒளியை, நீதி இலேன் - நீதியிலாதேன், போற்றி - வணக்கம் செய்து, என் அமுதே என - என் அமிர்தமே என்று, நினைந்து ஏத்தி - நினைந்து துதித்து, புகழ்ந்து அழைத்து - புகழ்ந்து கூவி, அலறி - அலறி, என் உள்ளே ஆற்றுவன் ஆக - என்மனத்தே ஆற்றுவேனாக, உடையவனே - என்னை யடிமைகொண்டவனே, என்னை - அடியேனை, ஆவ என்று - ஐயோவென்று, அருளாய் - இரங்கி யருள்வாயாக, எ - று.

(க - ரை.) திருவெண்ணீற்றை யணிந்த மேலோனும், அடியவர்க்கெதிரே தோன்றி அருள்செய்வோனும், ஆகிய உன்னை வணங்கி வாழ்த்திப்புகழ்ந்தழைத்தலறி என்னுள்ளே தணிவேனாக அருள்செய்யவேண்டும் என்பது.

(வி - ரை.) பால் - வெண்மை. ஆற்றுதல் - சகித்தல். ஆவ - இரக்கக்குறிப்பு. (௯)

திருச்சிற்றம்பலம்.

# யாத்திரைப்பத்து.

## அனுபவாதீதமுரைத்தல்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பூவார்சென்னிமன்னனெம்புயங்கப்பெருமான்சிறியோமை
யோவாதுள்ளங்கலந்துணர்வாயுருக்கும்வெள்ளக்கருணையினு
லாவாவென்னப்பட்டன்பாயாட்பட்டீர்வந்தொருப்படுமின்
போவோங்காலம்வந்ததுகாண்பொய்விட்டுடையான்கழல்புகவே

(ப - ரை.) பூ ஆர் - (கொன்றை) மலர்பொருந்திய, சென்னி - சிரத்தையுடைய, மன்னன் - தலைவன், எம் - எமது, புயங்கப்பெருமான் - புயங்கப்பெருமான், சிறியோமை - சிறியோமாகிய எங்களை, ஓவாது - நீங்காமல், உள்ளம் கலந்து - மனத்திற்கலந்து, உணர்வு ஆய் - அறிவுருவாகி, உருக்கும் - உருகச்செய்கிற, வெள்ளக்கருணையினால் - கருணைப்பெருக்கால், ஆவா என்னப்பட்டு - ஐயோவெனப் பட்டு, அன்பாய் - அன்பாகி, ஆட்பட்டீர் - அடிமைப்பட்டீர், வந்து ஒருப்படுமின் - வந்து ஒருப்படுங்கள், பொய்விட்டு - பொய்யாகிய உடம்பைவிட்டு, உடையான்கழல்புக - உடையவனது திருவடியை யடைய, காலம்வந்தது - காலம் நேர்ந்தது, போவோம் - யாம்செல்லு வோம், எ - று.

(க - ரை.) கொன்றைமலரையணிந்த புயங்கப்பெருமான் சிறியோங்களை நீங்காது மனத்திற்கலந்து அறிவுருவாகி மனத்தை யுருகப்பண்ணுகின்ற பெருங்கருணையினால் ஆவாவென்றிரங்கி யருளப்பட்டு, அன்போடு அவனுக்கு ஆட்பட்டவர்களே, இந்தப்பொய்யுடம்பைவிட்டு உடையவன் திருவடியை யடையுங்காலம் நேர்ந்தது, ஆதலால் நீங்கள்வந்து ஒருப்படுங்கள் யாம் போவோம் என்பது.

(வி - ரை.) பூ என்றது கொன்றைமலரை, இறைவனுக்குப் போகமலராதலின். புயங்கம் - ஓர் கூத்து. அதனையுடையவனாதலால்

இறைவனுக்குப் புயங்கப்பெருமான் என்னும் பெயர்வந்தது. அன்றி புயங்கம் - பாம்பு. அதனையுடையவ னாதலால் இப்பெயர்வந்ததெனினுமாம். (க)

புகவேவேண்டாபுலன்களினீர்புயங்கப்பெருமான்பூங்கழல்கண்
மிகவேநினைமின்மிக்கவெல்லாம்வேண்டாபோகவிடுமின்க
ணகவேஞாலத்துள்புகுந்துநாயேயனையநமையாண்ட
தகவேயுடையான்றனைச்சாரத்தளராதிருப்பார்தாந்தாமே.

(ப - ரை.) நக - (அடியார்) சிரிக்க, ஞாலத்துள் புகுந்து - பூமியில் எழுந்தருளி, நாயே அனைய-நாயினையேநிகர்த்த,நம்மை ஆண்ட-எம்மை ஆண்டருளின, தகவு உடையான் தன்னை - தகுதியையுடையவனை, சார - அடைய, தளராதிருப்பீர் - தளராமல் முயன்றிருப்பீர்காள், நீர் - நீங்கள், புலன்களின் - ஐம்புலன்களில், புகவேண்டா - நுழையவேண்டா, புயங்கப்பெருமான் - புயங்கப்பெருமானுடைய, பூ கழல்கள் - தாமரைமலர்போலுந் திருவடிகளை, மிக நினைமின் - மிகுதியாக நினையுங்கள், மிக்க எல்லாம் - மற்றைய எல்லாப்பொருள்களையும், வேண்டா போக விடுமின் - விரும்பாமல் போக விடுங்கள், எ - று.

(க - ரை.) அடியார் சிரிக்க இப்பூமியில் வந்து நாயனைய நம்மை யாண்ட சிவ்பெருமானை யடைய முயல்பவர்களே; நீங்கள் ஐம்புலவாசையிற் புகவேண்டா, புயங்கப்பெருமானுடைய திருவடியை நினையுங்கள், மற்றெல்லாப்பொருள்களையும் போகவிடுங்கள் என்பது.

(வி - ரை.) புலன்கள் - ஐம்புலன்கள், அவை சப்தாதிகள். நகுதல் - சிரித்தல். தகவு - தகுதி, (கிருபை). (உ)

தாமேதமக்குச்சுற்றமுந்தாமேதமக்குவிதிவகையும்
யாமாரெமதார்பாசமாரென்னமாயமிவைபோகக்
கோமான்பண்டைத்தொண்டரொடுமவன்றன்குறிப்பேகுறிக்கொண்
போமாறமைமின்பொய்நீக்கிப்புயங்கனாள்வான்பொன்னடிக்கே. [டு

(ப - ரை.) தமக்கு சுற்றமும் - தமக்கு உறவும், தாமே-தாமே, தமக்கு விதிவகையும் - தமக்கு விதிமுறையும், தாமே - இறைவர்

தாமே, யாம் ஆர் - நாம் யார், எமது ஆர் - எமது என்பது யார், பாசம் ஆர் - பாசமாவது யார், என்ன மாயம் - என்ன மாயமாயிராநின்றது, இவை போக - இவை போகட்டும், கோமான் - இறைவனது, பண்டை தொண்டரோடும் - பழவடியாரோடும், அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு - அவனது திருவுள்ளக்குறிப்பையே உறுதிப்பொருளாகக்கொண்டு, பொய் நீக்கி - பொய்யாகிய வுடம்பைவிட்டு, புயங்கன் - புயங்கன், ஆள்வான் - எம்மை யாள்பவன், (அவனது) பொன்னடிக்கே - பொன்னடிக்கண்ணே, போம் ஆறு - செல்லும்வண்ணம், அமைமின் - அமையுங்கள், எ - று.

(க - ரை.) எமக்குச் சுற்றம்முதலிய யாவும் இறைவரே, அங்ஙனமாக, யாம் ஆர், எமது ஆர், பாசம் ஆர், இவை யென்னமாயம், இதுநிற்க, இறைவனது பழவடியாரோடும் அவனது திருவுளக்குறிப்பையே உறுதிப்பொருளாகக்கொண்டு, இந்தப் பொய்யுடம்பைவிட்டு புயங்கப்பெருமான் பொன்னடியை யடையப்போகும்படி அமையுங்கள் என்பது.

(வி - ரை.) தமக்கு என்றது எமக்கு என்றபடி. தாமே என்றது இறைவர் தாமே என்றபடி. (௬)

அடியாரானீரெல்லீருமகலவிடுமின்விளையாட்டைக்
கடிசேரடியேவந்தடைந்துகடைக்கொண்டிருமின்றிருக்குறிப்பைச்
செடிசேருடலைச்செலநீக்கிச்சிவலோகத்தேநமைவைப்பான்
பொடிசேர்மேனிப்புயங்கன்றன்பூவார்கழற்கேபுகவிடுமே.

(ப - ரை.) அடியார் ஆனீர் எல்லீரும்-அடியாரான நீவிரெல்லீரும், விளையாட்டை அகலவிடுமின்-விளையாட்டுக் காரியங்களை நீங்கவிடுங்கள், கடிசேர்-மணந்தங்கிய, அடியே-இறைவனது திருவடிகளையே, வந்து அடைந்து-வந்து சேர்ந்து, திருக்குறிப்பை-திருவுளத்தை, கடைக்கொண்டு இருமின்-உறுதியாகக்கொண்டிருங்கள், (இப்படி செய்வீராயின்) பொடிசேர் மேனி - திருநீறுபொருந்திய திருமேனியையுடைய, புயங்கன்-புயங்கப்பெருமான், செடி சேர் உடலை-பாவஞ்சேர்ந்தவுடம்பை, செல்ல நீக்கி - போக அகற்றி, சிவலோகத்தே - சிவலோகத்தின் கண்ணே, நம்மைவைப்பான் - நம்மை இருத்துவன், (அன்றியும்) தன் பூ ஆர் கழற்கே-தன் தாமரைமலர்போலுந் திருவடியின் கண்ணே, புகவிடும் - புகவிடுவன், எ - று.

(க - ரை.) அடியாராகிய நீங்கள் எல்லீரும் பொய்த்தொழிலை விட்டு இறைவனது திருவடிகளையே வந்தடைந்து உறுதியாய்ப்பற்றி யிருங்கள், இப்படிசெய்தால் அவன் நமது பொய்யுடம்பை விடுவித்துச் சிவலோகத்தில் தன்திருவடி நிழற்கண்ணே எம்மைப்புகவிடுவன் என்பது.

(வி - ரை.) விளையாட்டு இங்குப்பொய்யென்னும் பொருளது. அன்பரிடமலர்களின் மணந்தங்கி யிருத்தலால் இறைவன் திருவடியைக் "கடிசேரடி" என்றார். கடைக்கொண்டு - கடைப்பிடித்து. (௪)

விடுமின்வெகுளிவேட்கைநோய்மிகவோர்காலமினியில்லை
யுடையானடிக்கீழ்ப்பெருஞ்சாத்தோடுடன்போவதற்கேயொருப்படுமி
னடைவோநாம்போய்ச்சிவபுரத்துளணியார்கதவதடையாமே
புடைபட்டுருகிப்போற்றுவோம்புயங்களுள்வான்புகழ்களையே.

(ப - ரை.) வெகுளி - கோவத்தையும், வேட்கைநோய்-ஆசை நோயையும், விடுமின் - விடுங்கள், மிகவு ஓர் காலம் இனும் இல்லை . மிகுதியாகிய ஒரு காலம் இன்னம் இல்லை, உடையான் அடிக்கீழ் . உடையவன் திருவடிக்கீழே, பெருஞ்சாத்தோடு - பெருவிழாவோடு, உடன் போவதற்கே - கூடப்போவதற்கே, ஒருப்படுமின் - ஒருப்படுங்கள், நாம்போய் - நாம்சென்று, சிவபுரத்துள் அடைவோம் - சிவபுரத்துள் சேர்வோம், அணி ஆர் கதவு அடையாமே - அழகுபொருந்திய கதவடையாமல், புடைபட்டு உருகி - பக்கத்தேயிருந்து மனமுருகி, புயங்கன் - புயங்கன், ஆள்வான் - எம்மை ஆள்பவனது, புகழ்களையே போற்றுவோம் - புகழ்களையே துதிப்போம், எ - று.

(க - ரை.) கோவம் ஆசையென்பவற்றை விடுங்கள், விடுதற்குத்தகுந்தகாலம் இதுவேயன்றி வேறொருகாலமில்லை, உடையவன் திருவடிக்கீழ்ச் சென்றிருத்தற்கே ஒருப்படுங்கள், நாம் சிவபுரத்துக் கதவு திறக்கப்பட்டிருக்கும்போதே சென்று இறைவன் பக்கத்திருந்து மனமுருகி அவனது புகழைத் துதிப்போம் என்பது.

(வி - ரை.) வெகுளி வேட்கை - வெறுப்பு விருப்பு. இவை உயிர்கட்குத் துன்பத்துக் கேதுவாதலால் இவற்றை "நோய்" என்றார். சாத்து - திருவிழா. (௫)

புகழ்மின்றொழுமின்பூப்புனைமின்புயங்கன்றாளேபுந்திவைத்திட்
டிகழ்மினெல்லாவல்லலையுமினியோரிடையூறடையாமே
திகழுஞ்சீரார்சிவபுரத்துச்சென்றுசிவன்றாள்வணங்கிநா
நிகழுமடியார்முன்சென்றுநெஞ்சமுருகிநிற்போமே.

(ப - ரை.) புயங்கன் தாளே - புயங்கனது திருவடியையே, புகழ்மின் - புகழுங்கள், தொழுமின் - தொழுங்கள், பூ புனை மின் - மலர்களால் அலங்கரியுங்கள், புந்தி வைத்திட்டு - மனத்தில் வைத்து, எல்லா அல்லலையும் - எல்லாத் துன்பங்களையும், இகழ்மின் - இகழுங்கள், இனி ஓர் இடையூறு அடையாமே - இனிமேல் ஒரு இடையூறு சேராமல், திகழும் - விளங்குகின்ற, சீர் ஆர் - சிறப்புப் பொருந்திய, சிவபுரத்து - சிவபுரத்தில், சென்று - போய், சிவன் தாள் வணங்கி - சிவபெருமானது திருவடியை வணங்கி, நாம் - யாம், நிகழும் அடியார் முன் சென்று - அங்குவாழ்கின்ற அடியார்முன்னே போய், நெஞ்சம் உருகி நிற்போம் - மனமுருகி நிற்போம், எ - று.

(க - ரை.) புயங்கப் பெருமான் திருவடியையே புகழுங்கள், மலர்களால் அலங்கரியுங்கள், மனத்திலிருத்தித் துன்பங்க ளெல்லாவற்றையும் இகழுங்கள், இனி யொரு துன்பஞ் சேராமல் சிவபுர மடைந்து இறைவன் திருவடியை வணங்கி அவனடியார் முன் போய் மனமுருகி நிற்போம் என்பது.

(வி - ரை.) புனைதல் - அலங்கரித்தல். புந்தி இங்கு மனத்துக் காயிற்று. இகழ்தல் - கைவிடுதல். நிகழ்தல் - வாழ்தல். அடியார் என்றது சிவபுரத்திருப்பவரை. (சு)

நிற்பார்நிற்கநில்லாவுலகினில்லோமினிநாஞ்செல்வோமே
பொற்பாலொப்பாந்திருமேனிப்புயங்கனாள்வான்பொன்னடிக்கே
நிற்பீரெல்லாந்தாழாதேநிற்கும்பரிசேயொருப்படுமின்
பிற்பானின்றுபேழ்கணித்தாற்பெறுதற்கரியன்பெருமானே.

(ப - ரை.) நிற்பார் நிற்க - நிற்பவர் நிற்க, நில்லா வுலகில் - நில்லாத வுலகத்தில், நில்லோம் - நிற்கோம், இனி நாம் செல்வோம் - இனி நாம் போவோம், பொற்பால் - அழகினால், ஒப்பு ஆம் - (தனக்குத்தானே) சமானமாகிற, திருமேனி - திருமேனியை யுடைய, புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே நிற்பீர் எல்லாம் - புயங்கனாள்

வான் பொன்னடிக்கே விருப்புற்று நிற்பீர் எல்லீரும், தாழாதே நிற்கும் பரிசே - தாழ்க்காமல் நிற்கும் தன்மைக்கே, ஒருப்படுமின் - ஒருப்படுங்கள், பின்பால் நின்று-பின்னிடத்தே நின்று, பேழ்கணித்தால் - விழித்தால், பெருமான் - பெருமானானவன், பெறுதற்கு அரியன் - அடைதற்கரியவன் ஆவான், எ - று.

(க - ரை.) பொய்யுலகத்தில் இருப்பவர் இருக்கட்டும், இனி நாம் நில்லோம், செல்லுவோம், புயங்கப்பெருமான் திருவடிப்பேற்றுக்கே விருப்பமடைந்து நிற்பவர்களாகிய நீங்கள் எல்லீரும் தாமதியாமல் வந்து ஒருப்படுங்கள், அப்படி செய்யாமல் பின்னிட்டு நின்று விழித்தால் இறைவன், நாம் பெறுதற்கரியவனாவான் என்பது.

(வி - ரை.) நில்லாவுலகு - பொய்யுலகு. "பொற்பா லொப்பாந் திருமேனி" என்பதற்கு அழகிய பால்போலுந் திருமேனி என்றுரைத்தலு மொன்று. பேழ்கணித்தல் - விழித்தல். (எ)

பெருமான்பேரானந்தத்துப்பிரியாதிருக்கப்பெற்றீர்கா
ளருமாலுற்றுப்பின்னைநீரம்மாவழுங்கியரற்றாதே
திருமாமணிசேர்திருக்கதவந்திறந்தபோதேசிவபுரத்துத்
திருமாலறியாத்திருப்புயங்கன்றிருத்தாள்சென்றுசேர்வோமே.

(ப - ரை.) பெருமான் - பெருமானது, பேரானந்தத்து - பேரின்பத்தில், பிரியாதிருக்கப் பெற்றீர்காள் - நீங்காதிருக்கப் பெற்றீர்காள், அருமால் உற்று பின்னை நீர் அழுங்கி அரற்றாதே - அரிய மயக்கம்பூண்டு மேலே நீங்கள் துன்பப்பட்டு அரற்றாமல், திருமா மணி சேர் - திருமாமணிகள் பொருந்திய, திருக்கதவம் திறந்தபோதே - திருக்கதவு திறந்திருக்கும்போதே, சிவபுரத்து - சிவபுரத்தில், திருமால் அறியா - திருமாலும் அறியவொண்ணாத, திருப்புயங்கன் - திருப்புயங்கனது, திருத்தாள் - திருவடிகளை, சென்று சேர்வோம் - சென்று அடைவோம், எ - று.

(க - ரை.) இறைவனது பேரின்பத்தினின்றும் நீங்காதிருக்கப்பெற்றவர்களே, நீங்கள் அரியமயக்கமடைந்து துன்புற்றரற்றாமல் சிவபுரத்துத் திருக்கதவு திறந்திருக்கும்போதே சென்று புயங்கப் பெருமான் திருவடியைச் சேர்வோம் என்பது.

(வி - ரை.) மால் - மயக்கம். அழுங்குதல் துன்புறுதல் திருமாமணி - அழகும் பெருமையுமுள்ள மணி. (அ)

சேரக்கருதிச்சிந்தனையைத்திருந்தவைத்துச்சிந்திமின்
போரிற்பொலியும்வேற்கண்ணாள்பங்கன்புயங்கனருளமுத
மாரப்பருகியாராதவார்வங்கூரவழுந்துவீர்
போரப்புரிமின்சிவன்கழற்கேபொய்யிற்கிடந்துபுரளாதே.

(ப - ரை.) சேரக்கருதி — அடையக்கருதி, சிந்தனையை - மனத்தை, திருந்த வைத்து - திருந்தும்படி வைத்து, சிந்திமின் - சிந்தியுங்கள், போரில் பொலியும் - போர்த்தொழிலால் பொலிகின்ற, வேல் - வேல்போன்ற, கண்ணாள் - கண்களையுடையவளாகிய உமாதேவியின், பங்கன் - பாகன், புயங்கன் - புயங்கமென்னுந் திருக்கூத்தினையுடையவன், அருள் அமுதம் - அருளாகிய அமிர்தத்தை, ஆர பருகி - நிறையப்பருகி, ஆராத - தெவிட்டாத, ஆர்வம் கூர - அன்பு மிக, அழுந்துவீர் — மூழ்குவீர், பொய்யில் கிடந்து - பொய்யுலகிற் கிடந்து, புரளாது - புரளாமல், சிவன் கழற்கே போர புரிமின் - சிவபெருமானது திருவடிக்கண்ணே மிகவும் அன்புசெய்யுங்கள், எ-று.

(க - ரை.) மனத்தைத் திருத்திச் சிவபெருமானது திருவடியையே சிந்தியுங்கள், அவனது அருளாகிய அமிர்தத்தைப் பருகி, இந்தப் பொய்யுலகிற்கிடந்து புரளாமல் அவனது திருவடிக்கே அன்பு செய்யுங்கள் என்பது.

(வி - ரை.) ஆர்தல் - நிறைதல், தெவிட்டல். ஆர்வம்-அன்பு. கூர்தல் - மிகுதல். போர - மிக. புரிதல் - விரும்புதல் (அன்புசெய்தல்.) (கூ)

புரள்வார்தொழுவார்புகழ்வாராயின்றேவந்தாளாகாதீர்
மருள்வீர்பின்னைமதிப்பாரார்மதியுட்கலங்கிமயங்குவீர்
தெருள்வீராகிலிதுசெய்மின்சிவலோகக்கோன்றிருப்புயங்க
னருளார்பெறுவாரகலிடத்தேயந்தோவந்தோவந்தோவே.

(ப - ரை.) புரள்வார் - புரளுவார்கள், தொழுவார் - வணங்குவார்கள், புகழ்வார் - புகழ்வார்கள், ஆய் - ஆகி, இன்றேவந்து - இப்

பொழுதேவந்து, ஆள் ஆகாதீர்-அடிமையாகாதவர்களே, மருள்வீர் - மயங்குவீர், பின்னை மதிப்பார் ஆர் - பிறகு மதிப்போர் யாவர், மதி உள் கலங்கி மயங்குவீர்-மதி உள்ளே கலக்கமடைந்து மயங்குவீர்கள், தெருள்வீர் ஆகில் - (அம்மயக்கம் தீர்ந்து) தெளிவீராகில், இதுசெய்மின்-இதனைச்செய்யுங்கள், (என்னெனின்) சிவலோகக்கோன் - சிவபுரத்துக்குத் தலைவன், திருப்புயங்கன் - அழகிய சர்ப்பாபரணத்தையுடையவன், (அவனது) அருள்-அருளை, அகல் இடத்து-அகன்றபூமியில், ஆர் பெறுவார்-யார்பெறுவோர், அந்தோ அந்தோ அந்தோ, எ-று.

(க - ரை.) புரண்டும் தொழுதும் புகழ்ந்தும் இப்பொழுதே வந்து ஆளாகாதவர்களே, பிறகு மயங்குவீர்கள், உங்களை மதிப்பவர் யாவர், நீங்கள் தெளிவீர்களாகில் இதனைச்செய்யுங்கள், திருப்புயங்கனது அருளைப் பெறுவோர் இவ்வுலகத்தில் ஒருவருமில்லை என்பது.

(வி - ரை) மருளுதல் - மயங்குதல். தெருளுதல் - தெளிதல். அகலிடம் ஒரு சொல்லாகக்கொண்டு பூமியென் றுரைத்தலும் பொருந்தும். (க0)

திருச்சிற்றம்பலம்.

# திருப்படையெழுச்சி.

## பிரபஞ்சப்போர்.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஞானவாளேந்துமையர்நாதப்பறையறைமின்
மானமாவேறுமையர்மதிவெண்குடைகவிமின்
ஆனநீற்றுக்கவசமடையப்புகுமின்கள்
வானவூர்கொள்வோநாமாயப்படைவாராமே.

(ப - ரை.) ஞானவாள் ஏந்தும் - ஞானமாகிய வாட்படையைத் தாங்குகின்ற, ஐயர் - ஐயரது, நாதப்பறை அறைமின் - நாதமாகிய

பறையை அறையுங்கள், மானம் மா ஏறும் - பெருமைபொருந்திய யானையிலேறுகின்ற, ஐயர் - ஐயராது, மதி வெண்குடை கவிமின் - பூர்ணசந்திரன்போன்ற வெள்ளிய குடையைக் கவியுங்கள், ஆன - நன்மையாகிய, நீற்று கவசம் - திருவெண்ணீற்றுக் கவசத்தில், அடைய - முழுதும், புகுமின்கள் - நுழைந்துகொள்ளுங்கள், (இப்படி செய்வீராயின்) நாம் - யாம், மாயப்படைவாராமே-மாயச்சேனை வாராமல் வென்று, வானவூர் கொள்வோம் - முத்திநகரத்தைக் கைக்கொள்வோம், எ - று.

(க - ரை.) ஞானவாளைத் தாங்குகின்ற இறைவரது நாதப்பறையைக் கொட்டுங்கள், யானையேறுகின்ற இறைவரது வெண்குடையை கவியுங்கள், திருவெண்ணீற்றுக் கவசத்திற் புகுந்துகொள்ளுங்கள், இப்படிச்செய்தால், நாம் மாயப்படை நம்மீது வாராமல் வென்று முத்தியுலகைக் கைக்கொள்வோம் என்பது.

(வி - ரை.) ஐயர் இரண்டையும் அண்மைவிளிகளாக்கினும் அமையும். இப்பொருட்டு ஏந்தும் ஏறும் என்பவற்றிற்கு ஏந்துங்கள் ஏறுங்கள் என முன்னிலையேவல் வினைமுற்றாகப் பொருளுரைத்துக் கொள்க.

(௧)

தொண்டர்காள்தூசிசெல்லீர்பத்தர்காள்சூழப்போகி
ரொண்டிறல்யோகிகளேபேரணியுந்தீர்க
டிண்டிறற்சித்தர்களேகடைக்கூழைசென்மின்க
ளண்டர்நாடாள்வோநாமல்லற்படைவாராமே.

(ப - ரை.) தொண்டர்காள் - தொண்டர்களே, தூசி செல்லீர்- கொடிப்படையாய்ச் செல்லுங்கள், பத்தர்காள் சூழப்போகீர் - பத்தர்களே சூழச்செல்லுங்கள், ஒண் திறல் யோகிகளே - ஒள்ளிய வலிய மைந்த யோகிகளே, பேரணி உந்தீர்கள் - பெரும்படை வகுப்பைச் செலுத்துங்கள், திண் திறல் சித்தர்களே - பெருவலியமைந்த சித்தர்களே, கடைக்கூழை செல்மின்கள் - பின்னணியாய்ச் செல்லுங்கள், (இப்படி செய்வீராயின்) நாம் - யாம், அல்லல் படைவாராமே - துன்பமாகிய சேனைகள் வாராமல் வென்று, அண்டர் நாடு ஆள்வோம் - முத்தியுலகத்தை யாளப்பெறுவோம், எ - று.

(க - ரை.) தொண்டர்களே, நீங்கள் கொடிப்படையாய்ச் செல்லுங்கள், பத்தர்களே, நீங்கள் சூழச்செல்லுங்கள், யோகிகளே, நீங்கள் பெரும்படைவகுப்பைச் செலுத்துங்கள், சித்தர்களே, நீங்கள் பின்னணியாய்ச் செல்லுங்கள், இப்படி செய்தால் துன்பமாகிய படை நம்மீது வாராமல் வென்று முத்தியுலகை ஆளப்பெறுவோம் என்பது.

(வி - ரை.) தூசி - முற்படை. கடைக்கூழை-பின்னணி. (உ)

திருச்சிற்றம்பலம்.

# திருவெண்பா.

## அணைந்தோர்தன்மை.

### நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

வெய்யவினையிரண்டும் வெந்தகலமெய்யுருகிப்
பொய்யும்பொடியாகா தென்செய்கேன்—செய்ய
திருவார்பெருந்துறையான் றேனுந்துசெந்தி
மருவா திருந்தேன் மனத்து.

(ப - ரை.) செய்ய - செவ்விய, திரு ஆர் - அழகுநிறைந்த, பெருந்துறையான் - திருப்பெருந்துறையை யுடையவன், தேன் உந்து செந்தீ - தேனைச்சொரிகின்ற செந்தீயை நிகர்த்த திருமேனியை, மருவாது இருந்தேன்-பொருந்தாதிருந்தேனது, மனத்து-மனத்தில், வெய்ய வினை இரண்டும் - கொடிய வினைகளிரண்டும், வெந்து அகல - வெந்தொழிய, மெய் உருகி - உடலுருகி, பொய்யும் பொடியாகாது - பொய்யும் நீறாகாது. என்செய்கேன் - யாதுசெய்கேன் எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறை யிறைவனது திருமேனியைச் சிந்தியாத என் மனத்தில், கொடிய வினைகளிரண்டும் வெந்தொழியா.

உடலுருகிப் பொய்நடைகளும் நீறுகாது என்செய்யக்கடவேன் என்பது.

(வி - ரை.) திரு - செல்வம் எனினுமாம். செந்தீ - செந்தீயை நிகர்த்த திருமேனி. தேனுந்து செந்தீ - தேன் பொழிகின்ற செந்தீ எனினும் பொருந்தும். வினையிரண்டும் பிறவிக்கேதுவாதலால் "வெய்யவினை யிரண்டும்" என்றார். (௬)

ஆர்க்கோவரற்றுகோ வாடுகோபாடுகோ
பார்க்கோபரம்பரனே யென்செய்கேன்—தீர்ப்பரிய
வானந்தமாலேற்று மத்தன்பெருந்துறையான்
றனென்பாராரொருவர் தாழ்ந்து.

(ப - ரை.) தாழ்ந்து - வணங்கி, தீர்ப்பு அரிய - நீக்குதற்கரிய, ஆநந்தமால் ஏற்றும் - இன்பமயக்கத்தை யேற்றுகின்ற, அத்தன் - எமது தந்தை, பெருந்துறையான் - திருப்பெருந்துறையையுடையவன், என்பார் - என்று சொல்லுவோர், ஆர் ஒருவர் - யாரொருவர் (ஒருவருமில்லை) ஆர்க்கோ - ஆரவாரிக்கவோ, அரற்றுகோ - அரற்றவோ, ஆடுகோ - ஆடவோ, பாடுகோ-பாடவோ, பரம்பரனே-யாவருக்கும்மேலானவனே, என்செய்கேன்-யாதுசெய்கேன், எ-று.

(க - ரை.) வணங்கிநின்று, எமக்கு இன்பமயக்கத்தை மிகுவிக்கின்ற எமது தந்தையாகிய திருப்பெருந்துறையை யுடையவனே யென்றுசொல்லுவோர் ஒருவருமில்லை, யானொருவனுமே யிருந்து ஆரவாரித்தல் முதலியவற்றைச் செய்யவோ, யாதுசெய்கேன் என்பது.

(வி - ரை.) ஆர்த்தல் - ஆரவாரித்தல். அரற்றல் - பலகாற்பேசல். ஆடுதல் - ஆநந்தக்களிப்பாற் கூத்தாடுதல். பாடுதல் - புகழ்ந்து பாடல். (௭)

செய்தபிழையறியேன் சேவடியேகைதொழுதே
யுய்யும்வகையி னுயிர்ப்பறியேன்—வையத்
திருந்துறையுள்வேன்படுத்தேன் சிந்தனைக்கேகோத்தான்
பெருந்துறையின்மேய பிரான்.

(ப - ரை.) வையத்து - உலகத்து, இருந்து - எழுந்தருளியிருந்து, உறையுள் - உறையிலுள்ள, வேல் மடுத்து-வேலையெடுத்து, என் சிந்தனைக்கே கோத்தான் - என்மனத்திற்கோத்தான், பெருந்துறையில் மேயபிரான் - திருப்பெருந்துறையில் எழுந்தருளிய பிரான், செய்த பிழை அறியேன் - செய்த குற்றத்தை அறிகிலேன்; சேவடியே கைதொழுது - சேவடியையே கைதொழுது, உய்யும் வகையின் - உய்யும் வகையால், உயிர்ப்பு அறியேன்-பிழைப்பு அறியேன், எ-று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபிரான், தன் வேலாயுதத்தை யென்மனத்தின்மீது பிரயோகித்தான், இதற்குக் காரணமாக யான்செய்த குற்றத்தை அறிந்திலேன், அவனது திருவடியையே கைதொழுது உய்யும்வகையோடு உயிர்வாழ்தலையும் அறியேன் என்பது.

(வி - ரை.) உய்தல்-கடைத்தேறுதல். உயிர்ப்பு-உயிர்வாழ்தல்.

முன்னைவினையிரண்டும் வேரறுத்துமுன்னின்றான்
பின்னைப்பிறப்பறுக்கும் பேராளன்—றென்னன்
பெருந்துறையின்மேய பெருங்கருணையாளன்
வருந்துயரந்தீர்க்கு மருந்து.

(ப - ரை.) முன்னை வினை யிரண்டும் - முற்பிறப்பிற் செய்த வினைகளிரண்டையும், வேர் அறுத்து - வேரோடறுத்து, முன் நின்றான் - எதிரே நின்றவனும், பின்னை பிறப்பு அறுக்கும் - பின்னேயுண்டாகும் பிறவிகளை யறுக்கின்ற, பேர் ஆளன் - பேரை யுடையவனும், தென்னன் - தென்னனும், பெருந்துறையில் மேய - திருப்பெருந்துறையிற் பொருந்திய, பெருங் கருணையாளன் - பெருங்கருணையை யுடையவனும் ஆகிய சிவபிரான், வரும் துயரம் தீர்க்கும் மருந்து - வருந்துன்பங்களை நீக்குகின்ற மருந்தாவன், எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறையி லெழுந்தருளிய பெருங் கருணையானும், வருந்துன்பங்களை யொழிக்கு மருந்தும் ஆகிய சிவபிரான், என் முன்னை வினை யிரண்டையும் வேரறுத்து, இனி வரக்கூடியதாகிய பிறப்பையும் அறுக்கின்றவனாய் என்னெதிரே நின்றான் என்பது.

(வி - ரை.) முன்னை வினை யிரண்டு என்றது நல்வினை தீவினைகளை. பேராளன் - திருநாமத்தை யுடையவன். (ச)

அறையோவறிவார்க் கனைத்துலகுமீன்ற
மறையோனுமாலு மால்கொள்ளு—மிறையோன்
பெருந்துறையுண்மேய பெருமான்பிரியா
திருந்துறையுமென்னெஞ்சத் தின்று.

(ப - ரை.) அனைத்து உலகும் ஈன்ற - எல்லா வுலகங்களையும் படைத்த, மறையோனும் - பிரமனும், மாலும் - திருமாலும், மால் கொள்ளும் - விருப்பங் கொள்ளுகின்ற, இறையோன் - இறைவன், பெருந்துறையுள்மேய பெருமான் - திருப்பெருந்துறையில் எழுந்தருளிய பெருமான், பிரியாதிருந்து - நீங்காமலிருந்து, இன்று என் நெஞ்சத்து உறையும் - இன்று என் மனத்தில் வாழ்வான், (ஆதலால்) அறிவார்க்கு அறையோ - அறிபவர்க்கு முறையோ, எ - று.

(க - ரை.) பிரமனும் திருமாலும் மயங்குதற்குக் காரணமான இறைவனும், பெருந்துறையி லெழுந்தருளிய பெருமானும் ஆகிய சிவபிரான் என்மனத்திற் பிரியா துறைகின்றனன் என்பது.

(வி - ரை.) படைப்புத் தொழிலை யுடையவனாதலால் பிரமனை "அனைத்துலகு மீன்ற மறையோன்" என்றார். மால் கொள்ளுதல்- மயங்குதல். அறை - முறைமை. (ரு)

பித்தென்னையேற்றும் பிறப்பறுக்கும்பேச்சரிதா
மத்தமேயாக்கும்வந் தென்மனத்தை—யத்தன்
பெருந்துறையாளுட்கொண்டு பேரருளாலேனோக்கு
மருந்திறவாப்பேரின்பம் வந்து.

(ப - ரை.) அத்தன் - எமது தந்தை, பெருந்துறையான்-திருப்பெருந்துறையை யுடையவன், ஆட்கொண்டு - அடிமைகொண்டு, பேரருளால் - பெருங்கருணையால், நோக்கும் - பார்க்கின்ற, மருந்து- பிறவிப்பிணிக்கு மருந்தாயிருப்பவன், (அந்தச்சிவபெருமான்) வந்து- இவ்விடத் தெழுந்தருளி, என்னை பித்து ஏற்றும் - என்னைப்பித்தேற்றுவான், பிறப்பு அறுக்கும் - பிறவித்தளையைச் சேதிப்பான், வந்து - எழுந்தருளி, என்மனத்தை - என்மனத்தை, பேச்சு அரிது

ஆம் - பேசுதல் அருமையாகிய, மத்தம் ஆக்கும் - உன்' மத்தமாக்கு வான், எ - று.

(க - ரை.) எமது தந்தையும், என்னை அடிமைகொண்டு தன் பெருங்கருணையால் நோக்குகின்ற மருந்தா யிருப்பவனுமாகிய சிவ பெருமான் இவ்விடத்தெழுந்தருளி எனக்குப் பித்தேற்றுவான், என்பிறவித்தளையைச் சேதிப்பான், என்னை உன்மத்தனுக்குவான் என்பது.

(வி - ரை.) மருந்து - அமிர்தம். வந்து என்றது-வலியவந்து என்றபடி. (சா)

வாராவழியருளி வந்தெனக்குமாறின்றி
பாராவமுதா யமைந்தன்றே—சீரார்
திருத்தென்பெருந்துறையா னென்சிந்தைமேய
வொருத்தன்பெருக்கு மொளி.

(ப - ரை.) வாராவழி அருளி - மீட்டும் பிறவிக்குவாராதமுத்திநெறியை அருள்செய்து, வந்து எனக்கு மாறு இன்றி - வந்து எனக்கு மாறுபடுதலின்றி, ஆரா அமுது ஆய் அமைந்தன்று - தெவிட்டாத அமிர்தமா யமைந்தது, (யாதெனின்) சீர் ஆர் - மேன்மை யமைந்த, தென் - அழகாகிய, திருப்பெருந்துறையான் - திருப்பெருந் துறையை யுடையவன், என் சிந்தை மேய - என்மனத்தி லெழுந் தருளிய, ஒருத்தன் - ஒப்பற்றவன், (அந்தச் சிவபெருமான்) பெருக் கும் - பெருகச்செய்கிற, ஒளி - ஒளியேயாம், எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறையி லெழுந்தருளி யிருப்பவனு கிய சிவபெருமான் பெருகச்செய்கிற ஞானவொளியானது எனக்கு முத்திநெறியை அருள்செய்து தெவிட்டாத அமிர்தமா யமைந்தது என்பது.

வி - ரை.) வாராவழி - மீட்டும் பிறவிக்கு வராமைக்குக் காரணமாகிய முத்திநெறி. மாறு இன்றி என்பதற்கு - என்னுல் ஒரு கைம்மாறின்றி என்றுரைப்பினும் பொருந்தும். (எ)

யாவர்க்குமேலா மளவிலாச்சீருடையான்
யாவர்க்குங்கீழா மடியேனை—யாவரும்
பெற்றறியாவின்பத்துள் வைத்தாய்க்கென்னெம்பெருமான்
மற்றறியேன்செய்யும் வகை.

(ப - ரை.) யாவர்க்கும் மேலாம் - எல்லார்க்கும் மேலாகிய, அளவு இல்லா - அளவற்ற, சீர் உடையான் - சிறப்புடையவனும், யாவர்க்கும் கீழ் ஆம் அடியேனை - எல்லார்க்கும் கீழாகிய அடியேனை, யாவரும் - எல்லாரும், பெற்று அறியா இன்பத்துள் - பெற்றறியாத ஆநந்தத்தில், வைத்தாய்க்கு - வைத்தவனும் ஆகிய உனக்கு, என் எம்பெருமான்-என் எம்பிரானே, செய்யும் வகை அறியேன் - கைம்மாறு செய்யும் வகையினை அறிகிலேன், எ - று.

(க - ரை.) எல்லாரினுஞ் சிறந்தவனும், மிகவும் இழிந்தவனாகிய என்னை யான் என்றுங் கண்டறியாத இன்பத்தில் வைத்தவனும் ஆகிய உனக்குக் கைம்மாறுசெய்யும் வகையை அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) இறைவன் மேன்மைக் கெல்லையென்றும், தாம் கீழ்மைக்கெல்லை யென்றும் அறிவித்தற்கு "யாவர்க்கு மேலா மளவிலாச் சீருடையான்" என்றும், "யாவர்க்குங் கீழாமடியேன்" என்றும் கூறினர். பெற்றறியாவின்பம் என்றது முன்பொருகாலத்துங் கண்டறியாத இன்பம் என்றபடி. (அ)

மூவருமுப்பத்துமூவரு மற்றொழிந்த
தேவருங்காணுச் சிவபெருமான்—மாவேறி
வையகத்தேவந்திழிந்த வார்கழல்கள்வந்திக்க
மெய்யகத்தேயின்ப மிகும்.

(ப - ரை.) மூவரும்-மும்மூர்த்திகளும், முப்பத்து மூவரும்-முப்பத்துமுக்கோடிதேவர்களும், ஒழிந்த தேவரும்-ஒழிந்த தேவர்களும், காணு-காணவொண்ணுத, சிவபெருமான் - சிவபிரான், மா ஏறி -குதிரைமீதேறி, வையகத்தே வந்து இழிந்த - இவ்வுலகின்கண்ணேவந்திறங்கின, வார் கழல்கள் - நெடிய திருவடிகளை, வந்திக்க-வணங்கின, மெய் அகத்தே-உண்மையாகிய மனத்தின்கண்ணே, இன்பம் மிகும்-ஆநந்தம் பெருகும், எ - று.

(க - ரை.) மும்மூர்த்திகள் முதலான தேவர்களும் காணவொண்ணுத சிவபெருமான், குதிரையேறி இவ்வுலகத்தில் எழுந்

தருளின திருவடிகளை வணங்கினால் என் மனத்தின்கண் ஆனந்தம் பெருகாநிற்கும் என்பது.

(வி - ரை.) மூவர் - படைப்பு காப்பு அழிப்பு என்னும் முத்தொழிற்கும் உரியவராகிய பிரம விஷ்ணு ருத்திரர்கள். முப்பத்து மூவர் - ஆதித்தர் - கஉ, அச்சுவினிகள் - உ, உருத்திரர் - கக, வசுக்கள் - அ. ஒழிந்த தேவர் - இந்திரன்முதலான மற்றைத் தேவர்கள். வந்தித்தல் - புகழ்தல் எனினுமாம். (கூ)

இருந்தென்னையாண்டா னிணையடியேசிந்தித்
திருந்திரந்துகொண் ணெஞ்சேயெல்லாந்—தருங்காண்
பெருந்துறையின்மேய பெருங்கருணையாளன்
மருந்துருவாயென்மனத்தே வந்து.

(ப - ரை.) நெஞ்சே - மனமே, பெருந்துறையில் மேய-திருப்பெருந்துறையில் எழுந்தருளிய, பெருங்கருணையாளன் - பெருங்கருணையை யுடையவனாகிய சிவபெருமான், மருந்து உரு ஆய் - மருந்துருவாகி, என் மனத்தே வந்து இருந்து - என் மனத்தில் வந்து எழுந்தருளி, என்னை ஆண்டான்-என்னை ஆண்டுகொண்டருளினான், (ஆதலால் அவனது) இணை அடியே சிந்தித்து இருந்து - இரண்டு திருவடிகளையுமே சிந்தித்துக்கொண்டிருந்து, எல்லாம் - (உனக்கு வேண்டுவன) யாவையும், இரந்து கொள் - பிரார்த்தித்துக் கொள், தரும் - (தடையின்றித்) தந்தருளுவன், எ - று.

(க - ரை.) மனமே, என்னை யாண்டருளின இறைவனது திருவடியைச் சிந்தித்திருந்து, இரந்துகொள்வா யாயின், நீ யிரப்பவற்றையெல்லாம் திருப்பெருந்துறையான் தந்தருளுவன் என்பது.

(வி - ரை.) எல்லாம் தரும் என்றது இந்திரன் முதலிய இறையவர் பதங்கள் முதல் முத்திப்பத மளவாயுள்ள எல்லாப்பதங்களையும் தருவன் என்றபடி. (௪0)

இன்பம்பெருக்கியிருளகற்றி யெஞ்ஞான்றுந்
துன்பந்தொடர்வறுத்துச் சோதியா—யன்பமைத்துச்
சீரார்பெருந்துறையா னென்னுடையசிந்தையே
யூராகக்கொண்டா னுவந்து.

(ப - ரை.) சீர் ஆர் - சிறப்புப் பொருந்திய, பெருந்துறையான் - திருப்பெருந்துறையை யுடையவன், இன்பம் பெருக்கி - ஆநந்தத்தைப் பெருகச்செய்து, இருள் அகற்றி - (அஞ்ஞானமாகிய) இருட்டை நீக்கி, எ ஞான்றும் - எந்நாளும், துன்பம் தொடர்வு அறுத்து - துன்பம் நம்மைத் தொடர்தலைச் சேதித்து, சோதி ஆய் - ஒளி யுருவாகி, அன்பு அமைத்து - அன்பினை நிறைத்து, என்னுடைய சிந்தையே - என் மனத்தையே, உவந்து - விரும்பி, ஊர் ஆக கொண்டான் - ஊராகக்கொண் டெழுந்தருளி யிருந்தனன், எ - று.

(க - ரை.) திருப்பெருந்துறைச் சிவபெருமான் எனக்கு இன்பத்தைப் பெருகச்செய்து, அஞ்ஞான விருளை யொழித்து, துன்பத்தைப் பற்றறுத்து, ஒளி யுருவாய் என் மனத்தையே தனக்கு ஊராகக்கொண் டெழுந்தருளி யிருந்தான் என்பது.

(வி - ரை.) தொடர்வு - பற்று. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# பண்டாய நான்மறை.

அநுபவத்துக்கையமின்மையுரைத்தல்.

நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

பண்டாயநான்மறையும் பாலணுகாமாலயனுங்
கண்டாருமில்லைக் கடையேனைத்—தொண்டாகக்
கொண்டருளுங்கோகழியெங் கோமாற்குநெஞ்சமே
யுண்டாமோகைம்மா றுரை.

(ப - ரை.) நெஞ்சமே - மனமே, பண்டு ஆய - பழமையாகிய, நான்மறையும் - நான்கு வேதங்களும், பால் அணுகா - தன்னிடத் தணுகமாட்டா, மால் அயனும் - திருமாலும் பிரமனும், கண்டாரு

மில்லை - கண்டவருமல்லர், (அங்ஙனமாக) கடையேனை - கடையாகிய என்னை, தொண்டு ஆக் - அடிமையாக, கொண்டருளும் - கொண்டருளுகின்ற, கோகழி - திருவாவடுதுறையை யுடையவனாகிய, எம் கோமாற்கு - எம்மிறைவனுக்கு, கைம்மாறு உண்டாமோ-கைம்மாறு உளதாகுமோ, உரை - சொல்வாயாக, எ - று.

(க - ரை.) மனமே, வேதங்களும் தன்னை யணுகமாட்டா, திருமால் பிரமன் என்பவரும் கண்டறியார், அப்படியிருக்க, எம்மிறைவன், கடையேனாகிய என்னைத் தொண்டாகக்கொண்டருளினதற்கு யாம் செய்தற்குரிய கைம்மாறொன்றுளதோ, நீ சொல்வாயாக என்பது.

(வி - ரை.) வேதம் அநாதியாகையால் "பண்டாய நான்மறை" என்றார். (க)

உள்ளமலமூன்றுமாய வுகுபெருந்தேன்
வெள்ளந்தரும்பரியின் மேல்வந்த—வள்ளன்
மருவும்பெருந்துறையை வாழ்த்துமின்கள்வாழ்த்தக்
கருவுங்கெடும்பிறவிக் காடு.

(ப - ரை.) உள்ளமலம் மூன்றும் - உளதாகிய மூன்று மலங்களும், மாய-நசிக்க, உகு - சிந்துகின்ற,பெரும் தேன் வெள்ளம் தரும் - பெரிய இன்பத்தேன்பெருக்கைக் கொடுக்கிற, பரியின்மேல் வந்த - குதிரையின்மீதுவந்த, வள்ளல் - வள்ளலாகிய சிவபெருமான், மருவும்-எழுந்தருளியிருக்கிற, பெருந்துறையை-திருப்பெருந்துறையை, வாழ்த்துமின்கள் - வாழ்த்துங்கள், வாழ்த்த - வாழ்த்தின், பிறவி காடு - நமது பிறவிக்காடானது, கருவும் கெடும் - வேரோடும் அழியும், எ - று.

(க - ரை.) நமது மும்மலங்கள் அற்றொழியும்வண்ணம் இன்பப்பெருக்கைத் தந்து குதிரையூர்ந்துவந்த வள்ளலாகிய சிவபிரானது திருப்பெருந்துறையை வாழ்த்துங்கள், வாழ்த்தினால் உங்களுடைய பிறவிக்காடானது வேரோடும் அற்றொழியும் என்பது.

(வி - ரை.) மும்மலங்களாவன - ஆணவம், மாயை, காமியம் என்பன. (உ)

காட்டகத்துவேடன் கடலில்வலைவாண
ணாட்டிற்பரிப்பாக னம்வினையை—வீட்டி
யருளும்பெருந்துறையா னங்கமலபாத
மருளுங்கெடநெஞ்சே வாழ்த்து.

(ப - ரை.) நெஞ்சே - மனமே, காட்டகத்து வேடன் - காட்டின்கண் வேடனும், கடலில் வலைவாணன் - கடலில் வலையனும், நாட்டில் பரிப்பாகன் - நாட்டில் குதிரைப்பாகனும், நம் வினையை - நமது வினைகளை, வீட்டி - கெடுத்து, அருளும் - நமக்கருள் செய்கின்ற, பெருந்துறையான் - திருப்பெருந்துறையை யுடையவன், (அந்தச் சிவபெருமானது) அம் - அழகாகிய, கமலம் - தாமரை மலர் போன்ற, பாதம் - திருவடியை, மருளும் கெட - நமது பிறவி மயக்கமும் அழியும்படி, வாழ்த்து - நீ வாழ்த்துவாயாக, எ - று.

(க - ரை.) காட்டில் வேடனாகியும், கடலில் வலையனாகியும், நாட்டில் குதிரைச் சேவகனாகியும், நம் வினையை யொழித்தருளும் திருப்பெருந்துறையானாகியும் இருக்கிற சிவபெருமானது அழகிய பாத தாமரைகளை, நெஞ்சமே நமது பிறவி மயக்கம் அறும்படி வாழ்த்துவாயாக என்பது.

(வி - ரை.) வீட்டுதல் - அழித்தல். வலைவாணன் - வலைவீசி வாழ்பவன். (௩)

வாழ்ந்தார்களாவாரும் வல்வினையைமாய்ப்பாருந்
தாழ்ந்துலகமேத்தத் தகுவாருஞ்—சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சியேத்துந் திருவார்பெருந்துறையை
நன்றிறைஞ்சியேத்து நமர்.

(ப - ரை.) வாழ்ந்தார்கள் ஆவாரும் - வாழ்ந்தவர்கள் ஆவோரும், வல் வினையை மாய்ப்பாரும் - வலிய வினைகளைக் கெடுப்போரும், உலகம் தாழ்ந்து ஏத்த தகுவாரும் - உலகம் பணிந்து துதிக்கத் தகுவோரும், (யாவரெனின்) அமரர் - தேவர்கள், சூழ்ந்து சென்று - சூழ்ந்து போய், இறைஞ்சி ஏத்தும் - பணிந்து துதிக்கின்ற, திரு ஆர் பெருந்துறையை - அழகு நிறைந்த திருப்பெருந்துறையை, நன்று இறைஞ்சி ஏத்தும் - நன்றாகப் பணிந்து துதிக்கின்ற, நமர் - நமர்களே யாவர், எ - று.

(க - ரை.) தேவர்கள் வந்து வணங்கித்துதிக்கின்ற திருப்பெருந்துறையை வணங்கித் துதிக்கின்ற நம்மவர்களே, பேரின்பவாழ்வுக்குரியவரும், வலியவினைகளைக் கெடுப்பவரும், உலகத்தார் துதிக்குந்தகுதியுள்ளவரும் ஆவர் என்பது.

(வி - ரை.) வாழ்ந்தார்கள் - பேரின்பவாழ்வுபெற்று வாழ்ந்தவர்கள். தாழ்தல் - வணங்குதல். அமரர் - இறவாதவர் இது மங்கல வழக்கு. (௪)

நண்ணிப்பெருந்துறையை நம்மிடர்கள்போயகல
வெண்ணியெழுகோகழிக் கரசைப்—பண்ணின்
மொழியாளோடுத்தர கோசமங்கைமன்னிக்
கழியாதிருந்தவனைக்காண்.

(ப - ரை.) நெஞ்சே - மனமே, நம் இடர்கள் போய் அகல - நமது துன்பங்கள் நீங்கிப்போக, பெருந்துறையை நண்ணி - திருப், பெருந்துறையை அடைந்து, கோகழிக்கு அரசை-துறைசை நாதனை, எண்ணி எழு-நினைந்தெழுவாயாக, பண்ணின் மொழியாளோடு - பண்போலும் மொழியையுடையவளாகிய உமாதேவியோடும், உத்தரகோசமங்கை மன்னி - திருவுத்தரகோசமங்கையில் நிலைபெற்று, கழியாது இருந்தவனை - நீங்காமலிருந்தவனை, காண் - காண்பாயாக, எ - று.

(க - ரை.) மனமே, நமது துன்பங்கள் நீங்கிப்போகும் வண்ணம், திருப்பெருந்துறையையடைந்து கோகழிநாதனை நினைந்தெழுவாயாக, உமாதேவியாரோடும் திருவுத்தரகோசமங்கையில் நிலைபெற்றிருந்த சிவபிரானைக் கண்டுய்வாயாக என்பது.

(வி - ரை.) நம்மிடர்கள் என்றது, நமதுபிறவித்துன்பங்கள் என்றபடி. (௫)

காணுங்கரணங்க ளெல்லாம்பேரின்பமெனப்
பேணுமடியார் பிறப்பகலக்—காணும்
பெரியானைநெஞ்சே பெருந்துறையிலென்றும்
பிரியானைவாயாரப் பேசு.

(ப - ரை.) நெஞ்சே - மனமே, காணும் கரணங்கள் எல்லாம் - காணப்படுகிற கரணங்கள்யாவும், பேரின்பம் என - பேரானந்தவுருவ

மாக, பேணும் - விரும்புகின்ற, அடியார்-அடியார்களுடைய, பிறப்பு அகல - பிறவிநீங்கும்படி, காணும் - நோக்குகின்ற, பெரியானை-பெரியோனை, பெருந்துறையில் - திருப்பெருந்துறையில், என்றும் பிரியானை - எந்நாளும் பிரியாதிருப்பவனை, வாயார பேசு-வாயாரப் புகழ்ந்துரைப்பாயாக, எ - று.

(க - ரை.) மனமே, காணப்படுகிற காணங்கள்யாவும் பேரின்பவடிவாகவேகாண்கிற அடியார்களுடைய பிறவிநீங்கும்படி நோக்குகின்ற பெரியோனும், திருப்பெருந்துறையை நீங்காதவனும் ஆகிய சிவபெருமானை, வாயாரவாழ்த்துவாயாக என்பது.

(வி - ரை.) காணம் - கருவி. காணும்பெரியானை என்றதில் காணல் கருணைநோக்கம்வைத்தல். (சு)

பேசும்பொருளுக் கிதமாம்பேச்சிறந்த
மாசின்மணியின் மணிவார்த்தை—பேசிப்
பெருந்துறையேயென்று பிறப்பறுத்தேனல்ல
மருந்தினடியென்மனத்தே வைத்து.

(ப - ரை.) பேசும் பொருளுக்கு - பேசுகின்றபொ ..., இலக்கு - இலக்காய், இதம் ஆம் - இதமுமாகின்ற, பேச்சு இறந்த - பேச்சற்ற, மாசு இல் மணியின் - மாசிலாமணியாகிய சிவபிரானது, மணிவார்த்தை பேசி - திருவார்த்தையைப் பேசி, பெருந்துறையே என்று - திருப்பெருந்துறையேஎன்று, நல்ல மருந்தின் அடி - சிறந்த மருந்துபோல்வானது திருவடியை, என் மனத்தேவைத்து - என் மனத்தில் இருத்தி, பிறப்பு அறுத்தேன்-என்பிறவிப்பிணியை ஒழித்தேன் எ - று.

(க - ரை.) பேசுகின்ற பொருள்களுக்கு இலக்காயும் இதமாயுமிருக்கிற பேச்சிறந்த மாசிலாமணியாகிய சிவபெருமானது திருவார்த்தையைப்பேசி, திருப்பெருந்துறையேயென்று புகழ்ந்து, சிறந்த மருந்துபோல்வானது திருவடியை என்மனத்தில் இருத்தி என்பிறவிப்பிணியை ஒழித்தேன் என்பது.

(வி - ரை.) இலக்கு-குறி (லக்ஷ்யம்). இதம் - இனிமை. மணிவார்த்தை - திருவார்த்தை (இறைவன் புகழையெடுத்துப் பேசும் பேச்சு) (எ)

திருச்சிற்றம்பலம்

# திருப்படையாட்சி.

## சீவோபாதியொழித்தல்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கண்களிரண்டுமவன் கழல்கண்டுகளிப்பனவாகாதே
  காரிகையார்கடம்வாழ்விலென்வாழ்வுகடைப்படுமாகாதே
மண்களில்வந்துபிறந்திடுமாறுமறந்திடுமாகாதே
  மாலறியாமலர்ப்பாதமிரண்டும்வணங்குதுமாகாதே
பண்களிகூர்தருபாடலொடாடல்பயின்றிடுமாகாதே
  பாண்டிநன்னாடுடையான்படையாட்சிகள்பாடுதுமாகாதே
விண்களிகூர்வதோர்வேதகம்வந்துவெளிப்படுமாகாதே
  மீன்வலைவீசியகானவன்வந்துவெளிப்படுமாயிடிலே.

(ப - ரை.) மீன் வலை வீசிய கானவன் வந்து வெளிப்படுமாயிடில் - மீனின்பொருட்டு வலை வீசின வேடனாகிய இறைவன் வந்து வெளிப்பட்டுத் தோன்றுவனாயின், கண்கள் இரண்டும் - இரண்டு கண்களும், அவன் கழல் கண்டு - அவன் திருவடியைக் கண்டு, களிப்பன ஆகாது - களிப்படைவன ஆகாது, காரிகையார்கள் தம் வாழ்வில் - மாதர் வாழ்விலும், என் வாழ்வு - என் வாழ்க்கை, கடைப்படும் ஆகாது - கடைப்படுதலும் ஆகாது, மண்களில் வந்து பிறந்திடுமாறு - மண்ணுலகத்தில் வந்து பிறக்கும் விதத்தை, மறந்திடும் ஆகாது - மறந்திடுதலும் ஆகாது, மால் அறியா - திருமாலறியாத, மலர் பாதம் இரண்டும் - தாமரை மலர்போலும் திருவடிகளிரண்டையும், வணங்குதும் ஆகாது - வணங்குதலும் ஆகாது, பண் களி கூர் தரு - பண்களின் களிப்பு மிகுந்த, பாடலொடு ஆடல் - பாடலோடு ஆடுதலும், பயின்றிடும் ஆகாது - பழகுதலும் ஆகாது, பாண்டி நன்னாடு உடையான் படை யாட்சிகள் - நல்ல பாண்டி நாட்டை யுடையவனாகிய சிவபெருமானது படை யாட்சிகளை, பாடுதும் ஆகாது -

பாடுதலும் ஆகாது, விண் களி கூர்வது - விண்ணுலகம் களிப்பு மிகுதற் கேதுவாகிய, ஓர் வேதகம் வந்து - ஒரு வேறுபாடு வந்து, வெளி படும் ஆகாது - வெளிப்படுதலும் ஆகாது, எ - று.

(க - ரை.) இறைவனைக் கண்டவர்க்கு ஒரு வியாபாரமும் நிகழலாகாது என்பது.

(வி - ரை.) களிப்பன - களிக்குந் தொழில்கள். கடைப்படுதலும் என்பது கடைப்படும் எனக் குறைந்து வந்தது. இது தொகுத்தலின்பாற்படும். மறந்திடும் முதலியவற்றிற்கும் இவ்வாறே கொள்க. பிறப்பிடப் பன்மை நோக்கி மண்களில் எனப் பன்மை கூறினார். வேதகம் - வேறு படுத்தல். இது வேறுபடுத்தற்குரிய பொருளாகிய சிவபெருமானுக்காயிற்று. வேறுபடுத்தலாவது - ஆன்மாக்களுடைய சீவத்துவத்தை மாற்றிச் சிவத்துவத்தை யருள் செய்தல். மெய்யன்பர் இறைவனைக் கண்டபின் வேறு விகாரங்களில் அவர் பிரவேசியார் என்பது இத்திருப்படை யாட்சியின் கருத்து. (க)

ஒன்றினொடொன்றுமோரைந்தினொடைந்து முயிர்ப்பதுமாகாதே
யுன்னடியாரடியாரடியோமெனவுய்ந்தனவாகாதே
கன்றைநினைந்தெழுதாயெனவந்தகணக்கதுவாகாதே
காரணமாகுமனாதிகுணங்கள்கருத்துறுமாகாதே
நன்றிதுதீதெனவந்தநடுக்கநடந்தனவாகாதே
நாமுமேலாமடியாருடனேசெலநண்ணுதுமாகாதே
யென்றுமெனன்புநிறைந்தபராவமுதெய்துவதாகாதே
யேறுடையானெனையாளுடைநாயகனென்னுள்புகுந்திடிலே.

(ப - ரை.) ஏறு உடையான் - இடப வாகனத்தை யுடையவனும், என்னை ஆள் உடை நாயகன் - என்னை அடிமையாகவுடையவனுமாகிய சிவபெருமான், என் உள் புகுந்திடில் - என்னுள்ளே பிரவேசித்துவிட்டால், ஒன்றினொடு ஒன்றும் - ஒன்றோடொன்றும், ஓர் ஐந்தினொடு ஐந்தும் - ஒரு ஐந்தோடு ஐந்தும், உயிர்ப்பதும் ஆகாது - பிழைத்திருத்தலும் ஆகாது, உன் அடியார் அடியார் - உன் அடியாரடியார்க்கு, அடியோம் என - அடியோங்களென்று, உய்ந்தன ஆகாது - உய்ந்தவையும் ஆகாது, கன்றை நினைந்து எழு - கன்றை நினைந்தெழுந்த, தாய் என வந்த - தாய்ப்பசுவைப்போல

வந்த, கணக்கது ஆகாது - முறைமையும் ஆகாது, காரணம் ஆகும் - காரணமாகிய, அநாதி குணங்கள் - பழைய குணங்கள், கருத்து உறும் ஆகாது - மனத்திற் பொருந்துதலும் ஆகாது, இது நன்று இது தீது என வந்த-இது நன்மை இது தீமையென்று உண்டாகிய, நடுக்கம் - நடுக்கமானது, நடந்தன ஆகாது - நடந்தவையும் ஆகாது, நாமும் - யாமும், எல்லாம் அடியாருடனே செல்ல - எல்லா அடியாரோடும்போக, கண்ணுதும் ஆகாது - மனத்திற் கொள்ளுதலும் ஆகாது, என்றும் - எந்நாளும், என் அன்பு நிறைந்த - என் அன்புருவாய் நிறைந்த, பராவமுது - மேலான அமிர்தம், எய்துவது ஆகாது- கிடைப்பதும் ஆகாது, எ - று.

(க - ரை.) இடபவாகனனாகிய பரமசிவன் என்னுட் புகுந்துவிட்டால் வேறு யாதொரு விவகாரங்களும் நிகழலாகாது என்பது.

(வி - ரை.) ஒன்றினொடு ஒன்று - சிவ சீவர்கள். ஐந்தினொடு ஐந்து - தசேந்திரியங்கள். நடுக்கம் - சலனம். பரவமுது பராவமுது என நீட்டல் பெற்றது. (உ)

பந்தவிகாரகுணங்கள்பறிந்துமறிந்திடுமாகாதே
பாவனையாயகருத்தினில்வந்தபராவமுதாகாதே
யந்தமிலாதவகண்டமுநம்முளகப்படுமாகாதே
யாதிமுதற்பரமாயபரஞ்சுடரண்ணுவதாகாதே
செந்துவர்வாய்மடவாரிடரானவைசிந்திடுமாகாதே
சேலனகண்களவன்றிருமேனிதிளைப்பனவாகாதே
யிந்திரஞாலவிடர்ப்பிறவித்துயரேகுவதாகாதே
யென்னுடைநாயகனாகியவீசனெதிர்ப்படுமாயிடிலே.

(ப - ரை.) என்னுடை நாயகன் ஆகிய ஈசன் - என்னுடைய தலைவனாகிய ஈச்சுரன், எதிர் படுமாயிடில் - எதிர்ப்படுவானாயின், பந்த விகார குணங்கள்-பிறவித்தளைக்கேதுவாகிய விகாரகுணங்கள், பறிந்து மறிந்திடும் ஆகாது - வெளிப்பட்டு மீளுதலும் ஆகாது, பாவனை ஆய கருத்தினில் வந்த - எண்ணங்களுண்டாகிற மனத்தில் தோன்றின, பரா அமுது ஆகாது - சிறந்த அமுதம் ஆகாது, அந்தம் இல்லாத அகண்டமும் - முடிவில்லாத அகண்டப்பொருளும், நம்முள் அகப்படும் ஆகாது - நம்முள்ளே அகப்படுதலும் ஆகாது, ஆதி

முதல் பரம் ஆய பரஞ்சுடர் - ஆதிமுதலாகிய மேலான பரஞ்சோதி, அண்ணுவது ஆகாது - நம்மை அணுகுவதும் ஆகாது, செம் துவர் வாய் மடவார் - செம்பவளவாயினையுடைய மாதரது, இடர் ஆனவை - துன்பங்களானவை, சிந்திடும் ஆகாது - கெடுவதும் ஆகாது, சேல் அன்ன கண்கள் - சேல்போலுங் கண்கள், அவன் திருமேனி - அவனது திருமேனியை, திளைப்பன ஆகாது - அநுபவிப்பனவும் ஆகாது, இந்திர ஞாலம் - இந்திரசாலம்போன்ற, இடர் - துன்பத்திற்கிடமாகிய, பிறவித்துயர் - பிறவித்துக்கம், ஏகுவது ஆகாது - ஒழிந்துபோதலும் ஆகாது, எ - று.

(க - ரை.) என்னுடைய தலைவனாகிய சிவபெருமான் எதிர்ப்பட்டுவிட்டால், வேறு யாதொரு விவகாரங்களும் நிகழலாகாது என்பது.

(வி - ரை.) பந்தம் - பிறவிக்கட்டு. விகாரகுணங்கள் - ஆன்மாவுக்கு அநர்த்தத்தை விளைப்பனவாகிய குணங்கள். அகண்டம் - கண்டிக்கப்படாத பொருள். துவர் - பவளம். இந்திரசாலம் - இந்திரஞாலம் என வந்தது இடைப்போலி. (௩)

என்னணியார்முலையாகமளைந்துடனின்புறுமாகாதே
யெல்லையின்மாக்கருணைக்கடலின்றினிதாடுதுமாகாதே
நன்மணிநாதமுழங்கியெனுள்ளுறநண்ணுவதாகாதே
நாதனணித்திருநீற்றினைநித்தலுநண்ணுவதாகாதே
மன்னியவன்பரிலென்பணிமுந்துறவைகுவதாகாதே
மாமறையுமறியாமலர்ப்பாதம்வணங்குதுமாகாதே
யின்னியற்செங்கழுநீர்மலரொன்றலையெய்துவதாகாதே
யென்னையுடைப்பெருமானருளீசனெழுந்தருளப்பெறிலே.

(ப - ரை.) என்னை உடை பெருமான் - என்னை ஆளாகவுடைய இறைவன், அருள் ஈசன் - எமக்கருள்செய்கிற ஈசன், எழுந்தருளப்பெறில் - எழுந்தருளப்பெற்றால், என் அணி ஆர் முலை - என்னுடைய அழகுபொருந்திய தனங்கள், ஆகம் அளைந்து - இறைவனது திருமார்போடு பொருந்தி, உடன் இன்பு உறும் ஆகாது - சுகித்தலும் ஆகாது, எல்லை இல் - எல்லையில்லா, மா - பெரிய, கரு

லைக்கடல் - அருட்கடலில், இன்று - இப்பொழுது, இனிது ஆடுதும் ஆகாது - இனிதாக மூழ்குவதும் ஆகாது, நல் - சிறந்த, நாதம் முழங்கி - நாதமானது சத்தித்து, என் உள் உற - என் மனத்திற் பொருந்த, நண்ணுதும் ஆகாது - அணுகுவதும் ஆகாது, நாதன் - இறைவனது, அணி திருநீற்றினை - அழகாகிய திருநீற்றை, நித்தலும் - நாள்தோறும், நண்ணுவது ஆகாது - அணிவதும் ஆகாது, மன்னிய அன்பரில் - நிலைபெற்ற அன்பரினும், என் பணி - என் திருத்தொண்டானது, முந்துற வைகுவது ஆகாது - முற்பட நிகழ்வதும் ஆகாது, மா மறையும் - பெருமைபொருந்திய வேதங்களும், அறியா - அறியவொண்ணாத, மலர் பாதம் - தாமரைமலர்போலும் திருவடிகளை, வணங்குதும் ஆகாது - வணங்குவதும் ஆகாது, இன் இயல் - இனிய குணத்தையுடைய, செங்கழுநீர் மலர் - திருவடித் தாமரை மலர், என் தலை - என் சிரசின்மேல், எய்துவது ஆகாது - பொருந்துவதும் ஆகாது, எ - று.

(க - ரை.) எம்மிறைவன் எழுந்தருளப்பெற்றால் வேறு விகாரங்கள் ஒன்றும் எம்மிடத்து நிகழலாகாது என்பது.

(வி - ரை.) ஆரம் - மார்பு. நாதம் - நாததத்துவம். செங்கழுநீர் இவ்விடத்துத் தாமரைக்காயிற்று. (௪)

மண்ணினின்மாயைமதித்துவகுத்தமயக்கறுமாகாதே
வானவருமறியாமலர்ப்பாதம்வணங்குதுமாகாதே
கண்ணிலிகாலமனைத்திலும்வந்தகலக்கறுமாகாதே
காதல்செயுமடியார்மனமின்றுகளித்திடுமாகாதே
பெண்ணலியாணெனநாமெனவந்தபிணக்கறுமாகாதே
பேரறியாதவனேகபவங்கள்பிழைத்தனவாகாதே
யெண்ணிலியாகியசித்திகள்வந்தெனையெய்துவதாகாதே
யென்னையுடைப்பெருமானருளீசனெழுந்தருளப்பெறிலே.

(பு - ரை.) என்னை உடை பெருமான் - என்னை யாளாகவுடைய இறைவன், அருள் ஈசன் - எமக்கு அருள்செய்கின்ற ஈசன், எழுந்தருளப் பெறில் - எழுந்தருளப் பெற்றால், மண்ணினில் - பூமியின், மாயை - மாயையாய், மதித்து வகுத்த - மதித்து வகுக்கப்பட்ட, மயக்கு - மயக்கமானது, அறும் ஆகாது - அற்றொழிதலும்

ஆகாது, வானவரும் - தேவரும், அறியா - அறியவொண்ணாத, மலர் பாதம் - தாமரைமலர்போலுந் திருவடியை, வணங்குதும் ஆகாது - வணங்குவதும் ஆகாது, கண் இலி காலம் அனைத்திலும் வந்த-வினைத்தற்கரிய நெடுங்காலமாய்வந்த, கலக்கு - கலக்கமானது, அறும் ஆகாது - அற்றொழிதலும் ஆகாது, காதல் செய்யும் - அன்பு செய்கின்ற, அடியார் மனம் - அடியவர் மனமானது, இன்று களித்திடும் ஆகாது - இன்று களித்திடுதலும் ஆகாது, பெண் அலி ஆண் என - பெண் அலி ஆண் என்று சொல்லவும், நாம் என - நாம் என்றுசொல்லவும், வந்த - உண்டாகிய, பிணக்கு - பிணக்கமானது, அறும் ஆகாது - அற்றொழிதலும் ஆகாது, பேர் அறியாத - பெயர்களை அறியவொண்ணாத, அனேகபவங்கள் - பலபிறவிகளினின்றும், பிழைத்தன ஆகாது - தப்புவன ஆகாது, எண் இலி ஆகிய - எண்ணில்லாத, சித்திகள் - சித்திகள், வந்து என்னை எய்துவது ஆகாது - வந்து என்னை அடைதலும் ஆகாது, எ - று.

(க - ரை) எம்மிறைவன் எழுந்தருளப்பெற்றால் வேறுவிவகாரங்கள் ஒன்றும் எம்மிடத்து நிகழலாகாது என்பது.

(வி - ரை.) வானவர் - விண்ணுலகிலுள்ளவர். கண் - முதனிலைத் தொழிற் பெயர். அலி - பேடு.　　　　　　　　　(௫)

பொன்னியலுந்திருமேனிவெண்ணீறுபொலிந்திடுமாகாதே
　பூமழைமாதவர்கைகள்குவிந்துபொழிந்திடுமாகாதே
மின்னியனுண்ணிடையார்கள்கருத்துவெளிப்படுமாகாதே
　வீணைமுரன்றெழுமோசையின்பமிகுத்திடுமாகாதே
தன்னடியாரடியென்றலைமீதுதழைப்பனவாகாதே
　தானடியோமுடனேயுயவந்துதலைப்படுமாகாதே
யின்னியமெங்குநிறைந்தினிதாகவியம்பிடுமாகாதே
　யென்னைமுனாளுடையீசனெனத்தனெழுந்தருளப்பெறிலே.

(ப - ரை.) என்னை முன் ஆள் உடை ஈசன்-என்னை முன்னே ஆளாகவுடைய ஈசனும், என் அத்தன் - என் தந்தையுமாகிய சிவபெருமான், எழுந்தருளப்பெறில் - எழுந்தருளப்பெற்றால், பொன் இயலும் - பொன்னிறம் பொருந்திய, திருமேனி - திருமேனியில்,

வெண்ணீறு-திருவெண்ணீறு, பொலிந்திடும் ஆகாது-விளங்குதலும் ஆகாது, மாதவர் - பெரிய தவசிகளுடைய, கைகள் - கைகளானவை, குவிந்து - கூப்பி, பூமழை - மலர்மாரியை, பொழிந்திடும் ஆகாது-பொழிந்திடுதலும் ஆகாது, மின் இயல் நுண் இடையார் - மின்னின் தன்மைவாய்ந்த நுண்ணிய இடையாராகிய மாதருடைய, கருத்து - எண்ணம்,வெளிப் படும் ஆகாது-வெளிப்படுதலும் ஆகாது, வீணை முரன்று எழும் ஓசையில் - வீணையானது முழங்குதலா லுண்டாகிற ஓசையில், இன்பம் மிகுந்திடும் ஆகாது - இன்பம் மிகுந்திடுதலும் ஆகாது, தன் அடியார் அடி - தன் அடியாருடைய பாதங்கள், என் தலைமீது - என் சிரசின்மேல், தழைப்பன ஆகாது - தழைப்பனவும் ஆகாது, அடியோம் - அடியோங்கள், உடனே உய்ய - இப்பொழுதே உய்யும் பொருட்டு, தான்வந்து-தான் எழுந்தருளி, தலைபடும் ஆகாது - கலத்தலும் ஆகாது, எங்கும் - எவ்விடத்தும், இன் இயம் நிறைந்து - இனிய வாத்தியங்கள் நிறைந்து, இனிதாக இயம்பிடும் ஆகாது - இனிதாக ஒலித்தலும் ஆகாது, எ - று.

(க - ரை.) என்னை ஆளாகவுடைய இறைவன் எழுந்தருளப் பெற்றால் வேறு விவகாரங்கள் சிறிதும் எம்மிடத்து நிகழலாகாது என்பது.

(வி - ரை.) மின்னியல் என்றது மின்கொடி போலத்துவளுதலை. முரலல் - சத்தித்தல். தலைப்படுதல் - கலத்தல். இன்னியம் ஒரு சொல்லாகக்கொள்ளினும் அமையும். (௬)

சொல்லியலாதெழுதூமணியோசைசுவைதருமாகாதே
துண்ணெனவென்னுளமன்னியசோதிதொடர்ந்தெழுமாகாதே
பல்லியல்பாயபரப்பறவந்தபராபரமாகாதே
பண்டறியாதபரானுபவங்கள்பரந்தெழுமாகாதே
வில்லியனன்னுதலார்மயலின்றுவிளைந்திடுமாகாதே
விண்ணவரும்மறியாதவிழுப்பொருளிப்பொருளாகாதே
யெல்லையிலாதனவெண்குணமானவையெய்திடுமாகாதே
யிந்துசிகாமணியெங்களையாளவெழுந்தருளப்பெறிலே.

(ப - ரை.) இந்து சிகாமணி - சந்திரசேகரனாகிய மாணிக்கம், எங்களை ஆள-எங்களை ஆண்டருளும்பொருட்டு, எழுந்தருளப்பெறில்-

எழுந்தருளப்பெற்றால், சொல் இயலாது - சொல்லுதற்கியலாதபடி, எழு - உண்டாகின்ற, தூமணி ஓசை - பரிசுத்தமானமணியோசை, சுவைதரும் ஆகாது - இன்பந்தருதலும் ஆகாது, துன்னென - விரைவாக, என் உள்ளம் மன்னிய சோதி-என்மனத்தில் நிலைபெற்றஒளி, தொடர்ந்து எழும் ஆகாது-தொடர்ந்தெழுதலும் ஆகாது, பல் இயல்பு ஆய - பலவகையாகிய, பரப்பு அறவந்த - பரப்பு அறும்படியெழுந்தருளின, பராபரம் ஆகாது - பராபரமும் ஆகாது, பண்டு அறியாத - முற்காலத்தில் அறியாத, பரம் அநுபவங்கள்-பரம்பொருளின் அநுபவங்கள், பரந்து எழும் ஆகாது-பரந்தெழுதலும் ஆகாது, வில் இயல் நல் நுதலார் மயல்-வில்லேநிகர்த்த அழகிய நெற்றியையுடைய மாதர்மையலானது, இன்று விளைந்திடும் ஆகாது - இன்று உண்டாதலும்ஆகாது, விண்ணவரும் அறியாத - தேவரும் அறியாத, விழு பொருள் இபொருள் ஆகாது - மேலானபொருளாகிய இப்பொருளும் ஆகாது, எல்லை இல்லாதன - எல்லையற்றனவாகிய, எண்குணம் ஆனவை - எண்குணங்களானவை, எய்திடும் ஆகாது - அடைந்திடுதலும் ஆகாது, எ - று.

(க - ரை.) சந்திரசேகரனாகிய எம்மிறைவன் எம்மையாளும்பொருட்டு எழுந்தருளப்பெற்றால், வேறுவிகாரங்கள் சிறிதும் எம்மிடத்து நிகழலாகாது என்பது.

(வி - ரை.) இயலல் - இசைதல். பரப்பு - விடயநுகர்ச்சியில் விரைவு. எண்குணமாவது - தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை. வடநூலாரிதனை முறையே, சுவதந்திரத்துவம், விசுத்ததேகம், நிராமயான்மா, சருவஞ்ஞத்துவம், அநாதிபோதம், அலுப்தசத்தி, அநந்தசத்தி, திருப்தி, என்பர். (எ)

சங்குதிரண்டுமுரன்றெழுமோசைதழைப்பனவாகாதே
 சாதிவிடாதகுணங்கணம்மோடுசலித்திடுமாகாதே
யங்கிதுநன்றிதுநன்றெனுமாயையடங்கிடுமாகாதே
 யாசையெலாமடியாரடியோமெனுமத்தனையாகாதே
செங்கயலொண்கண்மடந்தையர்சிந்தைதிளைப்பனவாகாதே
 சீரடியார்கள்சிவானுபவங்கடெரிந்திடுமாகாதே
வெங்குழைநிறைந்தமுதூறுபரஞ்சுடரெய்துவதாகாதே
 யீறறியாமறையோனெனையாளவெழுந்தருளப்பெறிலே.

(ப - ரை.) ஈறு அறியா - முடிவறியப்படாத, மறையோன் - வேதியனாகிய சிவபிரான், என்னை ஆள - என்னை யாளும்பொருட்டு, எழுந்தருளப் பெறில் - எழுந்தருளப்பெற்றால், சங்கு திரண்டு - சங்குகள் கூடி, முரன்று எழும் ஓசை - சத்தித்தெழுகின்ற ஓசையானது, தழைப்பன ஆகாது - மிகுவனவும் ஆகாது, சாதிவிடாதகுணங்கள்- சாதியைப்பற்றி விடாதிருக்கிறகுணங்கள், நம்மோடு சலித்திடும் ஆகாது - நம்மோடுவெறுத்திடுதலும் ஆகாது, அங்கு - அவ்விடத்தில், இது நன்று இது நன்று என்னும்மாயை - இது நன்று இது நன்று என்கிற மாயை, அடங்கிடும் ஆகாது - அடங்கிவிடுதலும் ஆகாது, எல்லாம் - எல்லா வகையாலும், அடியார் அடியோம் என்னும் ஆசை- அடியார்க்கடியோம் என்னும் விருப்பம், அத்தனை ஆகாது - சிறிதும் ஆகாது, செம் கயல்-செவந்த கயல் மீன்போலும், ஒண் கண்-ஒட்பமாகிய கண்களையுடைய, மடந்தையர்-மாதரது, சிந்தை-மனம், திளைப்பன ஆகாது-நுகர்வன ஆகாது, சீர் அடியார்கள் - சிறப்பினையுடைய அடியார்கள், சிவானுபவங்கள்-சிவானுபவங்களை, தெரித்திடும் ஆகாது- தெரிந்திடுதலும் ஆகாது, எங்கும் நிறைந்து-எவ்விடத்தும் நிறைந்து, அமுது ஊறு - அமிர்தஞ் சுரக்கின்ற, பரஞ்சுடர் - பரஞ்சோதியானது, எய்துவது ஆகாது - எமக்குக் கிடைப்பதும் ஆகாது, எ - று.

(க - ரை.) தனது முடிவு ஒருவராலும் அறியப்படாத சிவபெருமான் என்னை யாளும்பொருட்டு எழுந்தருளப்பெற்றால், வேறு விவகாரங்கள் சிறிதும் எம்மிடத்து நிகழலாகாது என்பது.

(வி - ரை.) சங்கு திரண்டு முரன்றெழுமோசை என்றது இடைபிங்கலைகளை யடைத்துச் சுழிமுனையைத் திறந்து சென்றவிடத்து, அவ்விடத்தில் கேட்கப்படுகின்ற இறைவனது நடனச் சிலம்போசையை. இது போன்ற விஷயங்கள் அநுபவ ஞானமுள்ள குருமுகத்தால் அறியப்படவேண்டி யிருத்தலால் இங்கு விரித்துரைக்கப் படவில்லை. (அ)

திருச்சிற்றம்பலம்

# ஆனந்தமாலை.

## சிவானுபவவிருப்பம்.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னேரனையபூங்கழல்களடைந்தார்கடந்தார்வியனுலகம்
பொன்னேரனையமலர்கொண்டுபோற்றாநின்றாரமரரெல்லாங்
கன்னேரனையமனக்கடையாய்க்கழிப்புண்டவலக்கடல்வீழ்ந்த
வென்னேரனையேனினியுன்னைக்கூடும்வண்ணமியம்பாயே.

(ப-ரை.) மின் ஏர் அனைய - மின்னினது அழகை நிகர்த்த, பூ கழல்கள் - தாமரைமலர்போலும் திருவடிகளை, அடைந்தார் - அடைந்தோர், வியன் உலகம் - பெரிய வுலகமாயத்தை, கடந்தார் - வென்றார்கள், அமரர் எல்லாம் - தேவர் எல்லாரும், பொன் ஏர் அனைய - பொன்னினது அழகை நிகர்த்த, மலர் கொண்டு - மலர்களைக்கொண்டு, போற்றாநின்றார் - அருச்சியாநின்றார்கள், (அங்ஙனமாக) கல் நேர் அனைய - கல்லைநிகர்த்த, மனம் - மனத்தையுடைய, கடையாய் - கடையாகி, கழிப்பு உண்டு - ஒழிக்கப்பட்டு, அவலம் கடல் வீழ்ந்த - துன்பக்கடலில் விழுந்த, என் நேர் அனையேன் - என்னை நானே நிகர்த்தவனாகிய நான், இனி - இனி, உன்னை கூடும் வண்ணம் - உன்னை யடையும்வண்ணம், இயம்பாய் - சொல்லாய், எ-று.

(க-ரை.) இறைவனே, உன் திருவடியை யடைந்தவர்கள் இவ்வுலகமாயையை வென்றார்கள், தேவர்கள் மலர்களால் அருச்சித்து உன்னை வணங்காநின்றார்கள், அப்படியிருக்க, கல்மனத்தை யுடையேனாய்க் கடைப்பட்டுத் துன்பக்கடலில் விழுந்தழுந்துவேனாகிய நான் இனி உன்னைக் கூடும்வண்ணம் சொல்வாயாக என்பது.

(வி-ரை.) மின்னேரனைய என்பதை மின் ஏர் அனைய எனப் பிரித்து மின்னை நிகர்த்த அத்தன்மைத்தாகிய என்றுரை

னுமாம். பொன்னேரனைய என்பதற்கும் இவ்வாறுரைக்கலாம். அவலம் - துன்பம். என்னேரனையேன் என்றது இழிவினால் எனக்கு நானே நிகர் என்றபடி. (க)

என்னாலறியாப்பதந்தந்தாயானதறியாதேகெட்டே
னுன்னாலொன்றுங்குறைவில்லையுடையாயடிமைக்காரென்பேன்
பன்னாளுன்னைப்பணிந்தேத்தும்பழையவடியரொடுங்கூடா
தென்னாயகமேபிற்பட்டிங்கிருந்தேனோய்க்குவிருந்தாயே.

(ப - ரை.) என்னால் அறியா - என்னால் அறியப்படாத, பதம்-இடத்தை, தந்தாய் - கொடுத்தாய், யான் அது அறியாதே கெட்டேன் - நான் அதனை யறியாமலே கெட்டேன், உன்னால் ஒன்றும் குறைவு இல்லை - உன்னால் சிறிதும் குறைவில்லை, உடையாய்-உடையவனே, அடிமைக்கு - அடியேனுக்கு, ஆர் என்பேன் - யாரிருக்கிறார்கள் என்பேன், பல் நாள் - பல நாளும், உன்னை பணிந்து ஏத்தும் - உன்னை வணங்கித் துதிக்கின்ற, பழைய அடியாரொடும் கூடாது - பழைய அடியாரோடுங் கூடாமல், என் நாயகமே - என் நாயகனே, பிற்பட்டு - பிறகிட்டு, இங்கு - இவ்விடத்தில், நோய்க்கு விருந்தாய் - நோய்களுக்கு விருந்தாகி, இருந்தேன் - இருந்துவிட்டேன், எ - று.

(க - ரை.) என்னால் அறியப்படாத இடத்தைக் கொடுத்தாய், யான் அதனை யறியாமலே கெட்டேன், உன்னால் சிறிதும் குறைவில்லை, உடையவனே, அடிமைக் குதவியாவர் ஒருவருமில்லை, எந்நாளும் உன்னை வணங்கித் துதிக்கின்ற பழ அடியாரோடும் சேராமல், இறைவனே, நோய்களுக்கு விருந்தாய் இவ்விடத்திருந்தேன் என்பது.

(வி - ரை.) பதம் - பதவி (இடம்). (உ)

சிலமின்றிநோன்பின்றிச்செறிவேயின்றியறிவின்றித்
தோலின்பாவைக்கூத்தாட்டாய்ச்சுழன்றுவிழுந்துகிடப்பேனை
மாலுங்காட்டிவழிகாட்டிவாராவுலகநெறியேறக்
கோலங்காட்டியாண்டானைக்கொடியேனென்னேகூவுகே

(ப - ரை.) சீலம் இன்றி - நல்லொழுக்கமின்றி, நோன்பு இன்றி - நோன்பில்லாமல், செறிவு இன்றி - அடக்கமில்லாமல், அறிவு இன்றி - அறிவில்லாமல், தோலின்பாவை - தோற்பாவையின், கூத்தாட்டு ஆய் - கூத்தாட்டுப்போன்று, சுழன்று விழுந்துகிடப்பேனை - சுழன்றுவீழ்ந்துகிடக்கின்ற என்னை, மாலும் காட்டி - தன்னிடத்தே விருப்பமும் உண்டாக்கி, வழிகாட்டி - நெறிகாட்டி, வாரா உலகம் - மீளாவுலகத்தில், நெறி ஏற - முறையாயேற, கோலம் காட்டி - தன் திருக்கோலத்தையும் காட்டி, ஆண்டானை - ஆண்டருளினவனை, கொடியேன் - கொடியனேன், கூடுவது - அடைவது, என்றோ - எக்காலமோ, எ - று.

(க - ரை.) நல்லொழுக்கம், நோன்பு, அடக்கம் முதலியவையில்லாமல் தோற்பாவையின் கூத்தாட்டுப்போலச் சுழன்று விழுந்துகிடக்கின்ற என்னைத் தன்னைவிரும்பும்படிசெய்து, நன்னெறியையுங்காட்டி, முத்தியுலகிலேறும்படி தன் திருக்கோலத்தையுங்காட்டி ஆண்டருளின இறைவனைக் கொடியேன் சென்று கூடுவது எக்காலமோ என்பது.

(வி - ரை.) சீலம் - ஒழுக்கம். நோன்பு - விரதம். தோலின் பாவை - தோலினாற்செய்த பிரதிமை. (௩)

கெடுவேன்கெடுமாகெடுகின்றேன்கேடிலாதாய்பழிகொண்டாய்
படுவேன்படுவதெல்லாநான்பட்டாற்பின்னைப்பயனென்னே
கொடுமாநரகத்தழுந்தாமேகாத்தாட்கொள்ளுங்குருமணியே
நடுவாய்நில்லாதொழிந்தக்கானன்றோவெங்கணாயகமே.

(ப - ரை.) கெடுவேன் - கெடுவேன், கெடுமா கெடுகின்றேன் - கெடும் வண்ணம் கெடுகின்றேன், கேடு இலாதாய் - கேடில்லாதவனே, பழிகொண்டாய் - நீ பழியையேற்றுக்கொண்டாய், படுவேன் - படுவேன், படுவது எல்லாம் - படவேண்டுவதெல்லாம், நான்பட்டால் - நான்பட்டால், பின்னை - பிறகு, பயன் என்னே - பயன் யாதோ, கொடுமா நரகத்து அழுந்தாமே - கொடியபெரிய நரகத்தில் மூழ்காமல், காத்து ஆள் கொள்ளும் - காத்தாட்கொள்ளுகின்ற, குருமணியே - குருமணியே, நடு ஆய் நில்லாது - நடுவு நிலைமையாய் நில்லா

மல், ஒழிந்தக்கால் - நீ யொழிந்தால், எங்கள் நாயகமே - எங்கள் நாயகனே, நன்றே - உனக்கு அழகாமோ, எ - று.

(க - ரை.) அழிவில்லாதவனே, நான் கெடாநின்றேன், நான் துன்பப்பட்டால் உனக்குப் பயனுண்டோ, நரகத்தில் அழுந்தாமல் என்னைக் காத்தாண்டருள்கின்ற குருமணியே, நீ நடுவு நிலைமையை யொழிந்தால், அது உனக்கு நன்றாகுமோ என்பது.

(வி - ரை.) கெடுமா கெடுதல் - தப்பாமல் அழிதல். குருமணி - நாயகமணி. நடுவாய் நிற்றல் - ஒருபாற் கோடாமற் சமமாய் நிற்றல். (௪)

தாயாய்முலையைத்தருவானேதாராதொழிந்தாற்சவலையாய்
நாயேன்கழிந்துபோவேனோநம்பியினித்தானல்குதியே
தாயேயென்றுன்றாளடைந்தேன்றயாநீயென்பாலில்லையே
நாயேனடிமையுடனாகவாண்டாய்நான்றான்வேண்டாவோ.

(ப - ரை.) தாயாய் முலையை தருவானே - தாயாகி முலை கொடுப்பவனே, தாராது ஒழிந்தால் - கொடாதொழிந்தால், சவலை ஆய் - சவலையாகி, நாயேன் கழிந்துபோவேனோ - நாயினேன் ஒழிந்துபோவேனோ, நம்பி - சிவபிரானே, இனித்தான் - இனியாயினும், நல்குதியே - அருள்செய்வையோ, தாயே என்று - தாயேயென்று உன் தாள் அடைந்தேன் - உன் திருவடியை அடைந்தேன், நீ என்பால் தயா இல்லையே - நீ யென்னிடத்துத் தயவுடையை யல்லையோ - நாயேன் அடிமை - நாயினேனும் எனது அடிமைத்திறமும், உடன் ஆக - ஒருசேர, ஆண்டாய் - ஆண்டருளினாய், நான் தான் வேண்டாவோ - நான்மாத்திரம் வேண்டாவோ, எ - று.

(க - ரை.) தாயாய் முலையூட்டுவோனே, நீ தராதொழிந்தால் நான் சவலையாய் அழிந்துபோகவோ, இனியாயினும் அருள்செய்ய வேண்டும், தாயேயென்று உன் திருவடியை யடைந்தேன், உனக்கு என்மீது தயை யில்லையோ, நான்வேண்டாவோ என்பது.

(வி - ரை.) சவலை - மெலிந்த குழந்தை. நல்குதல் - கிருபை செய்தல். (௫)

கோவேயருளவேண்டாவோகொடியேன் கெடவேயமையுமே
யாவாவென் றுவிடிலென்னையஞ்சேலென்பாராரோதான்
சாவாரெல்லாமென்னளவோ தக்கவாரன்றென்றுரோ
தேவேதில்லைநடமாடிதிகைத்தேனினித்தான்றேற்றுயே.

(ப - ரை.) கோவே - இறைவனே, அருளவேண்டாவோ - நீ யருள்செய்யவேண்டாவோ, கொடியேன் கெட அமையுமே - கொடியேன் கெடின் அமையுமோ, ஆவா என்று விடின் - நீ ஐயோவென் றிரங்காவிடின், அஞ்சேல் என்பார் - அஞ்சற்க என்பவர், ஆரோ - யாருளரோ, சாவார் எல்லாம் - இறப்பாரெல்லாம், என் அளவோ - என்னளவேயோ, தக்க ஆறு அன்று என்றுரோ - இது தகுதியாகிய வழியன்றென்று சொல்லாரோ, தேவே - தேவனே, தில்லைநடம் ஆடி - திருத்தில்லையில் நடஞ்செய்வோனே, திகைத்தேன் - மயங்கினேன், இனித்தான் - இனியாயினும், தேற்றுய் - என்னைத்தெளிவிப்பாயாக, எ - று.

(க - ரை.) இறைவனே, நீ யருள்செய்யவேண்டாவோ, கொடியேன் கெட்டால் உனக்குப்போதுமோ, நீயே எனக்கிரங்காவிடின் என்னை பயப்படாதே யென்பவர் யாவர், நான் திகைத்தேன், இனியாயினும் என்னைத் தெளிவிப்பாயாக என்பது.

(வி - ரை.) அமையுமே என்பதில் ஏற்றேகாரம் வினு. திகைத்தல் - மயங்குதல். (௬)

நரியைக்குதிரைப்பரியாக்கிஞாலமெல்லாநிகழ்வித்துப்
பெரியதென்னன்மதுரையெல்லாம்பிச்சதேற்றும்பெருந்துறையா
யரியபொருளேயவிநாசியப்பாபாண்டிவெள்ளமே
தெரியவரியபரஞ்சோதிசெய்வதொன்றுமறியேனே.

(ப - ரை.) நரியை - குதிரையை, பரி குதிரை ஆக்கி - வாகநமாகத் தாங்குகின்ற குதிரை யாக்கி, ஞாலம் எல்லாம் நிகழ்வித்து - உலகமெல்லாம் சஞ்சரிக்கச் செய்து, பெரிய - பெரிதாகிய, தென்னன் மதுரை எல்லாம் - பாண்டியனது மதுரை முழுதும், பிச்சு ஏற்றம் - பித்தேற்றின, பெருந்துறையாய் - திருப்பெருந்துறையை யுடையவனே, அரிய பொருளே - அருமையாகிய பொருளே, அவி

நாசி அப்பா - அவி நாசி யப்பனே, பாண்டி வெள்ளமே - பாண்டிப் பெருக்கே, தெரிய அரிய பரஞ்சோதி - தெரிவதற் கரிதாகிய பரஞ் சோதியே, செய்வது - செய்தற்குரியதை, ஒன்றும் அறியேன் - சிறி தும் அறியேன், எ - று.

(க - ரை.) நரிகளைப் பரிகளாகச் செய்து, பூமி முழுதும் பர வச்செய்து, மதுரை நகரத்தார்க்கெல்லாம் பித்தேற்றின திருப்பெருந் துறை யிறைவனே, அரிய பொருளே, அவிநாசி யப்பனே, பாண்டி வெள்ளமே, தெரிதற்கரிய மேலான ஒளியே, செய்தற்குரிய காரியத் தைச் சிறிதும் அறிந்திலேன் என்பது.

(வி - ரை.) பரி - முதனிலைத் தொழிலாகு பெயர். சுமப்பது என்பது பொருள். அவநாசி - ஓர் திருப்பதி. (எ)

திருச்சிற்றம்பலம்.

# அச்சோப்பதிகம்.

அநுபவவழியறியாமை.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

முத்திநெறியறியாதமூர்க்கரொடுமுயல்வேனைப்
பத்திநெறியறிவித்துப்பழவினைகள்பாறும்வண்ணஞ்
சித்தமலமறுவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வத்தனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

(ப - ரை.) முத்தி நெறி அறியாத - முத்திவழியை அறியாத, மூர்க்கரொடு முயல்வேனை - மூர்க்கரோடு முயன்று திரிகின்ற என க்கு, பத்தி நெறி அறிவித்து - பத்திமார்க்கத்தை அறிவித்து, பழ வினைகள் பாறும் வண்ணம் - பழமையாகிய வினைகள் நீங்கும்வண் ணம், சித்த மலம் அறுவித்து - மனக்களங்கத்தை அறும்படி செய்து,

சிவம் ஆக்கி - சிவமாக்கி, என்னை ஆண்ட - என்னை ஆண்டருளின அத்தன் - எமது தந்தையாகிய சிவபெருமான், எனக்கு அருளிய ஆறு - எனக்கு அருள்செய்தவண்ணம், ஆர் பெறுவார் - யார் பெறு தற்குரியர், அச்சோ - (இது என்ன) அதிசயம், எ - று.

(க - ரை.) மோக்ஷமார்க்கத்தை அறியாத மூர்க்கரோடு கூடித் திரிகின்ற எனக்குப் பத்திமார்க்கத்தை அறிவித்து என் பழவினைகள் நீங்கும்வண்ணம், மனக்களங்கம் அறச்செய்து சிவமாக்கி என்னை யாண்டருளின எமது தந்தையாகிய சிவபெருமான் எனக்கு அருள் செய்தவண்ணம் அருள்செய்யப்பெறுவோர் யாவர் என்பது.

(வி - ரை.) முத்திநெறி - வீட்டுநெறி. மூர்க்கர் - மூடர். பத்திநெறி - அன்புசெய்யும் வழி. பாறல் - நீங்கல். அச்சோ - அதி சய விடைச்சொல். (க)

நெறியல்லாநெறிதன்னைநெறியாகநினைவேனைச்
சிறுநெறிகள்சேராமேதிருவருளேசேரும்வண்ணங்
குறியொன்றுமில்லாதகூத்தன்றன்கூத்தையெனக்
கறியும்வண்ணமருளியவாறார்பெறுவாரச்சோவே.

(ப - ரை.) நெறி அல்லா நெறி தன்னை - வழியல்லாத வழியை, நெறி ஆக நினைவேனை - வழியாக நினைக்கின்ற என்னை, சிறு நெறிகள் சேராமே - சிறு வழிகளை யடையாமல், திருவருளே சேரும் வண்ணம் - திருவருளையே அடையும்வண்ணம், குறி ஒன்றும் இல்லாத - குறிகள் ஒன்றுமில்லாத, கூத்தன் - கூத்தப்பிரானது, கூத்தை - கூத்தாட்டத்தை, எனக்கு அறியும் வண்ணம் - எனக்கு அறியலாம் வகை, அருளிய ஆறு - அருள் செய்தவண்ணம், ஆர் பெறுவார் - யார் பெறுதற்குரியர், அச்சோ - (இது என்ன) அதிசயம், எ - று.

(க - ரை.) வழியல்லா வழியை வழியாக நினைக்கின்ற என்னை அற்பமார்க்கங்களிற் சேராமல் திருவருளையே சேரும்படி, இறைவன் தன் திருக்கூத்தை எனக்கறிவித்தது போல அறிவிக்கப்பெறுவோர் யாவர் என்பது.

(வி - ரை.) நெறியல்லா நெறி - தீ நெறி. சிறுநெறி - பிற சமயமார்க்கம். குறி - அடையாளம். (உ)

பொய்யெல்லாமெய்யென்றுபுணர்முலையாய்போகத்தே
மையலுறக்கடவேனைமாளாமேகாத்தருளித்
தையலிடங்கொண்டபிரான்றன்கழலேசேரும்வண்ணம்
மையனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

(ப - ரை.) பொய் எல்லாம் மெய் என்று - பொய்ப்பொருள்களெல்லாம் மெய்ப்பொருள்களென்று நினைத்து, புணர்முலையார் போகத்தே - நெருங்கிய தனங்களையுடைய மாதராது போகத்தின் கண்ணே, மையல் உறக்கடவேனை - மயக்கமிகக் கடவேனாகிய என்னை, மாளாமே காத்தருளி - (அதனாலே) மடியாமற் காத்தருளி, தையல் - உமாதேவியை, இடம் கொண்ட பிரான் - இடப்பாகத்திற் கொண்ட சிவபெருமான், ஐயன் - ஐயன், (அவன்) தன் கழலே சேரும் வண்ணம் - தன் திருவடியையே அடையும்வண்ணம், எனக்கு அருளிய ஆறு - எனக்கு அருள்செய்த வண்ணம், ஆர் பெறுவார் - யார்பெறுதற்குரியவர், அச்சோ - (இது என்ன) அதிசயம், எ - று.

(க - ரை.) பொய்யை மெய்யென்றுநினைத்து மாதர் மயக்கத்திற் சிக்கி மாள்கின்ற என்னைக்காத்தருளித் தன் திருவடியையே சேரும்வண்ணம் இறைவன் எனக்கருள்செய்ததுபோல அருள் செய்யப் பெறுவோர் யாவர் என்பது.

(வி - ரை.) புணர்தல் - நெருங்குதல். போகம் - சுகம். மாளுதல் - அழிதல். (௩)

மண்ணதனிற்பிறந்தெய்த்துமாண்டுவிழக்கடவேனை
யெண்ணமிலாவன்பருளியெனையாண்டிட்டென்னையுந்தன்
சுண்ணவெண்ணீறணிவித்துத்தூய்நெறியேசேரும்வண்ண
மண்ணலெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

(ப - ரை.) மண்ணதனில் - மண்ணுலகில், பிறந்து எய்த்து - பிறந்திளைத்து, மாண்டு விழக்கடவேனை - மடிந்துவிழக்கடவேனாகிய என்னை, எண்ணம் இல்லா அன்பு அருளி - அளவற்ற அன்பை அருள் செய்து, என்னை ஆண்டு இட்டு - என்னையாட்கொண்டு, என்னையும் - அடியேனையும், தன் சுண்ண வெண்ணீறு அணிவித்து - தனதுபொடியாகிய வெண்ணீற்றைத் தரிப்பித்து, தூ நெறியே சேரும் வண்ணம் -

பரிசுத்தமாகிய வழியையே யடையும் வண்ணம், அண்ணல் - பெரியோனாகிய சிவபெருமான், எனக்கு அருளிய ஆறு — எனக்கு அருள் செய்தவாறு, ஆர் பெறுவார் - யார் பெறுதற்குரியவர், அச்சோ (இது என்ன) அதிசயம், எ - று.

(க - ரை.) இந்த மண்ணுலகிற் பிறந்திளைத்து மாண்டொழியக்கடவேனாகிய என்னைச் சிவபெருமான் தன் திருவெண்ணீறணிவித்து நல்லவழியையடையச் செய்தருளினதுபோல அருள்செய்யப் பெறுவோர் யாவர் என்பது.

(வி - ரை.) மண் என்றது மண்ணுலகத்தை. எண்ணம்-அளவு. சுண்ணம் - பொடி. தூநெறி - வீட்டுநெறி. (௪)

பஞ்சாயவடிமடவார்கடைக்கண்ணாலிடர்ப்பட்டு
நெஞ்சாயதுயர்கூரநிற்பேனுன்னருள்பெற்றே
னுய்ஞ்சேனுடையானேயடியேனைவருகவென்
றஞ்சேலென்றருளியவாறார்பெறுவாரச்சோவே.

(ப - ரை.) பஞ்சு ஆய - பஞ்சு போன்ற, அடி - பாதங்களையுடைய, மடவார் - மாதரது, கடை கண்ணால் இடர் பட்டு - கடைக்கண்ணினால் துன்பப்பட்டு, நெஞ்சு ஆய துயர் கூர - மனத்திலுண்டாகிய துயரம் மிகும்படி, நிற்பேன் - நிற்பவனாகிய நான், உன் அருள் பெற்றேன் - உன் அருளைப் பெற்றேனாகி, நான் உய்ஞ்சேன் - நான் உய்ந்தேன், உடையானே - உடையவனே, அடியேனை - அடியனேனை, வருக என்று - வருக வென்றும், அஞ்சேல் என்று - அஞ்சற்கவென்றும், அருளிய ஆறு - நீ அருள் செய்தவாறு, ஆர் பெறுவார்-யார் பெறுவார்கள், அச்சோ-(இது என்ன) அதிசயம், எ-று.

(க - ரை.) மாதர் கடைக்கண்ணால் துன்புற்று மனம் வருந்தியிருக்கிற நான் உன் அருள் பெற்று உய்ந்தேன், நீ என்னை அஞ்சாதே வாவென் றருள்செய்ததுபோல அருள் செய்யப் பெறுவோர் யாவர் என்பது.

(வி - ரை.) பஞ்சாய என்பதற்குச் செம்பஞ் சூட்டின என்றுரைத்தலுமாம். மடவார் - மடப்பமுடையவர். (ரு)

வெந்துவிழுமுடற்பிறவிமெய்யென்றுவினைபெருக்கி
கொந்துகுழற்கோல்வளையார்குவிமுலைமேல்வீழ்வேனைப்
பந்தமறுத்தெனையாண்டுபரிசறவென்றுரிசுமறுத்
தந்தமெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

(ப - ரை.) வெந்து விழும் - வெந்து நீறாய் விழுகின்ற, உடற் பிறவி - உடலினது பிறப்பு, மெய் என்று - உண்மை யென்று, வினை பெருக்கி - வினைகளைப் பெருகச்செய்து, கொந்து - பூங்கொத் தணிந்த, குழல் - கூந்தலையுடைய, கோல் வளையார் - மாதரது, குவி முலை மேல் வீழ்வேனை - குவிந்த தனங்களின் மீது ஆசையுடையே னாகிய என்னை, பந்தம் அறுத்து-பிறவிக்கட்டைச் சேதித்து, என்னை ஆண்டு - என்னை ஆண்டருளி, பரிசு அற - குண மறும்படி, என் துரிசும் அறுத்து - என் குற்றத்தையும் அறுத்து, அந்தம் - முடிவான பொருளை, எனக்கு அருளிய ஆறு - எனக் கருள்செய்த வாறு, ஆர் பெறுவார் - ஆர் பெறுவார்கள், அச்சோ - (இது என்ன) அதிசயம், எ - று.

(க - ரை.) வெந்தொழிதற்குரிய உடம்பின் தோற்றத்தை மெய்யென்றெண்ணி, வினைகளைப் பெருக்கி மாதர் தனங்களின்மீது வீழ்வேனாகிய என்னை, பந்த மறுத்தாண்டு என் குற்றங்களை யொழித்து முடிவான பொருளை எனக் கருள்செய்ததுபோல அருள் செய்யப் பெறுவோர் யாவர் என்பது.

(வி - ரை.) உடற் பிறவி - உடம்போடு கூடிப் பிறக்கும் பிறப்பு எனினுமாம். கொத்து கொந்து என மெலித்தல் பெற்றது. அந்தம் - வேத முடிவான பொருள். (அ)

தையலார் மையலிலே தாழ்ந்துவிழக்கடவேனைப்
பையவேகொடுபோந்துபாசமெனுந்தாழுருவி
யுய்யுநெறிகாட்டுவித்திட்டோங்காரத்துட்பொருளை
யையனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

(ப - ரை.) தையலார் மையலிலே - மாதர் மயக்கத்திலே, தாழ்ந்து விழக்கடவேனை - தாழ்ந்துவிழக்கடவேனாகிய என்னை,

பையவே கொடு போந்து - மெல்லவே கொண்டுவந்து, பாசம் என்னும் - பாசம் என்கிற, தாழ் உருவி - தாழ்க்கோலை வாங்கி, உய்யும் நெறி காட்டுவித்திட்டு - பிழைக்கும் வழியைக் காட்டுவித்து, ஓங்காரத்து உட்பொருளை - பிரணவத்தினுட்பொருளை, ஐயன் - ஐயனானவன், எனக்கு அருளிய ஆறு - எனக்கு அருள்செய்தவண்ணம், ஆர் பெறுவார் - யார் பெறுதற்குரியர், அச்சோ - (இது என்ன) அதிசயம், எ - று.

(க - ரை.) மாதர் மயக்கத்தில் அழுந்துவேனாகிய என்னை, மெல்லக் கொண்டுவந்து பாசத்தாழை வாங்கி, உய்யும் வழி காட்டி, பிரணவப்பொருளை இறைவன் எனக்கருள்செய்ததுபோல அருள் செய்யப்பெறுவோர் யாவர் என்பது.

(வி - ரை.) பைய - மெல்லென. தாழ் - கதவுக்கிடுந் தாழ்க்கோல். (எ)

சாதல்பிறப்பென்னுந்தடஞ்சுழியிற்றடுமாறிக்
காதலின்மிக்கணியிழையார்கலவியிலேவிழுவேனை
மாதொருகூறுடையபிரான்றன்கழலேசேரும்வண்ண
மாதியெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

(ப - ரை.) சாதல் பிறப்பு என்னும் - இறப்பு பிறப்பு என்கிற, தடம் சுழியில் - பெருஞ்சுழியிற்சிக்கி, தடுமாறி-தடுமாற்றமடைந்து, காதலின் மிக்கு - ஆசையில் மிகுந்து, அணியிழையார்-மாதரது, கலவியிலே விழுவேனை - கலவியிலே விழுகின்ற என்னை, மாது ஒரு கூறு உடைய பிரான் - பெண்ணை ஒருபாகத்திலுடைய பெருமான், ஆதி - முதல்வன், தன்கழலே சேரும் வண்ணம் - தன் திருவடியையே அடையும் வண்ணம், எனக்கு அருளிய ஆறு - எனக்கு அருள் செய்தவண்ணம், ஆர் பெருவார் - யார் பெறுதற்குரியவர், அச்சோ - (இது என்ன) அதிசயம், எ - று.

(க - ரை.) இறப்புப் பிறப்பென்கிற பெருஞ்சுழியிற் சிக்கித் தடுமாறி ஆசை அதிகரித்து மாதரது கலவியில் வீழ்கின்ற என்னைப் பெண்பாகனாகிய சிவபெருமான் தன் திருவடியை அடையும்வண்ணம் எனக்கருள்செய்ததுபோல அருள்செய்யப் பெறுவோர் யாவர் என்பது.

(வி - ரை.) அணியிழையார் - ஆபரணங்களை யணிந்தவர். கலவி - கலத்தல், (புணர்ச்சி). (அ)

செம்மைநலமறியாதசிதடரொடுந்திரிவேனை
மும்மைமலமறுவித்துமுதலாயமுதல்வன்று
னம்மையுமோர்பொருளாக்கிநாய்சிவிகையேற்றுவித்த
வம்மையெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

(ப - ரை.) செம்மை நலம் அறியாத - செம்மையாகிய நன்னெறியை யறியாத, சிதடரொடும் திரிவேனை - அறிவிலிகளோடுங் கூடித்திரிகின்றவனாகிய என்னை, மும்மை மலம் அறுவித்து - மும்மலங்களையும் அறப்பண்ணி, முதல் ஆய-முதற்பொருளாகிய, முதல்வன் - தலைவன், நம்மையும் ஓர் பொருள் ஆக்கி - எம்மையு மொரு பொருளாகச்செய்து, நாய் சிவிகை ஏற்றுவித்த அம்மை - நாயைச் சிவிகையிலேறச்செய்த அழகை, எனக்கு அருளிய ஆறு - எனக்கருள் செய்தவாறு, ஆர் பெறுவார் - யார் பெறுதற்குரியார், அச்சோ - (இது என்ன) அதிசயம், எ - று.

(க - ரை.) செம்மையாகிய நன்னெறியை யறியாத கீழ்மக்களோடுங் கூடித் திரிகின்ற என்னை, இறைவன் ஓர் பொருளாக்கி என் மும்மலங்களைப் போக்கி நாயைச் சிவிகையில் ஏற்றுவித்தது போல உயர்த்தின அழகை எனக்கு அருள் செய்ததுபோல அருள் செய்யப் பெறுவோர் யாவர் என்பது.

(வி - ரை.) செம்மை நலம் என்றது மிக்க நலம் என்றபடி. சிதடர் - அறிவில்லாதவர். (கூ)

திருச்சிற்றம்பலம்.

திருவாசகம்

மூலமும் உரையும்

முற்றிற்று.

சிவமயம்.

# திருப்பாசுரவகராதி.



# திருப்பாசுரவகராதி.

# திருப்பாசுரவகராதி.

# திருப்பாசுரவகராதி.



## சமயகுரவர் வயசு.

அப்பருக்கெண்பத்தொன் றருள்வாதவூரருக்குச்
செப்பியநாலெட்டிற்றெய்வீக—மிப்புவியிற்
சுந்தரர்க்குமூவாறுதொன் ஞானசம்பந்தர்க்
கந்தம்பதினாறறி.

திருச்சிற்றம்பலம்.